ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ப்ரபந்நஜநாக்ரேஸரரான

ஸ்ரீ அழகிய மணவாளப்பெருமாள் நாயனர்

அருளிச்செய்த

# ஆசாரியஹ்ருதயம்.

இதற்கு

விசதவாக்ச்சிகாமணியான

ஸ்ரீமணவாளமாமுனிகளருளிச்செய்த

## வ்யாக்யாநமும்.

ப்ரதிபதார்த்தமும், கடினபதங்களுக்கர்த்தமும்,
ஆங்காங் குதகரிக்கப்பட்ட ப்ரமாணங்களுக்கு ஆகரமும்
இவை

ஸ்ரீ வால்மீகிராமாயணத்தை ப்ரதிபத தாத்பரிய
விசேஷார்த்த ஸகிதமாக தமிழில் மொழிபெயர்த்தச்சிட்டுவரும்
திருநீர்மலை

அழகர் திருமலை மாடபூஷி

ஸ்ரீ நிவாஸராகவாசாரியரால்

அநேகதாளபத்திர ஸ்ரீகோசங்களுக்கிணங்க பரிசோதிக்கப்பட்டு


சென்னை:

ஊ. புஷ்பரதசெட்டி அண்டு கம்பெனியாரது

கலாரத்நாகரம் என்னும் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்படுகின்றன.

( ) வது ஸஞ்சிகை.

ரிஜிஸ்தர் காப்ரைட்.

ஸஞ்சிகை -க்கு ரூபா. 0— —0. தபால் சார்ஜ் 0—0—6.

1905.

ஸு மீ உ


☞ ஆரம்பமாகையால் இம்மாதம் (ச) பாரமச்சிடப்பட்டது. இனிபிரதி மாதமும் (8) பார மச்சிடப்படும்.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ப்ரபந்நஜநாக்ரேஸரரான

ஸ்ரீ அழகியமணவாளப்பெருமாள் நாயனார்

திருவாய்மலர்ந்தருளிய

# ஆசார்யஹ்ருதயம்.

இதற்கு

விஶதவாக்சிகாமணியான

ஸ்ரீ மணவாளமாமுனிகள்

அருளிச்செய்த

## வ்யாக்யாநம்.

இவை

ஸ்ரீ வால்மீகிராமாயணத்தை ப்ரதிபத தாத்பர்ய

விஶேஷார்த்த ஸஹிதமாக அச்சிட்டுவரும்

திருநீர்மலை, அழகர்திருமலை மாடபூஷி

**ஸ்ரீ. உ. ஸ்ரீநிவாஸ ராகவாசார்யரால்**

அநேகதாளபத்ர ஸ்ரீ கோஶங்களைக்கொண்டு

யதாமதி பரிசோதிக்கப்பட்டு

ப்ரதிபதம், அரும்பதம், ப்ரமாணத்திரட்டு

இவைகளுடன்




சென்னை:

**கலாரத்நாகரம் அச்சுக்கூடத்தில்**

பதிப்பிக்கப்பட்டன.

ஆழ்வார் திருவவதாராதி ௫௦௦௮ பராபவ௵ தநுர்ரவி.

இதன்விலை ரூ. 2—8—0.

1906.

శ్రీరస్తు.

శ్రీ సీతా లక్ష్మణ భరత శత్రుఘ్న హనుమత్సమేత శ్రీ రామచంద్ర పరబ్రహ్మణే నమః.

# శ్రీపట్టాభిరామచంద్ర భజనమందిర నిర్మాణ ప్రకటన.

శ్లో॥ దశరథసుతమంత్రం దైత్యసంహారమంత్రం విబుధవినుతమంత్రం విశ్వవిఖ్యాతమంత్రం
ప్రకటదురితరాగద్వేష నిర్నాశమంత్రం రఘుపతినిజమంత్రం రామరామేతిమంత్రం ॥

శ్లో॥ ఇక్ష్వాకు వంశార్ణవజాతరత్నం సీతాంగనాప్రాణపదైకరత్నం ।
వైకుంఠరత్నం మమభాగ్యరత్నం శ్రీరామరత్నం శిరసానమామి ॥

ఇందువలన భగవత్కైంకర్య ధురంధరులగు భాగవతాగ్రగణ్యులకు విన్నవించున దేమనగా:—

శ్రీమదఖిలాండకోటి బ్రహ్మాండనాయకుండును శ్రీభూనీళాసమేతుండును అవాప్తసమస్తకాముండును ఆశ్రితవాత్సల్యైక జలధియనగు శ్రీమన్నారాయణుండు అఖిలచేతనోజ్జీవనార్థముగ నీవిభూతియందు "సంభవామి యుగేయుగే" యనునట్లు దశరథాత్మజుండై యవతరించి దుష్టశిక్షయు శిష్టరక్షణాదులచే లోకోద్ధారణ మొనరించి కలియుగంబునందలి జనుల తరింపజేయ నెంచి యర్చారూపిyై వేంచేసియుండు శ్రీకోదండరామమూర్తికి (శ్లో॥ అయోధ్యా మధురామాయా । కాశీకాంచ్యా మవంతికా । పురీద్వారవతీచైవ । సప్తైతే మోక్షదాయకాః ॥ అనునట్లు మోక్షప్రదములగు పుణ్యక్షేత్రములలో "నగరీషు కాంచీ" యను వచనానుసారముగ నగ్రగణ్యంబై చెన్నపురికి సమీపస్థలమై సత్యవ్రతక్షేత్రమని ప్రసిద్ధికెక్కియుండు శ్రీపెద్దకాంచీపురి రాజవీధికి చెంత నెలకొనియున్న శ్రీపవాళవరస్వామి సన్నిధికి చిరువభజనమందిరమును నిర్మించి యందు మూలమూర్తులతోడ శ్రీసీతాలక్ష్మణహనుమత్సమేతులగు శ్రీకోదండరామమూర్తిని ఉత్సవర్లసహితముగ ప్రతిష్ఠగావించి వారికి సంప్రోక్షణోత్సవాదులనొనరించుట కుద్యమించినాడను. భగవద్భాగవత కైంకర్యనిష్ఠాగరిష్ఠులరగు తాము దాసునివిన్నపముల నంగీకరించి యథోచిత ద్రవ్యసహాయమొనరించి వీనిప్రయత్నమును పూర్తిగావించుటయు కాక ఏతత్కైంకర్యాభివృద్ధికై మంగళాశాసనములగావించుచూ కైంకర్యమునకై వసూలయ్యెడు పైకముయొక్క జమఖర్చులను అప్పుడప్పుడు తనికీచూచి దిద్దుపాట్లు జేయుచు తోడ దాసునిసహితము భగవంతుని కృపాపాత్రునిగనొనర్చి యానందింతురని భాగవత బృందంబు ననయము ప్రార్థించుచున్నాడను.

ఇట్లు,
అఖిలభాగవతదాసానుదాసుడు,
మున్నలూరు – రంగనాథందాసుడు.
నెం. 17 తాతాముత్తియప్పన్ వీధి మదరాసు

చెన్నపట్నము,
1905-వ సం॥ నవంబరు నెల 11-వ తేది.

శ్రీనికేతనముద్రాక్షరశాల:— చెన్నపురి.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

## ஸ்ரீ அழகியமணவாளப் பெருமாள்நாயனார் வைபவம்.

ஆழ்வார் திருவவதாரமென்னலாம்படியான வைபவத்தையுடைய நம்பிள்ளை ஒருநாள் நித்யகாலக்ஷேபாதிகளை நிறைவேற்றி மத்யாஹ்நத்தில் தனியாக வெழுந்தருளியிருக்க, தம் திருவடிகளி லாஶ்ரயித்திருக்கும் வடக்குத் திருவீதிப்பிள்ளைக்குத் திருத்தாயாரான அம்மியென்பவள், திருவடிகளில் தெண்டன் ஸமர்ப்பித்துநிற்க, நம்பிள்ளையு மவளைக் கடாக்ஷித்து உம்முடைய க்ருஹயோக க்ஷேமங்க ளென்னென்றுகேட்டருள, அம்மியு மதைக்கேட்டு யானென்னென்று விண்ணப்பம் செய்வேன், யான்பெற்றபிள்ளை யொருபேயாயிருக்கிறதேயென்ன? நம்பிள்ளையுமதென்? என்றுகேட்டருள, தேவரீர் அப்பிள்ளைக்கொரு பெண்ணை விவாஹம் செய்வித்ததே அந்தப்பெண் பெரியவளானாள். ஆகையால் அப்பிள்ளையை இப்பெண்பிள்ளையோடு ஸஹஶயந கல்யாணம்செய்து இசைவிக்க, உட்புகுந்த வுடனேபிள்ளை, உடம்பெல்லாம் புழுக்க நீர்சொறிய விம்மி விம்மி முறையிட்டழுதுநிற்க, இதேதுபிள்ளாய்! என்று கேட்டேன், அம்மா! இதொரு ஆடுகிற பாம்பாயிருந்தது பயப்பட்டேன், இன்னு மப்படியே யிருக்கிறதென்ன, இதுவுமொரு புதுமையோ என்று பெண்ணை அப்பாலே போகவிட்டேன், பிறகு சிலநாள் கழித்தபின்பும் சேரவிட்டேன் பின்னு மப்படியே யாச்சுதென்று வ்யாகுலப்பட, நம்பிள்ளையும் சிரித்தருளி அதனாலுமக்கென்னென? அம்மியு மிதைக்கேட்டு, போரநொந்து இப்படி யருளிச்செய்யலாமோ? பெண்வாழவேண்டாவோ? குலமழியலாமோவென்று திருவடிகளில் விழுந்து ஶோகிக்க, நம்பிள்ளையு முகந்து அம்மி! எழுந்திரும் நீர்ஶோகிக்க வேண்டா? மணுட்டிப்பெண் ருதுஸ்நாநம்செய்து போகிறபோது இவ்வழி யழைத்துவாருமென் றருளிச்செய்துவிட, அவளுமப்படியே செய்ய, திருவோலகத்தி லெழுந்தருளியிருக்கும் நம்பிள்ளையு மப்போது அப்பெண்ணைக் கிட்ட வழைத்தருளி தமக்கிஷ்ட தெய்வமான பெரிய பெருமாள் திருநாமம் சாற்றவேணுமென்று தமதுள்ளே நினைப்பிட்டு அவள்வயிற்றைத் தமது திருக்கைகளால் ஸ்பரிசித்து ஸத்புத்ரனைப் பெற்றிடுவாயென்று அநுக்ரஹம்செய்துவிட்டு, அன்றையதினம் வடக்குத் திருவீதிப்பிள்ளையை யழைத்தருளி, உம்முடைய பயமும் தீர்ந்

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீ அழகியமணவாளப் பெருமாள்நாயனர் வைபவம்.

ஆழ்வார் திருவவதாரமென்னலாம்படியான வைபவத்தையுடைய நம்பிள்ளை ஒருநாள் நித்யகாலக்ஷேபாதிகளை நிறைவேற்றி மத்யாஹ்நத்தில் தனியாக வெழுந்தருளியிருக்க, தம் திருவடிகளி லாஶ்ரயித்திருக்கும் வடக்குத் திருவீதிப்பிள்ளைக்குத் திருத்தாயாரான அம்மியென்பவள், திருவடிகளில் தெண்டன் ஸமர்ப்பித்துநிற்க, நம்பிள்ளையு மவளைக் கடாக்ஷித்து உம்முடைய க்ருஹயோக க்ஷேமங்க ளென்னென்றுகேட்டருள, அம்மியு மதைக்கேட்டு யானென்னென்று விண்ணப்பம் செய்வேன், யான்பெற்றபிள்ளை யொருபேயாயிருக்கிறதேயென்ன? நம்பிள்ளையுமதென்? என்றுகேட்டருள, தேவரீர் அப்பிள்ளைக்கொரு பெண்ணை விவாஹம் செய்வித்ததே அந்தப்பெண் பெரியவளானுள். ஆகையால் அப்பிள்ளையை இப்பெண்பிள்ளையோடு ஸஹஶயந கல்யாணம்செய்து இசைவிக்க, உட்புகுந்த வுடனேபிள்ளை, உடம்பெல்லாம் புழுக்க நீர் சொறிய விம்மி விம்மி முறையிட்டழுதுநிற்க, இதேதுபிள்ளாய்! என்று கேட்டேன், அம்மா! இதொரு ஆடுகிற பாம்பாயிருந்தது பயப்பட்டேன், இன்னு மப்படியே யிருக்கிறதென்ன, இதுவுமொரு புதுமையோ என்று பெண்ணை அப்பாலே போகவிட்டேன், பிறகு சிலநாள் கழித்தபின்பும் சேரவிட்டேன் பின்னு மப்படியே யாச்சுதென்று வ்யாகுலப்பட, நம்பிள்ளையும் சிரித்தருளி அதனாலுமக்கென்னென? அம்மியு மிதைக்கேட்டு, போரநொந்து இப்படி யருளிச்செய்யலாமோ? பெண்வாழவேண்டாவோ? குலமழியலாமோவென்று திருவடிகளில் விழுந்து ஶோகிக்க, நம்பிள்ளையு முகந்து அம்மி! எழுந்திரும் நீர்சோகிக்க வேண்டா? மணுட்டிப்பெண் ருதுஸ்நாநம்செய்து போகிறபோது இவ்வழி யழைத்துவாருமென் றருளிச்செய்துவிட, அவளுமப்படியே செய்ய, திருவோலகத்தி லெழுந்தருளியிருக்கும் நம்பிள்ளையு மப்போது அப்பெண்ணைக் கிட்ட வழைத்தருளி தமக்கிஷ்ட தெய்வமான பெரிய பெருமாள் திருநாமம் சாற்றவேணுமென்று தமதுள்ளே நினைப்பிட்டு அவள்வயிற்றைத் தமது திருக்கைகளால் ஸ்பரிசித்து ஸத்புத்ரனைப் பெற்றிடுவாயென்று அநுக்ரஹம்செய்துவிட்டு, அன்றையதினம் வடக்குத் திருவீதிப்பிள்ளையை யழைத்தருளி, உம்முடைய பயமும் தீர்ந்

தது, விஹிதவைராக்யத்திற் கொருகுறைவும்வாராது, ஆகையால், லோகமர்யாதைக்கு நாம் சொன்னதற்காக இன்றிராத்திரி கூடியிருமென்ன, அப்படியே கூடியிருந்தவளவில் ஆச்சியும் கர்ப்பம்தரித்து "ததஸ்ச த்வாதஸே மாஸே" என்கிறபடியே, பன்னிரண்டாவது மாதத்தில் கலியுகம் சஙசுஎ குரோதனஹு ஐப்பசியில் திருவோணத்தில் பிள்ளை திருவவதரிக்க, அவருக்கு பத்துநாளும் கடந்த இரண்டாநாள் நாமகரணத்தில் வடக்குத் திருவீதிப்பிள்ளையும் தம்முடைய வாசார்யநிஷ்டைக்கநுகுணமாகக் குமாரருக்கு பிள்ளைலோகாசார்யரென்று தம்முடைய வாசார்யரான பிள்ளையினுடைய திருநாமத்தைச்சாத்தி வளர்த்துவர, பன்னிரண்டுதிங்களும் பாங்காகக்கழிந்தவாறே அப்தபூர்த்தி மஹோத்ஸவத்துக்கு பெருமாளைஸேவிப்பிக்க திருப்பல்லக்கிலே பிள்ளையையெழுந்தருளப்பண்ணிவித்துக்கொண்டு மங்களவாத்யங்களோடு நம்பிள்ளை தம்மனோரதம் பூர்த்தியாகாமையால் இன்னமொரு குமாரர் திருவவதரிக்க அநுக்ரஹம் செய்துகொண்டு அநேகம் பெரியோர்களுடன் ஸந்நிதிசென்று பெரியபெருமாளை ஸேவித்துநிற்க, நம்பெருமாளும் போர உகந்தருளி தீர்த்தம் ஶடகோபன் சந்தநம் திருமாலை ப்ரஸாதங்களும் பட்டுச்சிற்றுடையும் ப்ரஸாதித்தருளி அர்ச்சகமுகேந நம்பிள்ளையைக் கூவியருளி உம்மைப்போலே யொருபிள்ளையைக் கொடுத்தீரே இனிநம்மைப்போலே யொருபிள்ளை கொடுமென்று நியமிக்க "நாயன்றே நாயன்றே" என்று ஓமறைய, அப்படியே வடமகுலத்தில் முடும்பைக்குடியில் ஸ்ரீவத்ஸகோத்ரஜராய் திருவரங்கம்பெரியகோயிலைக் குடியிருப்பாக உடையரான வடக்குத் திருவீதிப்பிள்ளைக்குப் பத்நியான ஸ்ரீரங்க நாச்சியாரிடத்தில் மார்கழிமாதம் அவிட்ட நக்ஷத்ரத்தில் இரண்டாவது குமாரராக திருவவதரித்தருளினர். அவருக்கு நம்பிள்ளை யெழுந்தருளி தமது திருவுள்ளப்படி அழகியமணவாளப்பெருமாள் நாயனர் என்று பெரியபெருமாளுடையதிருநாமத்தை சாத்தியருளினர். இப்படிப்பட்ட பெருமையையுடையவருடைய திருவருளினலே அவதரித்து திவ்யாவதார விசேஷமாயிருந்துள்ள அழகியமணவாளப்பெருமாள்நாயனு ரதிமேதாவியாய், தன்பிதாவான வடக்குத் திருவீதிப்பிள்ளையிடத்தில் பஞ்சஸம்ஸ்காரங்களும் நித்யாநுஸந்தாநங்களையும் பெற்று பரமாசார்யரான நம்பிள்ளையிடத்தில் ஸ்ரீபாஷ்யம், ஶ்ருதப்ரகாசிகை, ரஹஸ்யங்கள், ரஹஸ்யவ்யாக்யாநங்கள் முதலான ஸகலார்த்தங்களையுமறிந்து திருவாய்மொழி முதலிய திவ்யப்ரபந்தங்களைத் தமது திருத்தமையனரான பிள்ளை லோகாசாரியர் ப்ரஸாதித்தருளப்

பெற்று ஸ்ரீரங்கராஜனைத் திருவாராதனமாயடைந்து ஆசார்யஹ்ருதயம் திருப்பாவைக்கு ஆறுயிரப்படி வ்யாக்யாநம், திருவந்தாதிக்கு வ்யாக்யாநம், கண்ணிநுண்சிறுத்தாம்புக்கு வ்யாக்யானம் அருளிச்செய்து ரஹஸ்யம்முதலான க்ரந்தங்களையுமிட்டருளி லோகத்தை வாழ்வித்து அதிவிரக்தராய், நைஷ்டிகப்பிரம்ஹசரியத்துடன் உத்தமாஶ்ரமஸ்வீகாரம் செய்தருளி சிலகால மெழுந்தருளியிருந்து அப்படியே திருத்தமையனுருக்கு முன்னமே திருநாட்டுக் கெழுந்தருளினர். இவர்திருவடிகளிலாஶ்ரயித்தவர் கிடாம்பி, திருமலைநாயனர், கூரகுலோத்தமதாஸர்.

இவரிட்டருளின க்ரந்தங்களுள் ஆசார்யஹ்ருதயம் திருவவதரித்ததற்கோரேற்றமுண்டிறே. அதெங்ஙனே யென்னில்? ஒருநாள் நம்பெருமாளுடைய புறப்பாட்டிலே தூப்பில்பிள்ளைக்கும் அழகியமணவாளப் பெருமாள் நாயனருக்கும் ஸ்ரீவசனபூஷணக்கிரந்த விஷயமாக சில விவாதமுண்டாக அப்போது அழகியமணவாளப் பெருமாள்நாயனர் பெருமாள் எழுந்தருளுகிற நான்குவீதியிலும் வீதி ஒன்றுக்கொருபிரகரணமாக ஆசார்யஹிருதயம் என்கிற கிரந்தத்தை நான்கு ப்ரகரணமாக உபன்னியவித்தருள, அப்போது பெருமாள்சாத்திக் கொண்டிருந்த திருமாலைகளில் பிரகரணத்துக்கொருமாலையாக நான்குபிரகரணத்துக்கும் நான்குமாலையாகத் தானே கழன்றுவிழ நம்பெருமாளும் அப்போது அம்மாலைகளை அழகியமணவாளப்பெருமாள் நாயனருக்கு வீதி ஒவ்வொன்றிலும் சாத்தியருளி அவருபங்யஸித்த ஆசார்ய ஹ்ருதயமென்கிற திவ்வியகிரந்தத்தை மிகவும் திருவுள்ளமுகந்தங்கீகரித்தருளினர். இதைக்கண்டதூப்பில்பிள்ளையும் போரவுகந்து,

“ద్రావిడామ్నాయహృదయంగురుపర్వక్రమాగతమ్ ।
రమ్యజామాతృదేవేనదర్శితంకృష్ణసూనునా॥”

த்ராவிடாம்நாயஹ்ருதயம்குருபர்வக்ரமாகதம்
ரம்யஜாமாத்ருதேவேநதர்சிதம்க்ருஷ்ணஸூநுநா

என்று இத்தனியனை அழகியமணவாளப்பெருமாள்நாயனர் விஷயமாக அருளிச்செய்தாரிறே. இப்படி பகவத்பாகவத திருவுள்ளத்திற்கு அத்யந்தமிசைந்த தென்றிந்த கிரந்தமென்பதாயிற்று.

இவருடைய வைபவம் இன்னும் இப்படி யநேகமாயிருக்க அவையிங்கெழுதா தொழிந்தது கிரந்த விஸ்தாரபயத்தாலே. முக்கியமானவைகளை யீண்டு சுருக்கி வரைதலானேன்.

தி. மா. ஸ்ரீ.

# அறிவிப்பு.

---

## இப்போது விலைக்கு ஸித்தமாகவிருக்கும் புஸ்தகங்கள்.

| | விலை. | | | தபாற்கூலி. | | |
|---|---|---|---|---|---|---|
| ப்ரதிபத தாத்பரிய விசேஷார்த்தஸஹித ஸுந்தர காண்டம் ... ... ... ... | 7 | 0 | 0 | 0 | 10 | 0 |
| ஷை பாலகாண்டம் ... ... ... ... | 10 | 0 | 0 | 0 | 10 | 0 |
| பிரதிபத தாத்பரியஸகித ஸ்ரீரங்கராஜஸ்தவ ஸ்தோத்ர பாடம் ... ... ... ... | 1 | 0 | 0 | 0 | 2 | 0 |
| ஸ்ரீவால்மீகிசரித்திரம் ... ... ... | 0 | 1 | 3 | 0 | 0 | 6 |
| ஆசார்யஹ்ருதயவியாக்யானம் ... ... ... | 2 | 8 | 0 | 0 | 8 | 0 |

தி. மா. ஸ்ரீநிவாஸராகவாசாரியர்,

நெ. 104 - பவழக்காரத்தெரு, முத்தியால்பேட்டை,

சென்னை.



    

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆசாரியஹ்ருதயம்.

---

## தநியன்கள்.

ఆచార్యస్వాన్తవక్తార మభిరామవరాభిధమ్ ।
శ్రీకృష్ణతనయం వన్దే జగద్గురువరానుజమ్ ॥

ஆசார்யஸ்வாந்தவக்தாரமபிராமவராபிதம்।
ஸ்ரீக்ருஷ்ணதநயம் வந்தே ஜகத்குருவராநுஜம்॥

மணவாளரவணைப்பள்ளிபயில்பவர்க்கெவ்வுயிரும்
குணபோகமென்றுகுருகைக்கதிபனுரைத்ததுய்ய
உணர்பாவிநுட்பொருளென்றுமறியாவுலகறிய
மணவாளன்மாறன்மனமுரைத்தான்வண்முடும்பைவந்தே.

மாதவத்தோன்மாறன்மனங்கூறும்மணவாளன்
தோதவத்தித்தூய்மறையோரானபெற்றார்—நீதியினா
லாங்கவர்தாள்சேர்பெற்றாராய்மணவாளமுனிப்
பூங்கமலத்தாள்கள்நெஞ்சேபோற்று.

---

பெரிய ஜீய்யர் திருவடிகளே ஶரணம்.

ஆசாரியஹ்ருதய வ்யாக்யாநத்தின்

# அவதாரிகை.

ஸ்ரீய: பதியாய் ஸர்வஸ்வாமியான ஸர்வேஶ்வரன், நிரதிஶயாநந்த மயமான ஸ்ரீவைகுண்டத்திலே, நித்ய நிர்மலஜ்ஞாநாதிகுணகராய் ஸ்வச் சந்தா நுவ்ருத்திஸ்வரூபஸ்திதிப்ரவிர்த்திபேதரான நித்யஸூரிகளாலே, அநவரதபரிசர்யமாணசரண நளிநனுய்க்கொண்டு எழுந்தருளியிராநிற்க, லீலா விபூதியிலுள்ளார், அவர்களோபாதி, தன்னை யநுபவிக்க ப்ராப் தியுண்டாயிருக்க, இழந்துகிடக்கிறபடியைக்கண்டு, அதிவ்யாகுலனாய், இவர்களை யுஜ்ஜீவிப்பிக்கையி லுண்டான (க) நஶையாலே, (உ) "అచిదవిశేషితాన్ ప్రళయసీమని సంసరతః కరణకళేభరైర్ఘటయితుం దయమానమనాః" "அசிதவிஶேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரத: கரணகளேபரைர்க் கடயிதும் தயமாநமநா:" என்கிறபடியே, கரணகளேபர விதுரராய், அசித விஶேஷிதராய், அத ஏவ போகமோக்ஷ ஶூந்யராய், கிடக்கிற தஶையிலே, தயமாந மநாவாய்க்கொண்டு, ஸ்வசரணகமல ஸமாஶ்ரயணோப கரணமான கரணகளேபரங்களைக்கொடுத்து ஜ்ஞாநவிகாஸத்தையும் ப்ரவ்ர்த்தி நிவ்ருத்தி ஶக்தியையுமுண்டாக்கி, இந்த ஜ்ஞாநகாரியமான த்யாஜ்யோபாதேய விவேகபரிகரமாக (ந) "సాంప్రదీపమివ కారుణికో దదాతి" "மாநம்ப்ரதீபமிவகாருணிகோ ததாதி" என்கிறபடியே, வேதப்ரதாநத்தைப்பண்ணி, அநந்தரம் மந்வாதிகளுக்கந்தர் யாமியாய் நின்று, சேதநருடைய (ச) விசிஷ்டவேஷவிஷயமான ஶாஸ்த்ரத்தை வெளியிட்டருளி, அந்த ஶாஸ்த்ராப்யாஸமநேக யோக்யதாஸா பேக்ஷமாய், சிரகாலஸாத்யமுமாயிருக்கையாலே, துஷ்கரமாயிருக்கிறபடியைத் திருவுள்ளம்பற்றி தாத்ருஶயோக்யதா நிரபேக்ஷத்வாதிகளாலே ஸுகரமுமாய் சேதந (ரு) நிஷ்க்ருஷ்டவேஷ விஷயமான திருவஷ்டாக்ஷ ரப்ரும்ஹவித்யையை, ஸ்வயமேவ வெளிப்படுத்தினவளவிலும், கார்யகரமாகாமையாலே (சு) ஓலைப்புறத்திற்செல்லாத ராஜ்யத்தை (எ) எடுத்துவிட்டுச் செலுத்துக்கொள்ளும் ராஜாக்களைப்போலே நாமேசென்று திருத்தக்கடவோமென்று ராமகிருஷ்ணாத்யவதாரமுகேந இவர்களிருக்கிறவிடத்திலே தான்வந்து திருத்தப் பார்த்த விடத்திலும், ஒருவரும் திருந்தக் காணாமையாலே விஜாதீயரான நம்மாலொருபடியாலும் இவர்களைத் திருத்தப்போகாததாயிருந்தது, இனி, (அ) இணக்குப்பார்வையிட்டு ம்ருகம்பிடிப்பாரைப்போலே ஸஜாதீயரைக்கொண்டே காரியம்கொள்ளுவோமென்று அறுதியிட்டு அதுக்கு, ஆழ்வாரையுண்டாக்குகைக்காக ஸ்ர்வபூத ஸுஹ்ருத்தான தன்னு

(க) நஶையாலே - ஆசையாலே. (உ) ஸ்ரீர-ஸ்த உ-சக. (ந) ஸ்ரீர-ஸ்த. உ. க. (ச) விசிஷ்டவேஷ விஷயமான — தேஹத்தோடுசேர்ந்த ஆத்மாவைக்குறிக்குமதான. (ரு) நிஷ்க்ருஷ்டவேஷ விஷயமான? தேஹமற்ற ஶுத்தாத்மாவின் ஸ்வரூபத்தைக் குறிக்குமதான. (சு) ஓலைப்புறம் - ஶாஸநபத்திரிகை. (எ) எடுத்துவிட்டு - படைஎடுத்துச்சென்று. (அ) இணக்குப்பார்வையிட்டு - குறிவைத்து.

டைய நிர்ஹேதுக ப்ரஸாதத்தாலே, எங்கும்பார்த்து இலக்குக்காணு மல் வாராநிற்க, அந்தப்பார்வை தனக்குப்பள்ளமடையான தென்திசை யிலே யானவளவிலே, (க) "மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து" என்கிறப டியே, ஜந்ம பரம்பரைகளிலே தோள்மாறி நித்யஸம்ஸாரியாய்ப்போரு கிற விவர்மேலேபட, அந்த நிர்ஹேதுக கடாக்ஷ விஶேஷலப்த திவ்ய ஜ்ஞாநபக்திகரானவாழ்வார், தத்ஸ்வரூப ரூபகுணவிபூதிகளை விஶத விஶததர விஶததமமாக அநுபவித்து அவ்வநுபவ பரீவாஹ ரூபேண பேஶுகிற பாஶுரமானது சோகவேக ஜநிதமான (உ) "మానిషాదేత్యాది" "மாநிஷாதேத்யாதி" ஶ்லோகம், ப்ரும்ஹாவின் ப்ரஸாதத்தாலே லக்ஷ ணோபேதமானுப்போலே, பகவத்ப்ரஸாதமடியாக ஸர்வலக்ஷணோபேத மான ப்ரபந்தமாய்த் தலைக்கட்டிற்று. இதுதானும், த்ராவிடவேதயா விஸ்தீர்ணமாய் அநேகார்த்த ப்ரதிபாதகமாயிருக்கையாலே, இதில் தாத்பர்யார்த்தம் ஸர்வர்க்கும் ப்ரதிபத்தி விஷயமாகை யறிதென்று பார்த்து, இதிலர்த்த விஶேஷங்களையும், இவைத்தில் ஆழ்வார் திருவுள் ளக்கருத்தின் ப்ரகாரத்தையும் இவ்வாசார்ய ருசிபரிக்ருஹீதமான வர்த் தமே யெல்லார்க்கும் தஞ்ஜமென்றுமத்தையும், இவர் தம்முடைய பரம க்ருபையினுலே ப்ரகாஶிப்பியா நின்றுகொண்டு ஆசார்ய பரம்பராப் ராப்தமான இவ்வர்த்தங்கள், எல்லார்க்கும் ப்ரதிபத்தியோக்யமாம்படி அநதிஸங்க்ரஹா திவிஸ்தாரமாக, இவ்வாசார்யஹ்ருதய ப்ரபந்தமு கேன அருளிச்செய்கிறுர். (ங) "ఆద్యస్యనః కులపతేః" "ஆத்யஸ்நஃகுல பதேஃ" என்கிறபடியே, வைதிகஸந்தாநத்துக்கு ப்ரதமாசார்யரான ஆழ்வாரருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களில் அவருடைய திருவுள்ளக் கருத்துகளைச் சொல்லுகையாலேயிறே, இப்ரபந்தத்துக்கு ஆசார்யஹ் ருதயமென்று நிருபகமாய்த்து. இப்ரபந்தத்தில், இவரருளிச் செய்கிற வாக்யங்களெல்லாம், அருளிச்செயல் சந்தைகளைச் சேர்த்தருளிச் செய் கிறது"; மயர்வற மதிநல மருளப்பெத்தவர்கள் பேசின திவ்யஸூக் திகளாகையாலே ஆப்ததமமுமாயத்யந்த போக்யமுமாயிருக்கிற விது வே தமக்கு அநவரதாபிமதமாகையாலும், முகமறிந்தவன் கோர்த்த முத்துப் பெருவிலை யனுமாப்போலே சந்தைகளைத்தாம் சேர்த்தசாது ரியாலே அருளிச்செயலில் ரஸஜ்ஞர்க்கு இதிலர்த்தத்திலும் காட்டில் ஶப்தந்தானே மிகவு மினிதாயிருக்குமென்று மபிப்ராயத்தாலும்; ஆ கையாலிப்ரபந்தம் ஶப்தார்த்தங்களிரண்டின் ரஸத்தாலும் விஶேஜ்ஞ ஜந்மநோஹரமாயிருக்கும். இதில் முதல் சூர்ணையாலே (ச) "హర్తుం తమస్సదసతీచ వివేక్తుమీశో మానం ప్రదీపమివ కారుణికో దదాతి" "ஹர்தும்தமஸ் ஸதஸதீசவிவேக்துமீஶோ மாநம்ப்ரதீபமிவ காருணிகோததாதி" என் கிறபடியே, ஆகஸ்மிகக்ருபாவானுன ஸர்வேஶ்வரன் அஜ்ஞரான ஸம் ஸாரிசேதநர்க்கு ஸதஸத் விவேகபரிகரமான ஶாஸ்த்ரப்ரதாநத்தைப் ண்ணி யருளினபடியை அருளிச்செய்கிறுர்.

(க) தி-வா. உ. சு. அ. (உ) ஸ்ரீரா. உ. கச. (ங) ஆ-ஸ்தோ. ரு. (ச) ஸ்ரீர-ஸ்த. உ. க.

மூலம்—(க) காருணிகனுன ஸர்வேஶ்வரன் அறிவிலாமனிஶர் உணர்வெனும் ஶுடர்விளக்கேற்றி பிறங்கிருள் நீங்கி மேலிருந்த நந்தா வேதவிளக்கைக் கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின ப்ரதீபமான கலைகளை நீர்மையினு லருள்செய்தான்.

அர்த்தம்.—க்ருபாவிசிஷ்டனுன ஸர்வேஶ்வரன் ஜ்ஞாநஹீநரான மனுஷ்யர் ஜ்ஞாநமென்கிற உஜ்வல தீபத்தை தரித்துக்கொண்டு மிகுந்த வஜ்ஞாநாந்தகாரம்போய் வேதாந்த ப்ரதிபாதகனுயிருந்த ஸத்யமாய் வேதைக ஸமதிகம்யமான தீபத்தைக்கண்டு பகவத்விஷயம் நல்லதென்றும் ஸம்ஸாரம் தீதென்றும் அறிகைக்கு வேதமாய் விஸ்தரித்த சலனமில்லாத தீபம்போன்ற அகாரத்திலே அதில் நின்றும் ஸமுத்பன்னமான ப்ரீதீபம் போன்ற வேதஶாஸ்த்ரங்களை கிருபாவிசிஷ்ட ஸ்பாவத்தாலே ப்ரஸாதித்தருளினுன்.

வ்யாக்யாநம். (க) (காருணிகனுன ஸர்வேஶ்வரன்) க்ருபா விசிஷ்டஸ்வதந்த்ர னென்றபடி, க்ருபாவானுனுலும் ஸ்வதந்த்ரனன்ருகில் தான் நினைத்தபடி கார்யம் செய்யப்போகாது, கேவல ஸ்வதந்த்ர நானுலும் ஸம்ஸார மோக்ஷங்க ளிரண்டுக்கும் பொதுவான ஸ்வாதந்த்ரியம் சேதநோஜ்ஜீவனுர்த்தமானக்ருஷிக்கு உறுப்பாகமாட்டாது; ஆனபின்பு க்ருபா விசிஷ்டமான ஸ்வாதந்த்ரியமேயிறே ஸம்ஸாரிசேதநோஜ்ஜீவன விஷயமாக அவன்பண்ணும் க்ருஷிக்கு ஹேதுவாவது; அதவா, ஸர்வேஶ்வரனென்று ஈஶேசிதவ்யஸம்பந்தத்தைச் சொல்லுகிறதாகவுமாம். (க) "కృపాయోగాచ్చశార్వతాత్" "க்ருபாயோகாச்ச ஶார்வதாத்" என்றவநந்தரம். (உ) "ఈశేశితవ్యసంబంధాదనిదంప్రథమాదపి॥" "ஈஶேசிதவ்யஸம்பந்தாத நிதம் ப்ரதமாதபி" என்கையாலே க்ருபாயோகமும், ஸம்பந்தமும், இரண்டும் ஸம்ஸாரி சேதந ஸம்ரக்ஷணர்த்த ப்ரவ்ருத்திஹேது விறே. க்ருபாயோகத்துக்கு மேலே ஸம்பந்த முக்த மாகையாலே ஸம்பந்த ப்ராதாந்யம் சொல்லித்தாகிறது, இத்தாலிவை நம்முடையவையன்றோ வென்கிற வபிமாநத்தோடே பரதுக்காஸஹிஷ்ணுத்வரூபையான க்ருபையும் கூடுகையாலே உத்தரோத்தரம் சேதனுஜ்ஜீவனதுக்கு க்ருஷிபண்ணிப் போருமவனென்றதாய்த்து. (ந) "அறிவிலா மனிஶர்" (ச) அறிவிலா மனிஶரெல்லாம், என்கிறபடியே அஜ்ஞான தமோயுக்தரான சேதநர், (ரு) "అంధంతమఇవాజ్ఞానమ్" "அந்தம்தம இவாஜ்ஞாநம்" என்னக்கடவதிறே. "ஹார்தும்தம꞉" என்றஜ்ஞாநத்தை, தமஶ்ஶப்தத்தாலே அருளிச்செய்தாரிறே. இத்தாலநாத்யஜ்ஞாநாந்தகாரத்தாலே அபிபூதராய்,

(க) லக்ஷ்மீதந்த்ரே. (உ) ஷை. (ந) தி - மா - கந. (ச) ஷை. (ரு)

ரூ—(உ) விவேகபலம் வீடுபெற்று.

(அ) ஶாஸ்த்ரஜ்ஞாந விவேகத்துக்கு பலம் த்யாஜ்யங்களை விடுகை யும் உபாதேயங்களைப்பற்றுகையும்.

அத்தாலே ப்ரக்ருத்யாத்ம விவேகம் முதலானவொரு விவேகமு மின்றிக்கே இருக்கிற ஸம்ஸாரி சேதநரென்கை " உணர்வெனும் சுடர்கொள் விளக்கேற்றி," (க) " உணர்வென்று மொளிகொள் விளக்கேற்றி" என்றும், (உ) ஜ்ஞானச் சுடர்விளக்கேற்றினேன், என்றும் சொல்லுகிற படியே, தைலவர்த்திகளாலுண்டான வழுக்கன்றிக்கே திணுங்கின தேஜஸ்ஸாயிருக்கிற ஜ்ஞாநமாகிற உஜ்வலதீபப்ரகாஶத்தை உடையதாய்; ஜ்ஞாநத்தை விளக்கென்கிறது, ஸ்வபர ப்ரகாஶத்வமாகிற ஸ்வபாவஸாம் யத்தாலே, (ங) "பிறங்கிருள் நீங்கி பிறங்கிருள் நிறங்கெட" என்றும், (ச) "பின்னுவ்வுலகினில் பேரிருள்நீங்க" என்னும் சொல்லுகிற படியே, மிகுந்த வஜ்ஞாநாந்தகாரம்போய் மேலிருந்த நந்தாவேதவிளக்கைக்கண்டு (ரு) "வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கென்றும் (சு) "நந்தாவிளக்கென்றும்" (எ) "வேதவிளக்கினையென்றும்" சொல்லுகிறபடியே, வேதாந்தங்களில் ஸர்வஸ்மாத் பரனுகப்ரகாசியா நிற்பானுமாய்: நித்யமாய், ஸ்வயம் ப்ரகாஶமுமான ஜ்ஞாநத்தை ஸ்வரூபமாக உடையனுமாய், வேதைக ஸமதிகம் யனுமானதன்னை, (அ) " என்தக்கஜ்ஞானகக்கண்களாலேகண்டு " என்கிறபடியே, ஜ்ஞாநசக்ஷுஸ்ஸாலே தர்சித்து, நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு (கூ) "இவையன்றே நல்ல, இவையன்றே தீய" என்கிறபடியே, ஸதஸத் விவேகம் பண்ணுகைக்கு, "ஸதஸதீசவிவேக்தும்" ஸதஸதீச விவேக்தும்" என்றுறிறே. நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு, என்கிறவிது, ஸாமாந்யேந, விலக்ஷணவிலக்ஷணவிவேகத்தைக் காட்டுமேயாகிலும், இவ்விடத்தில் பகவத்விஷயம் நன்று. ஸம்ஸாரம் தீதென்று விவேகிக்கையைக் காட்டுகிறது. (நந்தாவேத விளக்கைக்கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு) என்கையாலும், விவேக பலமானத்யாக ஸ்வீகாரவிஷயங்கள் ஸம்ஸார மோக்ஷங்களாகவே மேல்சொல்லுகையாலும், பகவத் விஷயத்தைக் கண்டபின்பு, ஸதஸத் விவேகம் பண்ணுகையாவ தென்னென்னில்? ப்ரதிகோடி கண்டாலொழிய அதின்தோஷம் யதாவாகத் தோற்றுமையாலும், இத்தைப்பற்ற இது நன்று, தீதென்றும்போது, உபயகோடியும், கண்டுகொள்ள வேண்டுகையாலும் சொல்லித்து, (மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின ப்ரதீபமான கலைகளை) (கய) "மறையாய் விரிந்த விளக்கையென்றும்", "துளக்கமில் விளக்கென்றும்" சொல்லுகிறபடியே,

(க) தி - அ. ங. கூச. (உ) தி - அ. உ. க. (ங) பெ - மொ. ரு. எ. ங. (ச) பெ - க. கூ. ,கய. (ரு) பெ - ச. ங. கக. (சு) தி - மொ - ங. அ. க. (எ) தி - வா - ச. எ. கய. (அ) ஷை. (கூ) பெ - அ. ங. (கய) தி - மொ. அ. கூ. ச.

மூ—(௩) த்யாஜ்யோபாதேயங்கள் ஸுகதுக்கங்கள்.

(அ) துக்கம் த்யாஜ்யமும் ஸுகம் உபாதேய மென்கை.

(க) "அகாரோவை ஸர்வாவாக்" "அகாரோவை ஸர்வாவாக்" என்கையாலே வேதரூபேண விஸ்த்ருதமாய்த்தது தானென்றும்படி ஸகலவேத காரணமாய், தனக்கொரு காரண மில்லாமையாலே சலநமின்றிக்கே, ஸகலார்த்த ப்ரகாஶகமாயிருக்கிற அகாரத்திநின்று முத்பன்னமாய், தீபாதுத்பந்ந ப்ரதீபம்போலே (உ) "மாநம்ப்ரதீபமிவ" "மாநம்ப்ரதீபமிவ" என்கிறபடியே, த்யாஜ்யோபாதேயார்த்தங்களை ஸ்புடதரமாக ப்ரகாசிப்பியா னின்றுள்ள, (௩) "பன்னுலக நால்வேதமென்றும்" (ச) "கலைகளும் வேதமு மித்யாதியாலும்" சொல்லப்படுகிற ஶ்ருதியும், ததுப ப்ரும்ஹணங்களுமான ஶாஸ்திரங்களை, மறையாய் விரிந்த விளக்கை துளக்கமில் விளக்குமாயென்றும், அகாரத்தை, ஈஶ்வரனோடே ஸமாநாதிகரித்தது. (ரு) "அ இதிப்ருமஹ்ம" "அஇதிப்ருமஹ்ம" என்கிறபடியே, வாச்யவாசக ஸம்பந்தத்தாலே (நீர்மையினு லருள்செய்தான்) நீர்மை ஸ்வபாவம். தன்ஸ்வபாவத்தாலே கொடுத்தானென்கை. அதாவது, தன்ஶேஷித்வஸ்வபாவத்தாலே யென்னுல், காருணிகனுன தன்க்ருபையாகிற ஸ்வபாவத்தாலே என்னுதல், ஸமுச்சயமாதல். பூர்வயோஜனை, நீர்மையினு லென்கிறதற்கு, பூர்வர்களிட்ட வ்யாக்யாநத்திற்கும், இந்த உதிரத்தெறிப்பு, த்ரைகுண்ய விஷயமானவைத்துக்கு ப்ரகாஶகம் என்றிவர்தாம் மேலருளிச் செய்கிறதற்கும் சேரும். நடுவில் யோஜனை, காருணிகனுன வென்றிவர் ப்ரதமத்திலே யெடுத்ததுக்கும் (சு) "காருணிகோததாதி" "காருணிகோததாதி" என்று பட்டாருளிச் செய்ததற்கும் ஶேரும், மூன்றும்யோஜனை, காருணிகனுன ஸர்வேஶ்வரனென்கிற விடத்தில், சொன்ன விரண்டாம் யோஜனைக்குச்சேரும். ஆக இச்சூர்ணையால் அஜ்ஞான ஸம்ஸாரி சேதனர் ஜ்ஞாந ப்ரகாஶத்தை யுடையராய் அந்தவஜ்ஞாநம் நீங்கி தன்னைக்கண்டு ஸத ஸத்வி வேகம் பண்ணுகைக்கு உறுப்பாக ஈஶ்வரன் ஶாஸ்த்ர ப்ரதாநம்பண்ணினபடியை தந்நிதாநத்தோடே அருளிச்செய்தராய்த்து.

வ்யா. (உ) இவ்விவேகத்திற்கு பலமேதென்ன? சொல்லுகிறது; விவேகேத்யாதி:—அதாவதப்படியவன் கொடுத்த ஶாஸ்த்ர ஜந்ய ஜ்ஞாநத்தாலே நல்லதும் தீயதும் விவேகிக் கைக்குபலம், த்யாஜ்யத்தை விடுகையும், உபாதேயத்தைப் பற்றுகையு மென்கை. த்யாக ஸ்வீகாரமென்னுதே வீடுபற்றென்கையாலேக (எ) "வீடுமின்முற்றவும்" அற்றிரைபற்றே" என்றும் வார்பாசுரத்தை யுட்கொண்டருளிச் செய்தமை தோற்றுகிறது.

வ்யா. (௩) த்யாஜ்யோ பாதேயந்தா னெவையென்ன? சொல்லுகிறது - த்யாஜ்யேத்யாதி அதாவது:— "ஸுகீபவேயம்" "ஸுகீபவேயம்"

(க) ஶ்ருதி. (உ) ஶ்ரீர-ஸ்த. உ-க. (௩) தி-மொ-எ. அ உ. (ச) தி-மொ. உ. அ. (ரு). (ரு) ஶ்ருதி. (சு) ஶ்ரீர-ஸ்த. உ-க. (எ) தி-வா. க. உ. க.

மூ—(ச) இவைத்துக்கெல்லை இன்புதுன்பளி ப்பன்மாமாயத் தழுந்து கையும் களிப்பும் கவர்வு மற்று பேரின்பத் தின்புறுகையும்.

மூ—(ரு) அநந்தக்லேஶ நிரதிஶயாநந்தஹேது மறந்தே நரியகிலாதே உணர்விலே னேணிலே னயர்த்தென்னும் உய்யும்வகை நின்

(அ) இந்த ஸுகதுக்கங்களுக்கு பரமாவதி ஸுகதுக்கங்களை யுண்டாக்க வற்றாய் பலவகைப்பட்ட வாஶ்சர்யங்களான ஶப்தாதி விஷயங்களிலேயழுந்துகையும் கர்வ க்லேஶங்கள் கழிந்து மஹாநந்தகரமான பரமபதத்திலே ஆநந்திக்கப் பெறுகையும்.

(அ) அநந்தக்லேஶமான ஸம்ஸாரத்துக்கும் நிரதிஶயாநந்த மோக்ஷத்துக்கும் காரணம் பரஸ்வரூபத்தையும் மறந்து ஸ்வஸ்வரூபமுமறியாதே விரோதிஸ்வரூபத்தையுமறியாதே உபா

"து:கமஸுகம்" "துக்கமாபூவம்" என்றுஸர்வர்க்கும் துக்கமநிஷ்டமாய் ஸுகமிஷ்டமாகையாலே, துக்கம் த்யாஜ்யம், ஸுகமுபாதேய மென்கை.

வ்யா. (ச) இவைதான் கர்மாநுகுணமாக நின்ற நின்ற நிலைகளிலே யுண்டாகையாலே, இவைத்தின் பரமாவதியைச் சொல்லுகிறது. இவைத்துக் கித்யாதி, அதாவது:—துக்கத்துக்குப் பரமாவதி (க) "இன்புதுன்பளி" என்றுதுடங்கி ஸுகதுக்காவஹங்களாய், அநாதியாய் துஸ்தரமாயிருந்துள்ள ப்ரக்ருதி ஸம்பந்த நிபந்தநமான ஜந்மங்களி னின்று மொருக்காலும் நீங்காமைக் குறுப்பானவையாய், பலவகைப்பட்டிருப்பனவாய், அகப்பட்டால் தப்பவரிதா மவையாய். (உ) "இன்னமுதெனத்தோன்றி" எத்தனையேனு மறிவுடையாரையும், கலங்கப்பண்ணுகையாலே, ஆஶ்சர்யங்களா யிருந்துள்ள ஶப்தாதி விஷயங்களிலே துக்கப்பட்டு, "அழுந்து" மென்கிறபடியே, அநந்த க்லேஶபாஜநமான ஸம்ஸாரத்திலே அழுந்துகை. ஸுகத்துக்குப்பரமாவதி (ந) "களிப்பும் கவர்வு மற்று" என்று துடங்கிச் சொல்லுகிற வல்பாஸ்திரத்வாதி தோஷதுஷ்டமான விஷயலாபத்தாலே வரும் கர்வமும், ததலாபத்தாலேவரும் க்லேஶமும், கழிந்து, (ச) ஷட்பாவ விகாரங்களும் நீங்கி, ஶுத்தஸத்வதயா ப்ரகாஶகமா யிருக்கிற வப்ராக்ருத விக்ரகத்தைப் பெற்று (ரு) "அந்தமில் பேரின்ப" மென்கிறபடியே, அபரிமிதாநந்தமய மான பரமபதத்திலே. (சு) "அடியார்கள் குழாங்களை யுடன்கூடி" (எ) சூழ்பட்டோடும் சுடர்ச்சோதி வெள்ளத் தின்புற்று "என்கிறபடியே" அநவரதபகவ தநுபவத்தாலே, ஆநந்த நிர்ப்பரனா யிருக்கை என்கை.

வ்யா. (ரு) ஏவம்பூத துக்கமும் ஸுகமுமிவனுக்குண்டாகுகைக்கு ஹேது வேதென்னச்சொல்லுகிறது - அனந்தேத்யாதி அதாவது:—

(க) திருவாசிரியம் - சு. (உ) தி-வா. எ. க. அ. (ந) தி-வா. உ. ந. க0. (ச) இருத்தல், உண்டாதல், பெருத்தல், சூழ்தல், குறைதல், மாளுதல். (ரு) தி-வா. க0. கூ. கக. (சு) தி-வா. உ. ந. க0. (எ) தி-வா. அ. க0. ரு.

மூ. றவொன்றை நன்கறிந்தன னுணர்வினுள்ளே ஆம்பரிசென் றும் சொல்லுகிற ஜ்ஞாதவ்ய பஞ்சக ஜ்ஞாநா ஜ்ஞானங்கள்.

யஸ்வரூபமும் அறியாதே புருஷார்த்த ஜ்ஞானமுமின்றிக்கே இப்படியாகவும் உஜ்ஜீவநஹேதுவான பரஸ்வரூப ஜ்ஞாநமும் ஆத்மஸ்வரூபஜ்ஞாநமும்.

(க) "సంసారసాగరంఘోరంఅనంతక్లేశభాజనమ్" ஸம்ஸாரஸாகரம்கோரம்; "அநந்தக்லேஶ பாஜநம்" என்கிற ஸம்ஸார ப்ரயுக்தானந்த துக்கஹேது (உ) "மறந்தேனுன்னை முன்னம்" என்கிற பரவிஷயாஜ்ஞாநமும், (ங) "என்னை யறியகிலாதே" என்கிற, ஆத்மவிஷயாஜ்ஞாநமும், (ச) "ஓடியுமுழன்று முயிர்களே கொன்றேன் உணர்விலேன்" என்கிற விரோதிவிஷயா ஜ்ஞானமும் (ரு) "பிறவி நோயறுப்பான் ஏணிலேனிருந்தேன்" என்கிற உபாயவிஷயாஜ்ஞாநமும், (சு) "ஆழியங்கையம்மானை யேத்தாதயர்த்து" என்கிற புருஷார்த்த விஷயாஜ்ஞாநமுமாகிற ஜ்ஞாதவ்யார்த்த பஞ்சகஜ்ஞாநாபாவம். (எ) "నిరస్తాతిశయాహ్లాద సుఖభావైకలక్షణా" "நிரஸ்தாதிஶயாஹ்லாத ஸுகபாவைக லக்ஷணா" என்கிற பகவத்ப்ராப்தி ரூபமோக்ஷ ப்ரயுக்த நிரதிஶயஸுகஹேது, (அ) "நின்னை நெஞ்சிலுய் யும்வகை யுணர்ந்தேன் என்கிற பரவிஷயஜ்ஞானமும் (கூ) "நின்றவொன்றையுணர்ந்தேன்" என்கிற ஆத்ம விஷயஜ்ஞானமும், (க0) "அகற்ற நீவைத்த மாயவல்லைம்புலன்களா மவைநன்கறிந்தனன்" என்கிற விரோதி விஷயஜ்ஞானமும், (கக) "அவனதருளாலுறற்பொருட்டென் னுணர்வினுள்ளே இருத்தினேன்" என்கிற, உபாயவிஷயஜ்ஞானமும், (கஉ) "ஆம்பரிசறிந்து கொண்டு" என்கிற, புருஷார்த்தவிஷய ஜ்ஞானமுமாகிற ஜ்ஞாதவ்யார்த்த பஞ்சக ஜ்ஞானமென்கை. இத்தால், "ஜ்ஞாநாந்மோக்ஷ: அஜ்ஞாநாத்ஸம்ஸாரம்" என்கையாலே (கங) "ప్రాప్యస్య బ్రహ్మణోరూపం ప్రాప్తుశ్చ ప్రత్యగాత్మనః। ప్రాప్త్యుపాయం ఫలంప్రాప్తే స్తథాప్రాప్తి విరోధిచ॥ వదన్తి సకలా వేదా స్సేతిహాస పురాణకాః। మునయశ్చ మహాత్మానో వేద వేదార్థ వేదినః॥" "ப்ராப்யஸ்ய ப்ருஹ்மணோரூபம் ப்ராப்துஶ்ச ப்ரத்யகாத்மந:। ப்ராப்த்யுபாயம்பலம் ப்ராப்தேஸ்ததாப்ராப்தி விரோதிச ॥ வதந்திஸகலாவேதாஸ்ஸே திஹாஸ புராணகா:। முநயஶ்ச மஹாத்மாநோ வேதவேதார்த்தவேதிந:॥" என்கிறபடியே, ஸகல ஶாஸ்த்ரதாத்பர்யமாய் ஆத்மோஜ் ஜீவநத்துக்கவஶ்யம் ஜ்ஞாதவ்யமான, அர்த்தபஞ்சகத்தையும் அறியாமையும் அறிகையுமே ஸம்ஸார மோக்ஷங்களுக்கு, ஹேது வென்றதாய்த்து.

(க) ஜிதந்தா. ச. (உ) தி-மொ. கு. உ. உ. (ங) தி-வா. உ. கூ. கூ. (ச) தி-மொ. க. கு. கு. (ரு) தி-மொ. க. கு. க. (சு) பெ-அ. அஉ. (எ) வி-பு. கு. ரு. ருகூ. (அ) தி-மொ. கு. ங. கு. (கூ) தி-வா. அ. அ. ச. (க0) தி-வா ரு. எ. அ. (கக) தி-வா. அ. அ. ங. (கஉ) தி-மா. ஙஅ. (கங) ஹாரீதஸ்ம்ருதள.

மூ—(௬) இவைத்துக்கு க்காரணம் இரண்டிலொன்றிலொன்றுகைகள்.

மூ—(எ) ஸத்வாஸத்வ நிதாநம் இருள்தரும மலங்களாக வென்றும் ஜந்ம ஜாயமாநகால கடாக்ஷங்கள்.

(அ) விரோதிஸ்வரூப ஜ்ஞாநமும் உபாயஸ்வரூபஜ்ஞாநமும் புருஷார்த்தஸ்வரூப ஜ்ஞாநமும் இப்படியாகவும் ஓதப்படுகிற முமுக்ஷுவுக்கறியத்தக்க அர்த்த பஞ்சகத்தினுடைய ஜ்ஞாநமும் அஜ்ஞாநமும் அர்த்த பஞ்சகமறிகை மோக்ஷத்துக்கும் அறியாமை ஸம்ஸார ஸம்பந்தத்துக்கும் ஹேதுவென்றபடி

(அ) இவ்வர்த்த பஞ்சகஜ்ஞாநா ஜ்ஞாநங்களுக்கு ஹேது ராஜஸ தாமஸங்களிரண்டிலும் ஸாத்விகமொன்றிலும் ஒன்றொன்று.

(அ) * ஸத்வகுணத்துக்கும் ஸத்வேதரங்களான ராஜஸ் தாமஸங்களுக்கும் காரணம் அஜ்ஞாநத்தை யுண்டாக்கும் நிர்மலமாகும்படி கடாக்ஷிக்கு மென்கிற பிறவியும் ஜந்மகாலத்தில் பரவந்நிர்ஹேதுக கடாக்ஷமும்.

வ்-யா. (௬) இவ்வஜ்ஞாநாதிகள் தனக்கு அடியே தென்னச்சொல்லுகிறது (இவைத்துக்குக் காரணமித்யாதி) அதாவது:— இவ்வர்த்த பஞ்சகாஜ்ஞாநத்துக்குக்காரணம் (க) "முத்திரத்துவாணியத்திரண்டிலொன்றுகை." ஆகிற ரஜஸ்தமஃ ப்ரசுரதை. இவ்வர்த்தபஞ்சகஜ்ஞாநத்துக்குக் காரணம் (உ) "முக்குணத்திரண்ட வையகற்றி" ஒன்றினி லொன்றுகை" யாகிற ஸத்வப்ரசுரதையென்கை. ரஜஸ்தமஸ்ஸுக்கள் அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாந ஹேதுவாய், ஸத்வம், யதாஜ்ஞாநஹேதுவாயிறே யிருப்பது. *

வ்யா. (எ) இவைத்துக்கு நிதானமேதென்னச்சொல்லுகிறது (ஸத்வேத்பாதி), அதாவது:— ஸத்வேதரங்களான ரஜஸ்தமஸ்ஸுக்களுக்கு நிதாநம் (௩) "இருள்தருமாஞானத் துளினிப்பிறவி" என்கிற, அஜ்ஞாநாவஹமான ஸம்ஸாரத்தில் ஜந்மம். ஸத்வத்துக்கு நிதாநம் (௪) "జాయమానంహి పురుషం యంపశ్యేన్మధుసూదనః । సాత్త్వికస్సతువిజ్ఞేయస్సవై మోక్షార్థచింతకః ॥" "ஜாயமாநம்ஹிபுருஷம் யம்பஶ்யேந்மதுஸூதநஃ। ஸாத்விகஸ்ஸதுவிஜ்ஞேயஸ்ஸவைமோக்ஷார்த்த சிந்தகஃ" என்கிறப்டியே, ஜாயமானகாலத்தில் அவன்கண்களாலே (௫) "அமலங்களாகவிழிக்கும்" என்கிற, நிர்மலத்வகரமான பகவத்கடாக்ஷ மென்கை. *

* ஸத்வாஸத்வங்களுக்குக் காரணம், பகவத்கடாக்ஷமும், பிறவியுமென்கை.

(க) திருச்சந்த-வி-ம். ௬அ. (உ) திருவெழுகூற்றிருக்கை. (௩) தி-வா. ௧0. ௬. ௧. (௪) ஸ்ரீபாரதம்-மோ. ௩௪௨. எ௨. (௫) தி-வா. ௧. ௬. ௬.

மூ—(அ) இவைத்துக்கு மூலம் இருவல்லருள் நல்வினைகள்.

மூ—(கூ) கர்மக்ருபா பீஜம் பொய்நின்ற வருள்புரிந்த வென்கிறவவித்யாஸௌஹார்தங்கள் (க0) ஏதந்நிமித்தம்

(அ) இஜ்ஜன்ம பகவத் கடாக்ஷங்களுக்கு காரணம் புண்யபாபங்களும்பகவத்க்ருபையாகிறஸுக்ருதமும். இருவல்வினை அருள் நல்வினை என்றந்வயித்து இரண்டாய் பலிஷ்டங்களான புண்ய பாபங்களும் பகவத்க்ருபையாகிற ஸுக்ருதமுமென்று பொருள்.

(அ) கர்மக்ருபைகளுக்கு மூலம் தேஹாத்மப்ரமம் க்ருபாவிசிஷ்ட சிந்தனை என்று சொல்லப்படுகிற அஜ்ஞாநமும் ஸ்வாபாவிக ஸுஹ்ருத்வமும். (க0) இவ்வவித்யாஸுஹ்ருத்வங்களுக்கு ஹேது

வ்யா. (அ) இவைதனக்கு மூலமேதென்னச்சொல்லுகிறது, (இவைத்துக்குமூலமித்யாதி) அதாவது:—இஜ்ஜந்மத்துக்கு மூலம் (க) "சார்ந்தவிருவல்வினை" என்று ஆத்மாவோடு பிரிக்க ஒண்ணாதபடி பொருந்திக் கிடக்கிற ப்ரபலங்களான புண்ய பாபங்கள். இக்கடாக்ஷத்துக்கு மூலம் (உ) "தொல்லருள் நல்வினை" என்கிறவவனுடைய ஸ்வாபாவிகக்ருபையாகிற ஸுக்ருதமென்கை. இருவல்லருள் நல்வினைகளென்னது, இருள் வல்வினையும், அருள் நல்வினையுமென்றபடி. *

வ்யா. (கூ) இவைதனக் கடியேதென்னச் சொல்லுகிறது (கர்மேத்யாதி) அதாவது :—கர்மத்துக்குபீஜம் (ந) "பொய்நின்ற ஞானம்" என்கிறவவித்யை. க்ருபைக்கு பீஜம் (ச) "அருள்புரிந்த சிந்தை" என்கிற ஸௌஹார்தமென்கை (ரு) "𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌚 𑌸𑍌𑌹𑌾𑌰𑍍𑌦𑌂" "யீஶ்வரஸ்யச ஸௌஹார்தம்" என்றிவ்வாத்மோஜ்ஜீவநத்துக்கு அவன் க்ருஷி பண்ணுகையில் இழிகைக்கு மூலகாரணமாக, ஸௌஹார்த்தத்தைச் சொல்லிற்றிறே. இஸ்ஸௌஹார்த மடியாகவாய்த்து, இவ்வாத்ம விஷயமாக அவன் திருவுள்ளத்தில் இரக்கம் பிறப்பது.

வ்யா. (க0) இந்த வவித்யாஸௌஹார்தங்கள் தனக்கு அடியேதென்னச் சொல்லுகிறது (ஏதந்நிமித்தமித்யாதி) ஏதச்சப்தத்தாலே இரண்டையும் பராமர்சிக்கிறது. அதாவது: — அவித்யைக்கு நிமித்தம் (கூ) "மூதாவியில் தடுமாறு முயிர்முன்னமே" என்கிறவநாதியான வசித்ஸம்பந்தம். ஸௌஹார்தத்துக்கு நிமித்தம் (எ) "அடியேனடைந்தேன் முதல் முன்னமே" என்கிற, வநாதியான வயனஸம்பந்தமென்கை. அயனசப்தத்தாலே, ஈஶ்வரனைச்சொல்லுகிறது. நாராயண

(க) தி-வா. க. ரு. க0. (உ) தி-வா. ரு. கூ. க0. (ந) திருவிருத்தம். க.
(ச) தி-அ. உ. ருகூ. (ரு)  (சு) திருவிருத்தம். கரு. (எ) தி-வா. உ. ந. சு.

மூ. முன்னமே முதல் முன்னமேயான வசிதயநாநாதி ஸம்பந்தங்கள்.

மூ—(கக) இவை கிட்டமும் வேட்டு வேளானும்போலே ஒண்பொருள் பொருளல்லாதவை யென்னுதே நானிலாத யானும் உளனுவனென்கிற ஸாம்யம் பெற

(அ) அநாதியாயுண்டானதாகச் சொல்லப்படுகிற அநாதியான வசித்ஸம்பந்தமும் அயனஸம்பந்தமும்.

(அ) இவ்வசிதயன ஸம்பந்தங்கள் மண்ரேமும் ப்ரமரமும்போலே ப்ரலாக்யமானவஸ்து அஸத்கல்பவஸ்து என்றிதின்மேன்மைதண்மைகள்பாராதே நானிலேன் நானுளனேன் என்னும்படியான ஸாஜாத்யம்பெறும்படி

ணிறே. ஆக வநாத்யசித்ஸம்பந்த மடியாக அவித்யையாய், அதடியாக புண்யபாபரூப கர்மமாய், அதடியாக வஜ்ஞானஹேதுவான ஜன்மமாய், அதடியாக ரஜஸ்தமோ விருத்தியாய், அத்தாலே அர்த்தபஞ்சக ஜ்ஞாநாபாவமாய், அதடியாக "அஜ்ஞாநாத்ஸம்ஸாரம்" என்கிறபடியே ஸம்ஸாரதுக்கம் வரும். அநாத்யயன ஸம்பந்தமடியாக பகவத்ஸௌஹார்த முண்டாய், அதடியாகக்ருபையுண்டாய், அதடியாக விஶேஷ கடாக்ஷமுண்டாய், அதடியாக ஸத்வவ்ருத்தியுண்டாய், அதடியாக அர்த்தபஞ்சக ஜ்ஞாநமுண்டாய், அதடியாக "ஜ்ஞாநாந்மோக்ஷ꞉" என்கிறபடியே மோக்ஷ ஸுகமுண்டா மென்றதாய்த்து. *

வ்யா. (கக) இவ்வுபய ஸம்பந்தமும் ஆத்மவஸ்துவுக்குச்செய்யுமவைத்தைச் சொல்லுகிறதுமேல் (இவையென்றுதொடங்கி) அதாவது:— அசித் ஸம்பந்தம் தன்னோடு சேர்ந்த மாணிக்கத்தை ஒளியறத்தின்று உருவழித்து, தன்னைப்போலேயாக்கும் கிட்டம்போலே (க) "அங்கலத்தொண்பொருள்" என்கிற விலக்ஷண ஜ்ஞாநகுணகமாய் ஸ்வயம் ப்ரகாஶமானவஸ்து என்று இதின் சீர்மைபாராதே (உ) "இல்லது" என்றும் (ங) "యన్నాస్తి" "யந்நாஸ்தி" என்றும் சொல்லுகிற தன்னோடே (ச) "நானிலாத" என்கிற ஸாம்யம் பெறும்படியாக ஜ்ஞாநஸங்கோசமறத்தின்று (ரு) "அந்தமும் வாழ்வும்" என்கிறவைத்தில் அந்தமாகிற ஹானியையுண்டாக்கும். (சு) "అసన్నేవ స భవతి" "அஸந்நேவ ஸபவதி" என்கிறபடியே, ஸத்தாஹானியைப்பண்ணுமென்கை" அயநஸம்பந்தம், (எ) "కీటః పేశస్కృతా రుద్ధః కుడ్యాన్తరమచిన్తయన్ । సంరమ్భభయయోగేన విన్దతే తత్స్వరూపతామ్ ॥" கீட꞉ பேஶஸ்க்ருதாருத்த꞉ குட்யாந்தரமசிந்தயந்। ஸம்ரம்பபயயோகேநவிந்ததே தத்ஸரூபதாம்" என்கிறபடியே, ஏதேனுமொரு கீடத்தைக் கொண்டுவந்து வைத்தாதிஸ்வஸாம்யாபந்நமாக்

(க) தி-வா. க. உ. க0. (உ) தி-வா. க. உ. ச. (ங) வி-பு. உ. கஉ. ஙஎ. (ச) திருச்சந்தம். வி-ம். சுரு. (ரு) பெ-மொ. ரு. எ. உ. (சு) தை-உ. ஆ-சு. க. (எ)

மூ—த்தின் றாதி அந்தமும் வாழ்வுமாகிற ஹாநிஸத்தைகளை யுண்டாக்கும்.

மூ—(கஉ) ஒன்று கூடினதாய் பற்றறுக்க மீண்டொழிகையாலே பழய வடியேனென்று மதொன்றுமே ஒழிக்க ஒழியாதது.

(அ) அழித்து த்வநித்து ஸ்வரூபநாசமும் ஸ்வரூபாவிர்ப்பாவ முமாகிற விநாச ஸத்பாவங்களை ஜநிப்பிக்கும்.

(அ) அசித்ஸம்பந்தமானதொன்று வந்தேறியாய் ஈச்வரன் தத் ஸம்பந்தத்தைநிவ்ருத்திப்பிக்க நிவ்ருத்தமாய்ப்போருகையா லே அநாதியான பகவச் சேஷத்வஸம்பந்தமொன்றுமே நிவ் ருத்திப்பிக்கப்போகாதது.

கும் வேட்டுவேளானைப்போலே (க) "பொருளல்லாதவென்னை" என்கிறபடியே, ஜ்ஞாநாபாவத்தாலே அவஸ்துவாச்யமாய்க் கிடக்கிற விதின்சீர்மைபாராதே ஸ்வரூபேணவிபுவானதன்னோடு, (உ) "பரமம் ஸாம்யமுபைதி" "பரமம் ஸாம்யமுபைதி" என்கிறபடியே, (ஙு) "உள்ள உலகளவும் யானுமுளனாவன்" என்று ஜ்ஞாநத்வாராவரும் விபுத்வஸாம் யம் பெறும்படி தன்னிறமாக ஊதி வாழ்வாகிற ஸத்தையை யுண்டா க்குமென்கை. (ச) "ஸந்தமேநம் ததோ விதுః" "ஸந்தமேநம் ததோவிதுः" என் று பகவத்ஜ்ஞாநாநந்தரம் ஆத்மஸத்தாஸித்தியாகச் சொல்லிற்றிறே. *

வ்யா. (கஉ) இப்படி அநாதியாகச்சொன்ன உபயஸம்பந்தமும் ஆத் மாவுக்கு நித்யமாயிருக்குமோயென்கிற சங்கையிலே சொல்லுகிறது. (ஒன்றித்யாதி) அதாவது:—அசித்ஸம்பந்தம் (ரு) "பெருந்துயரிடும் பையில் பிறந்து கூடினேன்" என்கையாலே, ஆத்மாவுக்கு ஸ்வரூபமன்றி க்கே வந்தேறியாய் (சு) "வினைபற்றறுக்கும்" என்றொரு ஸர்வசக்தி ஸவாஸநமாகப்போக்க, (எ) "அடைந்த வருவினையோடல்லல் நோய் பாவம் மிடைந்தவை மீண்டொழிய" என்கிறபடியே, நிவ்ருத்தமாய் விடு கையாலே (அ) "திருமாலே நானுமுனக்குப்பழவடியேன்" என் னும்படி அநாதியாயிருக்கிற சேஷசேஷி பாவரூப பகவத்ஸம்பந்த மொன்றுமே (கூ) "உறவேல் நமக்கிங்கொழிக்க ஒழியாது" என்கிற படியே ஈச்வரனாலும் சேதநனாலும் கழிக்கப்பார்த்தாலும் கழிக்க போகாததென்கை. இத்தால் அசித்ஸம்பந்தமாகந்துகமாய், கர்மோபாதி கமாகையாலே அநித்யமாயிருக்கும். அபநஸம்பந்தமநாதியாய், நிரு பாதிகமாகையாலே நித்யமா யிருக்குமென்றதாய்த்து. ஆனால், ஆக ந்துகமானவித்தை அநாதி யென்பானென்னென்றில்? வந்தேறின கால த்துக்கடிதெறியாமையாலே அநாதியென்று ப்ரமாணங்கள் சொல்லுகை யாலே ஒருநாள்வரையிலே பகவத்ப்ரஸாதத்தாலே கழியக்காண்கையா லே வந்தேறி என்னுமிடம் நிஸ்சிதமிறே. *

(க) ரு. எ. ங. (உ) மு-உ. ங. உ. (ஙு) பெ-அ. எசு. (ச) தை-உ. ஆ-சு. ச. (ரு) பெ-மொ. க. க. க. (சு) பெ-மொ-கக. ச. கூ. (எ) தி-அ. க. ருகூ. (அ) திருப்பல்லாண்டு-கக. (கூ) திருப்பாவை. உஅ.

மூ—(கரு) இந்த வுதிரத்தெறிப்பு த்ரைகுண்யவிஷயமானவற்றுக்கு ப்ரகாசகம். (கசு) வத்ஸலையானமாதா பிள்ளைபெகணியாமல் மண்தின்றவிட்டு ப்ரத்யௌஷதமிடுமாப்போலே எவ்வுயிற்கும் தாயிருக்கும் வண்ணமான விவனும் ருசிக்கீடாக பந்தமும் பந்தமறுப்பதோர்மருந்தும் காட்டுமிறே.

(அ) இந்த நாராயணத்வ ப்ரயுக்த பிதா புத்ர ஸம்பந்தம் த்ரைகுண்ய விசிஷ்ட சேதந விஷயமான வேதாதிகளைக் கொடுக்கைக்கு ப்ரதானஹேது. (கசு) வாத்ஸல்யயுக்தையான தாயானவள் சிசுவானது முகவைவர்ண்யமடையாமல் மண்ணைத் தின்றவநுமதிபண்ணி தத்தோஷநிவ்ருத் யௌஷதமிடுமாப் போலே ஸர்வாத்மாக்களுக்கும் மாத்ருவத்வத்ஸலநான விசுவரனும் சேதநருச்யநுகுணமாக பந்தமும் பந்தச்சேதகமான தோரௌஷதத்தையும் தர்சிப்பிக்குமிறே.

வ்யா. (கரு) இவ்வயநஸம்பந்தமே கீழ்ச்சொன்ன சாஸ்த்ரப்ரதாநத்துக்கு ஹேதுவென்கிறார்மேல், (இந்த இத்யாதி) அதாவது:—இந்தநாராயணத்வ ப்ரயுக்தமான குடல்துடக்கு(க) "త్రైగుణ్యవిషయా వేదాః." "த்ரைகுண்ய விஷயாவேதா:" என்கிறபடியே ஸத்வரஜஸ்தமோரூப குணத்ரயவஸ்யரான சேதநரை விஷயமாகவுடைய வேதங்களை ப்ரகாசிப்பிக்கைக்கு ஹேதுவென்றபடி. தம:ப்ரசுரராயும் ரஜ:ப்ரசுரராயும் ஸத்வப்ரசுரராயுமிருக்கும் சேதநருடைய ருச்யநுகுணமான புருஷார்த்த ஸத்ஸாதநங்களையிறே பூர்வபாகத்தில் பரக்கச்சொல்லுவது, ஆகையால் த்ரைகுண்ய விஷயமானவை என்கிறது. இந்தால் நீர்மையினலருள் செய்தானென்று, கீழ்ச்சொன்ன சாஸ்த்ரப்ரதாநத்துக்கு ப்ரதானஹேது, ஸம்பந்த மென்றதாய்த்து.*

வ்யா. (கசு) இப்படி ஸம்பந்தமடியாகச்செய்தானுகில் மோக்ஷ ஹேதுவான சாஸ்த்ரங்களையே காட்டாதே, ஐஹிகபார லௌகிக போகஸாதநவிதாயகதயா பந்தஹேதுவான சாஸ்த்ரங்களையும் காட்டுவானென் னென்னச்சொல்லுகிறது. (வத்ஸலையித்ாதி) அதாவது:—வாத்ஸல்யயுக்தையான பெற்றதாயானவள், மண்ணையாசைப்பட்ட பிள்ளையை, பெகணியாமல் முந்தரமண்ணைத் தின்றவிட்டு, பின்னையதுக்கு, மாற்று மருந்திடுமாப் போலே, (உ) "எவ்வுயிர்க்கும் தாயோன்" என்றும், (ரு) "தாயிருக்கும் வண்ணமே" என்றும், சொல்லுகிறபடியே, ஸகலாத்மாக்களளவிலும், மாத்ருவத் வத்ஸலனான விவனும், சேதநருடையருசிக்கீடாக பந்தங்களையும் தர்சிப்பித்து, பின்னை பந்த நிவர்தகபேஷஜமானத்தையும் தர்சிப்பிக்குமிறேயென்கை. இத்தாலிப்படிசெய்தது, ஸம்பந்தப்ரயுக்த வாத்ஸல்ய கார்யமாகையாலே, ஸம்பந்தக்கொற்றை வாராதென்றதாயிற்று.*

(க) ஸ்ரீப-தை. உ. சரு. (உ)தி-வா. க. ரு. ரு. (ரு) பெ--மொ. கக. சு. சு.

மூ—(கரு) அதுதாநும் ஆஸ்திக்யம் விவேகம் அந்யஶேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தி பாரதந்த்ர்யங்களை யுண்டாக்கினவழி.

(அ) பந்தகஶாஸ்த்ரத்தையும்காட்டினதுதானும் ஶ்யேநவிதியாலே ஶாஸ்த்ரவிஶ்வாஸமும், ஜ்யோதிஷ்டோமாதியாலே ப்ரக்ருத்யாத்மவிவேகம், ஆத்மஜ்ஞானத்தாலந்யஶேஷத்வ நிவ்ருத்தியும், பகவதுபாஸநபக்தியோகத்தாலே ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியும், ஸ்வயத்நநிவ்ருத்திரூப ப்ரபத்தியாலே பாரதந்த்ர்யத்தையும், உண்டாக்குகைக்காக நிர்மிதமான மார்க்கம்.

வ்யா. (கரு) இப்படி வாத்ஸல்யத்தாலே செய்தானாகிலும், குணத்ரய வஶ்யரான சேதநருக்கு, ருச்யநுகுணமாந பலஸாதநங்களை விதிக்கிற பந்தகஶாஸ்த்ரத்தையும் தர்சிப்பித்தால், அவர்கள் ஸம்ஸரித்தே போகைக்குடலாகாதோவென்ன? அதுவும் க்ரமேண, அவர்களீடேறுகைக்கு, இட்டவழியென்கிறார்மேல், (அதுதாநுமித்யாதி) அதாவது:— மோசக ஶாஸ்த்ரமார்க்கத்தை தர்சிப்பியாதே, ஶ்யேநவிதி முதலான பந்தகஶாஸ்த்ரங்களையும், தர்சிப்பித்ததுதானும், தமஃப்ரசுரராய் அர்த்தார்ஜநத்துக்காக பரஹிம்ஸாசீலராய்த் திரிகிற நாஸ்திகனைக்குறித்து, மோக்ஷத்தை விதித்தால், அவர்களுக்கது ருசியாமையாலே, அந்த பரஹிம்ஸாரூபமான வபிசாரகர்மத்தை (க) "[Grantha]" "ஶ்யேநேநாபி சரந்யஜேத" என்று விதித்து தத்பலஸித்தியாலே, அவனுக்கு ஶாஸ்த்ரமுண்டு, என்கிற வாஸ்திக்யத்தை யுண்டாக்கி, ஆஸ்திகனானபின்பு (உ) "[Grantha]" "ஜ்யோதிஷ்டோமேநஸ்வர்ககாமோயஜேத" இத்யாதிகளாலே, ஸ்வர்க்காதி புருஷார்த்த தத்ஸாதநங்களைவிதித்து, அவ்வழியாலே ப்ரக்ருத்யாத்ம விவேகத்தை யுண்டாக்கியும், இப்படி ப்ருக்ருத்யாத்ம விவேகம் பிறந்தபின்பு, ஆத்மபோகத்துக்கு வழிகாட்டி, அவ்வழியாலே அந்யஶேஷத்வ நிவ்ருத்தியை யுண்டாக்கி, அநந்தரம் பரமாத்ம போகவைலக்ஷண்யத்தையும், தத்ப்ராப்தி ஸாதநபக்தியையும்காட்டி, அவ்வழியாலே ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியை யுண்டாக்கியும், அநந்தரமுபாயாந்தர துஷ்கரத்வாதிகளாலே, தளருமளவில், ஸ்வயத்ந நிவ்ருத்தி ரூபப்ரபத்தியிலேமூட்டி, ஸ்வரூப யாதாத்ம்ய வேஷமான பாரதந்த்ரியத்தை யுண்டாக்கியும், இப்படி க்ரமத்திலே, ஈடேறுகைக்கு, இட்டவழியிறே யென்றபடி. இவைகிட்டமும் வேட்டுவேளாநும்போலே, என்றுதுடங்கி, இவ்வளவாக, ஸம்ஸார மோக்ஷகாரண பரம்பரைகளில், சரமாவதிகளான வசிதயநஸம்பந்தங்கள், ஆத்மவஸ்துவுக்குச் செய்யுமவைகளும்; அதிலசித்ஸம்பந்தமநித்யம், அயநஸம்பந்தமே நித்யமென்றும், அந்த ஸம்பந்தம் கீழ்ச்சொன்ன ஶாஸ்த்ர ப்ரதாநத்துக்கு ஹேதுவென்றும், அதில் மோசக ஶாஸ்த்ரமாத்ர மன்றிக்கே பந்தகஶாஸ்த்ரத்தையும், தர்சிப்பித்தது,

(க) (உ) ஆபஸ்தம்பஸூத்ரம் - ஶ்ரௌதம். அ. உ.

மூ—(கசு) சதுர்விதமான தேஹ வர்ண ஶ்ரமா திகார பல மோக்ஷ ஸாதனகதி யுக தர்ம வ்யூஹ ரூப க்ரியாதிகளை அறிவிக்கிற பாட்டுப்பறப்புக்கு பெரியதிவினி லொன்பதாங்கூறும் மானிடப்பிறவியு மாக்கைநிலையு மீரிரண்டிலொன்று மிளமையுமிசைவு முண்டாய் புகுவரேலு மென்கிறதற்க்குள்ளே விக்நமற நின்றவாநில்லா ப்ரமாதியைக்கொண்டறக்கற்கை அறிதென்றிறே வேதஸாரோபநிஷத் ஸாரதராநுவாகீ ஸார

(அ) நாலுவகைப்பட்ட தேவ திர்யங் மனுஷ்ய ஸ்தாவர சரீரங்களும் ப்ருஹ்ம க்ஷத்ர வைஶ்ய ஶூத்ரவர்ணங்களும் ப்ருஹ்மசர்ய கார்ஹஸ்த்ய வாநப்ரஸ்த்த ஸந்யாஸாஶ்ரமங்களும் ஆர்த ஜிஜ்ஞா ஸ்வர்த்தார்த்தி ஜ்ஞாநித்வங்களாகிற வதிகாரங்களும் தர்மார்த்த காம மோக்ஷ பலங்களும் ஸாலோக்ய ஸாமீப்ய ஸாரூப்ய ஸாயுஜ்யரூப மோக்ஷங்களும் கர்ம ஜ்ஞாந பக்தி ப்ரபத்திரூப ஸாதநங்களும் கர்ப்ப யாம்ய தூமாத்யர்சிராதிகளாகிற கதிகளும் க்ருத த்ரேத த்வாபர கலியுகங்களும் த்யாநயஜ்ஞார்சந ஸங்கீர்தநங்களென்றும் தர்மங்களும் வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்நா நிருந்தர்களாகிற வ்யூஹங்களும் ஶ்வேத பீத ஶ்யாம நீலரூபங்களும் ஸ்ருஷ்டி ஸ்த்திதி ஸம்ஹார மோக்ஷப்ரதத்வங்களாகிற க்ருத்யங்களும் இவை முதலானவைகளை ப்ரகாசிப்பிக்கிற பாட்டுமுறைமையுமென்கிறபாட்டிலுள்ள ஶாஸ்த்ர விஸ்தரத்துக்கு விஸ்தாரமான ஜம்பூத்வீபத்தில் நவமகண்டமான பாரதவர்ஷமும், மநுஷ்ய ஜந்மமும் ஶரீரஸ்த் தைர்யமும் நான்கிலொன்றுன ப்ராம்

வத்ஸலஸ்ரீகையாலே சேதந ருச்யநுகுணமாகவென்றும், அதுதானும் க்ரமத்திலே அவர்களை யுஜ்ஜீவிப்பிக்கைக் கிட்டவழியென்றும் சொல்லித்தாய்த்து. ✳

வ்யா. (கசு) இனிமேல் ஶாஸ்த்ர ப்ரதிபாத்யார்த்த விஶேஷங்களை, ஸங்க்ரஹேண ப்ரதிபாதித்துக்கொண்டு, ஏவம்பூத ஶாஸ்த்ராப்யாஸம் அநேகயோக்யதா ஸாபேக்ஷதயா துஷ்கரமென்று தானே திருவுள்ளம்பத்தி, ஈத்ருஶாநேக யோக்யதா நிரபேக்ஷத் வேதஸூகரமாய், ஶாஸ்த்ரதாத்பர்யமுமான திருமந்த்ரத்தை, ஈஶ்வரன் வெளியிட்டருளினபடியை, அருளிச்செய்கிறர். (சதுர்வித) இத்யாதி சூர்ணையாலே, சதுர்விதமான வென்கிறது, மேற்சொல்லுகிறவை யெல்லாத்திலுமநுவர்த்திக்கிறது. அதாவது:— தேவமநுஷ்ய திர்யக்ஸ்த்தாவராகாரேண நான்குவகைப்பட்டதேஹம், ப்ராம்ஹண, க்ஷத்ரிய, வைஶ்ய ஶூத்ரரூபேண நாலுவகைப்பட்டவர்ணம், ப்ருஹ்மசர்ய கார்ஹஸ்த்ய

மூ. தமகாயத்ரியில் முதலோதுகிற பொருள்முடிவான சுருக்கை தைவவண்டா யங்மா யமுதங்கொண்டவன் ஶாகைகளிலு மோதம்போல் கிளர்நால்வேதக்கடலிலும் தேனும்பாலு மமுதுமாகவெடுத்து பெருவிசும்பருளும் பேரருளாலே சிங்காமை விரித்தது.

(வ்ய) ஹணவர்ணமும் பால்யமும் இச்சையும் இருந்ததாய் நூறுவர்ஷமா யுஸ்ஸையடைந்தார்களே யாகிலும் விக்நங்களின்றி நின்றவிடத்தில் நில்லாமலடர்த்தும் நெஞ்ஜைக்கொண்டு நன்ருக வதிகரிக்கை துர்லபமென்று திருவுள்ளம் பற்றியிறே வேதஸாரமான உபநிஷத்பாகத்தில் ஸாரதரமான நாராயணுநுவாகத்திலே ஸாரதமமான விஷ்ணு காயத்ரியில் முதலிலே ஸொல்லப்படுகிற வேதாந்த தாத்பர்யமான ஸகலவேத ஸங்க்ரஹமான திருமந்த்ரத்தை தேவதாப்ரமரமாய் ஹம்ஸரூபியாய் அம்ருதத்தை க்ரஹித்த ஸர்வேஶ்வரன் வேதஶாகைகளாகிற ஶாகைகளிலும் கிளராநின்றுள்ள வேதநீரிலும் நான்குவேதங்களாகிற கடலிலும் ஶாகைகளில் தேனுகவும் நீரில் பாலாகவும் கடலிலம்ருதமாகவும் உத்தரித்து பரமாகாஶமான பரமபதத்தைக்ருபைஸெய்யும் மஹாக்ருபையாலே ஸங்குசிதமாகாமல் விஸ்த்ருதமாம்படி பண்ணிற்று.

வாநப்ரஸ்த்த ஸங்யாஸாத்மகதயா நாலுவகைப்பட்ட வாஶ்ரமம் (க) "ఆర్తోజిజ్ఞాసురర్థార్థీ జ్ఞానీ" "ஆர்தோஜிஜ் ஞாஸுரர்த்தார்த்தீஜ்ஞாநீ" என்கிற நாலுவகைப்பட்ட வதிகாரம், தர்மார்த்த காம மோக்ஷங்களென்கிற, நாலுவகைப்பட்டபலம், ஸாலோக்ய ஸாமீப்ய ஸாரூப்ய ஸாயுஜ்யங்கள் என்கிற நாலுவகைப்பட்ட மோக்ஷம், கர்மஜ்ஞாநபக்தி ப்ரபத்திகள்என்கிற நாலுவகைப்பட்டஸாதநம், பஞ்சாக்நிவித்யோக்த ப்ரகாரேணவரும், கர்பகதி யாம்யகதி தூமாதிகத்யர்சாதிகதி யென்கிற நாலுவகைப்பட்டகதி, க்ருதத்ரேதத்வாபரகலிகளென்கிற நாலுவகைப்பட்டயுகம் (உ) "ధ్యాయన్ కృతే యజన్ యజ్ఞైః త్రేతాయాం ద్వాపరే஽ర్చయన్ । యదాప్నోతి తదాప్నోతి కలౌ సంకీర్త్య కేశవమ్" த்யாயங் க்ருதே யஜங்யஜ்ஞைஸ்த்ரேதாயாம் த்வாபரேர்சயங் யதாப்நோதிதாப்நோதிகலௌஸங்கீர்த்யகேஶவம்" என்றுஸொன்ன த்யாநய ஜநார்சந ஸங்கீர்த்தநங்களாகிற நாலுவகைப்பட்ட யுகதர்மம், வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்நா நிருத்தர்களாகிற நாலுவகைப்பட்ட வ்யூஹம், க்ருதாதியுகங்களில் (ங) "பாலிநீர்மை" இத்யாதிப்படியே, சொல்லுகிற ஶிதபீதஶ்யாமநீலதயா நாலுவகைப்பட்டரூபம், ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார மோக்ஷப்ரதத்வங்களென்கிற நாலுவகைப்பட்ட க்ரியை, ஆதிஶப்தத்

(க) ஸ்ரீபகவத்கீதை. எ. கசு. (உ) வி-பு. சூ. உ. கசு. (ங) திருச்சந்த-வி-ம்-சச.

தாலே மற்றும் சதுர்விதமானப்ரமேயவிஶேஷங்களைச்சொல்லுகிறது. வாஸுதேவாதுத்பன்னரான கேஶவ நாராயண மாதவர்கள். ஸங்கர்ஷணாதுத்பன்னரான கோவிந்த விஷ்ணு மதுஸூதனர்கள். ப்ரத்யும்நாதுத்பன்னரான த்ருவிக்ரம வாமந ஸ்ரீதரர்கள். அநிருத்தாதுத்பன்னரான ஹ்ருஷீகேஶ பத்மநாப தாமோதரர்கள். என்கிற, நாலுவகைப்பட்ட வ்யூஹாந்தரம். ஆமோத ப்ரமோத ஸம்மோத வைகுண்டரூபேண நாலுவகைப்பட்ட வ்யூஹஸ்தாநம்முதலானவை பலவுமுண்டிறே. ஆகவிப்படி சதுர்விதமான வர்த்தவிஶேஷங்களை ப்ரகாசிப்பிக்கிற (க) "பாட்டுமுறையும்" என்கிறபாட்டில் சொல்லுகிற, ஶாஸ்த்ரவிஸ்தரத்துக்கு (பெரியதீவினில்) இத்யாதி, (உ) "நாவலம்பெரியதீவு", என்கிற, போகமோக்ஷஸாதநாநுஷ்டாந பூமியாகையாலே, த்வீபாந்தரங்களிலுத்க்ருஷ்டமான ஜம்பூத்வீபத்தில், நவகண்டத்திலும் வைத்துக்கொண்டு, வர்ஷாந்தரங்களைப்போலே, பௌமமான ஸ்வர்க்கமென்னலாம்படி போகபூமியாயிராதே, ஸ்வர்க்கமோக்ஷரூபமான பலங்களுக்கு ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகைக்கிடானஸ்தலமாய் (ந) "గాయన్తిదేవాః కిలగీతకాని ధన్యాస్తుయేభారత భూమిభాగే । స్వర్గాపవర్గాస్పదమార్గభూతే భవన్తిభూయః పురుషాస్సురత్వాత్॥" "காயந்திதேவா: கிலகீதகாநிதந்யாஸ்துயே பாரதபூமிபாகே| ஸ்வர்காபவர்காஸ்பதமார்கபூதே பவந்திபூய: புருஷாஸ்ஸுரத்வாத்||" என்று, தேவர்களும், ஶ்லாகிக்கும்படியான நவமகண்டமான பாரதவர்ஷமும் (ச) "దుర్లభోమానుషోదేహః" "துர்லபோ மாநுஷோதேஹ:" என்றும் (ரு) "అత్రజన్మసహస్రాణాం సహస్రైరపిసత్తమ కదాచిల్లభతేజన్తుర్మానుష్యంపుణ్యసఞ్చయాత్॥" "அத்ரஜந்மஸஹஸ்ராணாம் ஸஹஸ்ரைரபிஸத்தமகதாசில்லப்யதே ஜந்துர்மாநுஷ்யம் புண்யஸஞ்சயாத்||" என்றும், சொல்லுகிறபடியே (சு) "மானிடப்பிறவியந்தோ" வென்று துர்லபமாகச்சொன்ன மனுஷ்யஜந்மமும் (எ) "మానుషోదేహోదేహినాంక్షణభఙ్గురః" "மாநுஷோ தேஹோ தேஹிநாம்க்ஷணபங்குர:" என்கிறபடியே (அ) "மின்னின்னிலையில மன்னுயிராக்கைகள்" என்றஸ்திரமாகச்சொன்ன, ஶரீரத்தினுடையஸ்தைர்யமும், ஶாஸ்த்ரஜ்ஞாநவர்ணயோக்யங்களில் ப்ரதமகண்யமாய் (கூ) "குலங்களாய வீரிரண்டிலொன்று" என்கிற, பிராம்ஹணஜந்மமும், (க0) "తస్మాద్బాల్యేవివేకాత్మా యతేతశ్రేయసేసదా" "தஸ்மாத்பால்யேவிவேகாத்மாயதேதஶ்ரேயஸே ஸதா" என்கிறபடியே, புத்திகொழுந்துவிட்டு, அப்யஸிக்கைக்குறுப்பான (கக) "கிளரொளியிளமை" என்கிறபால்யமும் (கஉ) "யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம்" என்கிறபடியே, யெல்லாத்

(க) நா-அ. எசு. (உ) பெ-தி. ந. சு. க. (ந) வி-பு. உ. ந. உந. (ச) ஸ்ரீபாக-ம். கக. உ. உஅ. (ரு) வி-பு. உ. ந. உஉ. (சு) திருக்குறுந்தாண்டகம்-அ. (எ) ஸ்ரீபாக-ம். கக. உ. உஅ. (அ) தி-வா. க. உ. உ. (கூ) திருச்சந்த-விம்-கூ0. (க0) வி-பு. க. கஎ. எரு. (கக) தி-வா. உ. க0. க. (கஉ) பெ-அ. உசு.

துக்குமிசைவு வேண்டுகையாலே, இதில் மூளுகைக்குறுப்பான விச்சையுமுண்டாய் (௧) "வேதநூற் பிராயநூறு மனிசர்தாம் புகுவரேலும்" என்றும் (௨) "శతాయుర్వై పురుషః" "ஶதாயுர்வை புருஷ꞉" என்றும், வேதஶாஸ்த்ரோக்தமான வயஸ்ஸு நூறும், மநுஷ்யர் தாங்கள் புகுந்தார்களாகிலு மென்கிற விவ்வாயுஸ்ஸுக்குள்ளே (௩) "అనన్తపారంబహు వేదితవ్య మల్పశ్చకాలో బహవశ్చవిఘ్నాః" "அநந்தபாரம் பஹுவேதிதவ்யம ல்பஶ்சகாலோ பஹவஶ்சவிக்நா꞉" என்றும் (௪) "శ్రేయాంసిబహువిఘ్నాని భవన్తిమహతామపి" "ஶ்ரேயாம்ஸிபஹுவிக்நாநிபவந்திமஹதாமபி" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஶாஸ்த்ராப்யாஸம் பண்ணவொண்ணாதபடி வரும் விக்நங்களுமற்று, (௫) "நின்றவாநில்லாநெஞ்சு" என்றும் (௬) "చంచలంహిమనఃకృష్ణ ప్రమాథిబలవద్దృఢం" "சஞ்சலம்ஹிமந꞉ க்ருஷ்ண ப்ரமாதி பலவத்ருடம்" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஒரு விஷயத்திலரைக்ஷணமும் நில்லாதே, இவனையடர்த்து, தன் வழியேயிழுக்கும் மநஸ்ஸைக்கொண்டு (௭) "கலையறக்கற்றமாந்தர்" என்கிறபடியே, ஶ்ருதி ஸ்ம்ருத்யாதி ஶாஸ்த்ரங்களை, தாத்பர்யம் கைப்படும்படி யதிகரிக்கை. "ஆமாறறிவுடையராவ தறிதன்றே" என்று, தாத்பர்யத்திலேயுற்றுநிற்க யுக்தமாம்படி, "அறிவுடையராகையறிதன்றே" என்கிறபடியே, அறிதென்று திருவுள்ளம்பற்றியிறே (வேதஸாரோபநிஷத்) இத்யாதி (௮) "అసారమల్పసారంచ సారంసారతరంత్యజేత్ । భజేత్సారతమంశాస్త్రం రత్నాకరఇవామృతం" "அஸாரமல்பஸாரஞ்சஸாரம் ஸாரதரம்த்யஜேத்। பஜேத்ஸாரதமம்ஶாஸ்த்ரம் ரத்நாகரயிவாம்ருதம்"॥ என்றுஸாரதமமானஶாஸ்த்ரத்தை பஜிப்பானென்கையாலே, வக்ஷ்யமாணத்தின்ஸாரதமத்வத்தை தர்சிப்பிக்கிறார். (வேதஸாரோபநிஷத்) என்றது, பூர்வபாகத்தில் ஸாரமானவேதாந்தமென்றபடி, அபதார்த்த ப்ரதிபாதகமாகையாலே, அஸாரமான பாஹ்யஶாஸ்த்ரங்கள்போலன்றிக்கே, யதாபூதவாதியா யிருந்ததேயாகிலும், ஶ்யேநவிதி முதலாக ஜ்யோதிஷ்டோமாதிகளீராக ஐஹிகபாரலௌகிகபுருஷார்த்த ஸாதநங்களை ப்ரதிபாதிக்கிறபூர்வபாகம், க்ஷுத்ரபுருஷார்த்த தத்ஸாதந ப்ரதிபாதகமாகையாலும், ஶாஸ்த்ராஸ்திக்யம், ப்ரக்ருத்யாத்மவிவேகம், இவைத்தைப்பிறப்பிக்கும்மாத்ரமாகையாலுமல்பஸாரமாயிருக்கும். இங்கனன்றிக்கே, அநந்தஸ்த்திரபலப்ரத ப்ராம்ஹஸ்வரூபாதிகளையும், தத்ப்ராப்தி ஸாதநத்தையும், ப்ரதிபாதிக்கையாலே, உபநிஷத்பாகம் ஸாரமாயிருக்கும், அதுதன்னிலும், அவ்வுபநிஷத்துக்களில் சொல்லுகிற, பரம்ப்ரம்ஹ பரந்தத்வ பரஞ்ஜ்யோதி பரமாத்மாதிஸாமாந்யவாசி ஶப்தங்களாலும், விஶேஷவாசியான ஶம்புசிவாதிஶப்தங்களாலும், ப்ரதிபாதிக்கப்படுகிறான்,

(௧) திருமாலை-௩. (௨) (௩) (௪)
(௫) தி-மொ. ௧. ௧. ௪. (௬) ஸ்ரீபக-தை. ௬. ௩௪. (௭) திருமாலை-௭.
(௮) வைகுண்டதீக்ஷிதியே,

நாராயணனே, என்று, பகவத்பரதத்வத்தைஸுஸ்பஷ்டமாக ப்ரதிபாதிக்கிறவநந்யபரமானநாராயணனுவாகம்ஸாரதரமாயிருக்கும், அதுதன்னிலும்காட்டில், ஸர்வஸ்மாத்பரத்வத்துக்கு ப்ரதான லிங்கமான வவனுடைய ஸர்வாந்தராத்மத்வத்தை ப்ரகாசிப்பிப்பதாய், அவ்யாபகமான ஸகலபகவன் மந்த்ரங்களிலும் ஶ்ரேஷ்டமாயிருக்கிற வ்யாபக மந்த்ரத்ரயத்தையும்ப்ரதிபாதிக்கிறவிஷ்ணுகாயத்ரி, ஸாரதமமாயிருக்கும். இப்படியிருந்துள்ளகாயத்ரியிலே, வ்யாப்யாத்யாஹாராதிஸாபேக்ஷமான வ்யாபகாந்தரங்களில் வ்யாவ்ருத்த மாகையாலே(க)"𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮𑌹𑍇" "நாராயணாயவித்மஹே" என்ராதரம்தோற்ற, ப்ரதமத்திலே ஓதப்படுகிற, (உ) "ஓத்தின்பொருள்முடிவுமித்தனையேமாதவன்பேர்சொல்லுவதேஓத்தின்சுருக்கு"என்கிறபடியே,வேதாந்த தாத்பர்யமாய் (ங)"𑌋𑌚𑍋 𑌯𑌜𑍂𑌂𑌷𑌿 𑌸𑌾𑌮𑌾𑌨𑌿 𑌤𑌥𑍈𑌵𑌾𑌥𑌰𑍍𑌵𑌣𑌾𑌨𑌿 𑌚 । 𑌸𑌰𑍍𑌵𑌮𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌥𑌮𑍍" "ருசோயஜூம்ஷிஸாமாநிததைவாதர்வணாநிச|ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்த்தம்"என்கிறபடியே, ஸகலவேதஸங்க்ரஹமுமான திருமந்த்ரத்தை (தெய்வவண்டாய்) இத்யாதி,வேதஸாரமாய்,(ச)"தேனும்பாலு மமுதுமாய திருமால் திருநாமம்"என்னும்படி,இருக்கிறவித்தை,வேதத்தினின்றுமவன்க்ரஹிக்கிறபோது,க்ரஹிக்கிறப்ரகாரத்தை த்ருப்ரகாரமாக வர்ணித்தருளிச்செய்கிறார். அதாவது:—(ரு)"தூவியம்புள்ளுடைத்தெய்வவண்டாகையாலே" ஷட்பதமானது,ஶாகாஸஞ்சாரம்பண்ணி,மதுவை யெடுக்குமாப்போலே, ஸாரபூதஸமஸ்தார்த்த போதகதயா, ஸர்வரஸமான தேன்போலே இருக்கிறவித்தை, வேதஶாகைகளிலே, தேனைக்ரஹிக்குமாப்போலே, க்ரஹித்தபடியும் (சு)"அன்னமாயன்றங்கருமறைபயந்தான்" என்கிறபடியே, ஹம்ஸரூபியானவனாகையாலே, அன்னமானது, நீரிலேகலந்துக்கிடக்கிறபாலை விவேகித்தெடுக்குமாப்போலே, "நானும் சொன்னேன் நமருமுரைமின்" என்னும்படி, இருக்கையாலே, ஸர்வாதிகாரமானபால்போலேயிருக்கிறவித்தை, ஓதம்போல் கிளர்வேதநீரிலே, பாலைக்ரஹிக்குமாப்போலே க்ரஹித்தபடியும் (எ) "அமுதம்கொண்டபெருமான்" என்கிறபடியே, அஸுரபயபீதராய் அமரத்வஸாபேக்ஷரான தேவர்களுடைய ரக்ஷணார்த்தமாக, க்ஷீராப்தியை மதித்தம்ருதத்தை வாங்கினாப்போலே, ஸம்ஸாரபீதராய் அம்ருதத்வாபிகாமரானவர்களுடைய ரக்ஷணார்த்தமாக விலக்ஷணபோக்யமாய், விநாஶஹரமுமாகையாலே, அம்ருதம்போலே யிருக்கிறவித்தை, நால்வேதக்கடலிலே அம்ருதத்தை க்ரஹிக்குமாப்போலே க்ரஹித்தபடியையும்ஶொல்லுகிறது. ஆக இப்படி வேதஸாரமான வித்தை ஸ்வயமேவயெடுத்து, (அ) "அமரர்பெருவிசும்பருளும் பேரருளாளன் வதரியாச்சிராமத்துள்ளானே" என்கிறபடி

(க) புருஷஸூக்தம். (உ) தி-அ. உ. ௩௬. (ங) ஸ்ரீபாஞ்சராத்ரம். (ச) தி-மொ. ௬. ௧௦. ௯. (ரு) தி-வா. ௯. ௯. ச. (சு) தி-மொ. ரு. எ. ங. (எ) தி-மொ. ௬. ௧௦. ௩. (அ) தி-மொ. க. ச. ச.

௱—(௧௭) முநிவரையிடுக்கியும் முந்நீர்வண்ணனையும் வெளியிட்டஶா ஸ்த்ர தாத்பர்யங்களுக்கு * விஶிஷ்டநிஷ்க்ருஷ்ட வேஷ ங்கள் விஷயம்.

(அ) வ்யாஸாதிகளைக்கொண்டும் ஸமுத்ரவர்ணனான தான் ஸ்வேந ரூபேணவும் ப்ரகாஶிப்பித்த ஶாஸ்த்ரத்துக்குக்கும் அதின் தாத்பர்யமான திருமந்த்ரத்துக்கும் தேஹவிஶிஷ்டாத்மவே ஷமும் தேஹாதிரிக்தாத்மவேஷமும் லக்ஷ்யம்.

---

யே, நித்யஸூரிகளுக்கு போக்யமாய், பரமாகாஶஶப்தவாச்யமான பரமபதத்தைக்கொடுப்பதானநிர்ஹேதுகக்ருபையாலே (௧) "நரநாரணனாயுலகத்தறநூல் சிங்காமைவிரித்தவன்" என்கிறபடியே, ஸ்ரீபதரிகாஶ்ரமத்திலேநரநாராயணரூபேணவவதரித்து, தானேஶிஷ்யனுமாயாசார்யனுமாய்நின்றுஸ்வரூபஶாஸ்த்ரம்ஸங்குசிதமாகாமல் உபதேஶாநுஷ்டானங்களாலேவிஸ்த்ருதமாம்படிபண்ணித்து; அறக்கற்கை யறிதென்றிறே, யென்றத்தோடே யந்வயிக்கிறது. *

வ்யா. (௧௭) ஆகஸர்வேஶ்வரன் தன் க்ருபையாலே, ஸம்ஸாரி சேதநனையுஜ்ஜீவிப்பிக்கைக்காக ஶாஸ்த்ரத்தையும், ஶாஸ்த்ரதாத்பர்யமான திருமந்த்ரத்தையும் வெளியிட்டானென்று நின்றதுகீழ்; இவ்வையிரண்டையும் வெளியிட்ட ப்ரகாரமென்? அவைத்துக்கு விஷயமெது? என்றுமாகாங்க்ஷையிலேதத்ப்ரகாரங்களையும்தோற்றுவித்துக்கொண்டு விஷயங்களையும் சொல்லுகிறது, (முநிவரையித்யாதி) அதாவது:—(௨) "இருள்கள் கடியும் முநிவர்" என்கிற ஸ்மர்தாக்களான வ்யாஸாதிருஷிகளை (௩) "కృష్ణద్వైపాయనంవ్యాసం విద్ధినారాయణంపరం । కోహ్యన్యఃపుణ్డరీకాక్షాన్ మహాభారతకృద్భవేత్ ॥" கிருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் வித்திநாராயணந்பரம்। கோஹ்யந்ய: புண்டரீகாக்ஷாந் மஹாபாரதக்ருத்பவேத்" என்கிறபடியே, தானாகச்சொல்லலாம் படியந்தர்யாமியாய், அடுத்துப்பிடித்துநின்று, தந்முகேந வெளியிட்ட ஶாஸ்த்ரத்துக்கு சேதநருடைய தேஹவிஶிஷ்டவேஷம்விஷயம் (௪) "வதரியாச்சிரமத்துள்ளானை, கருங்கடல்முந்நீர்வண்ணனை" என்கிறபடியே, ஸ்ரீபதரிகாஶ்ரமத்திலே ஸ்வேநரூபேண நின்று வெளியிட்ட ஶாஸ்த்ரதாத்பர்யமான திருமந்த்ரத்துக்கு சேதநருடைய நிஷ்க்ருஷ்டவேஷம் விஷயமென்கை. இத்தால் ஶாஸ்த்ரத்துக்கு தேஹத்திலே நோக்கு, தாத்பரியத்துக்கு ஸ்வரூபத்திலே நோக்கென்றதாய்த்து. *

---

* விஶிஷ்ட நிஷ்க்ருஷ்ட வேஷங்களாவன, தேஹத்தோடுசேர்ந்த ஆத்மாவின் ஸ்வரூபத்தைச் சொல்லுமது விஶிஷ்டவேஷம். நிஷ்க்ருஷ்டவேஷமாவது; தேஹமற்ற ஶுத்தாத்மாவின் ஸ்வரூபத்தைச் சொல்லுமதென்கை.

(௧) தி-மொ. ௧0. ௬. ௧. (௨) தி-வா. ௧0. ௭. ௭. (௩) ஸ்ரீபார-ம். (௪) பெ-மொ. ௧. ௪. ௧0.

மூ—(கஅ) தோல்புறையேபோமதுக்கு பழுதிலாயோக்யதைவேணும்மந முடையீரென்கிற ப்ரத்தையே அமைந்த மர்மஸ்பர்சிக்கி நானும் நமருமென்றும்படி ஸர்வருமதிகாரிகள்.

மூ—(ககூ) ஶாஸ்திரிகள் தெப்பக்கையரைப்போலே

(அ) தேஹமாத்ரத்திலேநோக்கானஶாஸ்த்திரத்துக்கு ஜந்மாசாராதிகளில் குற்றமற்றயோக்யதைவேணும் நண்ணுகையிலபேக்ஷாமாத்ரமே போரும்படி யானதாய் ஸ்வரூப ஸ்பர்சியான தாத்பர்யத்துக்கு நானும்நம்முடையவர்களுமென்றும்படியாக ஸகலருமதிகாரிகள்.

(அ) ஶாஸ்த்ரநிஷ்டரான உபாஸகர் தெப்பமொருகையில்கொண்டொருகையால் துழாவுவாரைப்போலே

வ்யா. (கஅ) ஏவம்பூதமானவிவையிரண்டும் ஸர்வாதிகாரமோ? அதிக்ருதாதிகாரமோ? யென்னச்சொல்லுகிறது. ('தோல்புரையித்யாதி') அதாவது:—விசிஷ்ட விஷயமாகையாலே, ஆந்தரமானஸ்வரூபத்திலூற்றமின்றிக்கே, மேலெழ தேகத்திலே நோக்காய்நடக்கிற ஶாஸ்த்ரத்துக்கு (க) "பழுதிலாவொழுகலாற்று" என்கிறபடியே, நெடுகப்போகிற வம்ஶப்ரவாகத்தி லுத்பத்தியிலேயாதல், ஆசாரத்திலேயாதல், ஒருபழுதற்றிருக்கையாகிறயோக்யதைவேணும் (உ) "கண்ணன் கழலிணைநண்ணும்மனமுடையீர்" என்றும் (ங) "శ్రద్ధైవకారణంపుంసాం మష్టాక్షరపరిగ్రహే" "ஶ்ரத்தைவகாரணம்பும்ஸாமஷ்டாக்ஷரபரிக்ரஹே" என்றும் சொல்லுகிறபடியே, ஶ்ரத்தாமாத்ரமே யமைந்த ஸ்வரூபஸ்பர்சியான தாத்பர்யத்துக்கு (ச) "நானுஞ்சொன்னேன் நமருமுறைமின்நமோநாராயணமே" என்றுஞ் சொல்லும்படி, யோக்யாயோக்ய விபாகமற ஸர்வருமதிகாரிகளென்கை. இத்தால்ஶாஸ்த்ரதாத்பர்யங்களின், அதிக்ருதாதிகாரத்வ ஸர்வாதிகாரத்வங்களை, தத்தேது ஸஹிதமாகச் சொல்லித்தாய்த்து.*

வ்யா. (ககூ) இனிமேலிந்தஶாஸ்த்ரநிஷ்டராயும்தாத்பர்ய நிஷ்டராயுமிருக்குமுமுக்ஷுக்கள்படிகளைச்சொல்லுகிறது (ஶாஸ்த்ரிகளித்யாதி) அதாவது (ரு) "ఆత్మావారేద్రష్టవ్య శ్రోతవ్యో మన్తవ్యో నిదిధ్యాసితవ్యః, (சு) ఆత్మేత్యేవోపాసీత, (எ) ఓమిత్యాత్మానం ధ్యాయాత" "ஆத்மாவா

(க) திருமாலை-சஉ. (உ) தி-வா. க0. ரு. க. (ங)
(ச) தி-மொ. சு. க0. சு. (ரு) ப்ரு-உ. சு. ரு. ரு. (சு) ப்ரு. உ. ங. ச. சு.
(எ) மு. உ. உ. ரு.

மூ. இரண்டையுமிடுக்கி பிறவிக்கடலைநீந்த ஸாரஜ்ஞர் விட்டத்திலிருப்பாரைப்போலே இருகைய்யும்விட்டு கரைகுறுகுங்காலமெண்ணுவர்கள்.

அ. ஸ்வயத்நமும்பகவத்க்ருபையுமாகிறவிரண்டையுமவலம்பித்து ஸம்ஸாரஸாகரத்தைக்கடக்கத்தேட திருமந்த்ரநிஷ்டரான ப்ரபன்னர் ஓடத்தின்விட்டத்திலே நிர்ப்பரராயிருப்பாரைப்போலே ஸ்வயத்நதத்ஸாத்யபகவத்க்ருபைகளைவிட்டு பகவத்ப்ராப்தியாகிறகரையைக்கிட்டுங்காலமெண்ணா நிர்பர்கள்.

---

ரேத்ரஷ்டவ்யஶ்ரோதவ்யோமந்தவ்யோநிதித்யாஸிதவ்ய:, ஆத்மேத்யேவோபாஸீத,ஓமித்யாத்மாநம்த்யாயீத" என்றும், ஸம்ஸாரநிவ்ருத்திபூர்வகபகவத்ப்ராப்திஸாதநமாகபகவதுபாஸநத்தைவிதித்து "𑌅𑌮𑍃𑌤𑌸𑍍𑌯𑍈𑌷 𑌸𑍇𑌤𑌃" "அம்ருதஸ்யைஷஸேது:, (க) "𑌫𑌲𑌮𑌤 𑌉𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃" "பலமத உபபத்தே:" என்று பகவானே யதுக்கு பலப்ரதனாகவும் ஶொல்லும் ஶாஸ்த்ரத்திலே நிஷ்டரானவர்கள், ஆறு நீஞ்ஜுவார் தெப்பத்தையொருகையிலேயிடுக்கி தாங்களுமொருகைதுழாவுமாப்போலே, ஸ்வயத்நமும் தத்ஸாத்ய பகவத் க்ருபையுமாகிற வுபயத்தையு மவலம்பித்துக்கொண்டு (உ) "பிறவிக்கடல் நீந்துவார்க்கே" என்கிறபடியே, ஸம்ஸார ஸமுத்ரத்தைக் கடக்கத் தேட, ஸ்வயத்ந நிஷேத பூர்வகமாக ஆத்மாவின் பகவதேகோபாயத்வத்தை ப்ரதிபாதிக்கிற ஶாஸ்த்ரஸாரமான திருமந்த்ரஜ்ஞரானவர்கள், ஓடமேறினவர்கள், தீரகமநார்த்தமான ஸ்வயத்நத்தையும் தெப்பத்தையும் கைவிட்டு, கரைகுறுகுவதெப்போதென்று பார்த்துக்கொண்டு, அதின்விட்டத்திலே யிருக்குமாப்போலே † "𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌪𑍋𑌤𑌮𑍍" "விஷ்ணுபோதம்" என்கிறபடியே, அக்கரையு மிக்கரையுமூடுருவநின்று ஸம்ஸாரஸமுத்ரத்தைக்கடத்தும் வைகுந்தனென்கிற தோணியை, ஸம்ஸாரநிஸ்தாரகமாகப்பற்றி, தத்ஜ்ஞாந ஶக்த்யாத்யநுஸந்தாநத்தாலும், ஸ்வபாரதந்த்ர்யாநுஸந்தாநத்தாலும், நிற்பரராகையாலே, இரண்டு கையும் விடுமாப்போலே ஸ்வயத்நரூபோபாஸநாதியையும் தத்ஸாத்யபகவத்க்ருபையையு மவலம்பிக்கையைவிட்டு, கேவலபகவத்க்ருபையேயுத்தாரகமென்றத்யவஸித்து (௩) "கூவிக்கொள்ளுங்காலமின்னும்குறுகாதோ" என்றும் (ச) "ஆக்கைவிடும்பொழுதெண்ணே" என்றுஞ் சொல்லுகிறபடியே, பகவத்ப்ராப்தியாகிற கரையைக்குறுகைக்கீடான காலசிந்தனைப்பண்ணா நிற்பர்களென்கை. இத்தால், ஶாஸ்த்ரஜ்ஞருடையவும், ஸாரஜ்ஞருடையவும், ப்ரதிபத்திக்ரமஞ் சொல்லித்தாய்த்து.

---

(க) உத்தரமீமாஸையில், ௩. உ. அ. (உ) தி - வா. உ. அ. க. (௩) தி - வா. ௬. ௯. ௯. (ச) தி-வா. க. உ. ௯. † வைஷ்ணவதர்மம். அ. க.

மூ--(உ0) இவை ஸ்வரூபத்தை உணர்ந்துணர்ந்துணர்வும் உணர்வை ப்பெறஊர மிகவுணர்வு முண்டாம்.

(அ) ஸ்வயத்நதந்நிவ்ர்த்திகள் ஆத்மஸ்வரூபத்தை ஶ்ரவணமநநங்களால் தேஹாதிவிலக்ஷணத்வ ஜ்ஞாத்ருத்வ போக்த்ருத்வ விஸிஷ்டமாகஸாக்ஷாத்கரிக்கவும் பகவத்வ்யதிரிக்தமானஸர்வமும்ஹேயமென்றும்படிஊன்றிநடத்த ஆத்மஸ்வரூபயாதாத்ம்ய பாரதந்த்ர்ய போக்யதையையறிகவும் உத்பந்நமாம்.

வ்யா. (உ0) இவர்களுக்கிவ் வாகாரங்களுண்டாகைக்கடி இன்னதென்கிறது. (இவையித்யாதி) அதாவது:—ஶாஸ்திரிசளானவர்களுக்கு, (க) "உணர்ந்துணர்ந்திழிந்தகன்றுயர்ந்துருவியந்த விந்நிலைமை யுணர்ந்துணர்ந்துணரிலும்" என்கிறபடியே, ஆத்ம ஸ்வரூபத்தை, ஜ்ஞப்திமாத்ரமன்றிக்கே, நித்யஜ்ஞாநகுணகமாய், அந்த ஜ்ஞாநத்தாலே, எங்குமொக்கவ்யாபித்து, தேஹத்தில்காட்டில் வேறுபட்டிருக்குமதாய், அநதஜ்ஞாத்ருத்வபலாயாதகர்த்ருத்வ போக்த்ருத்வஸஹிதமாய், பகவச்சேஷமாயிருக்குமென்று ஶ்ரவண மநநங்களாலே ஸாக்ஷாத்கரிக்கவே, ஸ்வயத்நத்தாலே ஸம்ஸாரநிஸ்தரணம் பண்ணத்தேடுகையாகிறவிதுண்டாம். ஸாரஜ்ஞரானவர்களுக்கு, ஆத்மஸ்வரூபவைலக்ஷ்யத்தை, தர்சிப்பிக்கைக்குடலாக, (உ) "உணர்வு முயிருமுடம்பும்மற்றுலப்பிலனவும் பழுதேயாமுணர்வைப்பெறவூர்ந்து" என்கிறபடியே, வைஷயிகஜ்ஞாநமும், ப்ராணனும் ஶரீரமும், மற்றுமபரிச்சேத்யமான ப்ரக்ருதிவிகாரங்களும், ப்ருக்ருதியும்ஹேயமென்று மறிவைப்பெறும்படி, நிர்ஹேதுகமாக விஶ்வரன்நடத்த, (ங) "மெய்ம்மையை மிக உணர்ந்து" என்கிறபடியே, ஆத்ம ஸ்வரூபத்தை, தெஹாதிகளில் விலக்ஷணமாய், ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமாய், ஜ்ஞாத்ருத்வாதிகுணகமாய், ததீயஶேஷத்வபர்யந்த தச்சேஷத்வயுக்தமாய், தத்காஷ்டையான பாரதந்த்ரைகபோக்யதைகவேஷமாயிருக்குமென்றுணரவே, ஸ்வபரத்தையவன்மேலே பொகட்டு ஸ்வயத்ந ரஹிதராயிருக்கை யாகிறவிதுண்டாமென்க. இத்தாலிவர்களுடைய ஸ்வரூபஜ்ஞாந தாரதம்யமே கீழ்ச்சொன்னவாகாரங்கள், இவர்களுக்குண்டாகைக்குஹேதுவென்றதாய்த்து. ஆக முனிவரையிடுக்கியும் என்று தொடங்கி, இவ்வளவாக ஶாஸ்த்ர தாத்பர்யங்களின் விஷயபேதமும், அவ்வதிகாரிகள் ப்ரதிபத்திபேதமும், அதுக்கடியானஜ்ஞாந தாரதம்யமும், ஶொல்லப்பட்டது. *

(க) தி-வா. க. ங. சு. (உ) தி-வா. அ. அ. ங. (ங) திருமாலை - ஙஅ.

மூ—(உக) ஶேஷத்வ போக்த்ர்த்வங்கள்போலன்றே பாரதந்த்ர்யபோக்யதைகள்.

(அ) ப்ரணவத்தி லகார மகாரங்களால் சொல்லப்படுகிற ஶேஷத்வ போக்த்ருத்வங்கள்போலன்றே நமஃபத ஆயபத ப்ரதிபாதிதங்களான பாரதந்த்ர்யபோக்யதைகள்.

வ்யா. (உக) ஸ்வரூபஜ்ஞாநமென்றும், ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநமென்றும், ஆத்மவிஷயஜ்ஞாநத்திலே தாரதம்யமுண்டிறே. அதில் (க) "பதிம்விஶ்வஸ்ய" "பதிம்விஶ்வஸ்ய" (உ) "யஸ்யாஸ்மி" "யஸ்யாஸ்மி" என்றும், (ங) "நஹிவிஜ்ஞாதுர்விஜ்ஞாதேர்விபரிலோபோ வித்யதே" "நஹிவிஜ்ஞாதுர்விஜ்ஞாதெர்விபரிலோபோ வித்யதே" (ச) "ஜ்ஞாநாத்யேவாயம்புருஷ:" "ஜ்ஞாநாத்யேவாயம்புருஷஃ" என்றும், ஆத்மாவுக்கு பகவச்சேஷத்வத்தையும், ஜ்ஞத்ருத்வத்தையும் ஶொல்லி, அந்த ஜ்ஞாத்ருத்வ காரியமான, போக்த்ருவத்ப்ரயோஜநமாக, (ரு) "ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா" "ஶொஶ்நுதே ஸர்வாங்கா மாங்ஸஹப்ரும்ஹண விபஶ்சிதா" என்று பகவதநுபவத்தையும் ஶொல்லுகிற ஶாஸ்த்ரமுகத்தாலே, ஸ்வரூபத்தையறியுமளவில், பகவச்சேஷத்வமும், பகவதநுபவபோக்த்ருத்வமிறே, ப்ரகாசிப்பது. அந்த ஶாஸ்த்ர தாத்பர்யமான திருமந்த்ரத்தி லுட்புக்காலிறே, பாரதந்த்ர்யபோக்யதாரூபமான ஸ்வரூபயாதாத்ம்யம்ப்ரகாசிப்பது. இதுவே, ஸ்வரூப யாதாத்ம்யமென்றுமிட்த்தை யறிவிக்கிறார் மேல் (ஶேஷத்வ) இத்யாதியால், ஶேஷத்வமாவது:— இஷ்ட விநியோகார்ஹ தாமாத்ரம், பாரதந்த்ர்யமாவது:— ஶேஷிக்கிஷ்டமானபடியே விநியோகப்படுகை. கட்டிப்பொன்போலே ஶேஷத்வம், பணிப்பொன்போலே பாரதந்த்ர்யம், என்னக்கடவதிறே. ஆகையால், ஶேஷவஸ்துவை ஶேஷிக்கிஷ்டமானபடியே விநியோகப்படுத்துமதுபாரதந்த்ர்யம். போக்த்ருத்வமாவது :— ஜ்ஞாத்ருத்வபலத்தாலே, போகதஶையிலே விளைகிற ரஸங்களுக்குத் தான் போக்தாவாகை. போக்யதையாவது:—பதார்த்தகதமான ரஸவர்ணாதிகள்,போக்தாவுக்கே போக்யமாயிருக்குமாப்போலே, ஆத்மகதமான ஜ்ஞாநாதிகளு மீஶ்வரனுக்கே போக்யமாயிருக்கை. ஆகையால், இஷ்ட விநியோகார்ஹதமாத்ரமான ஶேஷத்வம்போலன்றே, இவ்வஸ்துவைஶேஷிக்கிஷ்டமானபடி விநியோகப்படுத்திக்குடுக்கிறபாரதந்த்ர்யம். போகத்தில் ஸ்வார்த்ததாபுத்தி ஹேதுவான போக்த்ருவ்ம்போலன்றே, அந்தபோக்த்ருத்வத்வதை ஶேஷியுடைய ப்ரியோபயோகியாக்கிக் குடுக்கிறபோக்யதையென்றபடி. *

(க) புருஷஸூக்தம். (உ) அச்சித்ரம். (ங) ப்ரு - உ. சு. ங. உக. (ச) ப்ரு-உ. (ரு) தை - உ, ஆ - உ. க, க,

மூ.—(உஉ) ஜ்ஞாநசதுர்த்திகளின் மேலேயிறே ஆநந்த ஷஷ்டிகளுக்குதயம்.

(அ) போக்த்ருத்வப்ரகாஶகமாயிருக்கிறஜ்ஞாநத்தின் மேலேயும் ஶேஷத்வவாசிலுப்தசதுர்த்தியின்மேலேயுமிறே க்ரமமாக போக்யதாப்ரகாஶகவ்யக்தசதுர்த்தியிலாநந்தத்துக்கும் பாரதந்த்ர்யப்ரகாஶகமானநமஸ்ஸுக்கும் உத்பத்தி.

வ்யா. (உஉ) இவ்வர்த்தத்தை, ஸ்வரூபயாதாத்ம்ய ப்ரகாஶகமான திருமந்த்ரத்திலே தர்சிப்பிக்கிறார். (ஜ்ஞாநேத்யாதியாலே) அதாவது:— ஆத்மவாசியானமகாரத்தில், "மனஜ்ஞாநே" "மந-ஜ்ஞாநே" என்கிறதாதுவிலே யுதிதமாய்போக்த்ருத்வப்ரகாஶகமாயிருக்கிறஜ்ஞாநத்தின்மேலேயிறே, அந்த மகாரவிவரணரூபமாய் போக்யதாப்ரகாஶகமான சதுர்த்தியிலாநந்துக்குதயம். ப்ரதமாக்ஷரத்தில் ஶேஷத்வ வாசியான சதுர்த்தியின்மேலேயிறே பாரதந்த்ர்யப்ரகாஶகமான நமஸ்ஸுக்குதயமென்கை. இத்தாலாத்மஸ்வரூபத்தினுடைய ஶேஷத்வ போக்த்ருத்வங்களுதித்திருக்கச்செய்தே அதின்மேலேஸ்வரூபயாதாத்ம்யவேஷமாகவுதித்தவையாகையாலே, ஶேஷத்வபோக்த்ருத்வங்களில், பாரதந்த்ர்யபோக்யதைகளுக்குநெடுவாசியுண்டென்றதாய்த்து. இந்தயோஜனைக்கு, அல்ப மநுபபத்தியுண்டு, ஷஷ்டியென்கிறவிது,முக்யவ்ருத்தியாலே யாதல், கௌணவ்ருத்தியாலே யாதல், நமஸ்ஸைக்காட்டாமையாலே; ஷஷ்ட்யந்த பதமென்கிறத்தை, ஷஷ்டியென்று சொல்லித்தகாதோவென்றில், அது சேராது, நமஸ்ஸு இரண்டுபதமாகையாலும், அதிலுத்தரபதமே ஷஷ்ட்யந்தபதமாகையாலும்; ஆனால் செய்யவேண்டுவதென்னென்னில்? இன்னமுமொரு யோஜனைசொல்லப்படுகிறது. அதாவது:—த்ருதீயாக்ஷரத்தில் "மந-ஜ்ஞாநே" என்கிறதாதுவிலே யுதிதமாய், போக்த்ருத்வ ப்ரகாஶகமான ஜ்ஞாநத்தின்மேலேயிறெ, மகாரவிவரணமானசதுர்த்தியில் சொல்லப்படுகிற போகத்திலே, * காகாக்ஷிந்யாயத்தாலே, நமஶ்ஶப்தத்தால்கழிக்கப்படுகிறஸ்வப்ரயோஜநத்வப்ரயுக்தமானவாநந்தத்துக்குதயம், ப்ரதமாக்ஷரத்தில், ஶேஷத்வவாசியானசதுர்த்தியின்மேலேயிறே, நஞாலேநிஷேதிக்கப்படுகிறஸ்வரக்ஷணேஸ்வப்ரவ்ருத்திஹேதுபூதஸ்வாதந்த்ர்யப்ரகாசிகையான ஷஷ்டிக்குதயமென்கை. இத்தால் ஶேஷத்வ ப்ரகாசகமான சதுர்த்தியின்மேலே, ஸ்வரக்ஷணஹேதுபூதஸ்வாதந்த்ர்யவாசியானஷஷ்டியுதிக்கையாலும், போக்த்ருத்வப்ரகாசகமானஜ்ஞாநத்தின்மேலே, போகஸ்வார்த்ததாபுத்தி மூலமானவாநந்தமுதிக்கையாலும், ஶேஷத்வபோக்த்ருத்வங்கள் ஸ்வரூபவிரோத்யுதயஸஹங்களாயிருக்கும். நமஸ்ஸிலேபாரதந்த்ர்யமுதித்தபின்பு, ஸ்வரக்ஷணே ஸ்வயத்நம் நிவ்ருத்தமாகையாலும், நமஶ்ஶப்தாநுக்ருஹீதையானசரம சதுர்த்தியிலே ஈஶ்வரனுக்கு போக்யமாயி

* காகாக்ஷிந்யாயமாவது :— காக்கைக்கிக்கண்ணொன்றாகவிருக்கச்செய்தேயும், அதின்விழி, மேலும் கீழும் புரண்டு, இருபுறத்திலுமிருக்குமதைக்கிரஹிக்குமது.

மூ—(உரு) முளைத் தெழுந்த ஸூர்ய துல்ய யாதாத்ம்ய சரமம் விதியில் காணும் ப்ரதமமத்யதசைகளை பகல்விளக்கும் மின்மினியு மாக்கும்.

(அ) உதித்து கிளம்பின ஆதித்யனுக்கு ஸமமான ஸ்வரூபத்தினுடைய யதார்த்தாவஸ்திதிகளான பாரதந்த்ர்ய போக்யதைகளாகிற சரமதசைகள் ஶாஸ்த்ரவிதி ப்ரகாரேண காணப்படும் ப்ரதமமத்யதசைகளான ஶேஷத்வபோக்த்ருத்வதங்களை பகல்பட்ட விளக்காகவும் கத்யோதமாகவும் பண்ணும்.

ருக்கையே, ஆத்மாவுக்கு வேஷமென்றும்தோற்றினபின்பு, ஸ்வப்ரயோஜநம்நிவ்ருத்தமாகையாலும்,பாரதந்த்ர்யபோக்யதைகள், ஸ்வரூபவிரோத்யுதயஸஹங்களன்று. ஆகையால், ஸ்வரூபவிரோத்யுதயஸஹங்களான ஶேஷத்வபோக்த்ருத்வங்கள்போலன்றே, அத்தைஸஹியாதபடியிருக்கும் பாரதந்த்ர்யபோக்யதைகளென்றதாய்த்து. *

வ்-யா. (உரு) இப்படி ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞாநதசையில்,தோற்றுகிறபாரதந்த்ர்யாதிகள், ஸ்வரூபஜ்ஞாநதசையில் தோற்றுகிறஶேஷத்வாதிகளை, திரஸ்க்ருதமாக்கும்படி சொல்லுகிறது. (முளைத்தெழுந்த) இத்யாதி, அதாவது :— (க) "முளைத்தெழுந்ததிங்கள்தானாய்" என்றும், "యథా సూర్యస్తథా జ్ఞానం" "யதாஸூர்யஸ்ததாஜ்ஞாநம்" என்றும், சொல்லப்பட்ட,ஸ்வரூபஸாக்ஷாத்கார ஜ்ஞாநத்தினுடைய,யாதாத்ம்யாவஸ்தையானசரமமென்று ஸ்வரூபயாதாத்ம்யவேஷமாகப்பின்புசொன்னபாரதந்த்ர்யபோக்யதைகளைச்சொல்லுகிறது. ஸ்வரூபஸாக்ஷாத்காரஜ்ஞாநத்துக்குசந்த்ரனைத்ருஷ்டாந்தமாக வாழ்வாரருளிச்செய்தது, தமக்கு பகவத்ப்ரஸாதலப்தமாகையாலே,அயத்நஸித்தமாகையாலும், அந்தஜ்ஞாநந்தாநாஹ்லாதகரமாயிருக்கையாலுமிறே, இங்குமுணர்வைப்பெறவூர மிகவுணர்வுமுண்டாமென்று, இந்தஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநம், பகவத்ப்ரஸாதலப்தமாகவிறேசொல்லிற்று. "యథా సూర్యః" "யதாஸூர்ய:" என்கிறவிதிலே, ஸ்வயத்நத்தால்வந்தக்லிஷ்டதை தோற்றித்தாகிலும், இவ்விடத்திலது, அவிவக்ஷிதம். ஜ்ஞாநத்தினுடையப்ரகாஶாதிசயம். சொல்லுகிறமாத்திரமேஅபேக்ஷிதம். ஏவம்பூதமாயிருந்துள்ள ஸாக்ஷாத்கார ஜ்ஞாநத்தினுடைய யாதாத்ம்யாவஸ்தையில் ப்ரகாசிக்கிற பாரதந்த்ர்யபோக்யதைகளாகிறசரமங்கள்ஸ்வரூபத்தை, உணர்ந்துணர்ந்துணர்வும், என்று கீழ்ச்சொன்னந்யாயத்திலே (உ) "விதியில் காண்பார்" என்கிறபடியே, ஶாஸ்த்ரவிதிப்ரகாரேணஶ்ரவணமநநாதிகளாலே, தர்சிக்கப்படுகிறப்ரதமதசையான ஶேஷத்வத்தையும், மத்யமதசையானபோக்த்ருத்வத்தையும், பகல்விளக்கும் மின்மினியும்போலே, அப்

(க) திருநெடுந்தாண்டகம்-க. (உ) திருக்குறுந்தாண்டகம்-கஅ.

மூ—(உச) நாலிலொன்று ப்ரவர்தக மொன்று நிவர்தகம்.

அ)' ஶேஷத்வ போக்த்ருத்வ பாரதந்த்ர்ய போக்யதைக ளா கிற நாலிலும் போக்த்ருத்வமானதொன்று உபாயாநுஷ்டாநத்திலே ப்ரவ்ர்த்திப்பிக்கும் போக்யதையாகிறதொன்று உபாயாநுஷ்டாநத்தில்நின்றும்நிவ்ருத்திப்பிக்கும்.

ரயோஜநமாகவும், அல்பப்ரகாஶமாகவும்பண்ணுமென்கை. ப்ரணவோதிதமான ஸ்வரூபத்தினுடைய யாதாத்ம்யத்வேன மத்யமசரமபதங்களிலேபின்புதிக்குமவையாகையாலே, பாரதந்த்ர்யபோக்யதைகளை, சரமங்களென்கிறது. ப்ரதமாக்ஷரத்தில், சதுர்த்தியிலேப்ரதமமேவஶேஷத்வமுதிக்கையாலும், அநந்தரம், ததாஶ்ரயவாசியானசரமாக்ஷரத்தில், உத்தரபதத்வயத்தில் பாரதந்த்ர்யபோக்யதோதையத்துக்குமுன்னே நடுவே ஜ்ஞாத்ருத்வ பலாயாதபோக்த்ருத்வமுதிக்கையாலும், ஶேஷத்வ போக்த்ருத்வங்களை ப்ரதமமத்யமதஶைகளென்கிறது. ஆக, வ்வாக்யத்தால் ஸ்வயத்நஸ்வப்ரயோஜநகந்தாஸகங்களாய், ஸ்வஶேஷிபோகாத்யந்தாநுகூலங்களாய்க்கொண்டு, ஸ்வரூபத்தைநிறம்பெறுத்துமிப்பாரதந்த்ர்யபோக்யதைகள், இவ்வாகாரங்களில்லாத ஶேஷத்வ போக்த்ருத்வங்களை திரஸ்க்ருதமாக்கி தானேமேலாயிருக்குமென்றதாயிற்று. *

வ்-யா.(உச) இப்படியிருந்துள்ள ஸ்வரூப ஜ்ஞாநத்தையும், ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநத்தையுமுடையராய் (சாஸ்த்ரிகள்) இத்யாதிவாக்யத்தில்ப்ரவர்த்தி பரராகவும் நிவ்ருத்திபரராகவும் சொல்லப்பட்ட வதிகாரிகளுக்கு, ப்ரவர்த்தக நிவர்த்தகங்களின்னதென்கிறதுமேல், (நாலிலித்யாதி) ஆதாவது :— ஶேஷத்வ போக்த்ருத்வங்களும், பாரதந்த்ர்யபோக்யதைகளுமாகிறநாலிலும்வைத்துக்கொண்டு, ஶேஷத்வபோக்த்ருத்வங்களை, ஆத்மாவுக்கு ஸ்வரூபமென்று தரிசித்தசாஸ்த்ரிகளை, போக்த்ருத்வமானது, போக்தாவானவன் போக்யஸித்திக்கு, எத்நம்பண்ணவேண்டாவோ வென்றும் நினைவாலே, போக்யபூதபகவத்விஷயலாபார்த்தமான உபாயப்ர வ்ருத்தியிலேமூளுவிக்கும். பாரதந்த்ர்யபோக்யதைகளையே, ஸ்வரூபயாதாத்மயவேஷமென்று, தர்சித்தஸாரஜ்ஞ்யரை, போக்யதையானது, போக்தாவான வீச்வரனன்றோஸ்வபோக்யமான விவ்வஸ்துவைப்பெறுகைக்குயத்நம்பண்ணுவான், தத்போக்யமானவிவ்வஸ்துவுக்கு, தல்லாபத்துக்குயத்னிக்க ப்ராப்தியில்லையென்றும் நினைவாலே உபாயப்ரவ்ருத்தியில் நின்றும் மீளுவிக்குமென்கை. *

மூ—(உரு) முர்ப்பாடர்க்கு க்ரியாங்கமானவையிரண்டும் செயல் தீர்ந்தார் வ்ருத்தியில் ஸ்வநிர்பந்த மறுக்கும்.

(அ) ப்ரதமபரிகணிதரான உபாஸகர்க்கு கர்மாங்கமானஶேஷத்வ போக்த்ருத்வங்களிரண்டும் ஸ்வயத்நநிவ்ர்த்திபரரானப்ரப ந்நருடைய கைங்கர்யரூப ப்ரவ்ருத்தியில் ஸ்வப்ரயோஜந ரூபநிர்பந்தத்தை நசிப்பிக்கும்.

வ்-யா.(உரு) ஆனால்? ஶேஷத்வ போக்த்ருத்வங்கள்தானிவர்களுக்குமுண்டே, அவைசெய்வதென்னென்னச்சொல்லுகிறது, (முர்ப்பாடற்கு) இத்யாதி ; அதாவது :— சாஸ்திரிகளென்று ப்ரதமத்திலேசொல்லப்பட்ட உபாஸகர்க்கு, போக்த்ருத்வமானதுபோக்யஸித்திக்குடலானயத்நத்திலேமூட்டுகையாலும், அதுதாநாத்மஜ்ஞாநபூர்வகமாகயத்னிக்கவேண்டுகையாலே, ஶேஷத்வமுமதுக்குறுப்பாகையாலும் உபாஸநப்ரதமபாவியானகர்மத்துக்கு, உத்பத்தியிலே ஸககரித்துக்கொண்டு, ததங்கங்களாயிறுக்கிற அவையிரண்டும் (க) "செயல்தீரச்சிந்தித்துவாழ்வார்" என்கிறபடியே, இவ்வாத்மாசெய்யக்கடவதொன்றுமில்லை. எம்பெருமானே நிர்வாஹகனென்று அநுஸந்தித்து, உபாயரூப ப்ரவ்ருத்தியில் நிவ்ருத்தரான ப்ரபந்நருடையகைங்கர்யரூப ப்ரவ்ருத்தியில், அவனுகப்பைப்பின் செல்லுமதொழிய, தங்கள்நிர்ப்பந்தத்தைத்தவிர்க்குமென்கை (உ) "పరగ తాతిశయాధానే చ్ఛయోపాదేయత్వమేవయస్య స్వరూపం స శేషః" "பரகதாதிஶயாதாநேச் சயோபாதேயத்வமேவயஸ்யஸ்வரூபம் ஸஶேஷ:" என்கிறபடியே, பராதிஶயகரத்வ ரூபமானசேஷத்வம், ஸ்வாதிஶயேச்சயாவரும், ஸ்வநிர்பந்தத்தைதவிர்க்குமிறே. இனிபோக்த்ருத்வம், ஸ்வநிர்பந்தத்தைத்தவிர்கையாவது, பாரதந்த்ர்யபோக்யதாஜ்ஞாநம் பிறந்தவனுடைய போக்த்ர்த்வமாகையாலே, ஸ்வரஸத்துக்குடலன்றிக்கே, ஶேஷிரஸத்துக்குடலாயிருக்கை. "ஆநந்தமவன் ப்ரீதியைதுளிரெழுப்ப" என்கிறபடியே, இவனுடையபோக்த்ருத்வம், சேஷியான அவன் ப்ரீதிக்கு வர்த்தகமாயிறேயிருப்பது. ஆகையிறே (ங) "అహమన్నమ్" "அஹமந்நம்" என்று, ஸ்வபோக்யதையைமுன்னிட்டு சேஷியையுகப்பிக்க இழிந்தவன், (ச) "అహమన్నాదః" "அஹமந்நாத:" என்று, ஸ்வபோக்த்ருத்வத்தையும் புரஸ்கரிக்கிறது. இப்படியல்லாதபோது, ஒரு சேதநனோடே அநுபவித்ததாயிராதிறே. இவைத்தையெல்லாத்தையுமுள்கொண்டாய்ற்று ; வ்ருத்தியில்ஸ்வநிர்பந்தமறுக்குமென்றருளிசெய்தது. *

(க) நான்முகன் - அ. அஅ. (உ) ஸ்ரீபாஷ்யம். (ங) தை - உ. ப்ரு-லி - கO. ரு. (ச) ஷை.

மூ—(உசு) கர்ம கைங்கர்யங்கள் ஸத்யாஸத்ய நித்யா நித்ய வர்ண தாஸ்யா நுகுணங்கள்.

மூ—(உஎ) இவைத்துக்கு விதி ராகங்கள் ப்ரேரகங்கள்.

மூ—(உஅ) மண்டினாரும் மற்றையாரு மாச்ரயம்.

(அ) க்ரியாகைங்கர்யங்கள் அஸத்யமாய நித்யமானவர்ணத்துக்கும் ஸத்யமாய் நித்யமான தாஸ்யத்துக்கும் அநுரூபங்கள்.

(அ) இக்கர்ம கைங்கர்யங்களுக்கு சாஸ்த்ரவிதியும் பகவதநுபவ ஜநிதப்ரீதியும் சோதகங்கள்.

(அ) திவ்யதேசங்களிலபிநிவிஷ்டராயிருப்பாரும் இதரரான உபாஸகரும் ஸ்த்தாநம்.

வ்யா. (உசு) இந்தக்ரியாவ்ருத்தி சப்தங்களால் சொன்னகர்மகைங்கர்யங்கள், இவர்ளுக்கெதுக்கநுகுணமாயிருக்குமென்னச்சொல்லுகிறது. (கர்மேத்யாதி) அதாவது :— கர்மம், அஸத்தியமுமாய நித்யமுமான வர்ணத்துக் கநுகுணமாயிருக்கும். கைங்கர்யம்,ஸத்யமுமாய் நித்யமுமான தாஸ்யத்துக் கநுகுணமாயிருக்குமென்கை. வர்ணத்தைஅஸத்யமநித்யமென்கிறது, ஆத்மாவுக்குள்ளவேஷமல்லாமையாலே ; ஸததைகரூபமன்றிக்கே, ஔபாதிகமாய்நச்வரமான தேஹாவதியாய்ப்போகையாலே,தாஸ்யத்தை, ஸத்யம் நித்யமென்கிறது. ஆத்மாவுக்குள்ளவேஷமாகையாலே, ஸததை கரூபமாய்யாவதாத்மாநுவர்த்தியாகையாலே,வர்ணாநுகுணமென்னது, வர்ணத்துக்குச்சேர்ந்ததென்னபடி. தாஸ்யாநுகுணமென்னதுமப்படியே. *

வ்யா. (உஎ) இவையிரண்டுக்கும்ப்ரேரகங்களெவையென்னச்சொல்லுகிறது, (இவைத்துக்கித்யாதி) அதாவது:—"யஜேத" (க) "யஜேத" (உ) "ஜுஹுயாத்" "ஜுஹுயாத்" இத்யாதியானசாஸ்த்ரவிதி, கர்மத்துக்குப்ரேரகம். அசேஷசேஷதைகரதியாகிறராகம், கைங்கரியத்துக்கு ப்ரேரகமென்கை. பகவதநுபவஜநித ப்ரீதிகாரிதமிறேகைங்கர்யம் "உகந்துபணிசெய்து" என்னக்கடவதிறே.

வ்யா. (உஅ) இவைத்துக் காச்ரயமாரென்னச்சொல்லுகிறது. (மண்டினாருமித்யாதி) அதாவது :—(ங) "கண்டியூரரங்கம் மெய்யம்கச்சிபேர் மல்லையென்று மண்டினார்" என்றுகந்தருளினநிலங்களிலே, அத்யபிநிவிஷ்டராயிருக்கிறப்ரபன்னர்,கைங்கர்யத்துக்காச்ரயம், (ச) "விளக்கினைவிதியில் காண்பார்" என்று, கீழ்ப்பாட்டில் சொன்ன, மற்றையாரான உபாஸகர், கர்மத்துக்காச்ரயமென்கை. இத்தால், கர்மகர்தாக்களையும் கைங்கர்யகர்த்தாக்களையும் சொல்லித்தாய்த்து. *

(க) யஜுர்வே - கா. உ. ப்ர. ங.   (உ) கர்மமீமாம்ஸை - சு. ங.
(ங) திருக்குறுந்தாண்டகம் - கக. (ச) ஷெ - கஅ.

மூ.—(உ௯) அருள்முடியநிறுத்தி யடைய நின்றதும் நல்லதோரருள் தன்னாலே நன்று மெளியனாகிறதும் விஷயம்.

மூ—(௩0) இவைத்தாலே ஸாதாரண மஸாதாரண மென்றும்.

மூ—(௩க) ஜாத்யாஶ்ரம தீக்ஷைகளில் பேதிக்கும் தர்மங்கள்போலே

(அ) தன்ப்ரஸாதத்தாலேபலஸித்தியாம்படிதன்தநுபூதரானதேவதைகளை நிறுத்தி சேதநராஶ்ரயிக்கும்படிநின்றப்ரகாரமும் அத்விதீயமானநிர்ஹேதுகக்ருபையாலே நன்றாக ஸுலபமாயிருக்குமர்சாவதாரமும் லக்ஷ்யம்.

(அ) தேவதாந்தர்யாம்யர்சாவதாரங்களை விஷயமாகவுடையவிவ்வாகாரங்களாலே ஸாதாரணமாகவும் அஸாதாரணமாகவும்சொல்லும்.

(அ) ப்ராம்ஹணாதி ஜாதிகளிலும் ப்ருஹ்மசர்யாத்யாஶ்ரமங்களிலும் ஜ்யோதிஷ்டோமாதி தீக்ஷைகளிலும் பேதியாநின்று

வ்யா. (உ௯) இவைத்துக்குவிஷயமேதென்னச்சொல்லுகிறது, (அருள்முடியேத்யாதி) அதாவது :— (க) "எத்தவம்செய்தார்க்குமருள் முடிவதாழியான்பால்" என்கிறபடியே, ஆஶ்ரயணபலஸித்தி, தன்னுடையப்ரஸாதத்தாலேயாம்படி, (உ) "தன்மூர்த்திநிறுத்தினான் தெய்வங்களாக" என்கிறபடியே, தனக்கு தநுபூதரானதேவதைகளைநிறுத்தி (௩) "அவரவர்விதிவழியடையநின்றனர்" என்கிறபடியே, ஆஶ்ரயிக்கிறசேதனர், வித்யுக்தப்ரகாரேண ஆஶ்ரயித்துபலம்பெறும்படி, தேவதாந்தர்யாமியாய்நின்றிடம்கர்மத்துக்குவிஷயம். (ச) "நல்லதோரருள்தன்னாலேகாட்டினான்திருவரங்கம்" என்றும், (ரு) "கருத்துக்குநன்றுமெளியனாய்" என்றும், சொல்லுகிறபடியே, கேவலஸ்வக்ருபையாலே, அத்யந்தஸுலபனாய்க்கொண்டு, அர்சாவதாரமாய் நிர்க்கிறவிடமே கைங்கர்யத்துக்கு விஷயமென்கை. *

வ்யா. (௩0) இவ்வோநிலைகளைவிஷயமாகவுடைத்தாகையாலே, கர்மகைங்கர்யங்களிப்படிச்சொல்லப்பட்டன வென்கிறார், (இவைத்தாலேத்யாதி) அதாவது:—இப்படி, தேவதாந்தர்யாமியையும், அர்ச்சாவதாரத்தையும் விஷயமாகவுடைய விவ்வாகாரங்களாலே, ஸாதாரணவிக்ரஹவிசிஷ்டனைவிஷயமாகவுடையகர்மத்தைஸாதாரணமென்றும், அஸாதாரணவிக்ரஹவிசிஷ்டனைவிஷயமாயுடையகைங்கர்யத்தை அஸாதாரணமென்றும்சொல்லுமென்கை. *

வ்யா. (௩க) இவ்வஸாதாரண ஸேவையிலே அதிகரித்தார்க்கு, ஸாதாரணமானவதிலங்வயம்தன்னடையேகழியும்படியை ஸத்ருஷ்டாந்தமாகவருளிச்செய்கிறார் (ஜாத்யாஶ்ரமேத்யாதி) அதாவது:—ஸ்வகர்மப்ராம்

(க) நான்முகன் - அ. உ. (உ) தி - வா. ரு. உ. அ. (௩) ஷை. க. க. ரு. (ச) திருமாலை - க0. (ரு) தி-வா. ௩. ௯. கக.

## ரூ. அத்தாணிச் சேவகத்தில் பொதுவானது நழுவும்.

### (அ) ஏ்ள அநுரூப தர்மங்களைப்போலே அந்தரங்கஸேவையில் ஸாதாரண ரூபகர்மமானது விட்டுப்போம்.

ஹணஸ்ய, அத்யயநாத்யாபநம், யஜநயாஜநம், தாநப்ரதிக்ரஹணம்; தாயாத்யம்ஷிலோஞ்சௌஞ்யச்சாபரிக்ருஹீதம்; ஏதாந்யேவ க்ஷத்ரியஸ்ய, அத்யாபந யாஜந ப்ரதிக்ரஹண நீதிபரிஹார்யம், தண்டயுத்தாதிகாநி; க்ஷத்ரியவத்வைஶ்யஸ்ய, தண்டயுத்தவர்ஜநம், க்ருஷிகோரக்ஷணவாணிஜ்யாதிகம், என்கையாலே, அத்யயநாத்யாபநயஜநயாஜநதாநப்ரதிக்ரஹரூபஷட்கர்மமும்ப்ராம்ஹணனுக்குகர்தவ்யமாய், க்ஷத்ரியவைஶ்யர்களுக்கும், அத்யாபநாதித்ரயமொழிய, அத்யயநாதித்ரயமேகர்தவ்யமாய், அவர்கள் தங்களுக்கும்தண்ட யுத்தங்கள்க்ஷத்ரியனுக்கேஅஸாதாரணமாய்க்ருஷிகோரக்ஷணவாணிஜ்யங்கள், வைஶ்யனுக்கஸாதாரணமாய் (க) "శుశ్రూషాశూద్రస్యేతరేషాంవర్ణానామ్" "ஶுஶ்ரூஷாஶூத்ரஸ்யேதரேஷாம்வர்ணாநாம்" என்கையாலே, ஶூத்ரனுக்குத்ரைவர்ணிக ஶுஶ்ரூஷையே தர்மமாய், இப்படி தத்தஜ்ஜாத்யநுகுணமாக ஒருவனுக்குபாதேயமானதொருவனுக்கு த்யாஜ்யமாய்க்கொண்டுதர்மங்கள் பேதித்திருக்குமிறே. ப்ரம்ஹசாரியானதசையிலுபாதேயமானபிக்ஷாசரண ஸமிதாதாநாதிகள், க்ருஹஸ்தனான தசையில்த்யாஜ்யங்களாய் அக்நிஹோத்ராதிஸத்காராதிகளுபாதேயமாகையாலும், வநஸ்த்தனானதஶையில் (உ) "సంత్యజ్యగ్రామ్యమాహారం సర్వంచైవపరిచ్ఛదమ్" "ஸந்த்யஜ்யக்ராம்யமாஹாரம்ஸர்வம்சைவபரிச்சதம்" என்கையாலே, பூர்வாஶ்ரமத்திலுபாதேயமானக்ராம்யாஹாரபரிச்சதாதிகள்த்யாஜ்யமாய் (ங) "వసీతచర్మచీరంవా" "வஸீதசர்மசீரம்வா" என்று துடங்கிச்சொல்லப்பட்ட, சர்மசீர வஸநத்வ ஜடிலத்வ ஶ்மஶ்ருலோம நகதாரணவந்யாஹாரங்களுபாதேயமாகையாலும்ஸந்யாஸியான தஶையில், பூர்வாஶ்ரமோபாதேயமான வக்நிஹோத்ராதிஸத்காராதிகளும், ஜடிலத்வாதிகளும், த்யாஜ்யமாய் (ச) "అనగ్నిరనికేతస్స్యాత్" "அநக்நிரநிகேதஸ்யாத்" இத்யாதிப்படியே, அநக்நித்வாநிகேதத்வாதிகளுபாதேயமாகையாலும், ப்ரத்யாஶ்ரமம்தர்மம்பேதியாநின்றதிறே. ஜ்யோதிஷ்டோமாதிகளிலே தீக்ஷித்தவனுக்கு, வர்ணத்ரயாஶ்ரமசதுஷ்டயஸாதாரணமாய், அகரணேப்ரத்யவாயதயா, அவஶ்யகர்தவ்யமாய்ப்போரும், நித்யகர்மமநுஷ்டேயமாய், ஜ்யோதிஷ்டோமாதிதர்மமே அநுஷ்டேயமாகையாலே, தீக்ஷையிலே, தர்மம்பேதித்திருக்குமிறே. ஆகவிப்படி, ப்ராம்ஹணாதி ஜாதிகளிலும், ப்ரம்ஹசர்யாத்யாஶ்ரமங்களிலும், ஜ்யோதிஷ்டோமாதிதர்மாந்தர தீக்ஷைகளிலும், பேதிக்கும் தர்மங்கள்போலே, அஸாதாரணவிக்ரஹஸஹிதேஶ்வரவிஷயமாகையாலே, அஸாதாரணமாய், அதயேவ, அத்தாணிச்சேவகமென்று அந்தரங்கஸேவையாயிருக்கிறகைங்கர்யத்திலே, அதிகரித்தவர்களுக்கு, தேவதாந்தர்யாமிவி

(க) ஆ - ம். க. சு. (உ) மனுஸ்மிருதி. (ங) (ச) ஷை.

மூ—(௩௨) ஸாதந ஸாத்யங்களில் முதலும் முடிவும் வர்ணதர்மிகள் தாஸவ்ருத்திக ளென்று துறை வேறிடுவித்தது.

(அ) ஸாதநத்திலும் ஸாத்யத்திலும் ப்ராதமிகமானகர்மமும் சரமமான கைங்கர்யமும் வர்ணோசிததர்மங்களையுடைத்தானவர்கள் தாஸோசிதவ்ருத்திவிசேஷங்களையுடைத்தானவர்கள் இப்படியாகச்சொல்லி துறையை ப்ரத்யேகமாகப்பண்ணுவித்தது.

---

ஷயமாய், தச்சரீரபூததேவதாத்வாராததாராதநமாகையாலே, ஸாதாரணமாயிருந்துள்ள கர்மம், உறங்குவான்கைப்பண்டம்போலே, தன்னடையே நழுவுமென்கை. இத்தால்வர்ணாச்ரமாதிநிஷ்டர்க்கு, தத்ததிகாராநுரூபதர்மமொழிய அநநுகுணமானது த்யாஜ்யதயாகழிக்கப்படுமாப்போலே, ஸ்வரூபயாதாத்ம்ய தர்சிகளானவர்களுக்கும், ததநுரூப தர்மமொழிய அநநுரூபமானது த்யாஜ்யமாய், தன்னடையேவிட்டுக்கழியு மென்றதாய்த்து. இப்படியிருக்கச்செய்தே, சிஷ்டர்களநுஷ்டித்துப் போருகிறது, ஸ்வாநுஷ்டாநத்தைப் பின்சென்று, லோகம்நசிக்கவொண்ணாதென்றுமாந்ருசம்ஸ்யத்தாலேயிறே (க) "యదిహ్యహంనవర్తేయం జాతుకర్మణ్యతంద్రితః। మమవర్త్మానువర్తంతే మనుష్యాఃపార్థసర్వశః। ఉత్సీదేయురిమేలోకా నకుర్యాంకర్మచేదహమ్। సంకరస్యచకర్తాస్యా ముపహన్యా మిమాఃప్రజాః॥" "யதிஹ்யஹம் நவர்த்தேயம் ஜாதுகர்மண்யதந்த்ரித꞉। மமவர்த்மாநுவர்தந்தேமநுஷ்யா꞉ பார்த்தஸர்வஶ꞉॥ உத்ஸீதேயுரிமேலோகாநகுர்யாம் கர்மசேதஹம்। ஸங்கரஸ்ய சகர்தாஸ்யாமு பஹந்யாமிமா꞉ ப்ரஜா꞉"॥ என்கிறபடியே, பரார்த்தமாக விறேயிவர்களநுஷ்டிப்பது. *

வ்-யா. (௩௨) இந்தகைங்கர்யநிஷ்டர்க்கு, கர்மநிஷ்டரோடு சேற்றியில்லாமையைச் சொல்லுகிறது. (ஸாதநேத்யாதி) அதாவது:—ஸாதநத்தில் முதலடியானகர்மமும், ஸாத்யத்தில் முடிந்தநிலமான கைங்கர்யமும், இந்தநெடிவாசி யறிந்தவர்களை, நீங்கள் வர்ணதர்மிகள், நாங்கள் தாஸவ்ருத்திகள், என்றுறவறுத்து, துறைவேறிட்டுப் போகப்பண்ணித்தென்கை. அதாவது :— திருவயிந்திரபுரத்திலே, வில்லிபுத்தூர் பகவர், என்பாரொருவர், எல்லாருமொரு துறையிலே அநுஷ்டாநம்பண்ண, தநியேயொருதுறையிலே அநுஷ்டாநம்பண்ணுவாராய், ஒருநாளநுஷ்டாநம்பண்ணிமீளாநிற்கச்செய்தே, இருந்தப்ராம்ஹணர், ஜிய்யரே! எங்கள்துறையிலே அநுஷ்டாநம்பண்ண வாராதொழிகிறதென்னென்ன ? (௨) "విష్ణుదాసావయం యూయం బ్రాహ్మణావర్ణధర్మిణః॥ అస్మాకం దాసవృత్తీనాం యుష్మాకం నాస్తిసంగతిః॥" "விஷ்ணுதாஸாவயம் யூயம் ப்ராம்ஹணாவர்ணதர்மிண꞉। அஸ்மாகம்தாஸவ்ருத்தீநாம் யுஷ்மாகம் நாஸ்திஸங்கதி꞉" என்று, துறைவேறிட்டுப் போனாராய்த்து. *

---

(க) ஸ்ரீபகவத்கீதை - ௩. ௨௩. (௨) வில்லிபுத்தூர் பகவர்வார்த்தை.

மூ—(௩௩) வேதவித்துக்களும் மிக்கவேதியரும் சந்தஸாம மாதாவா லு மதுக்கும் தாயாய் தாயினுமாயின செய்யுமந்த்ராலும் பிறப்பிக்குமது இருவர்க்கும் ஶ்ரேஷ்ட ஜந்மம்.

(அ) வேதபூர்வபாகப்ரதிபாதிதகர்மநிஷ்டரும் வேததாத்பர்யபூத கைங்கர்யநிஷ்டரும் வேதங்களுக்கு ஜநநியானகாயத்ரியாலும் அந்தகாயத்ரிக்கும்மாத்ருபூதையாய் தாயைக்காட்டிலுமுபகாரிணியானதிருவஷ்டாக்ஷரியாலும் ஜநிப்பிக்குமது கர்ம கைங்கர்யநிஷ்டர்களிருவர்க்கும் உத்தமஜந்மம்

வ்யா. (௩௩) கீழ், (ஜாத்யாதிகளில்பேதிக்குமர்யங்களிலேயாகே) என்றவித்தாலே, ஸூசிதமானவதிகாரி பேதத்திற்கும், துறை வேறிட்டு ப்போம்படியானநெடுவாசிக்கும், ப்ரகாசகமானகர்ம கைங்கர்ய நிஷ்டரிருவர்க்கு முண்டான ஜந்மாதிவிஶேஷத்தை, தர்சிப்பிப்பதாகக்கோலி, ப்ரதமம், ஜந்மவிஶேஷத்தைச்சொல்லுகிறது. (வேதவித்துக்களித்யாதி) அதாவது:— (க) "యే చ వేదవిదో విప్రాః" "யே ச வேதவிதோ விப்ராஃ" என்கிற, வேதவித்துக்களான பூர்வபாகநிஷ்டர், (உ) "గాయత్రీ ఛన్దసాం మాతా" "காயத்ரீ சந்தஸாம் மாதா" என்கிறபடியே, சந்தஸ்ஸுக்களுக்குமாதாவாயிருக்கிற, காயத்ர்யுபதேசத்தாலே பிறப்பிக்குமது, கர்மநிஷ்டர்க்கு ஶ்ரேஷ்ட ஜந்மம், (௩) "యే చాధ్యాత్మవిదో జనాః" யேசாத்யாத்மவிதோ ஜநாஃ" என்கிற, மிக்கவேதியரானவேததாத்பர்யவித்துக்கள், (௪) "ఋచో యజూంషి సామాని తథైవాథర్వణాని చ। సర్వమష్టాక్షరాన్తస్థం యచ్చాన్యదపి వాఙ్మయమ్॥" "ருசோ யஜூம்ஷிஸாமாநி ததைவாதர்வணாநிச | ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்தம் யச்சாந்யதபி வாங்மயம்" || என்று, ஸகலவேத ஸங்க்ரஹமானமையாலே, அந்தகாயத்ரிக்கும் மாத்ருபூதமாய், (ரு) "பெற்றதாயினுமாயினசெய்யும்" என்கிறபடியே, ஶரீரோத்பாதிகையான மாதாமாத்ரமன்றிக்கே, உஜ்ஜீவநத்துக்குறுப்பானஜ்ஞாநத்தையுண்டாக்கும் திருமந்த்ரோபதேசத்தாலே, பிறப்பிக்குமது கைங்கர்ய நிஷ்டர்க்கு ஶ்ரேஷ்ட ஜந்மமென்கை. (௬) "స హి విద్యాతస్తం జనయతి" (எ) "తచ్ఛ్రేష్ఠం జన్మ" "ஸஹி வித்யாதஸ்தம் ஜநயதி தச்ச்ரேஷ்டம் ஜந்ம" என்கையாலே, கேவலப் ஜந்மமன்றிக்கே ஶ்ரேஷ்ட ஜந்மமென்கிறது. அது வர்ணாநுகுணமானவிதிநிஷேதங்களுக்கும், ததநுரூபாநுஷ்டாநத்திற்கும், ததநுகுணபலப்ராப்திக்கும், உறுப்பாகையாலே, அவர்களுக்குஶ்ரேஷ்ட ஜந்மம். இது, ஸ்வரூபாநுரூபமான விதி நிஷேதங்களுக்கும் ததநுரூபாநுஷ்டாநத்திற்கும் ததநுரூபபலப்ராப்திக்கும் உறுப்பாகையாலே இவர்களுக்கு ஶ்ரேஷ்ட ஜந்மம். *

(க) ஸ்ரீபாரதம். ஆர-ம் - அஅ. உ௬. (உ) ஸ்ரீராமம் - ௪௪. (௩) ஸ்ரீபாரதம் ஆர-ம். அஅ. உ௬. (௪) ஸ்ரீபாஞ்சராத்ரம். (ரு) பெ - மொ - க. க, க. (௬) ஆப-ம். ஸூ - ௬. (எ) ஷ ஸூ. எ.

மூ—(௩௪) அந்தணர் மறையோரென்றும் அடியார் தொண்டரென்று மிவர்களுக்கு நிரூபகம்.

மூ—(௩௫) ஒருதலையில் க்ராம குலாதி வ்யபதேஶம் குலந்தருமென்றும் மாசிற்குடி ப்பழியென்றும் பதியாகக்கோயில் வாழும் என்பர்கள்.

(அ) ப்ராம்ஹணர் வைதிகர் இப்படியாகவும் ஶேஷத்வரஸைகநிஷ்டரானவடியார் கைங்கர்யரஸைகநிஷ்டரானதொண்டர் இப்படியாகவும் இந்தகர்மகைங்கர்யநிஷ்டர்களுக்கு லக்ஷணம்.

(அ) கர்மநிஷ்டரென்றுசொல்லப்பட்ட ஒருஸமுதாயத்தில் ஜந்மக்ராமம் வம்சம்முதலானவைகளாலுள்ள நிர்தேஶமானது திருமந்த்ரஸித்தபகவத்ஸம்பந்தப்ரயுக்தமாகவந்ததாய் அஹங்காரமாகிற தோஷமற்றிருக்கும் விலக்ஷணவம்ஶத்திற்கு அவத்யமென்னும்நினைவாலே திருவேங்கடம்ஸ்த்தாநமாகவும் திருவரங்கத்திலும் ஸுகியாநின்றார் என்று சொல்லுவர்கள்.

வ்யா (௩௪) இப்படி, ஶ்ரேஷ்டஜந்மரானவிருவருக்கும் நிரூபகங்களின்னதென்கிறது. (அந்தணரித்யாதி)அதாவது:—(௧)"சாதியந்தணர்" (௨) "துணைநூல்மார்விலந்தணர்" (௩) "தீயோம்புகைமறையோர்" (௪) "நந்தாவண்கைமறையோர்" என்று, விஶேஷணபூதஶரீரத்வாராவந்தவர்ணமும், தத்ப்ரயுக்தமானவைதிகத்வமும், அவர்களுக்குநிரூபகமே. (௫) "திருமாலடியார்"(௬) "அணியரங்கன்திருமுற்றத்துஅடியார்" (௭) "திருமாலுக்குரியதொண்டர்" (௮) "திருநாரணன்தொண்டர்" என்று, ஆத்மவஸ்துவுக்குஜ்ஞாநாநந்தங்களிலும் காட்டிலந்தரங்க நிரூபகமான ஶேஷத்வமும், தத்ப்ரயுக்தகிஞ்சித்காரத்வமும், இவர்களுக்கு நிரூபகமென்கை. *

வ்யா. (௩௫) கேவலமவையோநிருபகம், க்ராமகுலாதிவ்யபதேஶங்களில்லையோவென்னச்சொல்லுகிறது. (ஒருதலையிலித்யாதி) அதாவது:— கர்மநிஷ்டரென்றுசொல்லப்பட்ட ஒருதலையில் ஶரீராநுபந்திகளான க்ராமகுலாதிகளையிட்டு வ்யபதேசிக்குமந்தவ்யபதேஶத்தை கைங்கர்யநிஷ்டரான மற்றத்தலையிலுள்ளவர்கள், (௯)"குலம்தரும்" என்கிறபடியே,திருமந்த்ரஸித்தபகவத்ஸம்பந்தஜ்ஞாநப்ரயுக்தமாய் (௧௦) "மாசில்குடி" என்று, ஶேஷத்வவிரோதியான வஹங்காராதிகளில்லாமையாலே நிர்தோஷமாயிருக்கிறவிக்குலத்திற்கு, அவத்யகரமென்று கருதி

(௧) திருமாலை - ௪௩. (௨) பெ-மொ. ௧. ௫. ௯. (௩) பெ-மொ. ௭. ௯. ௭. (௪) பெ-மொ. ௬. ௭. ௮. (௫) தி-வா. ௫. ௬. ௧௧. (௬) பெரு-ழி. ௧. ௧௦. (௭) தி-வா. ௬. ௯. ௧௧. (௮) தி-வா. ௩. ௭. ௪. (௯) தி-மொ. ௧. ௧. ௯. (௧௦) தி-அ. ௩. ௧௦.

மூ— (௩௬) விப்ரர்க்கு கோத்ர ஸூத்ர சரண கூடஸ்த்தர் பராசர பாராசர்ய போதாயநாதிகள் ப்ரபந்நஜநகூடஸ்த்தர் பராங்குச பரகால யதிவராதிகள்.

(அ) கர்மநிஷ்டரானப்ராம்ஹணர்க்கு வம்சத்திற்கும் கல்பஸூத்ரங்களுக்கும் காடகாதிசாகைகளுக்கும் மூலபுருஷர்கள் பராசர வ்யாஸ போதாயநர்கள்முதலானூர் ப்ரபந்நர்க்கு மூலபுருஷர்கள் நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் எம்பெருமானூர்முதலானூர்.

---

(க) "வேங்கடத்தைப்பதியாகவாழ்வீர்காள்" (உ) 'கோயிலில்வாழும்வைட்டணவர்" என்று பகவதந்வயமுள்ள தேசஸம்பந்தத்தையிட்டு வ்யவகரிப்பர்களென்கை. இதுபகவத்ஸம்பந்தத்தையிட்டும், பாகவதீயஸம்பந்தத்தையிட்டும் வ்யபதேசிக்குமதுக்குமுபலக்ஷணம். (௩) 'ఏకాన్తీ వ్యపదేష్టవ్యో నైవ గ్రామకులాదిభిః। విష్ణునా వ్యపదేష్టవ్య స్తస్య సర్వం స ఏవ హి॥" "யேகாந்தீ வ்யபதோஷ்டவ்யோ நைவக்ராமகுலாதிபிஃ। விஷ்ணுநா வ்யபதேஷ்டவ்யஸ்தஸ்ய ஸர்வம் ஸயேவஹி" ॥ என்னக்கடவதிறே. *

வ்யா. (௩௬) இனி, உபயருடையவும் கூடஸ்த்தரைச்சொல்லுகிறது. (விப்ரர்க்கித்யாதி) அதாவது:— "அந்தணர்மறையோர்" என்கிறப்ராம்ஹணர்க்கு, கோத்ரகூடஸ்த்தர் பராசராதிகள். கோத்ரமாவது? அபத்யஸந்ததி. (௪) "సన్తతి ర్గోత్రజనన కులా న్యభిజనాన్వయౌ" "ஸந்ததிர்கோத்ரஜநந குலாந்யபிஜநாந்வயள" என்னக்கடவதிறே. அந்தகோத்ரந்தாநநேகமாய்த்தத்தத்கூடஸ்த்தரானவஸிஷ்ட காஶ்யபபரத்வாஜ வத்ஸப்ரப்ருதிகள் பலருமுண்டாகையாலே, பராஶராதிகளென்கிறது. சரணகூடஸ்த்தர் பாராஶர்யாதிகள். சரணங்களாவன:— வேதஶாகைகள். தத்த்யாயிகளையும் கௌணமாக சரணஶப்தத்தாலே சொல்லக்கடவது. (௫) "చరణశబ్దః కాఠకకాలాపాదిశాఖావిశేషేషు ముఖ్యః తదధ్యాయిషు పురుషేషు గౌణః" "சரணஶப்தஃ காடககாலாபாதிஶாகாவிஶேஷேஷு முக்யஃ। தத்த்யாயிஷு புருஷேஷு கௌணஃ"என்கையாலே, இவ்விடத்தில், ஶாகைகளைச்சொல்லுகிறது. ஸர்வஶாகைகளுக்குப்ரதாநப்ரவர்த்தகன், பாராஶர்யனாயிருக்கச்செய்தேயும், பின்புதத்தச்சாகைகளுக்கு, தனித்தனிப்ரவர்த்தகரான கடககலாப, கண்வாதிகளுமுண்டாகையாலே, பாராஶர்யாதிகளென்கிறது. ஸூத்ரகூடஸ்த்தர், போதாயநாதிகள். ஸூத்ரமாவது? கர்மாநுஷ்டாநப்ரதிபாதகமானகல்பம். (௬) "శిక్షా కల్పో వ్యాకరణం" "சிக்ஷாயம்வர்ணசிக்ஷா" என்றுதுடங்கிச்சொல்லிவருகிறவளவிலே, (எ) "కల్పోఽనుష్ఠానముక్తమ్" "கல்பேநுஷ்டாநமுக்தம்" என்னதிறே. அதுதாநும்பலவாய், தத்தத்கர்

---

(க) நாச்சி-மொ. அ. கூ. (உ) பெரியாழ்-மி. ௫. க. ௩. (௩) பரமைகாந்திதர்மே, (௪) அமரம் - கா-உ-ப்ரும்ஹவர்கம், ௩௬௬, (௫) ஸ்ரீர-ம் - உ. ௯அ. (௬) ஷி,

மூ—(௩௭) அத்யயந ஜ்ஞாநா நுஷ்டாநங்களாலே ப்ராம்ஹண்யமாகிறாப்போலே சந்தங்களாயிரமும் அறியக்கற்று வல்லராநால் வைஷ்ணவத்வஸித்தி.

(அ) வேதாத்யயநத்தாலும் ததர்த்தாவபோதத்தாலும் தத்ஜ்ஞாநாநுரூபாசாரத்தாலும் ப்ராம்ஹணத்வஸித்தியுண்டாமாப்போலே ஸஹஸ்ரஸாகையாந திருவாய்மொழி முழுதும உபதேஸத்தாலே அர்த்தங்களோடப்யஸித்து அர்த்தப்ரகாரமநுஷ்டிக்கஸமர்த்தராமன்றுயற்று வைஷ்ணவத்வஸித்தியுண்டாவது.

தாக்களான ஆபஸ்தம்பாப்வலாயநாதிகளுமுண்டாகையாலே போதாயநாதிகளென்கிறது. ஆகவிவர்கள், விப்ரர்க்குகூடஸ்த்தபுருஷர்கள். அடியார்தொண்டரென்கிற ப்ரபந்நஜநங்களுக்குகூடஸ்த்தர், (க) "𑌪𑌤𑍍𑌯𑍁𑌃 𑌶𑍍𑌰𑌿𑌯𑌃 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍇𑌨 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌸𑌾𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌸𑌂𑌪𑌦𑌮𑍍 । 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌜𑌨𑌕𑍂𑌟𑌸𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 𑌶𑍍𑌰𑍀𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍍" "பத்யுஶ்ஶ்ரிய: ப்ரஸாதேநப்ராப்தஸார்வஜ்ஞஸம்பதம்। ப்ரபந்நஜநகூடஸ்த்தம்ப்ரபத்யே ஸ்ரீபராங்குஶம்" ‖ என்கிற, நம்மாழ்வார் திருமங்கையாழ்வார்தொடக்கமானவாழ்வார்களும், எம்பெருமானார்முதலானவாசார்யர்களுமென்கை. கூடஸ்த்தராகிறார்:—மூலபூதரிறே. உபதேஸாநுஷ்டாநங்களாலே, ப்ரபந்நஜநத்தை தலைப்பெறுத்திவளர்த்தவர்களாகையாலே இவர்களை, ப்ரபந்நஜநகூடஸ்த்தரென்கிறது. *

வ்யா. (௩௭) இனி இரண்டுதலைக்கும், ப்ராம்ஹண்ய வைஷ்ணவத்வஸித்திஹேது நியமங்களை தர்சிப்பிக்கிறார். (அத்யயநேத்யாதியால்) அதாவது:— (௨) "𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍋𑌽𑌧𑍍𑌯𑍇𑌤𑌵𑍍𑌯𑌃" "ஸ்வாத்யாயோத்யேதவ்ய:" என்கிறபடியே, ப்ரதமம், வேதத்தையாசார்யோச்சாரணாநூச்சாரணமுகேந அக்ஷரராசிக்ரஹணம்பண்ணுகையாகிற அத்யயநத்தைப்பண்ணி மீமாம்ஸாச்ரவணத்தாலே ததர்த்தஜ்ஞாநம்பிறந்து, தததநுரூபமான வநுஷ்டாநமுமுண்டானால் ப்ராம்ஹண்யம் ஸித்திக்குமாப்போலே, (௩) "சந்தங்களாயிரம்" என்கிறபடியே, சந்தோரூபமாய், ஸஹஸ்ரஸாகையாயிருக்கிற திருவாய்மொழியை, (௪) "அறியக்கற்றுவல்லார் வைட்டணவர்" என்கிறபடியே, "𑌅𑌧𑍍𑌯𑍇𑌤𑌵𑍍𑌯𑌂 𑌦𑍍𑌵𑌿𑌜𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑍈𑌃 𑌵𑍇𑌦𑌰𑍂𑌪𑌮𑌿𑌦𑌂 𑌕𑍃𑌤𑌮𑍍" "அத்யேதவ்யம்த்விஜஸ்ரேஷ்டைர் வேதரூபமிதம்க்ருதம்" என்கிற ப்ரகாரத்திலே, ஆசார்யோச்சாரணாநூச்சாரணமுகேந அப்யஸிக்கையாகிற வத்யயநத்தைப்பண்ணி, உபதேஸமுகத்தாலே, ததர்த்தஜ்ஞாநம்பிறந்து ததநுரூபமாக வநுஷ்டிக்கவும் வல்லராநாலாய்த்து, வைஷ்ணவத்வஸித்திப்பதென்கை. *

(௧) பராங்குசாஷ்டகம்-௧. (௨) ஆரணம்-௨. கடு. (௩) தி-வா-௧௦. கூ. கக. (௪) ஷை-௫. ௫. கக.

௫—(௩௮) இந்தஉட்பொருள் கற்றுணர்ந்து மேலைத்தலைமறையோராகாதாரை அயர்ச்சதுப்பேதிமாரென்று உத்பத்தி நிருபிக்கும்.

(அ) வேததாத்பர்யமான த்ராவிடவேதார்த்தத்தை ஆசார்யமுகேநவப்யஸித்து ஸம்ப்ரதாயார்த்தங்களையறிந்து உத்க்ருஷ்டரானவேதாந்திகளாகாதாரை அந்தவேதங்களுக்கசலானவர்களென்று அவர்களுடையஜந்மம் ஆராயப்படும்.

வ்யா. (௩௮) அந்த, வேதாத்யயநாதிகளுடையவர்களுக்கு, இந்த வேதாத்யயநாதிகளில்லாதவளவில், வைஷ்ணவத்வாஸித்தியொழிய, ப்ராம்ஹண்யஹாநியில்லையேயென்னச்சொல்லுகிறது. (இந்த இத்யாதி) அதாவது:— (க) "மிக்கவேதியர்வேதத்தினுட்பொருள்" என்று, உபநிஷத்குஹ்யமான விந்தத்ராவிடவேதார்த்தத்தை, (உ) "கற்றுணர்ந்த மேலைத்தலைமறையோர்" என்கிறபடியே, ஆசார்யோபதேசமுகேந கற்றறிந்து உத்க்ருஷ்டரானவேதாந்திகளாகாதாரை, (௩) "அயல்சதுப்பேதிமார்" என்று, வேதாத்யயந ப்ரயோஜநம், ஈஶ்வரனையுள்ளபடியறிந்து ஸ்வரூபாநுரூப புருஷார்த்தம் கைங்கர்யமென்றிருக்கையாயிருக்க, இந்த ஜ்ஞாநாபாவத்தாலே, நாலுவேதங்களையு மதிகரித்திருக்கச்செய்தே, அந்தவேதத்தோடு தங்களுக்கொட்டின்றி அதுக்கசலானவர்களென்றறுதியிட்டு, (ச) "విష్ణుభక్తివిహీనోయస్సర్వశాస్త్రార్థవేద్యపి । బ్రాహ్మణ్యం తస్యనభవేత్తస్యోత్పత్తిర్నిరూప్యతామ్" "விஷ்ணுபக்திவிஹீநோயஸ்ஸர்வஶாஸ்த்ரார்த்தவேத்யபி । ப்ராம்ஹண்யம்தஸ்யநபவேத்தஸ்யோத்பத்திர்நிரூப்யதாம்" ‖ என்கிறபடியே, இவர்கள், ப்ராம்ஹணரல்லரென்று, உற்பத்தியாராயப்படுமென்கை. (ரு) "యః పుత్రః పితరం ద్వేష్టి తం విద్యాదన్యరేతసమ్ । యో విష్ణుం సతతం ద్వేష్టి తం విద్యాదన్యరేతసమ్॥" ‖ யஃபுத்ரஃ பிதாம் த்வேஷ்டி தம் வித்யாதந்ய ரேதஸம் । யோ விஷ்ணும் ஸததம் த்வேஷ்டி தம் வித்யா தந்ய ரேதஸம்" ‖ என்னக்கடவதிறே. ஆக, கர்மகைங்கர்யங்களென்றுதுடங்கி, இவ்வளவாக, இரண்டுமின்னதுக் கநுகுணமென்றும், இவற்றுக்கு ப்ரேரகாஶ்ரய விஷயபேதமும், இவற்றின்ஸாதாரணாஸாதாரணத்வமும், அஸாதாரணாந்வயத்தில் ஸாதாரண நிவ்ருத்தியும், கைங்கர்யநிஷ்டர்க்கு கர்மநிஷ்டரோடு பொருந்தாமையும், அதுக்கடியான விருவருடையவும் ஜந்மநிரூபக கூடஸ்த்தபேதங்களும், இருவர்க்கும் ப்ராம்ஹண்யவைஷ்ணவத்வஸித்தி ஹேதுக்களும், த்ராவிடவேதார்த்த ஜ்ஞாநாபாவத்தில் ஸ்வாதீதவேதாநந்வயராய் நிஹீநத்வபுத்யர்ஹராம்படியும் சொல்லிற்று. *

(க) கண்ணிநுண் - பு - க. (உ) தி - அ - க. ௬௬. (௩) திருமாலை - ௩௯.
(ச) (ரு)

மூ—(௩௯) எவ்வுலகத்தெவ்வவையு மென்கையாலே வேதம் பஹுவிதம்.

மூ—(௪0) இதில் ஸம்ஸ்க்ருதம் த்ராவிட மென்கிறபிறிவு ருகாதி பேதம்போலே.

மூ—(௪௧) செந்திறத்ததமிழென்கையாலே ஆகஸ்த்யமு மநாதி.

(அ) வேதமானது அத்யேதாக்கள் பேதத்தாலும் உலகபேதத்தாலும் பலவகைப்பட்டிருக்கும் (என்று) சொல்லுகையாலே வேதமானது பலவாறுயிருக்கும்.

(அ) இப்படிபஹுவிதமானவேதத்தில் ஸம்ஸ்க்ருதவேதம் த்ராவிடவேதம் என்னும்படியானபேதம் ருக்யஜுஸ்ஸாமாதர்வணங்களென்னும் பேதத்தோபாதி.

(அ) அநாதித்வப்ரயுக்தவைலக்ஷண்யப்ரகாரமுடையத்ரவிடவேதமென்றுசொல்லுகையாலே ஆகஸ்த்யப்ரகாசிதமானவிந்தபாஷையும் பூர்விகமாயுள்ளது.

---

வ்யா. (௩௯) இனிமேல், "சந்தங்களாயிரம்" என்றுதிருவாய்மொழிக்கிச்சொன்ன வேதத்வத்தைஸாதிக்கக்கோலி ப்ரதமம், ஏவம்விதமாயிருப்பதொரு வேதமுண்டோ வென்கிறஶங்கைக்கு பரிஹாரம்பண்ணுகிறார். (எவ்வுலகத்தித்யாதியால்) அதாவது:— (௧) "ஓதுவாரோத்தெல்லாமெவ்வுலகத்தெவ்வவையும்" என்கையால், வேதமானது, அத்யேதாக்களுடைய பேதத்தாலும், லோகபேதத்தாலும், பஹுவிதமாயிருக்குமென்கை. ஆகையாலதிலேயிதுவுமொருவிதமென்று கருத்து. *

வ்யா. (௪0) ஆனால்? ஏகபாஷையாயிருக்கவேண்டாவோ? ஸம்ஸ்க்ருதமும் த்ராவிடமுமாய் அந்யோந்யம்பேதித்திராநின்றதென்னென்னச்சொல்லுகிறது. (இதிலித்யாதி) அதாவது:—இப்படி, பஹுவிதமான வேதத்தில், ஸம்ஸ்க்ருதவேதம் த்ராவிடவேதம், என்கிறபிறிவு ஸம்ஸ்க்ருதாம்ஶந்தன்னில் ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வணவேதம், என்கிறபிறிவுபோலேயென்கை. இத்தால், வேதராசியொன்றாயிருக்கச்செய்தே, ஸம்ஸ்க்ருதபாஷாரூபமானவது தன்னிலே, ருகாதிரூபேண பலபடியாகப்பிறிந்தாப்போலே, பாஷாபேதேநவுமிப்படி பிறிந்திருக்குமென்றபடி. *

வ்யா. ( ௪௧ ) அப்படிசொல்லலாமோ? ஸம்ஸ்க்ருதபாஷைபோலே, த்ராவிடபாஷையநாதியன்றே; ஆகஸ்த்யமன்றேவிதுவென்னச்சொல்லுகிறது. (செந்திறத்ததமிழித்யாதி) அதாவது:— (௨) "செந்திறத்ததமிழோசைவடசொல்லாகி" என்று, ஸம்ஸ்க்ருதத்தோடே ஸஹபடிதமும், ப்ரதமோக்தமுமாகையாலே, அகஸ்த்யப்ரகாசிதமான மாத்ரம்கொண்டு, ஆகஸ்த்யமென்று சொல்லப்படுகிற த்ராவிடமு

---

(௧) தி - வா - ௩. ௧. ௯. (௨) திருநெடு - ௪.

மூ—(௪௨) வடமொழி மறையென்றது தென்மொழிமறையை நினைத்திறே.

மூ—(௪௩) வேதசதுஷ்டயாங்கோபாங்கங்கள் பதினாலும்போலே இன்னாலுக்கு மிருந்தமிழ்நூல்புலவர் பனுவலாறும் மற்றையெண்பர் நன்மாலைகளும்.

(அ) ஸம்ஸ்க்ருதவேதமென்றுசொன்னது த்ரவிடவேதத்தை ஆலோசித்திறே.

(அ) நாலுவேதங்களுக்கு அங்கங்களாறும் உபாங்கங்களெட்டுமாக பதினாலானவோபாதி நம்மாழ்வாரருளிச்செய்த நாலு ப்ரபந்தமாகிறவேதசதுஷ்டயத்துக்கும் அதிவிஸ்தாரமான த்ரவிட ஶாஸ்த்ரமறிந்தஜ்ஞாநாதிகரான திருமங்கையாழ்வாருடைய ஶாஸ்த்ரரூபப்ரபந்தங்களாறும் எண்பரான மற்றையாழ்வார்களுடைய விலக்ஷணமானப்ரபந்தங்களும் (அங்கோபாங்கங்களென்னபடி.)

---

மநாதியாயுள்ளதென்கை. இத்தாலநாதித்வம் ஸம்ஸ்க்ருத த்ராவிட ஸாதாரணமென்றதாயிற்று. *

வ்யா. (௪௨) ஆனாலந்தபாஷையநாதியாகிறது, திருவாய்மொழிக்கு வேதத்வப்ரகாஶகமான வசநமுண்டோவென்னச்சொல்லுகிறது. (வடமொழீத்யாதி) அதாவது:— மறையென்று, கேவலவேதவாசிஶப்தத்தாலே சொல்லவமைந்திருக்க, வடமொழிமறை, என்று, ஸம்ஸ்க்ருதவேதமென்றது, த்ராவிடவேதமுமுண்டென்று நினைத்திறேயென்கை. ப்ரதிகோடியில்லாதபோது, இப்படி விஶேஷிக்கவேண்டுவதில்லையிறேயென்றுகருத்து. *

வ்யா. (௪௩), ஆனாலந்தவேதத்திற்கங்கோபாங்கங்களுண்டானவோபாதி, இதற்குமவையுண்டோவென்னச்சொல்லுகிறது. (வேதசதுஷ்டயேத்யாதி) அதாவது:—ருகாதிவேதசதுஷ்டயத்துக்கும், சிக்ஷா, வ்யாகரண, நிருக்த, சந்தஸ், கல்ப, ஜ்யோதிஷங்களாகிறவாறங்கங்களும், மீமாம்ஸா, ந்யாய, புராண, தர்மஶாஸ்த்ராத்யுபாங்கங்களெட்டுமாயிருந்துள்ள பதினாலும்போலே இந்தத்ராவிடவேதசதுஷ்டயத்திற்கும், (௧) “இருந்தமிழ்நூற்புலவன்மங்கையாளன்” என்றொருவரால் கரைகாணவொண்ணாதபடி யிருக்கிறத்ராவிடவேதஶாஸ்த்ரத்தை க்கரைகண்டஜ்ஞாநாதிக்யத்தையுடையரான திருமங்கையாழ்வாருடைய (௨) “கலியன்வாயொலிசெய்தபனுவல்” என்று, ஶாஸ்த்ரரூபமானப்ரபந்தங்களாறும், மற்றையாழ்வார்களெண்பருடையவும் விலக்ஷணமானப்ரபந்தங்களுமென்கை. (நன்மாலைகளென்றது) (௩) “நயநின்றநன்மாலை” என்று, முதலாழ்வார்ப்ரபந்தத்திலருளிச்செய்தது; எல்லாப்ரபந்தத்திற்குமொக்குமென்றுநினைத்து. (௪) “பொய்நின்றஞானமும்” இத்யாதி

---

(௧) பெ-மொ-௧. ௭. ௧0. (௨) பெ-மொ-௧. ௪. ௧0. (௩) தி-அ. ௧. ௫௭. (௪) திவி-ம்-௧.

மூ—(௪௪) ஸகலவித்யாதிகவேதம்போலே இதுவும் திவ்யப்ரபந்த ப்ரதாநம்.

(அ) ஸகலவித்யைகளிலும்வேதமதிகமானவோபாதி இப்ரபந்தசதுஷ்டயமும் ஸகலதிவ்யப்ரபந்தங்களிலும் ப்ரதாநமாயிருக்கும்.

---

யாலே, ஸ்வரூபவிரோதியாய்வந்தேறியானதோஷங்களை முதலடியிலே பேசினப்போலே, ப்ரதமத்திலே (க) "வாடினேன்" இத்யாதியாலே, ஸ்வரூபத்திற்கு வந்தேறியான தோஷங்களைக்கண்டுபேசுகையும், பகவத்ப்ராவண்யப்ராசுர்யமும், அதிலர்சாவதாரத்திலூற்றமும், கலவியும் பிறிவும் மாறிமாறிவருகையும் அந்யாபதேசப்பேச்சும் அதுதன்னில் ராத்ரிவ்யஸநம் தூதப்ரேஷணம் அநுகாரம் மடலெடுக்கை தோழி தாய் மகளென்றுமவஸ்தாத்ரயாபத்திகளும், இந்திரியபயாக்ரோசமும் ஈச்வரஸ்வதந்த்ர்யபயம் அஸக்ருத்ப்ரபத்திகரணம் ஆர்த்தியினுடைய கரைபுரளுதல்களும் பரதுக்காஸஹிஷ்ணுதையாலேபலகால்ஹிதம்சொல்லுகையும் துடக்கமான கட்டளையாலே, மற்றையாழ்வார்ப்ரபந்தங்களிலுங்காட்டில், இப்ரபந்தசதுஷ்டயார்த்தஜ்ஞாபகமாயிருக்கையாலே, திருமங்கையாழ்வார் ப்ரபந்தங்களையிதற்கங்கங்களென்கிறது! மற்றையாழ்வார்ப்ரபந்தங்களும், ஏததர்த்தாநுஸாரிகளாய், இதிலர்த்தநிர்ணயத்திற்குறுப்பாயிருக்கையாலே, இதற்குபாங்கங்களென்கிறது. ஆக; (உ) "శిక్షాయాం వర్ణశిక్షా పదసమధిగమో వ్యాక్రియానిర్వచోభ్యాం ఛందశ్ఛందశ్చితౌ స్యాద్గమయతిసమయం జ్యోతిషం రంగధామ । కల్పేనుష్ఠానముక్తం హ్యుచితగమితయో ర్న్యాయమీమాంసయో స్స్యాదర్థ వ్యక్తిః పురాణస్మృతిషు తదనుగా స్త్వాం విశన్తి వేదాః" "சிக்ஷாயாம்வர்ணசிக்ஷாபதஸமதிகமோவ்யாக்ரியாநிர்வசோப்யாம் சந்தச்சந்தப்சிதௌஸ்யாத்கமயதிஸமயம் ஜ்யோதிஷம்ரங்கதாம । கல்பேநுஷ்டானமுக்தம் ஹ்யுசித கமிதயோ ர்ந்யாய மீமாம்ஸயோஸ்ஸ்யாதர்த்த வ்யக்திஃ புராணஸ்ம்ருதிஷு ததநுகா ஸ்த்வாம் விசந்தி வேதாஃ" என்கிறபடியே, அவை யந்தவேதசதுஷ்டயத்திற்கு முபகாரகங்களாயிருக்குமாப்போலே, இவையும்கீழ்ச்சொன்னபடியே, இந்தவேதசதுஷ்டயத்திற்க்கு முபகாரகங்களாயிருக்குமென்றதாய்த்து. *

வ்யா. (௪௪) வித்யாந்தரங்களில் வேதத்திற்குண்டான வாதிக்யமிதற்குமுண்டேடென்னச்சொல்லுகிறது. (ஸகலேத்யாதி) அதாவது:—(ந) "అంగాని వేదాశ్చత్వారో మీమాంసా న్యాయవిస్తరః । పురాణంధర్మశాస్త్రంచ విద్యా హ్యేతా శ్చతుర్దశ" "அங்காநி வேதாப்சத்வாரோ மீமாம்ஸா ந்யாய விஸ்தரஃ, புராணம் தர்மசாஸ்த்ரம்ச வித்பாஹ்யேதாப்சதுர்தச" என்று, ஸஹபடிதமாயிருக்கச்செய்தே, ஸ்வாங்கோபாங்கங்களான ஸகல வித்யைகளிலும், ஸ்வவைபவத்தாலே மேலாயிருக்கும் வேதம்போலே, திவ்யப்ரபந்தகணத்தில் ஸஹபடிதமாயிருக்கச்செய்தே, ஸ்வாங்கோபாங்கங்களான ஸகலதிவ்யப்ரபந்தங்களிலும் ஸ்வவைபவத்தாலே, இதுவும், மேலாயிருக்குமென்கை. *

---

(க) பெ-மொ-க. க. க. (உ) ஸ்ரீரங்-ம. உ. கஅ. (ந) ஸ்ம்ருதி.

மூ— (சரு) வேதநூ லிருந்தமிழ் நூலாஜ்ஞையாணை வஞ்சயில் வேத மில் ஸ்ருதி செவிக்கினிய ஓதுகின்றதுண்மை பொய்யில் பாடல் பண்டை நிற்கும் முந்தை யழிவில்லா வென்னும் லக்ஷணங்க ளொக்கும்.

(அ) வேதஶாஸ்த்ரமென்னுமாப்போலே பெரியத்ராவிடஶாஸ் த்ரமென்றும் பகவதாஜ்ஞாரூபமென்னுமாப்போலே ஈஶ்வ ராஜ்ஞாரூபமென்றும் தோஷரஹிதமென்னுமாப்போலே நிர்தோஷமென்றும் ஶ்ரவணேந்த்ரியக்ராஹ்யமென்னுமாப் போலே ஶ்ரவணங்களுக்குஶ்ராவ்யமென்றும் சொல்லுகி ன்றவர்த்தங்கள் ஸத்யமென்னுமாப்போலே அஸத்யகந்தர ஹிதமென்றும் அநாதியென்னுமாப்போலவும் அழிவில் லாததென்னுமாப்போலவும் அநாதியென்றும் அழிவற்றிரு க்குமென்றும் இப்படிப்பட்ட லக்ஷணங்களெல்லாம் (ஸம் ஸ்க்ருதத்ராவிட வேதங்களிரண்டிற்கும்) ஸமானம்.

---

வ்யா. (சரு) ஆநாலந்தவேதவைபவத்திற்குடலான ஶாஸ்த்ரத்வ பகவதாஜ்ஞாரூபத்வ நிர்தோஷத்வ ஶ்ருதித்வ ஸத்யத்வாநாதித்வாதிகளுடைய வங்களிதற்குமுண்டோவென்னச் சொல்லுகிறது (வேதநூலித்யாதி) அ தாவது:— (க) "வேதநூலென்று" அத்தைவேதஶாஸ்த்ரமென்னுப்போ லே, இத்தையும், (உ) "இருந்தமிழ்நூல்" என்று, பெரியத்ராவிடஶாஸ் த்ரமென்கையாலும், அத்தை, (ங) "ஶ்ருதி ஸ்ம்ருதி ர்மமைவாஜ்ஞா" "ஶ்ருதி ஸ்ம் ருதிர் மமைவாஜ்ஞா" என்று, பகவதாஜ்ஞாரூபமாகச்சொன்னுப்போலே, (ச) "ஆணையாயிரம்" என்று, ததாஜ்ஞாரூபமாகச்சொல்லுகையாலும், அத்தை, (ரு) "வஞ்சயில்நான்மறை" என்று, விப்ரலம்பாதிதோஷாஹி தமென்னுப்போலே, இத்தையும் (சு) "ஏதமிலாயிரம்" என்று, நிர் தோஷமாகச்சொல்லுகையாலும், அத்தை, (எ) "சுடர்மிகுசுருதி" என்று, "ஶ்ரூயதே இதி ஶ்ருதி:" "ஶ்ரூயதே இதி ஶ்ருதி:" என்கிறபடியே, பூர்வபூர்வோச்சாரணக்ரமத்திலே, ஶ்ரவணேந்த்ரியத்தாலே, க்ராஹிக்க ப்படுமதாகச்சொன்னுப்போலே இத்தையும், (அ) "செவிக்கினியசெஞ் சொல்லே" என்று, ஶ்ராவ்யமாகச்சொல்லுகையாலும், அத்தை, (கூ) "வேதநூலோதுகின்றதுண்மை" என்று, சொல்லுமதிலொருபொய்யி ல்லையென்னுப்போலே, இத்தையும், (க0) "பொய்யில்பாடல்" என்று, அ ஸத்யகந்தரஹிதமென்கையாலும் அத்தை, (கக) "பண்டைநான்மறை" (கஉ) "நிற்கும்நான்மறை" என்று, அநாதியாகவும், மேலழிவில்லாத

---

(க) திருமாலை - ங. (உ) பெ - மொ - க. எ. க0. (ங) ஸ்ரீபாஞ்சராத்ரம். (ச) தி - வா - சு. ங. கக. (ரு) பெ - மொ. ரு. ங. உ. சு) தி - வா - க. சு. சக. (எ) தி - வா - க. க. எ. (அ) தி - வா - க0. சு. கச. (கூ) திருச்சந்த - ம். எஉ. (க0) தி - வா - ச. ங. கக. (கக) பெ - மொ - ரு. எ, க. (கஉ) தி. வா - அ. ரு. உ.

மூ—(௬௬) சொல்லப்பட்டவென்னவிதில் கர்த்ருத்வம் ஸ்ம்ருதி யத்தை ஸ்வயம்பூ படைத்தா னென்னது போலே.

மூ—(௬௭) நால்வேதம்கண்டபுராணருஷி மந்த்ரதர்சிகளைப்போலே

(அ) (ஆழ்வாராலே) சொல்லப்பட்டதென்னுமித்திருவாய்மொழியில் (ஆழ்வார்க்குச்சொன்ன) கர்த்ருதவம் ஸ்ம்ருதியானது அந்தஸம்ஸ்க்ருதவேதத்தை ப்ரம்ஹாவானவன் உண்டாக்கினன் என்றுசொன்னுப்போலே.

(அ) நாலுவேதங்களையும் ஸாக்ஷாத்கரித்துபுராணகர்தாவானவ்யாஸபகவானையும் மந்த்ரதர்சிகளானருஷிகளையும்போலே

தாகவும், சொன்னுப்போலே, இத்தையும், (க) "முந்தையாயிரம்" (உ) "அழிவில்லாவாயிரம்" என்று, அநாதியாயழிவற்றிருக்குமதாகச் சொல்லுகையாலும், இந்தலக்ஷணங்களெல்லாமிரண்டுக்கு மொக்குமென்கை. *

வ்யா. (௬௬) ஆநாலந்தவேதம்போலே, இதுவுமஸ்ம்ருதகர்த்ருகமாயிருக்கவேண்டாவோ? ஆழ்வாரிதற்கு கர்தாவென்கையால், நித்யத்வா பௌருஷேயத்வங்கள்கூடாதேயென்னச்சொல்லுகிறது. (சொல்லப்பட்ட இத்யாதி) அதாவது:—(ங) "சடகோபன்சொல்லப்பட்ட வாயிரம்" என்று, இதிலாழ்வார்க்குச்சொன்னகர்த்ருத்வம், (ச) "అనాదినిధనా హ్యేషా వాగుత్సృష్టా స్వయంభువా" "அநாதிநிதநாஹ்யேஷா வாகுத்ஸ்ருஷ்டாஸ்வயம்புவா" என்றுஸ்ம்ருதி, அந்தவேதத்தை, ப்ரும்ஹாஸ்ருஷ்டித்தானென்றுசொன்னவோபாதியென்கை. ஸ்வயம்பூஸ்ருஷ்டித்தானென்னுதே படைத்தானென்றது, (ரு) "முன்னம்திசைமுகனைத்தான்படைக்க, மற்றவனும்முன்னம்படைத்தனன் நான்மறைகள்" என்று,ஆழ்வார் ஸூக்தியையும் தர்சிப்பிக்கைக்காக. அநாதிநிதநமானஸந்தர்ப்பம், ப்ரம்ஹாவின்வாக்கினின்று மாவிர்ப்பவித்தமாத்ரங்கொண்டு, ப்ரம்ஹாவுக்கிச்சொன்ன கர்த்ருத்வத்தோபாதி, இதிலுமாழ்வார்க்குச்சொன்னகர்த்ருத்வமாகையாலே, இத்தாலிந்நித்யத்வாபௌருஷேயத்வஹாநிவாராதென்றுகருத்து. *

வ்யா. (௬௭) பூர்வஸந்தர்ப ப்ரக்ரியையை, இவர்தர்சித்துப்பேசினதேயுள்ளதென்னுமிடத்தையறிவிக்கிறார். (நால்வேதமித்யாதியால்)அதாவது:— (நால்வேதங்கண்ட புராணர்ஷியென்று) (௬) "நால்வேதங்கண்டானே" என்னும்படி, ஈச்வரன் தானடியிற்செய்தாப்போலே,நாலுவேதங்களையும் ஸாக்ஷாத்கரித்து "అష్టాదశ పురాణానాం కర్తా సత్యవతీసుతః" "அஷ்டாதசபுராணநாம் கர்தாஸத்யவதீஸுதஃ" என்கிறபடியே, அஷ்டாத

(க) தி-வா-கூ. ௫. கக. (உ) ஷெ-கூ. எ. கக. (ங) ஷெ-அ-க௦. கக. (ச) ஸ்மிருதி. (ரு) பெரியதிருமடல்-க௦.

மூ. இவரையும் ருஷி முனி கவி யென்னும்.

இவ்வாழ்வாரையும் ருஷியென்றும் முனியென்றும் கவி யென்றும் சொல்லும்.

ஶபுராணங்களினுடைய ஆநுபூர்வியையும் தர்சித்துச்சொன்ன வேதவ்யாஸபகவானைச்சொல்லுகிறது. நால்வேதங்கண்டானென்கிற விடத்தில், ஸ்வேநரூபேணநின்று தர்சித்தமையன்றிக்கே, வ்யாஸரூபேணநின்று தர்சித்தமைதன்னைச் சொல்லுகிறதென்று, இவர்க்குக்கருத்தாகவுமாம். (௧) "సంకీర్ణబుద్ధయో దేవా బ్రహ్మరుద్రపురస్సరాః । శరణ్యం శరణంజగ్ము ర్నా రాయణ మనామయమ్ । తైర్విజ్ఞాపిత కార్యస్తు భగవాన్పురుషోత్తమః । అవతీర్ణో మహా యోగీ సత్యవత్యాం పరాశరాత్" "ஸங்கீர்ணபுத்தயோ தேவா ப்ருஹ்ம ருத்ர புரஸ்ஸராஃ। ஶரண்யம் ஶரணம் ஜக்மு ர்நாராயண மநாமயம்॥ தைர்விஜ்ஞாபிதகார்யஸ்து பகவாந் புருஷோத்தமஃ। அவதீர்ணோமஹா யோகீஸத்யவத்யாம் பராஶராத்" என்றும், (௨) "కృష్ణద్వైపాయనం వ్యాసం విద్ధినారాయణంప్రభుమ్" "க்ருஷ்ணத்வைபாயநம்வ்யாஸம் வித்திநாராயணம்ப்ரபும்।" என்று பகவதாவேசாவதாரதயா பகவாந்தானாகச் சொல்லக்கடவதிறே. இப்படியிருந்துள்ள ஸ்ரீவேதவ்யாஸபகவானை வேதாதிகளின்பூர்வஸித்தாநுபூர்வியைதர்சித்துச் சொன்னபடியாலே, "தர்ஶநாத்ருஷிஃ" "மநநஶீலோ முநிஃ" "கவிஃகாந்ததர்சி" என்கிறவர்த்தங்களை நினைத்துக்கொண்டு, (௩) "శ్రూయతాంసింహనాదోయ మృషేస్తస్యమహాత్మనః । ధర్మేచార్థేచ కామేచ మోక్షేచభ రతర్షభ" "ஶ்ரூயதாம் ஸிம்ஹநாதோயம் ருஷேஸ்தஸ்ய மஹாத்மநஃ। தர்மேசார்த்தேச காமேச மோக்ஷேசபரதர்ஷப॥ என்றும், (௪) "సాక్షాల్లోకాన్పావయమానః కవిముఖ్యఃపారాశర్యః" "ஸாக்ஷால்லோகாந்பாவயமாநஃ கவிமுக்யஃ பாராஶர்யஃ" என்றும், "ఏవంవిధంభారతంతు ప్రోక్తంయేనమహాత్మనా । సోయంనారాయణస్సాక్షాద్వ్యాసరూపీమహామునిః" "ஏம்விதம் பாரதந்து ப்ரோக்தம் யேநமஹாத்மநா। ஸோயம் நாராயண ஸ்ஸாக்ஷாத் வ்யாஸரூபீமஹாமுநிஃ"॥ என்றும், ருஷி முநி கவியென்று சொல்லிற்றிறே. மந்த்ர தர்சிகளானவர்களை பூர்வஸித்த ஸந்தர்ப்பத்தை ஸாக்ஷாத்கரித்துச் சொன்னவர்களென்று மிடந்தோற்ற, (௫) "నమఋషిభ్యోమన్త్రకృద్భ్యః" "நமருஷிப் யோ மந்த்ரக்ருத்ப்யஃ" என்றும், "భగవాన్ శౌనకమునిః" "பகவாந்ஶௌநக முநிஃ" என்னுமித்யாதிகளாலே, ருஷிமுநி யென்று சொல்லிற்றிறே. இவர்கள்விஷயத்திலும், கவிசப்தப்ரயோக முண்டாகில் வந்தஸ்தலங்களிலே கண்டுகொள்வது. ஆகவிப்படி இவர்களைச் சொன்னப்போலே, த்ராவிடவேதமானவிதின் பூர்வஸித்தாநுபூர்வியை, ஸாக்ஷாத்கரித்துப் பேசின விவ்வாழ்வாரையும், (௬) "ఋషింజుషామ

(௧) (௨) வி-பு. ௩. ௪. ௪. (௩) ஸ்ரீபாரதம்-ஆ. ௬௨. ௫௩. (௪) ஸ்ரீபாரம். (௫) ஆரணம். (௬) பராங்குசாஷ்டகம்-௫.

மூ—(௪அ) படைத்தான் கவியென்னபோதே இதுவும் யதாபூர்வகல்பநமாமே.

மூ—(௪௯) உறக்கம்தலைக்கொண்டபின்னை மறைநான்குமுணர்ந்த தங்களப்பனோடே ஓதின

(அ) ப்ரளயங்கொண்ட உலகத்தைமுன்புபோலஸ்ருடித்தவீச்வரனுடைய கவியென்றாழ்வாரைச்சொன்னபோதே இப்ரபந்தமும் முன்புண்டானத்தைமுன்புபோலே இப்பவுமாக்கினனென்னுமிடம் தோற்றுமிறே.

(ஆ) யோகநித்ரையைச்செய்தவநந்தரம் வேதங்கள்நாலையும் ஸ்மரித்ததனக்குஜநகனானவீச்வரனிடத்தினின்று அப்யஸித்த

హే కృష్ణ తృష్ణాతత్త్వమివోదితమ్ । సహస్రశాఖాంయోద్రాక్షీ ద్రావిడీంబ్రహ్మసంహితామ్" "ருஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வ.மிவோதிதம்| ஸஹஸ்ர பராகாம யோத்ராக்ஷீ த்ராவிடம் ப்ரும்ஹஸம் ஹிதாம்"|| என்றும், (க) " శఠకోపమునింవన్దే శఠానాంబుద్ధిదూషకమ్ । అజ్ఞానాంజ్ఞానజనకం తింత్రిణీమూలసంశ్రయమ్" "படகோபமுநிம் வந்தே படாநாம் புத்திதூஷகம் அஜ்ஞாநாம் ஜ்ஞாநஜநகம் திந்த்ரிணீமூலஸம் ப்ரயம்"|| என்றும், (உ) "உலகம் படைத்தான் கவியாயினேற்கு" என்றும், முன்புண்டான ஸந்தர்ப்பத்தை தர்சித்துப்பேசினவரென்றுமிடந்தோற்ற ருஷியென்றும் முனியென்றும் கவியென்றும் சொல்லுமென்கை. *

வ்யா. (௪அ) இன்னமுமிவருடைய வநாதித்வஸூசகமானதொன்றை தர்சிப்பிக்கிறார். (படைத்தானித்யாதி) அதாவது:—உலகம்படைத்தான்கவியென்கையாலே, (௩) "ஒன்றியொன்றியுலகம்படைத்தான்" என்கிறபடியே, ஒருப்பட்டொருப்பட்டுமென்மேலும் லோகஸ்ருஷ்டியைப்பண்ணுமிடத்தில், (௪) "సూర్యాచంద్రమసౌ ధాతా యథాపూర్వమకల్పయత్" "ஸூர்யாசந்த்ர மஸௌ தாதா யதாபூர்வ மகல்பயத்" என்கிறபடியே, ஸ்ருஷ்டிதோறும் சந்த்ர ஸூர்யாதி ஸகலபதார்த்தங்களும் யதாபூர்வகல்பநமாய் வருமாப்போலே, த்ராவிடவேதமானவிப்ரபந்தமும், ஸ்ருஷ்டிதோறும், யதாபூர்வகல்பநமாய் வருமென்று தோற்றுமிறேயென்கை. *

வ்யா. (௪௯) ஏவம்பூதமானவிது, பகவத்ப்ரஸாதத்தாலே ஆழ்வார்க்குலபித்தித்து ஆழ்வார்ப்ரஸாதத்தாலே இவ்வருகுள்ளார்க்குபஜீவ்யமாய், இவரையிட்டு நிரூபிக்கும்படியானமையை ஸத்ருஷ்டாந்தமாகவருளிச்செய்கிறார். (உறக்கமித்யாதியால்) அதாவது:— (௫) "உன்னிய யோகத்துறக்கம்தலைக்கொண்டபின்னை" என்கிறபடியே, ஸம்ஹ்ருதி ஸ

(க) பராங்குசாஷ்டகம்-௪. (உ) தி-வா-௩. ௯. ௧௦. (௩) ஷெ. (௪) உபநிஷத் ப்ர-உ. (௫) பெரிய-ல். அ.

மூ. சந்தச்சதுமுகன் சலங்கலந்த வெண்புரிநூல் மாணுரி திரிதந்துண்ணும் காமனுட லிருக்கிலங்கு ஜ்யேஷ்டபுத்ராதிகளுக்கு மறைபயந்தாப்போலே ஆதுமில்காலத் தெந்தையான வாய்முதலப்பன் பிரமகுருவா யிராப்பகல் முன்சொல்ல கற்றனமே யென்றவிவரும் நாவினுல் நன்மையா லென்று ஓதவல்லபிராக்களை கன்மிங்களென்று சொற்பயிற்ற வேதமோதுவாரோத்தாகையாலே ஆதர்வணாதிகள்போலே இதுவும் பேர்பெற்றது.

வேதங்களை நிரூபகமாகவுடைய சதுர்முகன் கங்காஜலங்கலந்திருக்கும் (ஜடைகளையுடையனாய்) ஸ்வச்சமானயஜ்ஞோபவீதமுடையனாய் க்ருஷ்ணாஜிநம்தரித்து பிக்ஷாடநம்பண்ணி பக்ஷிக்குமவனாய் மந்மதஶரீரத்தை (தஹித்தஜிதேந்த்ரியனாய்) வேதாந்தயநத்தால்ப்ரகாசிக்கும் (ப்ரும்ஹசர்ய லக்ஷணஸம்பந்நனை ப்ரதமபுத்ரனைருத்ரன்முதலானுக்கு வேதத்தையோதிவித்தாப்போலே ப்ரபஞ்சமடங்கவழிந்தவன்று, நிருபாதிகஸ்வாமியான வாய்த்தப்ரதமோபகாரகன் பரமகுருவாய் திவாராத்ரமும் முன்னுறச்சொல்ல அநுச்சாரணம்பண்ணினேன் என்றுசொன்ன விவ்வாழ்வாரும் நாவினுலென்கிறபாட்டின்படி (ஸ்வாசார்யப்ரேமமுமுடையராய் நன்மையால் மிக்கவென்கிற பாட்டின்படி (க்ருதஜ்ஞதையுமுடையராய்) இப்படியாயிருக்கிறபரத்தையோடோதவல்ல ஸ்ரீமதுரகவிகள்போல்வாரை அப்யஸியுங்கோளென்று இச்சொல்களையப்யஸிப்பிக்க வேதமானது அத்யேதாக்களையிட்டு நிரூபிக்கப்படுமதாகையாலே ஆதர்வணம் முதலானவைபோலே இப்ரபந்தமும் (சடகோபன்சொல்லென்று) பேர்பெற்றது.

மயத்தில், நாம ரூப விபாகாநர்ஹமாய் ஸதவஸ்த்தையாய்க்கிடந்தவிற்றை, ஸ்ருஷ்டிகாலம்வந்தவாறே விபக்தமாக்கி, மஹதாதிஸகலதத்வங்களையு மண்டத்தையும் ஸ்ருஷ்டித்து, சதுர்முகஸ்ருஷ்டிக்குமுன்னாக, ஏகார்ணவத்திலே, இவைநல்வழியாய்க்கரைசேரும் விரகேதோ வென்றநுஸந்திக்கையாகிற யோகநித்ரையைச்செய்தவநந்தரம், (க) "உணர்ந்தாய் மறைநான்கும்" என்கிறபடியே, * ஸுப்தப்ரபுத்தந்யாயத்தாலே, ஸம்ஸ்காரகதமாய்க்கிடந்த நாலுவேதங்களையுமாநுபூர்வி தப்பாதபடிஸ்மரித்த (உ) "திசைமுகனர்தங்களப்பன்" என்கிறபடியே, தனக்குஜநகனானஸர்வேச்வரனோடே, (ந) "యో వై వేదాంశ్చ ప్రహిణోతి తస్మై"

(க) தி - அ. உ. சஅ. (உ) பெ - மொ - உ. உ. எ. (ந) ச்வே - த் - ரு. கஎ.

* உணர்ந்திருக்கையி லெதைநினைத்திருக்கிறுனே, உறங்கி யுணரும்போது மதையே நினைக்கை.

"யோவை வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி தஸ்மை" என்னும்படியே தின, (க) "சந்தச்சதுமுகன்" என்கிறபடியே, சந்தஸ்ஸைநிருபகமாக வுடையசதுர்முகன், (உ) "சலங்கலந்தசெஞ்சடை" (௩) "வெண்புரிநூல்மார்பன்" (௪) "மானுரியதளுமுடையவர்" (௫) "பிறர்மனைதிரிதந்துண்ணும்" (௬) "காமனுடல்கொண்டதவத்தார்" (௭) "இருக்கிலங்குதிருமொழிவாயெண்டோசற்கு என்று" நித்யஸ்நாநோபவீத க்ருஷ்ணாஜிநதாரண பிக்ஷாந்ந போஜ நேந்த்ரியஜய ஸதாத்யயநபரத்வங்களானப்ரும்ஹசர்யலக்ஷணயுக்தனாய், "ப்ரஹ்மணः புத்ராய ஜ்யேஷ்டாய" "ப்ருஹ்மணःபுத்ராயஜ்யேஷ்டாய" என்கிறபடியே, தனக்குஜ்யேஷ்டபுத்ரனை ருத்ரன்முதலானார்க்கு (அ) "சரணமறைபயந்த" என்கிறபடியே, புருஷார்த்த ததுபாயஜ்ஞாநஸாதநமான வேதத்தை, ஓதிவித்தாப்போலே, (௯) "ஆதுமில்காலத்தெந்தை" என்று (௧0) "ஒன்றுந்தேவும்" இத்யாதிப்படியே, ஒன்றுமில்லாத ஸம்ஹாரகாலத்தில் நாமரூபங்களையிழந்தவோபாதி ஸத்தையுமிழந்துபோகாமே, எந்தையானமுறையாலே தன்மேலேயேறிட்டுக்கொண்டுநோக்கி, மீளவும் கரணங்களைத்தந்து, ஜ்ஞாநவிகாஸத்தைப்பண்ணின, (௧௧) "வாய்முதலப்பன்" என்கிற, வாய்த்தகாரணபூதனை வுபகாரகன், (௧உ) "பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி" என்கிறபடியே, தானேயாசார்யனாய் (௧௩) "இராப்பகலோதுவித்து" என்கிறபடியே, திவாராத்ரவிபாகமற (௧௪) "என்முன்சொல்லும்" என்கிறபடியே முன்னுருச்சொல்ல, (௧௫) "திருநாமச்சொல்கற்றநமே" என்றநுச்சாரணம்பண்ணினேனென்று, இப்படி யவனோடே யோதினவிவரும், (௧௬) "நாவினால் நவிற்றின்பமை தினேன்" என்றுதுடங்கி, (௧௭) "குருகூர்நம்பிபாவின்னிசைபாடித்திரிவன்" என்று, ஸ்வாசார்யப்ரேமத்தையும், (௧௮) "நன்மையால்மிக்க நான்மறையாளர்கள்புன்மையாகக்கருது" ம்படியானவென்னை, (௧௯) "அன்னையாயத்தனுயென்னையாண்டிடும் தன்மையான்சடகோபன்" என்று, க்ருதஜ்ஞதையையும் முன்னிட்டுக்கொண்டு, (௨0) "ஓதவல்லபிரார்க்கள்" என்றித்தை யப்யஸிக்கவல்ல வுபகாரகரென்னும்படி, ஶ்ரத்தாபூர்வகமாக வோதும் ஸ்ரீமதுரகவிகள்போல்வாரை" (௨௧) "கன்மிங்களென்றும்மையான்" என்கிறபடியே, இத்தை யப்யஸிங்கோளென்றுசொல்லி, (௨௨) "சொல்பயிற்றிய" என்கிறபடியே, இஶ்ஶப்தத்தையப்யஸிக்க, வேதமானது, (௨௩) "ஓதுவாரோத்து" என்றத்யேதாக்களையிட்டு நிரூபிக்

(க) பெரியா-ழி - ௨. ௫. ௮. (௨) திருச்சந்த-ம் - ௧௧௩. (௩) தி - ௮. ௧. ௪௬. (௪) பெ-ழி - ௧0. ௯. ௪. (௫) திருக்குறு-ம் ௧௯. (௬) தி-அ. ௪. ௭௮. (௭) பெ-மொ. ௬. ௬. ௮. (௮) தி - ௮. ௧. ௬௮. (௯) தி - வா - ௩. ௪. ௪. (௧0) தி-வா. ௪. ௧0. ௧. (௧௧) ஷெ ௭. ௯. ௩. (௧௨) பெரியா - ௫. ௨. ௮. (௧௩) ஷெ ஷெ-௨௩. (௧௪) தி-வா - ௭. ௯. ௨. (௧௫) திருவி-ம் - ௬௪ (௧௬) கண்ணி - பு - ௨. (௧௭) ஷெ ஷெ. (௧௮) ஷெ. ௫. (௧௯) ஷெ ஷெ (௨0) தி-வா - ௯. ௧. ௧௧. (௨௧) தி - வா-௬. ௮. ௬. (௨௨) ஷெ ௯. ௫. ௮. (௨௩) தி - ஷெ - ௩. ௧. ௬.

மூ. ரின்னமாஸாபாஸபத்தர் அவன்வழங்கும் திவ்யசக்ஷுஸ்ஸாலே நேரேகார்செறிந்தநீருடி கட்கரிய வரும்பொருளைக் கண்டபோதே யாமுறுமையென்னும்படி யிவர்க்கு வன்பாஸங்கணீங்கிற்று.

அறிந்திருக்கும் (ருஷிகள்) இன்னம் - இன்றளவும், ஆஸாபாஸபத்தர் - (ஸாம்ஸாரிகபோகத்ருஷ்ணாரஜ்ஜுக்களாலே பந்திக்கப்பட்டிருப்பவர்கள், அவன்வழங்கும் - ஈப்ஸ்வரன் ப்ரஸாதித்த, திவ்யசக்ஷுஸ்ஸாலே-திவ்ய(ஜ்ஞாநரூப)நேத்ரத்தாலே,நேரே - நேராகவிருக்கும் (ப்ரும்ஹாவும்) கால்செறிந்த நீராடி - காலகண்டனுனகங்காதரனும், கட்கரிய - காண்கைக்கரியனுன, அரும்பொருளை - துர்லபவஸ்துவான ஸர்வேப்ஸ்வரனை, கண்டபோதே - (அவன்தானேகாட்ட)க்கண்டபோதே, யாமுறுமையென்னும்படி - நாங்கள வித்யாதிகளை யடையாதபடி விடுவித்தருள வேணுமென்னும்படி, இவர்க்கு - இவ்வாழ்வார்க்கு, வன்பாஸங்கள் - ப்ரபலமானபாஹ்ய விஷயஸங்கங்கள், நீங்கிற்று - ஸவாஸநமாக விட்டகன்றது.

என்கிறபடியே, தன்னைக்காண்கைக்கு ஸாதநமாக அவன்கொடுத்த திவ்யஜ்ஞாந ரூபசக்ஷுஸ்ஸாலே (க) நேரே கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான்" என்றும் (உ) "கார்செறிந்தகண்டத்தா னென்கண்ணன்காணன்" என்றும் (ங) நீருடி தான் காணமாட்டாததாரகலசேவடியை" என்றும் (ச) "கட்கரியபிரமன்சிவனிந்திர னென்றிவர்க்குங்கட்கரியகண்ணன்" என்றும், சொல்லுகிறபடியே, இவ்வருகுள்ளாரில் காட்டில் ஜ்ஞாநஸக்த்யாதிகளாலதிகராய், (ரு) தாமோதரனைத்தனிமுதல்வனை ஞாலமுண்டவனை யொருவர்க்குத்தரமறியலாமோ" என்று, தங்களையொழியஒருவர்க்குப,யப்போகா தென்றிருக்கும் ப்ரும்ஹருத்ரர்களுக்கும், காணவரியனுய், (சா) "அறிந்தனவேதவரும்பொருள்நூல்களறிந்தனகொள்க அரும்பொருளாதல்" என்கிறபடியே, (எ) "యస్యామతం తస్యమతం" "யஸ்யாமதம் தஸ்யமதம்" இத்யாதியாலே, வேதங்களுமறியவரியவஸ்துவென்றே அரியும்படியாய், (அ) "கேட்பார்க்கரும்பொருளாய்நின்ற" என்றும் (கூ) "నాయమాత్మా ప్రవచనేన లభ్యోనమేధ యా నబహునా శ్రుతేన" "நாய மாத்மா ப்ரவசநேந லப்யோ நமேதயா நபஹுநாஸ்ருதேந" என்கிறபடியே, தன்ப்ரஸாதமொழிய ஸ்வயத்நத்தால்ப்ஸ்ரவணதிகள்பண்ணுவார்க்கு, துர்லபவஸ்துவானஸர்வேப்ஸ்வரனை, (க0) கண்டேன்கமலமலர்ப்பாதம்" என்கிறபடியே,அவன்தானேகாட்டுகையாலே, விஸதமாகக்கண்டபோதே, (கக) "பொய்நின்றஞானமும்" என்று

(க) தி-அ-க. ருசா. (உ) நா - அ. எங. (ங) ஷை - உஎ. (ச) தி-வா-எ. எ. கக., (ரு) ஷை - உ. எ. கஉ. (சா) ஷை-கூ. ங. ங. (எ) கே - உ. க0. உ. (அ) நா-அ. சா0. (கூ) கட - உ. உ. உஉ. (க0) தி-வா. க0. ச. கூ. (கக) தி - வி - க.

மூ— (சுo) அவர்களுக்கு காயோடென்னுமவையே தாரகாதிகள் இவர்க்கெல்லாங்கண்ணனிறே.

மூ— (சுக) அழுநீர்துளும்ப க்கடலு மலையும் விசும்புந் துழாய்

(அ) அவர்களுக்கு - அந்தருஷிகளுக்கு, காயோடென்னுமவையே - பலமூலாதிகளாமவையே, தாரகாதிகள் (ஶரீரத்திற்கு) தாரகாதிகள், இவர்க்கு - இவ்வாழ்வார்க்கு, எல்லாம் (தாரக போஷக போக்யங்கள்) அனைவும், கண்ணனிறே க்ருஷ்ணனேயிறே.

(அ) அழுநீர்துளும்ப (பகவத்விரஹவ்யஸநத்தாலே) பாஷ்போதகங்கள்ப்ரவஹிய்யாநிர்க்க, கடலும்-ஸமுத்ரமும், மலையும்-பர்வதமும், விசும்பும்-ஆகாசமும், துழாய்-தேடி,

துடங்கி (க) "இன்னின்னநீர்மையினியாமுருமை" என்றவித்யாதிகளை விடுவித்தருளவேண்டு மென்றவனைக் காற்கட்டும்படி, இவர்க்கு (உ) "மற்றவன்பாசங்கள்" என்று, ஸ்வயத்நநிவர்த்யமல்லாதபடி, ப்ரபலமானபாஹ்யஸங்கங்கள் (ங) "பாசங்கள்நீக்கி" என்னும்படி, தத்ப்ரஸாதத்தாலே ஸவாஸநமாகவிட்டகன்றதென்கை. *

வ்யா. (சுo) இவ்வளவுமன்றிகேக தாரகாதிவைலக்ஷண்யத்தாலுமவர்களிலிவர்க்குண்டான வ்யாவ்ருத்தியை யருளிச்செய்கிறார். (அவர்களுக்கித்யாதியால்) அதாவது:— ருஷிகளானவவர்களுக்கு, (ச) "காயோடுநீடுகனியுண்டுவீசுகடுங்கால்நுகர்ந்து" என்றும், (ரு) "வீழ்கனியுமூழிலையும்" என்றும், * "இவையேநுகர்ந்து" என்றும்சொல்லுகிறபடியே, பலமூல பத்ர வாயு தோயங்களே தாரக போஷக போக்யங்கள், (சு) "ருஷிம்ஜுஷாமஹே" என்றிவரையும், ருஷியென்று சொல்லிற்றிலும் தாரகாதிகளவையன்று க்ருஷ்ணத்ர்ஷ்ணுதத்வமானவிவர்க்கு, (எ) "உண்ணுஞ்சோறுபருகுநீர்தின்னும் வெற்றிலையுமெல்லாங்கண்ணன்" என்கையாலே, தாரக போஷகபோக்யங்களெல்லாம், க்ருஷ்ணனேயிறேயென்கை.

வ்யா. (சுக) இப்படி ஸர்வ ப்ரகாரத்தாலும், ப்ராக்ருத விஷயங்களில் நசையற்று, பகவதேகபரரானவிவர், தத்விரஹத்தில் படுமதெல்லாம், அவர்கள் ப்ராக்ருதவிஷய ஸங்கமராகையாலே யவ்விஷயங்களினுடைய விரஹத்திலே படுவர்களென்கிறார். (அழுநீ ரித்யாதியால்) அதாவது :— (அ) "சேயரிக்கண் அழுநீர் துளும்பவலமருகின்றன" என்றும், (கூ) "கடலும் மலையும் விசும்பும் துழாய்" என்றும், (கo) "சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன்" என்றும், (கக) "எங்கே காண்கே னீன்துழா யம்மான் றன்னையான்" என்றும், (கஉ) "உன்னைக்

(க) தி - வி - க. (உ) தி - வா - அ. உ. கக. (ங) தி-வா. எ. அ. ரு. (ச) பெ. மொ. ங. உ. உ. (ரு) பெரியதிரு-ல்-சஉ. (சு) பராங்கு-ம் உ. (எ) தி - வா - சு. எ. க. (அ) தி - வி - உ. (கூ) தி - வா - உ. க. ச. (கo) ஷெ - கூ. அ. கo. (கக) ஷெ-அ. ரு. கக. (கஉ) ஷெ - ரு. அ. ச. * பெரியதிரு-ல்-உ

மூ. திருமாலென்றும் எங்கே காண்கேனென்றுமிவரலமாப்பு அவர்களுக்குப் புத்ரவியோகத்திலே.

மூ—(சுஉ) பலஸாதந தேவதாந்தரங்களில்

(அ) திருமாலென்றும்-ஸ்ரீயஃபதீயென்றும் (கூப்பிட்டு), எங்கே காண்கேன்-எங்கேகாணக்கடவேன், என்றுமிவரலமாப்பு - என்றும்படியாக இவ்வாழ்வார்ப்படுமலமாப்பு, அவர்களுக்கு-அந்தருஷிகளுக்கு, புத்ரவியோகத்திலே - புத்ரவிஸ்லேஷத்திலே.

(அ) பல-ப்ராப்யத்திலும், ஸாதந - ப்ராபகத்திலும், தேவதாந்தரங்களில் - இதர தேவதா விஷயங்களிலும்,

காண்பான் நான் அலேப்பாய்" என்றும், சொல்லுகிறபடியே, பகவத்விரஹவ்யஸநத்தாலே கண்ணும் கண்ணீருமாய், அபரிச்சேத்யமான கடலோடு நிர்விவரமான மலேயோடு அச்சமான வாகாசத்தோடு வாசியற வெங்குந்தேடி ஹ்ருதயங்கலங்கி ஸ்ரீயஃபதீ! என்று கூப்பிட்டு, எங்கே காணக்கடவேனென் றிவர்படு மலமாப்பு, ஸ்ரீவஸிஷ்டபகவான் புத்ரவியோக க்லேஸத்தாலே (க) "సమేరుకూటా దాత్మానం ముమోచ భగవానృషిః శిరస్తస్య శిలాయాఞ్చ తూలరాశావివాపతత్ ॥ నమమారచ పాతేన తదా సమునిసత్తమః। తథాగ్నిమిద్ధ్వా భగవాన్ సవివేశమహామునే ॥ తంతదాసుసమిద్ధోపి నదదాహహుతాశనః ॥ దీప్యమానోప్యమిత్రఘ్న శీతోఽగ్నిరభవత్తదా ॥ ససముద్రమభిప్రేత్య శోకావిష్టోమహామునిః ॥ కణ్ఠేబద్ధ్వాశిలాంగుర్వీంనిపపాతతదమ్భసి ॥" "ஸமேருகூடாதாத்மாநம்முமோசபகவாந்ருஷி ஃ। சிரஸ்தஸ்யசிலாயாஞ்சதூலராஸாவிவாபதத் ॥ நமமாரசபாதேநததாஸமுநிஸத்தம ஃ। ததாக்நிமித்வா பகவாந்ஸவிவேஸமஹாமுநே ॥ தம்ததாஸுஸமித்தோபிநததாஹஹுதாஸநஃ ॥ தீப்யமாநோப்யமித்ரக்நஸீதோக்நிரபவத்ததா । ஸஸமுத்ரமபிப்ரேத்யஸோகாவிஷ்டோமஹாமுநி ஃ॥ கண்டேபத்வாசிலாங்குர்வீம்நிபபாததம்பஸி" என்கிறபடியே, மலேயிலே யேறிவிழுவது நெருப்பிலே புகுவது கழுத்திலே கல்லேக்கட்டிக் கடலிலே விழுவதாகையாலும், ஸ்ரீ வேதவ்யாஸபகவாந் புத்ரவிரஹம் பொறுக்கமாட்டாமல் (உ) "ద్వైపాయనో విరహకాతర ఆజుహావపుత్రేతి" "த்வைபாயநோவிரஹகாதர ஆஜுஹாவபுத்ரேதி" என்கிறபடியே, புத்ரனேயென்று வாய்விட்டழுது கூப்பிட்டுக்கொண்டு, காணப்பெறுமையாலலமந்து திரிகையாலும், அவர்களுக்கு புத்ரவிஸ்லேஷத்திலே நடக்குமென்றபடி. *

வ்யா. (சுஉ) இம்மாத்ரமன்றிக்கே, பலஸாதநாதிகளில் ப்ரதிபத்திவிஸேஷத்தாலுமிரண்டு தலேக்குமுண்டான நெடுவாசியையருளிச்செய்கிறார்மேல் (பலஸாதநேத்யாதியாலே) அதாவது:—(ந) "నిరస్తాతిశయాహ్లాద

(க) (உ) ஸ்ரீபாக-ம். க. உ. உ. (ந) ஸ்ரீவி - பு. சு. ரு. ருக.

ரூ. இவர்கள் நினைவு பேச்சிலே தோன்றும்.

இவர்கள் - (ருஷிகளும், ஆழ்வாருமாகிற) இவர்களுடைய, நினைவு-அபிப்ராயம், பேச்சிலே (ருஷிகளுடைய) உக்திகளிலேயும், (ஆழ்வாருடைய) திவ்ய ஸூக்திகளிலேயும், தோன்றும் - தெரியும்.

---

సుఖ భావైకలక్షణా।భేషజంభగవత్ప్రాప్తిరేకాన్తాత్యన్తికీమతా॥ తస్మాత్తత్ప్రాప్తయేయత్నః కర్తవ్యః పణ్డితైర్నరైః॥ తత్ప్రాప్తిహేతుర్జ్ఞానఞ్చ కర్మచోక్తం మహామునే॥" "நிரஸ்தாதிஶயாஹ்லாதஸுக பாவைகலக்ஷணா। பேஷஜம்பகவத்ப்ராப்திரேகாந்தாத்யந்திகீமதா ॥ தஸ்மாத்தத்ப்ராப்தயேயத்நஃகர்தவ்யஃபண்டிதைர்நரைஃ ॥ தத்ப்ராப்திஹேதுர்ஜ்ஞாநஞ்சகர்மசோக்தம்மஹாமுநே" "இத்யாதிகளாலே, பகவத்ப்ராப்தியே பலமாகவும், கர்மஜ்ஞாநாதிகளே உபாயமாகவும், இந்த்ராதி தேவதாந்தர்யாமியான ஈஶ்வரனே உத்தேஶ்யனாகையாலே, இந்த்ராதி தேவதைகள் அநுவர்தநீயராகவுமிறேருஷிகள் சொல்லுவது (க) "தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே" (உ) "வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்" என்று, கைங்கர்யம் புருஷார்த்தமாகவும்,தத்ஸாதநமும், (௩) "நாகணைமிசை நம்பிரான்சரணேசரண்" (ச) "அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்கிற, ப்ரபத்தியாகவும், (ரு) "மற்றொரு தெய்வம் தொழாள்" என்று, தேவதாந்தரங்களநுவர்த நீயரல்லராகவுமிறே யிவரருளிச்செய்வது. ஆகையால், பலத்திலும் ஸாதநத்திலும் தேவதாந்தரங்களிலுமவர்கள் ப்ரதிபத்தியு மிவர்ப்ரதிபத்தியு மிரண்டு தலையில் பேச்சிலும் தெரியுமென்கை. * ஸகலவேத ஸங்க்ரஹமான திருமந்த்ரத்தில், ப்ரதமபதத்தாலே ஶேஷத்வைக நிரூபணீயமாக, ப்ரதிபாதிக்கப்பட்ட ஆத்மாவுக்கு, ஸ்வரூபாநுரூபமானபுருஷார்த்தம் சரமபதத்தில் சதுர்த்தியால்சொல்லப்பட்டகைங்கர்யமேயாகையாலும், மத்யமபதப்ரதிபாதிதமான பகவதத்யந்த பாரதந்த்ர்யத்துக்கு, ததேகோபாயத்வமொழிய, ஸ்வரக்ஷணேஸ்வ்ப்ரவ்ருத்திசேராமையாலும், மத்யமாக்ஷரப்ரதிபாதிதமான பகவதநந்யார்ஹத்வத்துக்கு தேவதாந்தராநுவர்தநகந்தம் ஸஹியாமையாலும், பகவத்ப்ராப்தி மாத்ரம்பலமாகவும், ஸ்வயத்நரூபகர்மாதிகளுபாயமாகவும், அஹங்காரயுக்ததேவதைகளை பகவத்விபூதயா உபாதேயராகவுங்கொள்ளுமது, ஸ்வரூபயாதாத்ம்யதர்சிகளுக்கு பரித்யாஜ்யமாயிறேயிருப்பது. ஆனபின்பு பலாதித்ரயத்திலிவர் ப்ரதிபத்திக்கு மவர்கள்ப்ரதிபதிக்கும் நெடுவாசியுண்டாகையாலே, இவ்வழியாலு மவர்களிலிவரத்யந்தவ்யாவ்ருத்த ரென்னதாயிற்று. *

---

(க) தி-வா-உ. கூ. ச. (உ) ஷை ௩. ௩. க. (௩) ஷை ரு. கo, கக. (ச) ஷை சு. கo. கo. (ரு) ஷை ச. சு. கo.

மூ—(கூங) ராமாயணம் நாராயணகதை யென்றுதுடங்கி கங்கா காங்கேய ஸம்பவாத் யஸத்கீர்த்தநம்பண்ணின எச்சில்வாய் ஶுத்தி பண்ணுமல் திருமாலவன் கவி

(அ) ராமாயணம் - ஸ்ரீராமாயணம், நாராயண கதை - ஸ்ரீமந் நாராயணவைபவ ப்ரதிபாதககதை, என்றுதுடங்கி - என்றுபக்ரமித்து, கங்கா - கங்கையினுடையவும், காங்கேய - ஸுப்ரமணியனுடையவும் பீஷ்மருடையவும், ஸம்பவாதி - பிறப்புமுதலியவையாகிற, அஸத்கீர்த்தநம்பண்ணின-தீப்புகழைச்செய்ததனுலுண்டான வசுத்தியைப்போக்குநிமித்தம் பகவத்கல்யாண குணவர்ணநத்திலுறுப்பட்ட வ்யாஸ வால்மீகாதிகளைப்போலே, எச்சில்வாய் ஶுத்திபண்ணுமல்- அஸத்கீர்த்நத்தாலே வாக்கையசுத்தியாக்கி அதுக்கு சுத்திபண்ணத்தேடவேண்டாதபடி, திருமாலவன்கவி - ஸ்ரீ

வ்யா. (கூங) ஆக, தர்மவீர்யேத்யாதிவாக்யம்துடங்கி, இவ்வளவுமிப்ரபந்த வக்த்ருவைலக்ஷண்யத்தைப் ப்ரதிபாதித்தார்க்கீழ்; இனியிப்ரபந்த வைலக்ஷண்யத்தன்னை ப்ரதிபாதிக்கிறுர்மேல், (ராமாயணமென்றுதுடங்கி) அதாவது:— (க) "కృత్స్నం రామాయణం కావ్యమీదృశైః కరవాణ్యహమ్" "க்ருத்ஸ்நம்ராமாயணம்காவ்யமீத்ருஶை꞉கரவாண்யஹம்" என்று, ராமக்தையைச்சொல்லுவதாக ராமாயண மென்றுபக்ரமித்து, கங்காஸம்பவ ஸுப்ரம்ஹண்யோத்பத்தி புஷ்பகவர்ணநரூபகதைகளை பரக்கப்பேசுகையாலே, அஸத்கீர்தநம்பண்ணி வாகஶுத்திவந்ததிறே ஸ்ரீவால்மீகி பகவானுக்கு. (உ) "నారాయణకథామిమామ్" "நாராயணகதாமிமாம்" என்கிறபடியே, நாராயணகதையென்றுபக்ரமித்து ஸம்பவபர்வத்தில் காங்கேயரான ஸ்ரீபீஷ்மருடைய உத்பத்திதுடக்கமானவநேகருடையவுத்பத்திப்ரகாரங்களை விஸ்தரேணப்ரதிபாதிக்கையாலும் "பூசல்பட்டோலை" யென்னும்படி, பாரதயுத்தப்ரகாராதிகளையே பறக்கநின்றுவர்ணித்தபடியாலும், அஸத்கீர்தநத்திலேமிகவும்பறந்து அஶுத்தையான வாக்கை (ங) అసత్కీర్తనకాంతారపరివర్తనపాంసులామ్। వాచం శౌరికథాలాపగంగయైవ పునీమహే" "அஸத்கீர்தநகாந்தாரபரிவர்தநபாம்ஸுலாம்। வாசம்ஶௌரிகதாலாபகங்கயைவபுநீமஹே" என்று, அஸத்கீர்தநமாகிறகாட்டிலலமர்ந்து புழுதிபடைத்தவாக்கை, பகவத்கதாலாபமாகிறகங்கையாலே, ஶுத்தமாக்குகிறேனென்று ஶுத்திபண்ணினுனிறே ஸ்ரீவேதவ்யாஸபகவான். ஸ்ரீவால்மீகிபகவானிப்படி யநுதபித்துவாக்ஶுத்திபண்ணித்திலனுகிலும் இந்தந்யாயமவனுக்கு மொக்குமென்றுநினைத்திறே, இவர்கூட்டியெடுத்தது. ஆகஇப்படியுபக்ரமித்ததுக்குச்சேராதபடி, அஸத்கீர்தநத்தைப்பண்ணிவாக்கை அஶுத்தியாக்கி யதுக்குஶுத்திபண்

(க) ஸ்ரீரா - ம - பா - உ. சக. (உ) ஸ்ரீபார - ம - ஆ-ம. (ங) ஹரிவம்ஶம்.

மூ. என்னவாயேலேப்படியே மாற்றங்களாய்ந்துகொண்டுஉரிய சொல்வாய்த்த விதுவேதாதிகளில் பௌருஷமானகீதா வைஷ்ணவங்கள்போலே அருளிச்செயலில்ஸாரம்.

யஃபதியின்கவி, என்னவாயோலேப்படியே - என்றடியிலிட்ட வாயோலே ப்ரகாரமே, மாற்றங்களாய்ந்து - அந்ய பரமான ஶப்தங்களைத்தெறிந்தெடுத்து உரியசொல்வாய்த்த - பகவத்விஷயத்துக்குத்தகுதியான சொற்களாலே வாய்த்திருக்கிற. இது - இப்ரபந்தம், வேதாதிகளில் - ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களில் - பௌருஷ - புருஷஸூக்தம், மாநவ - மநுஸ்ம்ருதி, கீதா-பகவத்கீதை, வைஷ்ணவங்கள்போலே - விஷ்ணுபுராணமும்போலே, அருளிச்செயலில் - பகவதேகபரமானமற்ற திவ்யப்ரபந்தங்களிலும், ஸாரம் - ஸாரமாயிருக்கும்.

ணவேண்டாதபடி (க) "திருமாலவன்கவியாதுகற்றேன்" என்று, ஸ்ரீயஃபதியினுடைய கவியென்றடியில்வாயோலேயிட்டப்ரகாரத்திலே, (உ) "மாற்றங்களாய்ந்துகொண்டு" என்கிறபடியே, அந்யபரமான ஶப்தங்களொன்றூடுகலசாதபடி, சப்தங்களைத்தெரிந்தெடுத்து (ங) உரியசொல்லாலிசைமாலேகளேத்தி" என்கிறபடியே, விஷயத்துக்குத்தகுதியானசொல்லாலே சொல்லப்பட்டதாய், (ச) "வாய்த்தவாயிரம்" என்று, வாச்யனுனஸர்வேஶ்வரனுக்கு வாய்த்தவிப்ரபந்தம், (ரு) "వేదేషు పౌరుషం సూక్తం ధర్మశాస్త్రేషు మానవమ్ । భారతే భగవద్గీతా పురాణేషు చ వైష్ణవమ్" "வேதேஷு-பௌருஷம்ஸூக்தம் தர்மஶாஸ்த்ரேஷு-மாநவம் | பாரதே பகவத்கீதாபுராணேஷு-சவைஷ்ணவம்" என்று, வேதங்களில்புருஷஸூக்தமும், தர்மஶாஸ்த்ரங்களில்மநுப்ரணீதமும், மஹாபாரதத்தில் ஸ்ரீகீதையும், புராணங்களில் ஸ்ரீவிஷ்ணுபுராணமும்ஸாரமாயிருக்குமாப்போலே அந்யகதாகந்தரஹிதமானவருளிச்செயலில் ஸாரமாயிருக்குமென்கை. இத்தால் (சு) "தீதிலந்தாதி" என்கிறபடியே, கதாந்தரப்ரஸ்தாவதோஷராஹித்யத்தாலே ஆர்ஷப்ரபந்தங்களில் வ்யாவ்ருத்தமாய் பகவத்ப்ரதிபாதநஸாமர்த்தயத்தாலே, பகவதேகபரமான மற்றையாழ்வார்கள் ப்ரபந்தங்களிலும் ஸாரமாயிருக்குமென்றிப்ரபந்த வைலக்ஷண்யம் சொல்லித்தாயிற்று.

(க) தி - வி - சஅ. (உ) தி - வா - சு. அ. கக. (ங) ஷை - ச. ரு. சு. (ச) ஷை உ. உ. கக. (ரு) (சு) தி - வா. அ. உ. கக.

மூ—(௬௪) குருசிஷ்யக்ரந்தவிரோதங்களை பரமதாதிகளாலே பரிஹ
ரியாமல் செஞ்சொற்செந்தமிழின்கவி பரவியழைக்குமெ
ன்றுஅந்யோந்யங்கொண்டாடி பேசிற்றேபேசுமேககண்ட

(அ) குருசிஷ்ய - குருசிஷ்யர்களான வ்யாஸ ஜைமினிகளுடை
ய, க்ரந்த - ப்ரும்ஹஸூத்ர, கர்மஸூத்ர) க்ரந்தங்களுக்
குள்ள, விரோதங்களை - (பரஸ்பரவாக்ய) விரோதங்களை,
பரமதாதிகளாலே - பரமதாந்யபரத்வாதிகளாலே (பரி
ஹரிக்கவேண்டித்திறே) பரிஹரியாமல்-(இங்கும்பரஸ்பர
வாக்ய விரோதங்களுண்டாய் அவற்றை) பரிஹரிக்கவேண்
டாதபடி, செஞ்சொல் - விலக்ஷணசொற்களுடைய (கவி
கள்) செந்தமிழ் - விலக்ஷணமானத்ரா விடத்தைப் பாடு
மவர்கள், இன்கவி - இனியதான கவிகளைப்பாடுமவர்கள்,
(என்றும்சொல்லுகிற) பரவி - (பகவித்விஷயப்ராவண்
யமுடையவர்களெங்கும்) வ்யாபித்து, அழைக்கும் - பக
வதநுபவஜநிதப்ரீத்யதிஶயத்தாலேயவன் திருநாமங்கொ

வ்யா. (௬௪) இனிமேலிப்படியருளிச்செயலில் ஸாரமான விதி
ன்ப்ராமாண்யாதிஶயத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக ஆழ்வார்களுடைய
ஐகண்ட்யத்தையும் அவர்களில் தலைவரான விவரருளிச்செய்த வி
ப்ரபந்தத்தினுடைய ப்ராபல்யத்தையும் ப்ரதிபாதியாநி னின்றுகொ
ண்டு, ஏவம்பூதமானவிதுக்குச்சேராதஶாஸ்த்ரங்கள், பரீக்ஷகபரித்
யாஜ யங்களாம்படியை யருளிச்செய்கிறார். (குருசிஷ்யேத்யாதியாலே)
அதாவது:— ருஷிகளில் குருசிஷ்யரான வ்யாஸஜைமினிகளில் குருவா
னவ்யாஸனுடைய க்ரந்தமானப்ரும்ஹஸூத்ரத்தோடு சிஷ்யனானஜை
மினியினுடையக்ரந்தமானகர்மஸூத்ரத்துக்கு நிரீஶ்வரவாதிகளால்வந்த
விரோதத்தை (க) "[illegible]"(உ)"𑌅𑌨𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌂𑌤𑍁 𑌜𑍈𑌮𑌿𑌨𑌿𑌃"(௩)"𑌪𑌰𑌂 𑌜𑍈𑌮𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌖𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍"(ச)"𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑍇𑌣 𑌜𑍈𑌮𑌿𑌨𑌿𑌃" "ஸம்பத்தேரிதிஜைமினிஃ" "அந்யார்த்
தந்துஜைமினிஃ" "பரம்ஜைமினிர்முக்யத்வாத்" "ப்ராம்ஹேணஜை
மினிஃ" இத்யாதிகளானப்ரும்ஹஸூத்ரங்களிலே, ஜைமினிக்கிப்ரும்ஹஸ்
வரூப தத்குண ததுபாஸந தத்பலாதிகளிலவனுடைய வங்கீகாரமுண்
டென்றுமிடந்தோற்றுகையாலும், மஹாபாரதத்திலே, ஹயசிரோ பாக்
யாநாதிகளிலே பகவத்வ்யாஸோபதேஶலப்தபரமாத்மதத்வஜ்ஞாநமு
டையவனாகச் சொல்லுகையாலும், ஸ்ரீவேதவ்யாஸனும் ஜைமினியுமேக
கண்டர். இனிதேவதாநிராகரணம்பண்ணினவிது ஈஶ்வரப்ரணீதமாக
வேதத்தைச்சிலர்சொல்லுகையால்வந்த பௌருஷேயத்வமடியாக விப்
ரலம்பாதிதோஷங்களைக்கற்பிற்று,வேதாப்ராமாண்யம்சொல்லுவது வை
திககர்மங்களைநிந்திப்பதாகிற பாஹ்யரைநிராகரித்து, வேதப்ராமாண்ய

(க) ஶா. மீ - க. உ. ௩௨. (உ) ஷை க. ச. சஅ. (௩) ஷை - ச. ௩. கக.
(ச) ஷை - ச. ச. ரு.

மூ. ரில்என்னின்மிகுவென்று மிவருரைகொளின்மொழிகொண்டு ஶாஸ்த்ரார்த்தங்கள் நிர்ணயிக்கவேண்டுகையாலேவலங்கொண்டவிதுக்குச்சேராதவை மநுவிபரீதங்கள்போலே.

ண்டு) அழைப்பவர்கள், என்று - இப்படியாக, அந்யோந்யம் - ஒருவர்க்கொருவர், கொண்டாடி - ஶ்லாகித்துக்கொண்டு, பேசித்தேபேசும் - ஒருவர்பேசினதேயெல்லாரும் பேசும், ஏககண்டரில் - ஐககண்ட்யமுடையவர்களில், என்னில் மிகுவென்றும்-என்னில்மிக்கபுகழுடையராரென்கிற, இவர் - இவ்வாழ்வாருடைய உரைகளின்மொழிகொண்டு - ஸ்வவைலக்ஷண்யத்தாலே ஸ்ரீராமாயணாதிகளையும் ஜயிக்கும்படியான ஸூக்திகளைக்கொண்டு, ஶாஸ்த்ர - (வேத ததுபப்ரும்ஹணரூப) ஶாஸ்த்ரங்களில், அர்த்தங்கள்-(ஸம்ஶயிதமான) அர்த்தங்களை, நிர்ணயிக்கவேண்டுகையாலே - நிச்சயிக்கவேண்டுகையாலே, வலங்கொண்டவிதுக்கு-யதாவத்வஸ்துவர்ணநஸாமர்த்யமுடைய விப்ரபந்தத்துக்குசேராதவை - சேற்றியில்லாதவை, மநுவிபரீதங்கள்போலே - மநுஸ்ம்ருதிக்கு விபரீதமானஸ்ம்ருதிகள் போலே.

கர்மாவஶ்யகர்தவ்யதைகளை ஸாதிக்கையிலுண்டானவிச்சையாலே,ஸ்வமதமன்றியிலேயிருக்க பரமதத்தையவலம்பித்துச் சொன்னின்றதல், அன்றிக்கே, தேவதாநிராகரணத்தில் தாத்பர்யமில்லை, அஶ்ருதவேதாந்தார்க்கு கர்மத்திலஶ்ரத்தையைநிவாரிக்கைக்காக கர்மப்ராதாந்யம் சொல்லுகையிலேதாத்பர்யமாகையாலே, (க) "ನಹಿ ನಿನ್ದಾನಿನ್ದ್ಯಂ ನಿನ್ದಿತುಂ ಪ್ರವರ್ತತೇ" "ನಿನ್ದಾದಿತರಪ್ರಶಂಸಿತುಮ್" "நஹிநிந்தாநிந்த்யம்நிந்திதும்ப்ரவர்ததே" "நிந்தாதிதரத்ப்ரஶம்ஸிதும்" என்கிறந்யாயத்தாலே, தேவதாநிராகரணம் பண்ணினவிது, கர்மப்ரஶம்ஸார்த்தமாகையாலே, அந்யபரமென்றுதல் கொள்ளவேணுமென்று இப்படி, பரமதாந்யபரத்வங்களாலே பரிஹரிக்கவேண்டித்திறே. அப்படியே, இங்குமந்யோந்யவசநவிரோத முண்டாயதுக்கொரு பரிஹாரம்பண்ணவேண்டாதபடி (உ) "செஞ்சொற்கவிகாள்" என்றும், (ங) "செந்தமிழ்பாடுவார்" என்றும் (ச) "இன்கவிபாடும்பரமகவிகள்" என்றும்படியே, (ரு) "பரவித்தொழும் தொண்டர்" என்றும், (சு) "அரங்கவோ என்றழைக்கும்தொண்டர்" என்றும், பரஸ்பரம்ஶ்லாகித்துக்கொண்டு, (எ) "பேசிற்றேபேசிலல்லால்" என்கிறபடியே, ஒருவர்பேசினதேயெல்லாரும்பேசுமைககண்டரானவாழ்வார்களில்வைத்துக்கொண்டு, (அ) "என்னில்மிகுபுகழார்யாவர்" என்று, ஶேஷிக்கதிஶயகரராகப்பெற்றப்ரீதிப்ரகர்ஷத்தாலே என்னிற்கோட்டில்மிக்க புகழையுடையராரென்றும், ஸர்வாதிகரானவிவருடைய

(க) (உ) தி-வா. கO. எ. க. (ங) பெ - மொ. உ. அ. உ. (ச) தி - வா. எ. கூ. கூ. (ரு) பெ - மொ. எ. க. எ. (சு) பெருமாள் - தி - உ. உ. (எ) திருமாலை - உஉ. (அ) பெ - அ. ச.

மூ—(சுரு) பாஷ்யகாரரிதுகொண்டு ஸூத்ரவாக்யங்க ளொருங்கவிடுவர்.

மூ—(சுசு) அதுக்கு மூலம் விதயஸ்ச வென்கிற பரமாசார்யவசநம்.

(அ) பாஷ்யகாரர் - ஸ்ரீபாஷ்யகாரர், இதுகொண்டு - இப்ரபந்தத்தில் ஸூக்திகளைக்கொண்டு, ஸூத்ரவாக்யங்கள் - ஸூத்ரவாக்ய ஸந்திக்தார்த்தங்களை, ஒருங்க விடுவர் - ஜககண்ட்யம் பண்ணியருளுவர்.

(அ) அதுக்கு மூலம் - ஸ்ரீபாஷ்யகாரரப்படி வொருங்கவிட்டருளுகைக்கடி - விதயஶ்சவென்கிற - விதயஶ்ச வைதிகாஃ, என்கிற, பரமாசார்யவசநம் - பரமாசாரியரான ஸ்ரீஆளவந்தாருடைய திவ்ஸூக்தி.

---

(க) "உரைகளின்மொழி" என்கிறபடியே, ஸ்ரீராமாயணாதிகளையும் ஸ்வவைலக்ஷண்யத்தாலே ஜயிக்கும்படியான உக்திகளைக்கொண்டு வேத தது பப்ரும்ஹணரூப ஶாஸ்த்ரங்களில், ஸம்ஶயிதமானவர்த்தங்களை நிர்ணயிக்கவேண்டும்படியிருக்கையாலே, (உ) "வலங்கொண்டவாயிரம்" என்கிறபடியே, ப்ரதிபாத்யவஸ்துவையுள்ளபடி ப்ரதிபாதிக்கவல்லஸாமர்த்யத்தையுடைத்தான விப்ரபந்தத்துக்குச் சேராதஶாஸ்த்ரங்கள், (ந) "[Telugu-script quotation]" "மங்வர்த்தவிபரீதாது யா ஸ்ம்ருதி ஸ்ஸாநஶக்யதே" என்றுசொல்லப்பட்ட மநுவிபரீதமானஸ்ம்ருதிகள்போலே கழிக்கப்படுமென்கை. *

வியா. (சுரு) இப்படி யிதுகொண்டு ஶாஸ்த்ரார்த்தங்களை நிர்ணயித்தாராரென்று மபேக்ஷயிலே, யருளிச்செய்கிருர். (பாஷ்யகாரரித்யாதி) அதாவது:—பாஷ்யகாரர், ஸ்ரீபாஷ்யம் பண்ணியருளுகிறபோது, ஸூத்ரவாக்யங்களில் ஸந்திக்தமான வர்த்தங்களெல்லா மிப்ரபந்தத்தில்ஸூக்திகளைக்கொண்டு நிர்ணயித்து ஒருங்க விட்டருளுவரென்கை. *

வ்யா. (சுசு) அவர்தா மப்படி செய்தருளுகைக்கி மூலமேதென்னுமபேக்ஷயிலே யருளிச்செய்கிருர். (அதுக்கு மூலமித்யாதி) அதாவது:— பாஷ்யகாரரிப்படி செய்தருளுகைக்கடி (ச) "[Telugu-script quotation]" "விதயஶ்சவைதிகாஸ்த்வதீய கம்பீரமநோநுஸாரிணஃ" என்றும், "[Telugu-script]" "[Telugu-script]" "இதம்குரு" "இதம் மகார்ஷீஃ" என்கிற, ஸ்வதந்த்ரமான வைதிக விதிகளும் அநந்யப்ரயோஜநராயாஶ்ரியித்திருக்கும் த்வதீயருடைய ஐஶ்வர்யாதிகளால் கலக்கவொண்ணுதபடி கம்பீரமான மநஸ்ஸைப் பின்செல்லுமென்றிவ் வாழ்வார் போல்வார் நினைவை, ஶாஸ்த்திரங்கள் தான் பின் செல்லுமதாக பரமசார்யரான ஆளவந்தாருளிச்செய்த வசந மென்கை. *

---

(க) தி-வா. சு. ரு. ந. (உ) ஷெ-ந. அ. கக. (ந) (ச) ஆளஸ்தோ-ம். சக.

மூ—(சுஎ) ஆப்திக்கிவர் சுருதி மார்க்கண்டேயன் பார்த்த னென்கிறவிவை வ்யாஸ மநுப்ரும்ஹவாதிகளை வேதம் சொல்லுமாப்போலே.

மூ—(சுஅ) பாரதகீதைகளின் வேதோபநிஷத்வம்போலே

(அ) ஆப்திக்கு - ஆப்திக்குறுப்பாக, இவர் - இவ்வாழ்வார், ஶ்ருதி - சுருதி, மார்க்கண்டேயன் - மார்க்கண்டேயருஷி, பார்த்தன் - அர்ஜுனன், என்கிறவிவை - என்றுசொல்லுகிறவை, வேதம் - வேதமானது, வ்யாஸ - வ்யாஸபகவானையும், மநு - மநுவையும், ப்ருஹ்மவாதிகளை - ப்ரும்ஹவாதிகளையும், ஸொல்லுமாப்போலே - வ்யாகரித்தாப்போலே.

(அ) பாரத - மஹாபாரதத்தினுடையவும்- கீதைகளின்-ஸ்ரீபகவத்கீதைகளினுடையவும், வேதோபநிஷத்வம்போலே-க்ரம

வ்யா. (சுஎ) இப்படி யபியுக்தரானவர்களிதுகொண்டு ஶாஸ்த்ரார்த்தங்கள் நிர்ணயிக்கும்படி ஸகலவேதோபப்ரும் ஹணங்களிலு மதிப்ரபலமாய், இவ்வளவுமன்றிக்கே கீழ்ச்சொன்னபடியே த்ராவிடமாய்க்கொண்டு வேதஸமமாயிருக்கிற வாப்ததமமான ப்ரபந்தத்திலே ஆப்திக்குறுப்பாக இவர்வேறே சிலவிஷயங்களை யெடுப்பானேன்? என்கிற சங்கையிலே யருளிச்செய்ருர். (ஆப்திக்கித்யாதி) அதாவது:—இதில்சொல்லுகிறவர்த்தங்களிலாப்திக்குறுப்பாக விவர் (க) "உளன்சுடர்மிகுசுருதியுள்" என்றும், (உ) "மார்க்கண்டேயனும்கரியே"என்றும்,(ங)"பார்த்தன் தெளிந்தொழிந்த"என்றும், ஶ்ருதியையும் மார்கண்டேயனையும் பார்த்தனையும் சொல்லுகிறவை, பரமாப்தமானவேதம்,(ச) "స హోవాచవ్యాసఃపారాశర్యః" "ஸஹோவாச வ்யாஸஃபாராஶர்யஃ" என்றும், (ரு) "యద్వైకిఞ్చమనురవదత్తద్భేషజమ్" "யத்வைகிஞ்ச மநுரவதத்தத்பேஷஜம்" என்றும், (சு) "బ్రహ్మవాదినోవదన్తి" "ப்ரும்ஹவாதிநோவதந்தி" என்றும் ஆப்திக்குறுப்பாக வ்யாஸனையும் மநுவையும் ப்ரும்ஹவாதிகளையும் சொல்லுகிறுப்போலே யென்கை. ஆனபின்பு ஆப்த்யதிஶயத்துக் குறுப்பென்றுகருத்து. இத்தால்கீழ் வேதஸாம்யம் சொன்னவிடத்திலே சொல்லவேண்டியிருக்க அநுக்தமாய்க்கிடந்த வித்தையிங்கேயருளிச்செய்தாராயிற்று. *

வ்யா. (சுஅ) ஆனலித்தை யுபப்ரும்ஹணஸமமாகச் சொன்னபக்ஷத்தில், வேதவ்யாக்யையாமதொழிய, (எ) "వేదరూపమిదంకృతం" "வேதருபமிதம்க்ருதம்" (அ) "ద్రావిడీంబ్రహ్మసంహితామ్" "த்ராவிடீம் ப்ரும்ஹஸம்ஹிதாம்" (கூ) "ద్రావిడవేదసూక్తైః" "த்ராவிடவேதஸூக்தைஃ"

(க) தி-வா - க. க. எ. (உ) ஷை-ரு. உ. எ. (ங) ஷை-உ. அ. சு. (ச) ஆரணம் - ச. அ. (ரு) யஜுர்வே-உ. (சு) அஷ்டகம். (எ) (அ) பராங்கு-ம் - ச. (கூ)

மூ. இதுவும் வ்யாக்யையாலும் வேதரஹஸ்யமாம்.

மூ— (சுகூ) உதாத்தாதி பதக்ரம ஜடாவாக்ய பஞ்ஜாதி பாதவ்ருத்தி ப்ரஶ்ந காண்டாஷ்ட காத்யாயாம்ஶ பர்வாத்யலங்காரங் கள் போலே எழுத் தசை சீர் பந்த மடி தொடை

மாக வேதத்வம்போலேயும், உபநிஷத்வம்போலேயும், இதுவும் - இப்ரபந்தமும், வ்யாக்யையாலும் - உபப்ரும் ஹணமாலும், வேதரஹஸ்யமாம் - உபநிஷத்துமாம்.

(அ) உதாத்தாதீத்யாதி (போலே) வேத ததுபப்ரும்ஹணங்க ளுக்கு உதாத்தாதி பர்வாத்யந்தமான வலங்காரங்கள் பலவு முண்டாலுப்போலே, எழுத்து - குற்றெழுத்துமுதலான பதிமூன்றெழுத்தும், அசை-நேரசை நிரையசையென்கிற விரண்டசையும், சீர் - ஆசிரியவுருச்சீர்முதலானமுப்பது சீரும், அடி - குறளடி முதலானவடி ஐந்தும், தொடை - மோனை இயப்புமுதலான நாற்பத்துமூன்றுதொடையும், நிறை நிறை - நேர்நிறை முதலானவையும், ஓசை - செப்ப லோசைமுதலானநாலோசையும், தளை - நேரொன்றுசிறி யத்தளைமுதலானவேழுதளையும், இநம் - பாக்களினினம்

என்றபியுக்தர் சொல்லுகிற வேதத்வம், இதுக்குக் கூடுமோவென்ன வருளிச்செய்கிறார். (பாரதகீதைகளினித்யாதியால்) அதாவது:—வே தோபப்ரும்ஹணமானமஹாபாரதமும், அதில்ஸாரமான ஸ்ரீகீதையும், (க) "వేదానధ్యాపయామాససమహాభారతపఞ్చమాన్" "வேதாநத்யாபயாமாஸ மஹாபாரதபஞ்சமாந்" என்றும் (உ) "భగవద్గీతాసూపనిషత్సు" பகவத் கீதாஸூபநிஷத்ஸு" என்றும், சொல்லுகிறபடியே, வேதமும் உப நிஷத்துமாகிறுப்போலே, இது வேதவ்யாக்யையான உபப்ருஹ்மண மாலும் வேதரஹஸ்யமாமென்கை. வேதரஹஸ்யமாவது:— வேதத் தில் ரஹஸ்ய பாகமான உபநிஷத். கீழ்ச் சாந்தோக்யஸமமாகவிறே சொல்லிற்று. ஆகையாலிந்தபக்ஷத்திலு மிதின்த்ராவிடவேதத்வஹாநி வாராதென்றுகருத்து. *

வ்யா. (சுகூ) ஆகவிப்படி, இப்ரபந்தத்தை வேதஸமமென்பது, ததுபப்ரம்ஹணஸமமென்பதாகாநின்றீர், அவையிரண்டுக்கும் தத்ததநு ரூபமாயிருப்பனசிலவலங்காரங்களுண்டிறே. தாத்ருஶாலங்காரங்களிது க்குமுண்டோவென்ன? ஸம்ஸ்க்ருதமானவவற்றுக்கு ததநுகுணமான வலங்காரங்கள் பலவுண்டாலுப்போலே த்ராவிடவேதமான விதுக்கும், ஏததநுகுணமான அலங்காரங்கள் பலஉண்டென்கிறார். (உதாத்தாதி யென்றுதுடங்கி) அதாவது:—உதாத்தாதியென்கிற ஆதிஶப்தத்தாலே

(க) (உ)

மூ. நிறை நிறை யோசை தளை யிநம் யாப்பு பா த்துறை பண்ணிசை தாளம்பத்து நூறுயிரம்முதலான செய்கோலமிதுக்குமுண்டு.

மூன்றும், யாப்பு - ப்ரபந்தரூபமாயிருக்கையும், பா - வெண்பாமுதலான பாக்களும், பண் - முதிர்ந்த குறிஞ்சிமுதலானபண்ணும், இசை - நிஷாத ர்ஷப காந்தார ஷட்ஜம மத்யம தைவத பஞ்சமங்களாகிற வேழிசையும், தாளம் - கஜகர்ணதிதாளம், பத்து - அத்யாயாதிகள்போல வாந்தர பரிச்சேதங்கள், நூறு - அம்சாதிகள்போலே ப்ரதாநபரிச்சேதங்கள், ஆயிரம் - மஹாபரிச்சேதம், முதலான-இவை முதலானவையும், விபாகவிஶேஷாதிகளுமான, செய்கோலம் - (கவிக்குச்சொல்லுகிற) ஸர்வாலங்காரங்கள், இதுக்குமுண்டு - இப்ரபந்தத்துக்குமுண்டு.

அநுதாத்த ஸ்வரித ப்ரசயங்களைச்சொல்லுகிறது. இந்த உதாத்தாதி ஸ்வரவிஶேஷங்களும், க்ரம ஜடா பஞ்சாதிகளும் ப்ரஶ்நாஷ்டகங்களும் வேதாஸாதாரணம். அம்ஶபர்வாதிகள், உபப்ரும்ஹணஸாதாரணம். பர்வாதியென்கிறவிடத்தில் ஆதிஶப்தத்தாலே ஸ்கந்தாதிகளைச்சொல்லுகிறது. பத வாக்ய பாத வ்ருத்த காண்டாத்யா யங்களுபயஸாதாரணம். ஸ்ரீராமாயணத்தில், ப்ரதாநபரிச்சேதங்களிலும் காண்டவ்யவஹாரமுண்டிறே. கௌஷீதகீமுதலான உபநிஷத்துக்களிலே அத்யாயமென்கிற பரிச்சேதவ்யவஹாரம் கண்டுகொள்வது. ஆகவிப்படி, வேதத்துக்கும் ததுபப்ரும்ஹணங்களுக்கு முண்டானவலங்காரங்களைச் சொல்லி அப்படியே இதுக்குமுண்டானவலங்காரங்களை யெல்லாம் சொல்லுகிறதுமேல். (எழுத்தித்யாதி) எழுத்தாவது ? குற்றெழுத்து நெட்டெழுத்துமுதலான பதிமூன்றெழுத்தும் அசையாவது ? நேரசை நிரையசையாகிறவிரண்டசையும், சீராவது ? ஆசிரிய உருச்சீர் நான்கும் வெண்பாவுருச்சீர்நான்கும் வஞ்சியுருச்சீர்நான்கும் பொதுச்சீர்பதினாறும் பிறவைச்சீரிரண்டும் ஆக, முப்பதுசீரும், பந்தமெனிலும் தளையெனிலுமொக்குமென்று தமிழர்சொல்லுகையாலே பந்தமும் தளையுமொன்றாகையால் இங்கேபந்தமென்றும் மேலே தளையென்றும் சொல்லுமளவில் புநருக்தமாகையாலே இரண்டத்தொன்று வர்ஜிக்கவேணும். அடியாவது ? குறளடி சிந்தடி முதலானவடி ஐந்தும், தொடையாவது ? மோனை இயைபு எதுகை முரண் அளபெடை என்கிறஐந்திலும் அடி மோனைமுதலாக ஒரொன்றிறே எவ்வெட்டுத்தொடையாக நாற்பதும், அந்தாதித்தொடை இரட்டைத்தொடைசெந்தொடை யென்கிறமூன்றுமாக நாற்பத்துமூன்றுதொடையும்,

நிறைநிறையாவது? நேர்நிறை நின்றநிறை நிறைநேர் முதலானவை. ஓசையாவது? செப்பலோசை அகவலோசை முதலானநாலோசையும், தளையாவது? நேரொன்றாசிரியத்தளை நிறையொன்றாசிரியத்தளை முதலானவேழுதளையும், இனமாவது? தாழிசை துறை விருத்தம் என்கிற பாக்களினம்மூன்றும் யாப்பாவது? ப்ரபந்தரூபமாயிருக்கை, பாவாவது? வெண்பா ஆசிரியப்பா முதலானபாக்கள். துறையென்கிற விதுவும், இனத்தின்வகையிலொன்றாகையாலே புநருக்தமாம். அர்த்தாந்தரமுண்டாகில் கண்டுகொள்வது. பண்ணாவது? முதிர்ந்த குறிஞ்சி நட்டபாஷை நட்டராகம் செந்துரி பியந்தை இந்தளம் முதலானவை. இசையாவது? குரல் துத்துங்கை கிளை உழை விளரி தாரமென்கிற பேரால்சொல்லப்படுகிற, நிஷாத ர்ஷப காந்தாரஷட்ஜமத்யமதைவத பஞ்சமங்களாகிற வேழிசையும், தாளமாவது; (க) "గజకర్ణశ్చోరగతిర్మకరధ్వజ తాళకః । లక్ష్మీకీర్తిః పాణిపాదౌ గౌరీపఞ్చాననస్తథా । చతురామ్నాయతాళశ్చ తాళోయంగరుడధ్వజః ॥ సఙ్గీతశాస్త్రవిద్వద్భిరేతే తాళాఃప్రకీర్తితాః" "கஜகர்ணஶ்சோரகதிர்மகரத்வஜதாளகஃ। லக்ஷ்மீகீர்திஃ பாணிபாதௌ கௌரீபஞ்சாநநஸ்ததா॥ சதுராம்நாயதாளஶ்சதாளோயம் கருடத்வஜஃ ஸங்கீதஶாஸ்த்ர வித்வத்பிரேதேதாளாஃப்ரகீர்திதாஃ॥ என்கிறபடியே, கஜகர்ணம் சோரகதி மகரத்வஜம்முதலான தாளங்கள். பத்தாவது? அம்ஶ பர்வாதிகளிலவாந்தர பரிச்சேதங்களான வத்யாயாதிகள்போலே, நூற்றினுடைய அவாந்தரபரிச்சேதங்களாய் இப்பத்தும் இவைபத்தும் என்றுசொல்லப்படுகிற திருவாய்மொழிகள். நூறாவது? ப்ரதாநபரிச்சேதங்களான அம்ஶபர்வாதிகள்போலே (உ) "நூறேசொன்ன" பத்து நூறு என்னும்படி, நூறுநூறுபாட்டாயிருந்துள்ள ப்ரதாநபரிச்சேதங்கள். ஆயிரமாவது? (ங) "చతుర్వింశత్సహస్రాణిశ్లోకానాం" "சதுர்விம்ஶத்ஸஹஸ்ரணிஶ்லோகாநாம்" என்னுமாப்போலே, இருந்துள்ள மஹாபரிச்சேதமுதலானவை யென்கையாலே, முதலிட்டுமூன்றுபத்து உத்தரகண்டவிவரணமாய், நடுவிட்டுமூன்றுபத்து பூர்வகண்ட விவரணமாய், மேலிட்டுமூன்றுபத்துமதுக்குபயோகியான வர்த்தப்ரதிபாதகமாய், மேலில் பத்து பலாவாப்தி கதநமாயிருக்கையாலே, உண்டான விபாகவிசேஷங்களும் விவக்ஷிதங்களென்று தோற்றுகிறது. (முதலான செய்கோலமிதுக்குமுண்டு) என்னது:— (ச) "செய்கோலத்தாயிரம்" என்று, கவிக்குச்சொல்லுகிற வலங்காரங்களால் குறைவற்றவாயிரமென்கையாலே, ஏவமாதிகளான ஸர்வாலங்காரங்களுமிதுக்குமுண்டென்கை. *

(க) (உ) தி-வா. கூ. ச. கக. (ங) ஸ்ரீ-ரா-பா; ச. உ; (ச) தி-வா. ச. க. கக;

மூ—(எ0) அதவாவேத வேத்யந்யாயத்தாலே பரத்வபரம் முது வேதம் வ்யூஹவ்யாப்த்யவதரணங்களில் ஓதினநீதிகேட்

(அ) அதவா - (வேதஸாம்யமும் வேதோபப்ருஂஹணஸாம்யமும்) அன்றிக்கே, வேதவேதந்யாயத்தாலே - வேதவேத்யேபரேபும்ஸிதிஶீலாகார்த்தந்யாயத்தாலே, பரத்வபர - (ஸ்ரீயஃபதியினுடைய பராவஸ்த்தாப்ரதிபாதகமாகையாலே) பரத்வத்திலே நோக்கான, முதுவேதம் - பழையதானவேதம், வ்யூஹ - (ஸங்கர்ஷணாதி) வ்யூஹாவஸ்த்தையிலும், வ்யாப்தி - அந்தர்யாமித்வாவஸ்த்தையிலும், அவதரணங்களில் - (ராமக்ருஷ்ணாதி ரூபேணவவதரித்த) அவஸ்த்தையிலும், (க்ரமமாக) ஓதினநீதி - பாஞ்சராத்ரமாயும், கேட்டமநு - (ஆப்ததமமாகக்கேட்க்கப்

வ்யா. (எ0) ஆகவிதுக்குக்கீழ் ப்ரபந்தத்துக்கு வேதஸாம்யமும், ததுபப்ருஂஹணஸாம்யமு முண்டென்னுமிடத்தை யருளிச்செய்தார். இங்கனன்றிக்கே வேதாவிர்பாவவிஶேஷமாய், இவ்வாழ்வாராலே நிர்மிதமாகப்ரஸித்தமா யிருப்பதொன்றென்னிதுக்கின்னமுமொருயோஜனை பண்ணுகிறார்மேல். (அதவா வேதவேதந்யாயத்தாலே,) என்றுதுடங்கி அதாவது:— கீழ்ச்சொன்ன உபயப்ரகாரமுமன்றிக்கே (க) "వేదవేద్యే పరేపుంసిజాతే దశరథాత్మజే। వేదః ప్రాచేతసాదాసీత్సాక్షాద్రామాయణాత్మనా" "வேதவேத்யேபரேபும்ஸிஜாதே தஶரதாத்மஜே। வேதஃப்ராசேதஸாதாஸீத்ஸாக்ஷாத்ராமாயணாத்மநா" என்று, வேதவேத்யனான பரமபுருஷன் தஶரதாத்மஜனாய் வந்தவதரித்தவிடத்தில் அபௌருஷேயமான வேதமும், ஸ்ரீவால்மீகிபகவான்பக்கலிலே, ஸ்ரீராமாயண ரூபேணவந்தவதரித்ததென்கிற ந்யாயத்தாலே, (உ) "క్షయన్తమస్యరజసఃపరాకే" (ங) "ఆదిత్యవర్ణంతమసఃపరస్తాత్" (ச) "తద్విష్ణోఃపరమంపదంసదాపశ్యన్తిసూరయః" (ரு) "యోవేదనిహితంగుహాయాంపరమేవ్యోమన్" (சு) "సోఽశ్నుతేసర్వాన్కామాన్సహబ్రహ్మణా విపశ్చితా" "க்ஷயந்த மஸ்யரஜஸஃபராகே" "ஆதித்யவர்ணம்தமஸஃபரஸ்தாத்" "தத்விஷ்ணோஃ பரமம்பதம் ஸதாபஶ்யந் திஸூரயஃ" "யோவேதநிஹிதம் குஹாயாம் பரமேவ்யோமந்" "ஸோஶ்நுதேஸர்வாந் காமாந்ஸஹப்ருஂஹணாவிபஶ்சிதா" இத்யாதிகளாலே, பலவிடங்களிலு மீஶ்வரனுடைய பராவஸ்த்தையை ப்ரதிபாதிக்கிகையாலே பரத்வத்தில் நோக்காய் (எ) "முதுவேதம்" என்கிறபடியே, புருஷபுத்திப்ரபவதோஷகந்த மில்லாபடி அநாதித்வேந பழயதாயிருக்கிறவேதமானது (அ) "షాడ్గుణ్యాద్వాసుదేవః పరఇతిచభవాన్ముక్తభోగ్యః" "ஷாட்குண்யாத்வாஸுதேவஃ பரயிதிசபவாந்முக்தபோக்யஃ" என்கிற

(க) ஸ்காந்தே. (உ) யஜுர்வே - உ. உ. கஉ. (ங) புருஷஸூ. (ச) ஷ. (ரு) ஸூபாலோபநிஷத்-சு. (சு) தைத்தரீய-ஆ. க. க. (எ) தி-வா. க. சு. உ. (அ) ஸ்ரீரங்கம். உ. ஙசு.

மூ. டமநுபடுகதைகளாய் ஆகமூர்தியிற் பண்ணியதமிழான
வாறே வேதத்தை த்ராவிடமாகச்செய்தாரென்றும்.

பட்ட) மந்வாதிஸ்ம்ருதியாயும், படுகதைகளாய் - வ்ருத்த கீர்தநாநுரூபமான ஸ்ரீமத்ராமாயண மஹாபாரதாதீதிஹாஸங்களாயுமாவிர்ப்பவித்து, ஆகமூர்த்தியில் - விஶேஷஜ்ஞரீடுபடும்படியாஶ்ரிதஹ்ருதயாநுகுணமாகவர்திக்கு மர்ச்சாவஸ்த்தையில், பண்ணியதமிழ் - (ஆழ்வாராலேப்ரகாசிதமாய் ப்ரமேயம்போலேஸர்வஸுலபமாய் ஸர்வாதிகாரமாகைக்குறுப்பாக) த்ராவிடரூபமாய்க்கொண்டு, ஆனவாறே - ஆவிர்பவித்தவாறே, வேதத்தை - (ஸம்ஸ்க்ருத) வேதத்தை, த்ராவிடமாகச்செய்தார் - (ஆழ்வார்) த்ராவிடமாகவருளிச்செய்தார், என்றும் - இப்படியும் சொல்லுவர்கள்.

---

படியே, ஷாட்குண்ய பரிபூர்ணனாய் முக்தபோக்யனாயிருக்கிற வந்தபரனானவன் (க) "బలాఢ్యా ద్బోధా త్సఙ్కర్షణ స్త్వం హరసి వితనుషే శాస్త్ర మైశ్వర్యవీర్యాత్। ప్రద్యుమ్న స్సర్గ ధర్మౌ నయసిచ భగవఞ్ఛక్తితేజో ఽనిరుద్ధో బిభ్రాణః పాసి తత్త్వం గమయసి చ తథా వ్యూహ్య" "பலாட்யா த்போதாத்ஸங்கர்ஷண ஸ்த்வம் ஹரஸி விதநுஷே ஶாஸ்த்ர மைஶ்வர்யவீர்யாத் ப்ரத்யும்ந ஸ்ஸர்க தர்மௌ நயஸிச பகவந் ஶக்தி தேஜோநிருத்தோ பிப்ராணஃ பாஸி தத்வம் கமயஸிச ததாவ்யூஹ்ய" என்கிறபடியே, ஸர்காதிநிர்வஹணார்த்தமாக வ்யூஹீபவித்த வவஸ்த்தையில், (உ) "సఙ్కర్షణాది సద్భావం భజే లోకహితేప్సయా। క్రమశః ప్రళయోత్పత్తి స్థితిభిః ప్రాణ్యనుగ్రహః॥ ప్రయోజన మథాన్యచ్చ శాస్త్రశాస్త్రార్థ తత్ఫలైః। దశా స్తుర్య సుషుప్త్యాద్యా శ్చతుర్వ్యూహే పిలక్షయేత్" ஸங்கார்ஷணாதிஸத்பாவம் பஜே லோகஹிதேப்ஸயா க்ரமஶஃ ப்ரளயோத்பத்தி ஸ்த்திதிபிஃ ப்ராண்யநுக்ரஹஃ॥ ப்ரயோஜநமதாந்யச்ச ஶாஸ்த்ர ஶாஸ்ஸ்ரார்த்த தத்பலைஃ। தஶா ஸ்துர்ய ஸுஷுப்தாத்யா ஶதுர்வ்யூஹேபிலக்ஷயேத்" இத்யாதிலும், (ங) "తత్రజ్ఞానబల ద్వన్ద్వా ద్రూపం సాఙ్కర్షణం హరేః। ఐశ్వర్యవీర్యసమ్భేదా ద్రూపం ప్రాద్యుమ్న ముచ్యతే॥ శక్తితేజస్సమాకర్షా దానిరుద్ధతను ర్హరేః। ఏతేశక్తిమయావ్యూహా గుణోన్మేష స్యలక్షణాః" "தத்ரஜ்ஞாநபலத்வந்த்வாத்ரூபம்ஸாங்கர்ஷணம்ஹரேஃ। ஐஶ்வர்யவீர்யஸம்பேதாத்ரூபம் ப்ராத்யும்நமுச்யதே। ஶக்திதேஜஸ்ஸமாகர்ஷாதாநிருத்த தநுர்ஹரேஃ। ஏதேஶக்திமயாவ்யூஹாகுணோந் மேஷஸ்யலக்ஷணாஃ" இத்யாதியாலும், அந்தவ்யூஹவிஶேஷ தத்குணரூபக்ருத்யாதிகளை விஸ்தரேண ப்ரதிபாதிக்கைக்காக (ச) "పఞ్చరాత్ర స్యకృత్స్నస్య వక్తానారాయణస్స్వయమ్" "பஞ்சராத்ர ஸ்யக்ருத்ஸ்நஸ்ய

---

(க) ஸ்ரீரங்க-ம். (உ) ஷை (ங) விஷ்வக்ஸேநஸம்ஹிதாயாம். (ச)

வக்தாநாராயணஸ்வயம்'' என்கிறபடியே ஸர்வத்துக்குமாதிவக்தா ஈஶ்வரன்தானாகையாலே (க) "ஓதினாய்நீதி" என்றுசொல்லப்பட்ட, பஞ்சராத்ரமாயாவிர்ப்பவித்து, இப்படி, வ்யூஹீபவித்ததுமாத்ரமன்றிக்கே ஸர்வஶப்தவாச்யனாய், ஸர்வகர்மஸமாராத்யனாய்க்கொண்டு, ஸர்வாந்தர்யாமித்வேந வ்யாபித்துநிற்குமவஸ்த்தையில், (உ) "ఆపో నారాఇతిప్రోక్తా ఆపోవై నరసూనవః। అయనంతస్యతాఃపూర్వం తేన నారాయణ స్స్మృతః" "ஆபோநாராயிதிப்ரோக்தாஆபோவைநரஸூநவ:। அயநம்தஸ்யதா:பூர்வம்தேந நாராயணஸ்ம்ருத:" இத்யாதியாலும், (௩) "ప్రశాసితారం సర్వేషామణీయాంసమణీయసామ్। రుక్మాభంస్వప్నధీగమ్యంవిద్యాత్తుపురుషంపరమ్" "ఏనమేకేవదన్త్యగ్నిం మరుతోఽన్యేప్రజాపతిమ్। ఇన్ద్రమేకేపరేప్రాణమపరేబ్రహ్మశాశ్వతమ్ ॥ ఏషసర్వాణి భూతానిపఞ్చభిర్వ్యాప్తమూర్తిభిః। జన్మవృద్ధిక్షయైర్నిత్యం సంసారయతిచక్రవత్ "" ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாமணீயாம்ஸமணீயஸாம் । ருக்மாபம்ஸ்வப்நதீகம்யம்வித்யாத்துபுருஷம்பரம்" "ஏநமேகேவதந்த்யக்நிம்மருதோந்யேப்ரஜாபதிம்।இந்த்ரமேகேபரே ப்ராணமபரேப்ரும்ஹஶாஶ்வதம்" ॥ ஏஷஸர்வாணிபூதாநி பஞ்சபிர்வ்யாப்தமூர்திபி:॥ ஜந்மவ்ருத்திக்ஷயைர்நித்யம் ஸம்ஸாரயதி சக்ரவத்'' இத்யாதியாலும், (௪) "స ఆత్మా అంగాన్యన్యా దేవతాః" "ஸ ஆத்மா அங்காந்யந்யாதேவதா:" என்கிறபடியே, ஸர்வதேவதாஶரீரதயா ஸர்வகர்மஸமாராத்யனிவனென்றும் தோற்றும்படி பூர்வபாகோபப்ரும்ஹணமாய்க்கொண்டு ஸர்வாந்தர்யாமிதயா வ்யாப்தியை ப்ரதிபாதிக்கைக்காக "கேட்டமனு" என்கிறபடியே, ஆப்தமாகக் கேட்கப்பட்ட மங்வாதிஸ்ம்ருதியாயாவிர்ப்பவிற்று, அப்படி யதீந்த்ரியனாய்நிற்கிறவன், ஸாதுபரித்ராணாதிகளுக்காக ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப்பண்ணினவவஸ்த்தையில், தத்ததவதாரசேஷ்டிதாதிகளை, ப்ரதிபாதிக்கைக்காக (படுகதையும்) என்கிறபடியே, வ்ருத்தகீர்த்தநாநுரூபமான ஸ்ரீராமாயண மஹாபாரதாதீஹாஸங்களாயா விர்ப்பவித்து, அப்படியவதாரமுகேந முன்னின்று ரக்ஷித்தருளுமவன் அவதாரத்தில் பிற்பாடருமிழவாதபடி, (௫) "ஆகமூர்த்தியாய வண்ணமென்கொல்" என்று, விஶேஷஜ்ஞரீடுபடும்படி ஆஶ்ரிதஹ்ருதயாநுகுணமாக (௬) "தமருகந்ததெவ்வுருவம்" இத்யாதிப்படியே, த்ரவ்ய நாமரூபாஸநஶயநாதிகளிலும், தேஶகாலாதிகாரிகளிலும், ஸ்நாந போஜநாதிகளிலும், ஒருநியமமறப்பண்ணிக்கொண்டு, அத்யந்தஸுலப மாயிருக்குமர்ச்சாவதாரமான வவஸ்த்தையில் தத்வைபவப்ரதிபாதநார்த்தமாக (௭) "சடகோபன்பண்ணியதமிழ்" என்னும்படி ப்ரமேயந்தன்னைப்போலே தானும் ஸர்வஸுலபமாய் ஸர்வாதிகாரமாகைக்குறுப்பாக த்ராவிடவேதரூபமாய்க்கொண்டு ஆழ்வார்பக்கலிலேயாவிர் பவிக்கையாலே, ஸம்ஸ்

(க) (உ) வி - பு - க. ச. ரு. (௩) வி - பு. (௪) தை - உ. ச. ரு. க. (ரு) திருசந்த - வி - களஎ. (௬) தி - அ - க. சச. (௭) தி-வா - உ. எ. க௩.

மூ—(எக) மண்ணாடின ஸஹ்யஜலம் தோதவத்திச் சங்கணித்துறையிலே துகில்வண்ணத்தெண்ணீரா யந்தஸ்தத்தைக் காட்டுமாப்போலே அல்பஶ்ருதர்கலக்கினஶ்ருதி நன்ஞானத்துறைசேர்ந்து தெளிவுற்று ஆழ்பொருளையறிவித்தது.

(அ) மண்ணாடின - மணணோடு கூடிகலங்கி, ஸஹ்ய - ஸஹ்ய பர்வதத்தில் நின்றும்வருகிற, ஜலம் - ஜலமானது, தோதவத்திச்செங்கணித்துறையிலே - தோதவத்தித் தூய்மறையோர்துறை, திருச்செங்கணித்துறை, (இவைகளிலே) துகில்வண்ண - தவளவர்ணஜலமாயும், தெண்ணீராய் - ஸ்வச்சமானதீர்த்தமாயும், அந்தஸ்தத்தை - உள்ளிருக்கிறபதார்த்தங்களை, காட்டுமாப்போலே - தர்சிப்பிக்குமாப்போலே, அல்பஶ்ருதர் - கிஞ்சித்ஜ்ஞராானவர், கலக்கின - (அர்தப்ரதாரணங்களாலே) கலக்கின, ஶ்ருதி - வேதம், நன்ஞானத்துறை - யதாவத்ஜ்ஞானத்துக்குத் துறையானவிவ்வாழ்வார்பக்கலிலே, சேர்ந்து - கிட்டி, தெளிவுற்று-தெளிவையடைந்து, ஆழ்பொருளை - அகாதமானரஹஸ்யார்த்தவிஶேஷங்களை, அறிவித்தது - தோற்றிவித்தது.

க்ருதமாயிருக்கிறவேதத்தை த்ராவிடமாகச்செய்தாரென்று சொல்லுவதுமொருப்ரகாரமுண்டென்கை. (க) "எய்தற்கரியமறைகளை ஆயிரமின்தமிழால் செய்தற்குலகில்வரும் சடகோபனை" என்னக்கடவதிறே. இவையெல்லாத் திலுமெல்லாம் சொல்லுமேயாகிலும் ஒன்றுக்கொன்றிலே நோக்காயிருக்கையிறே, இவரிப்படியருளிச்செய்தது. இதுதான், பாத்வபரமென்கையாலே, ஸ்பஷ்டமிறே. *

வ்யா. (எக) ஆனாலபௌருஷேயமான வேதமிப்படி அவஸ்த்தாந்தரத்தை பஜித்ததாகில் கலுஷமாய் அர்த்தப்ரகாஶகத்வம் குன்றாதோ? என்ன, வக்த்ருவிஶேஷத்தாலே யதுமற்றைப்படியாய்த்தென்னுமற்றை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார். (மண்ணாடின வித்யாதியாலே,) அதாவது:— உச்சஸ்த்தலத்திலே நின்றும், வேகத்தோடேவந்து பூமியிலே விழுகையாலே ம்ருண்மிஶ்ரமாய்க்கலங்கி, ஸஹ்யத்தில்நின்றும் வருகிறஜலமானது, (உ) "தோதவத்தித்தூய் மறையோர்துறை" என்றும்; (ங) "பொருநல்சங்கணித்துறை" என்றும் சொல்லுகிற துறைகளிலே வந்தவாறே துறைவாசியாலே, (ச) "துகில்வண்ணத்தூநீர்" என்றும், (ரு) "தெண்ணீர்பொன்னி" என்றும், சொல்லுகிறபடியே, தெளிந்தநீராய், தனக்குள்ளே கிடக்கிற, பதார்த்தங்களைப்ரகாசிப்பிக்குமாப்போலே, (சு) "[Telugu-script quotation]" "பிபேத்

(க) இராமாச - தி - கஅ. (உ) பெரியா-தி-ச. அ. க. (ங) தி - வா-க0. ங. கக. (ச) தி-வா. உ. எ. க. (ரு) பெருமாள் - தி - க, க. க. (சு) பார்ஹஸ்பத்யஸ்மிருதி.

மூ—(எஉ) மேகம்பருகினஸமுத்ராம்புபோலே நூற்கடல்சொல் இவர்வாயனவாய்த்திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே.

---

(அ) மேகம் - மேகமானது, பருகின - பாநம்பண்ணின, ஸமுத்ராம்புபோலே - ஸமுத்ரோதகம்போலே, நூற்கடல் - வேதவித்யாஸமுத்ரத்தினுடைய, சொல் - வசநம், இவர் - இவ்வாழ்வாருடைய, வாயனவாய் - வாக்கதமாய், திருந்தினவாறே, கட்டளைப்பட்டவாறே, ஸர்வதா - (ஒருகால நியமமின்றிக்கே) ஸர்வகாலமும், ஸர்வோபஜீவ்யமாமே - ஸர்வர்க்கு முபஜீவ்யமாமே.

---

யல்பஶ்ருதாத்வேதோமாமயம் ப்ரதரிஷ்யதி" என்கிறபடியே, வேதந்தான்நடுங்கும்படி ததபிப்ராயமறியாமல், ப்ரதிபந்நங்களைச்சொல்லும், அல்பஶ்ருதர் ஒருவாக்யத்துக்கு அர்த்தம்சொல்லப்புக்கால், அது தன்னிலே நின்று, விப்ரதிபத்திபண்ணி த்வைதமென்பார் அத்வைதமென்பார் த்வைதாத்வைதமென்பாராய், இப்படி, கலக்கக்கலங்கின ஶ்ருதியானது, (க) "நன்ஞானத்துறை" என்றிவர்தாமருளிச் செய்தபடியே, யதாஜ்ஞானததுக்குத்துறையான விவ்வாழ்வார் பக்கலிலேவந்துசேர்ந்து (உ) "தெளிவுற்றவாயிரம்" என்கிறபடியே, முன்புற்றக்கலக்கம் தீர்ந்து தெளிவையடைந்து, (ந) "அறிவித்தேனாழ்பொருளை" என்கிறபடியே, அகாதமாய், பரமரஹஸ்யமான வர்த்த விஶேஷங்களையெல்லாம் தோற்றிவித்ததென்கை. *

வ்யா. (எஉ) ஆனல்? வேதத்துக் கத்யயநகால நியதியு மதிகார நியதியு முண்டாயிராநின்றதே, அந்த வேதாவதாரமான விதுக்கவை யின்றிக்கே யொழிவானென்னென்ன வருளிச்செய்குறர்; (மேகம்பருகின) இத்யாதி, அதாவது:— விரஸமாய் ததந்தர்கதஸத்வங்களுக்கொழிய புறம் புள்ளார்க்குபஜீவ்ய மன்றிக்கே பர்வங்களிலொழிய ஸ்பர்சிக்கலாகாதென்கையாலே ஸ்பர்ஶகால நியதியையுமுடைத்தாயிருக்கிற ஸமுத்ரஜலமானது, மேகம்பருகிவர்ஷிக்க, அந்தமேகஸ்பர்ஶத்தாலே தன் விரஸதைபோய், ஸர்வதா ஸர்வஜநபோக்யமாமாப்போலே (ச) "శ్రావణ్యాం ప్రౌష్ఠపద్యాం వాఉపాకృత్యయథావిధి। యుక్తశ్ఛన్దాంస్యధీయీతమాసాన్విప్రోఽర్థ పఞ్చమాన్" (ரு) అత ఊర్ధ్వన్తు ఛన్దాంసి శుక్లేషు నియతఃపఠేత్।వేదాఙ్గానిరహస్యఞ్చకృష్ణపక్షేషుసంపఠేత్" ஶ்ராவண்யாம் ப்ரோஷ்டபத்யாம்வா உபாக்ருத்ய யதாவிதி। யுக்தஶ்சந்தாஸ்யதீயீத மாஸாந் விப்ரோர்த்தபஞ்சமாந் ॥ "அத ஊர்த்வந்து சந்தாம்ஸி ஶுக்லேது நியதঃ படேத், வேதாங்காநி ரஹஸ்யஞ்ச க்ருஷ்ணபக்ஷேஷு ஸம்படேத்" என்கிறபடியே,

---

(க) தி - வி. கந. (உ) தி - வா. எ. ரு. கக. (ந) தி - அ. ச. க. (ச) மநுஸ்ம்ருதி - ச. கரு. (ரு) ஷி - ஷி - கூஅ.

மூ—(எ௩) ம்ருத்கடம்போலன்றே பொற்குடம்.

மூ—(எச), பெரும்புறக்கடலும் ஶ்ருதிஸாகரமும் அலைத்தா

(அ) ம்ருத்கடம் - (ஸ்பர்ஶதோஷமுடைய) ம்ருத்கலஶம் போலன்றே; பொற்குடம் - ஸுவர்ணகலஶம்.

(அ) பெரும்புறக் கடலும் - அபரிச்சேத்யமாய்க்கொண்டெல்லாக்கடலுக்கும் புறம்பாயிருக்கிற ப்ரமேயவஸ்துவாகிற கடலும், ஶ்ருதிஸாகரமும் - (அபரிச்சேத்யமாய் பரத்வபரமான) வேதஸமுத்ரமும், அலைத்து-ஸமுத்ரம் தரங்கிதமாய்க்கொண்டு நிற்குமிடத்தொடொற்றதாய், ஶ்ருத்யாவிர்ப்பாவவிஶேஷமான பாஞ்சராத்ரப்ரதிபாதிதமாய் இர

யயநகாலநியதியையும், த்ரைவர்ணிகாதிகாரதயா அதிகாரநியதியையும் உடைத்தாயிருந்துள்ள (க) "நாற்கடல்" என்கிற வேதவித்யா ஸமுத்ரத்தில் வசநம். (உ) "இவள்வாயனகள் திருந்த" என்கிறபடியே, இவருடைய வாக்கதமாய், கால நியமாதிகாரி நியமநிரபேக்ஷமான வாகாரத்தை யடைந்து கட்டளைப்பட்டவாறே, (௩) "అధ్యేతవ్యం ద్విజశ్రేష్ఠై ర్వేద రూప మిదంకృతమ్। స్త్రీభి శ్శూద్రాదిభి శ్చైవ తేషాం ముక్తిః కరే స్థితా" "அத்யேதவ்யம் த்விஜஶ்ரேஷ்டைர்வேதரூப மிதங்க்ருதம்। ஸ்த்ரீபி ஶ்ஶூத்ரா திபி ஶ்சைவ தேஷாம் முக்திஃ கரே ஸ்திதா" என்கிறபடியே, ஒருகாலநியமமின்றிக்கே ஸர்வகாலமும், ஸர்வர்க்குமுபஜீவ்யமா மிறேயென்கை. *

வ்யா. (எ௩) இன்னமும், வேதகார்யமாயிருக்கச்செய்தே காரணமான வதுபோல் அதிக்ருதாதிகாரமன்றியே, ஸர்வாதிகாரமாகயிருக்கக் குறையில்லையென்னுமிடத்துக்கொரு த்ருஷ்டாந்தவிஶேஷம் தர்சிப்பிக்கிறார். (ம்ருத்கட,மித்யாதி,) அதாவது:— ம்ருத்கடம், தொடுமவர்களே தொடுமித்தனைபோக்கி எல்லார்க்கும் தொடவொண்ணுதாயிருக்க பார்த்திவ மாயிராநிற்கச்செய்தே, பொற்குட மெல்லார்க்கும் ஸ்பர்சிக்கலாயிரானின்ற திறேயென்கை. இத்தால், காரணமானவேதம் அதிக்ருதாதிகாரமாயிருந்தாலும், தத்கார்யமானவிது, ஸம்ஸ்காரவிஶேஷத்தாலே, ஸர்வாதிகாரமாகக் குறையில்லை யென்றதாயிற்று. த்ருஷ்டாந்தத்திற்தோற்றுகிற காரணத் கார்யஶ்லாக்யதாதிகள் தார்ஷ்டாந்திகத்திலும் விவக்ஷிதம். *

வ்யா. (எச) இனிமேலிப்படியிருந்துள்ள திருவாய்மொழியும், ஏதத்பரதிபாத்யமான வர்சாவதாரமுமாகிற ப்ரமாண ப்ரமேய சரமங்கள் இவற்றினுடைய பூர்வாவஸ்த்தைகளி லவகாஹநக்ஷமரல்லாதார்க்கு ஸுலபமாகக் கல்பிதங்களானவையென்று "வேதவேத்யாதி" வாக்யங்களில் சொன்ன ப்ரமாண ப்ரமேயசரமங்களைநிகமிக்கிறார். (பெரும்புறக்க

(க) தி-அ. ௩. ௩உ. (உ) தி-வா-௬. ௫. ௭. (௩)

மூ. ழ்ந்தோடுமிடங்களில் அயோக்யர்க்குச்சமைத்த மடுவுஞ் சாய்கரகமும்மாந மேய சரமம்.

ண்டிரண்டுகுணங்களை ப்ரகாசிப்பிற்றுக்கொண்டு ஸங்கர்ஷணதிருபேண வ்யூஹீபவித்திருக்கு மிடத்திலும்; ஆழ்ந்து - ஸமுத்ரத்தில் நிலைகாணவோண்ணாத படியாழ்ந்திருக்குமிடத்தோடொற்றதாய் ஶ்ருத்யவதரண விஶேஷ ஸ்ம்ருதி ப்ரதிபாதிதமான வந்தர்யாமித்வத்திலும், ஓடுமிடங்களில் - ஸமுத்ரம் கழிகளாய்க்கொண்டோடு மிடத்தோடொற்றதாய் ஶ்ருத்யவதாரவிஶேஷேதிஹாஸ ப்ரதிபாதிதவைபவமானராமக்ருஷ்ணாத்யவதாரங்களிலும், அயோக்யர்க்கு - விடாய்த்திருந்தும் ஜ்ஞாநஶக்த்யாதி ஸங்கோசத்தா லவகாஹநக்ஷமரல்லாதார்க்கு, சமைத்தமடுவும் (தேஶகால விப்ரக்ருஷ்ட மல்லாதபடி) கல்பிக்கப்பட்ட மஹாஹ்ரதமும், சாய்கரகமும்-(விடாய்த்ததன்வாயை யங்ர்ந்திருக்கத்தானே தண்ணீர்வந்துகுதிக்குபடிகல்பிதமான) குண்டிகையும், மானமேயசரமம் - ப்ரமாணபூதவேதாவிர்ப்பாவபரம்பரையினுடைய சரமாவஸ்த்தையான திருவாய்மொழியும், ப்ரமேயபூதஸர்வேஶ்வராவிர்ப்பாவபரம்பரையினுடைய சரமாவஸ்த்தையானவர்ச்சாவதாரமும்.

டல்,) என்று துடங்கி, அதாவது:—எல்லாக்கடலுக்கும் புறம்பாய், தான் பெருத்திருக்கிற கடல்போலே, அபரிச்சேத்யமாயிருக்கிற பரவஸ்துவான ப்ரமேயம், ஸமுத்ரம் தரங்கிதமாயலைந்து நிற்குமிடம்போலே ஜ்ஞாநாதிஷட்குண பரிபூர்ணனை தானவற்றிலே, இவ்விரண்டு குணங்களை ப்ரகடிப்பிற்றுக்கொண்டு ஸங்கர்ஷணதிருபேண வ்யூஹித்திருக்குமிடற்றிலும், ஸமுத்ரத்தில் நிலைகாணவொண்ணாதபடி யாழ்ந்திருக்குமிடம்போலே, (க) "యమాత్మానవేద" "யமாத்மாநவேத" என்றும், (உ) "கட்கிலீ" என்றும், சொல்லுகிறபடியே, அத்ருஶ்யத்வேநாந்தர்யாமியா யிருக்குமிடத்திலும், ஸமுத்ரமானது கழிகளாய்க்கொண்டோடுமிடம்போலே (ங) "మానుషేలోకే జజ్ఞేవిష్ణుస్సనాతనః" "மாநுஷேலோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ்ஸநாதநः" (ச) "యస్యాంజాతోజగన్నాథస్సాక్షాద్విష్ణుస్సనాతనః" (ரு) "నాగపర్యఙ్కముత్సృజ్య హ్యాగతోమధురాంపురీమ్" (சு) "విష్ణుర్మానుషరూపేణచచారవసుధాతలే" "யஸ்யாம்ஜாதோ ஜகநாதஸ்ஸா க்ஷாத்விஷ்ணுஸ்ஸநாதநः "நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ஹ்யாகதோ மதுராம்புரீம்" "விஷ்ணுர்மாநுஷரூபேணசசாரவஸுதாதலே" என்கிறபடியே, கண்காண வந்துதோன்றி, ஞாலத்தூடேநடந்து திரிந்தவவதாரமானமிடத்திலும், தேஶ கரண காலவிப்ரக்ருஷ்டதைகளாலே கிட்டியனுபவிக்க

(க) ப்ரு-உ. ரு. எ. (உ) தி - வா - எ. உ. ங. (ங)

(ச) (ரு) ஹரிவம்ஶம் - கக௩. ௬க. (சு)

மூ— (எரு) வீட்டின்பவின்பப்பாக்களில் த்ரவ்யபாஷா

(அ) வீட்டின்ப - ஆச்ரிதக்ருஹங்களிலவர்க ளுகந்த தொருத்ர வ்யத்தை திருமேனியாகக்கொண்டின்பத்தைவிளைக்கிறவர், ச்சாவதாரத்திலும், இன்பப்பாக்களில் - பகவத்குணசபல விஶேஷஜ்ஞருக்காநந்தாவஹமான திருவாய்மொழியிலும், த்ரவ்ய - (உபாதாந) த்ரவ்யத்தினுடையவும், பாஷா - பா

யோக்யரல்லாதார்க்கு (க) "அதிலே தேங்கினமடுக்கள்போலே" என்கிற படியே தேசாதிவிப்ரகர்ஷத்வகந்தமில்லாதபடி கற்பிக்கப்பட்டவத்யந்த ஸுலபவிஷயம், ப்ரமேயாவிர்பாவபரம்பரையினுடைய சரமாவஸ்தை யான வர்ச்சாவதாரம் (உ)"[Telugu script]" "மதி மந்தாநமாவித்யயே நாஸௌஶ்ருதி ஸாகராத்" என்கிறபடியே, அபரிச் சேத்யமாய் பரத்வபரமானவேதம்,ஸமுத்ரதரங்கித ப்ரதேஶம்போலே, தத்வ்யூஹப்ரதிபாதகதயாவஸ்தாந்தரா பந்நமாய், பஞ்சராத்ரமானவி டத்திலும், ஸமுத்திரத்திலகாத ஸ்த்தலம்போலே ததந்தர்யாமித்வ ப்ர திபாதகதயாவகாஹித் தர்த்ததர்ஶநம் பண்ணவரிதாம்படி மந்வாதி ஸ்ம் ருதிரூபமானவிடத்திலும், ஸமுத்ரம் கழிகளா யோடுமாப்போலே, தத வதார ப்ரதிபாதகதயா விதிஹாஸரூபேண விஸ்த்ருதமாய் நடக்கிற விடத்திலும், ஜ்ஞாந ஶக்த்யாதி ஸங்கோசத்தாலவகாஹித்து விடாய் தீரமாட்டாதாற்கு, விடாய்த்தவன் வாயையங்காந்திருக்க த்தானே தண்ணீர்வந்து குதிக்கும்படி கற்பிதமான சாய்கரகம்போலே, ஆநாயா ஸேநோபஜீவிக்கலாம்படி யத்யந்த ஸுலபமான ஶாஸ்த்ரம், ப்ரமா ணபூதமான வேதத்தினுடைய ஆவிர்பாவ பரம்பராசரமாவஸ்த்தை யான திருவாய்மொழியென்கை. இத்தால், மடுவும் சாய்கரமு மென் கையாலே, ப்ரமாண ,ப்ரமேயங்களினுடைய ஒளியு மெளிமையு மினி மையும் துடக்கமான ஸத்குணஸாஹித்யம் சொல்லப்பட்டது. *

வ்யா. (எரு) இப்படிப்ரமாணப்ரமேயவைபவத்தை ப்ரதிபாதித்த வநந்தரம், ப்ரமாத்ருவைபவத்தை விஸ்தரேணப்ரதிபாதிக்கிறார்மேல் ; அதில், ப்ரதமத்திலே, ப்ரமாண ப்ரமேயங்க ளிப்படி விலக்ஷணமாயி ருந்ததாகிலும், இப்ரமாணவக்தாவானவர் சதுர்த்தவர்ணரன்றோவென் ன? பாகவதோத்தமரானவிவருடைய ஜந்மநிரூபணதோஷத்தை, ப்ர மாண ப்ரமேயங்களில் த்ரவ்ய பாஷா நிரூபணதோஷம், கீழுக்தமன் றிக்கேயிருக்கச்செய்தே, அத்தை ஸித்தவத்கரித்து த்ருஷ்டாந்தமாக் கிக்கொண்டருளிச்செய்கிறார். (வீட்டின்பம்) என்றுதுடங்கி, அதாவ து:— (ந) "கனிவார்வீட்டின்பமே" என்கிறபடியே, பகவத்விஷயமெ ன்றால் உள்கனிந்திருக்குமவர்களுடைய க்ருஹங்களிலே அவர்களுகந்த

(க) ஸ்ரீவசனபூஷணம். க. கள. (உ) வாயுப்ரோக்த்சைவேஷ- (ந) தி-வா. உ. நஞ

மூ. நிருபணஸமம்இன்பமாரியிலாராட்சி.

ஷையினுடையவும், நிருபணஸமம்-நிருபணுபசாரத்தோடு ஸத்ருஶம், இன்பமாரியில் - ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு திருவாய்மொழி முகத்தாலா நந்தத்தை வர்ஷிக்கும் மஹாமேகமான ஆழ்வார்விஷயத்தில், ஆராட்சி உத்பத்திநிருபணம்.

தொரு, த்ரவ்யத்தை திருமேனியாகக்கொண்டிருந்து, இன்பத்தை விளைக்கிறவர்ச்சாரவதாரத்தில், த்ரவ்யநிருபணத்தோடும், (க) "அந்தமிழின்பப்பா" என்கிறபடியே, த்ராவிடரூபமாய் பகவத்குணகணப்ரதிபாதகதயா விஶேஷஜ்ஞர்க்காநந்தாவஹமாயிருக்கிற திருவாய்மொழியில் பாஷாநிருபணத்தோடும் துல்யதோஷம். (௨) "அடியார்க்கின்பமாரி" என்கிறபடியே, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு, திருவாய்மொழிமுகத்தாலே, ஆநந்தத்தைவர்ஷிக்கும் மேகமானவாழ்வார்பக்க லுத்பத்திநிருபணமுமென்கை. (௩) "విష్ణోరర్చావతారేషు లోహభావం కరోతి యః। యో గురౌ మానుషం భావ ముభౌ నరకపాతినౌ" (௪) యో విష్ణో ప్రతిమాకారే లోహ భావ౦ కరోతి యః। గురౌచ మానుషం భావ ముభౌ నరకపాతినౌ" (௫) "అర్చావతారోపాదానం వైష్ణవోత్పత్తిచిన్తనమ్। మాతృయోనిపరీక్షయా స్తుల్యమాహుర్మనీషిణః" (௬) "హరికీర్తిం వినైవాన్యత్బ్రాహ్మణేన నరోత్తమ। భాషాగానం న గాతవ్యం తస్మాత్పాపం త్వయాకృతమ్" (௭) "కిమప్యత్రాభిజాయన్తే యోగిన స్సర్వయోనిషు। ప్రత్యక్షితాత్మనాథానాం నైషాం చిన్త్యం కులాదికమ్" (௮) "శూద్రంవా భగవద్భక్తం నిషాదం శ్వపచం తథా। వీక్షతే జాతిసామాన్యాత్ స యాతి నరకం నరః" "விஷ்ணோ ரர்சவதாரேஷு-லோஹபாவம் கரோதியஃ। யோ குரௌ மாநுஷம் பாவ முபௌ நரகபதிநௌ" "யோ விஷ்ணௌ ப்ரதிமாகாரே லோஹபாவ ங்கரோதி யஃ। குரௌச மாநுஷம் பாவ முபௌ நரகபாதிநௌ" "அர்சாவதா ரோபாதாநம் வைஷ்ணவொத்பத்திசிந்தநம்। மாத்ருயொநிபரீக்ஷாயாஸ்துல்ய மாஹுர்மநீஷிணஃ" "ஹரிகீர்திம் விநைவா ந்யத்ப்ராம்ஹணேந நரோத்தம। பாஷாகாநம் நகாதவ்யம் தஸ்மாத் பாபம் த்வயா க்ருதம்" "கிமப் யத்ராபிஜாயந்தே யோகிந ஸ்ஸர்வயோநிஷு। ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாஞ்சிந்த்யம் குலாதிகம்" "ஶூத்ரம்வா பகவத்பக்தம்நிஷாதம் ஶ்வபசம் ததா। வீக்ஷதே ஜாதிஸாமாந்யாத் ஸ யாதி நரகம் நரஃ" ஏவமாதிஶாஸ்த்ரவசநங்களைஹ்ருதீகரித்திறேயிவரிப்படி யருளிச்செய்தது. (௯) "అవజానన్తి మాం మూఢాః" "அவஜாநந்திமாம்முடாஃ என்கிறபடியே, வாசியரியாமல்வஜ்ஞைதைப்பண்ணும், மூடர்க்கும் (௧௦) "పశ్యన్తి కేచిదనిశం త్వదనన్యభావాః" "பஶ்யந்திகேசிதநிஶம் த்வதநந்யபாவாஃ" என்கிறபடியே, வாசியறிந்தார்க்கும் அநந்யபாவற்கும் மூன்றெடமொக்குமிறே. *

(க) பெருமாள் - தி. க. ௪. (௨) தி-வா. ௪. ௫. ௧௦. (௩) ப்ரும்ஹாண்டபுராணே. (௪) (௫) (௬) மாத்ஸ்யே. (௭) (௮)
(௯) ஸ்ரீ - கீ - ௯. ௧௧. (௧௦) ஸ்ரீஆளவந்தார் - ம் - ௧௫.

மூ—(எசு) பேச்சுபார்க்கில் கள்ளப்பொய்ந்நூல்களும் க்ராஹ்யங்கள்
பிறவிபார்க்கில்அஞ்ஜாமோத்துமாறுமூன்றுங் கழிப்பனும்.

(அ) பேச்சு - த்ராவிட பாஷையானது, பார்க்கில் - (நிஷேதவிஷயமென்று) விசாரிக்கில், கள்ளப்பொய்ந்நூல்களும் - ப்ரதாரகங்களா யஸத்யங்களான பாஹ்யஶாஸ்த்ராதிகளும், க்ராஹ்யங்கள் - (ஸம்ஸ்க்ருதபாஷையானவாகாரத்தாலே) உபாதேயங்களாம், பிறவி - (வக்த்ரு) ஜந்மம், பார்க்கில் - (நிகர்ஷதயாத்யாஜ்யமென்றுவிடப்) பார்க்கில், அஞ்சாமோத்தும் - (பஞ்சமவேதமான) ஸ்ரீ மஹாபாரதமும், ஆறு மூன்றும் - ஷடகத்ரயர்த்மகமான ஸ்ரீகீதோபநிஷத்தும், கழிப்பனும் - கழிக்கப்படும்.

வ்யா. (எசு) இங்கனன்றிக்கே, பேச்சிலும் இதுசொன்னவர் பிறவியிலும் தாழ்வுபார்த்து, இப்ரபந்தத்தை யிகழுமவர்களுக்கு அநிஷ்டப்ரஸஞ்ஜநம் பண்ணுகிறார். (பேச்சு,) இத்யாதிவாக்ய த்வயத்தாலே; அதாவது:—ஸம்ஸ்க்ருதமாகவுமாம், த்ராவிடமாகவுமாம், பகவத்பரமானது உபாதேயம், அந்யபரமானது த்யாஜ்யம், என்றுகொள்ளாதே பாஷாமாத்ராவதியாக விதி நிஷேதங்களை அங்கீகரித்து த்ராவிடபாஷையாகையாலே, இது த்யாஜ்யமென்னப்பார்க்கில் (க) "வெள்ளியார் பிண்டியார் போதியாரென்றிவரோதுகின்ற கள்ளநூல்" என்றும், (உ) "பொய்ந்நூலை மெய்ந்நூலென்றென்றுமோதி" என்றும் சொல்லுகிற பாஹ்யஶாஸ்த்ராதிகளும், ஸம்ஸ்க்ருதபாஷையான வாகாரத்தாலே உபாதேயமாகவேணும். சதுர்த்த வர்ணோத்பவரென்று வக்தாவானவர் பிறவியைப்பார்த்து இத்தை யிகழுமளவில், மத்ஸ்யகந்தாஸுதனை வ்யாஸன் சொன்ன பஞ்சமவேதமான மஹாபாரதமும், கோபஜந்மாவான க்ருஷ்ணன் சொன்ன ஷட்கத்ரயாத்மகமான கீதோபநிஷத்தும் த்யாஜ்யமாகவேணுமென்கை. இத்தால் பாஷாமாத்ரத்தையும் வக்த்ருஜந்மத்தையும் பார்த்து இப்ரபந்தத்தை யிகழுமளவில் வரும்விரோதம் காட்டப்பட்டது. * அதவா:—பாஷா வக்த்ருஜந்மாதிகள் நிரூபிக்கலாகாதென்று கீழ்ச்சொன்னபடி யன்றிக்கே, ஸம்ஸ்க்ருதபாஷையாயுள்ளதும், ஜந்மகௌரவமுடையார் சொல்லு மதுவுமே உபாதேயமென்று கொள்ளுமவர்களுக்கு அநிஷ்ட ப்ரஸஞ்ஜநம் பண்ணுகிறார். (பேச்சு பார்க்கிலித்யாதி,) வாக்யத்வயத்தாலே, அதாவது:—பகவத்பரத்வ அந்யபரத்வங்களை பரிக்ராஹ்யத்வ பரித்யாஜ்யத்வங்களுக்கு ஹேதுவாக்காதே ஸம்ஸ்க்ருதபாஷையானது உபாதேயமென்னு பேச்சினுடைய கௌரவமாத்ரத்தைப் பார்க்கில், கள்ளநூல் பொய்ந்நூல், என்று கழிக்கப்பட்ட பாஹ்ய ஶாஸ்த்ரரதிகளும் பரிக்ராஹ்யங்களாம்., யதாஜ்ஞா

(க) பெ-மொ. க. எ. க. (உ) ஷை உ - ரு. உ;

மூ—(எஎ) க்ருஷ்ண க்ருஷ்ணத்வைபாயநோத்பத்திகள் போலன்றே க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வஜந்மம்.

மூ—(எஅ) பெற்றும் பேறிழந்தும் கன்னிகையானவளும் எல்லாம்

(அ) க்ருஷ்ண - (ஓரிடத்திற்பிறந்து மற்றோரிடத்தில் வளர்ந்த) கண்ணனுடையவும், க்ருஷ்ணத்வைபாயந - (கந்யாஸுதனை) வ்யாஸனுடையவும், உத்பத்திபோலன்றே - பிறவிபோலன்றே, க்ருஷ்ணத்ருஷ்டணாதத்வ - க்ருஷ்ணனிடத்துண்டான ஆவலொரு வடிவுகொண்டாப்போலே யிருக்கிற இவ்வாழ்வாருடைய, ஜந்மம் - திருவவதாரம்.

(அ) பெற்றும் - க்ருஷ்ணனைப் பிள்ளையாகப் பெற்றிருக்கச்செய்தேயும், பேற் - (க்ருஷ்ணனுடைய பால்யசேஷ்டாரஸாநுபவமாகிற) புருஷார்த்தத்தை, இழந்தும்- (கைப்பட்டவதை) இழந்தவளான (தேவகிதேவியும்) கன்னிகையானவளும் - (வ்யாஸனைமகனாகவடைந்து மவனாலுள்ள ரஸமொ

ஙர் சொன்னது உபாதேயம், அயதாஜ்ஞாநர் சொன்னது த்யாஜ்யமென்றுகொள்ளாதே, ஜந்ம கௌரவமுடையார் சொன்னதே உபாதேயம், அல்லாதார் சொன்னது த்யாஜ்யமென்று பிறவி மாத்ரத்தையே பார்க்கில், மத்ஸ்யகந்தா ஸுதனை வ்யாஸன்சொன்ன பஞ்சமவேதமும், கோபஜந்மாவான க்ருஷ்ணன் சொன்ன கீதோபநிஷத்தும், த்யாஜ்யமாகவேணுமென்கை. இத்தால் பேச்சில் கௌரவமும், சொல்லுமவர்கள் பிறவியில் கௌரவமும், ப்ரபந்தோபா தேயத்வ ஹேதுவாகச்சொல்லுமளவில் வரு மநிஷ்டம் காட்டப்பட்டது. *

வ்யா. (எஎ) இவ்வாழ்வாருடைய உத்பத்தியை, வ்யாஸ க்ருஷ்ணோத்பத்தி ஸமமாக வருளிச்செய்தார் கீழ்; அவர்களி லிவருக்குண்டான வ்யாவ்ருத்தியை அருளிச்செய்கிறார் மேல்; (கிருஷ்ணேத்யாதியால்) அதாவது :— (ஒருத்தி மகனாய்பிறந்தோரிரவிலொருத்திமகனை) க்ருஷ்ணனுடையவும்; கந்யாஸுதனை வ்யாஸனுடையவும், உத்பத்திபோலன்றே; (க) "கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்றவராய், (உ) "க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வமிவோதிதம்" என்கிறபடியே, க்ருஷ்ணவிஷயத்ருஷ்ணை தானொருவடிவுகொண்டாப்போலே யிருக்கிற வாழ்வாருடைய வவதாரமென்கை. *

வ்யா. (எஅ) அதெங்ஙனே? என்னுமபேக்ஷையிலே, பலஹேதுக்களாலுமிவர் ஜந்மவ்யாவ்ருத்தியை ப்ரகாசிப்பிக்கிறார்மேல், அதில் ப்ரதமத்திலே அவர்களைப்பெற்றவர்கள் இவரைப் பெற்றவர்களுக்கு ஸத்ருஸரல்லாமையை யிசைவிக்கிறார் (பெற்றுமென்றுதுடங்கி) அதா

(க) தி - வி. ருஎ. (உ) பராங்கு - ம். உ;

மூ. பெற்றாளாயுந்தத்துக்கொண்டாளென்பர் நின்றாரென்னுமவளும்நெடுங்காலமும்நங்கைமீரென்னுமிவருக்கு நேரன்றே.

ன்று மநுபவிக்கப்பெறாமலிழந்து) கன்னிகையாயிருக்கையையடைந்த (மஸ்யகந்தியும்) எல்லாம் - (கண்ணனுடைய பால்ய திருவிளையாட்டுகளை) யெல்லாம், பெற்றாளாயும்- (தேவகி மத்ஸ்கந்திகளைப்போல் துறவாமல்) அநுபவித்தவளாயிருந்தும், தத்துக்கொண்டாள் - (க்ருஷ்ணனைப் பிள்ளையாக) வளர்த்துக்கொண்டாள், என்பர் நின்றார் - என்று சொல்லாநின்றார்கள், என்னுமவளும் - என்னுமவளான யசோதையும், நெடுங்காலமும் - (ப்ரீத்யதிசயத்தாலே) பஹுகாலம் க்ருஷ்ணன் திருவடியை யாப்ரயித்துப் பெற்றவர்களாகவும்,) நங்கைமீர் - பரிபூர்ணைகளே! (நீங்களுமொருபெண்பிள்ளையைப் பெற்றுவளர்த்தி கோளே,இவள் பட்டது பட்டாருண்டோ? உன்பெண்பிள்ளைக்கு வாசியென்னென்ன? என் பெண்பிள்ளைபடி யென்றால் சொல்லவாயோ யிருக்கிறது) என்றும் - தாயானதமக்கும் சொலலப்போகாததான அப்படிப்பட்ட திவ்யசேஷ்டித ரஸாநுபவம் செய்து வந்தவருக்கு மிப்படி முக்தவசநாதிகளைச் சொல்லுமவளா யிருந்துள்ள, இவர்க்கு - (இவ்வாழ்வாருடைய) தாய்மார்க்கு, நேரன்றே - (தேவகீ யசோதை மத்ஸ்யகந்தி முதலானார்) நிகராவரோ?

வது:—(க) "திருவின்வடிவொக்கும் தேவகிபெற்ற" என்கிறபடியே, க்ருஷ்ணனைப் பிள்ளையாகப் பெற்றிருக்கச்செய்தேயும், அவனுடைய பால்யரஸமொன்றையு மநுபவிக்கப் பெறாமையாலே, (உ) "திருவிலேனொன்றும் பெற்றிலேன்" என்றும் பேறிழந்தவளான தேவகியும் (ந) "ద్వీపేబదరికామిశ్రో బాదరాయణమచ్యుతమ్। పరాశరాత్సత్యవతీ పుత్రంలేభేపరన్తపమ్" "த்வீபேபதரிகாமிஶ்ரோ பாதராயணமச்யுதம்। பராஶராத்ஸத்யவதீ புத்ரம்லேபேபரந்தபம்" என்கிறபடியே, வ்யாஸனைப் பிள்ளையாகப்பெற்றிருக்கச்செய்தேயும், அவனுளுள்ளரஸமொன்று மநுபவிக்கப் பெறாதபடி, (ச) "పునఃకన్యాభవిష్యతి" "புநஃ கந்யாபவிஷ்யதி" என்ற பராசர வசநத்தாலே, மீளவும், கன்னிகையான மத்ஸ்யகந்தியும் (ரு) "எல்லாம் தெய்வநங்கையசோதைபெற்றாளே" என்னும்படி க்ருஷ்ணனுடைய பால்யசேஷ்டி தாதிகளெல்லாம், அநுபவிக்கப்பெற்றிருக்கச்

(க) பெரியா-தி. க. கஎ. (உ) பெருமாள் - தி - எ, ரு. (ந)
(ச)

மூ—(எ௯) மீனநவநீதங்கள் கந்திக்குமிடமும் வெறிகொள் துழாய் கமழுமிடமும் தன்னிலொக்குமோ.

(அ) மீன நவநீதங்கள் - மீனும் வெண்ணெயும், கந்திக்கும்-நாறுகிற, இடமும் - (வ்யாஸ க்ருஷ்ணோத்பத்தி) ஸ்தலமும் வெறிகொள்துழாய் - பரிமளப்ரசுரமான திருத்துழாய், கமழும் - மணம்வீசாநின்றுள்ள-இடமும் (ஆழ்வார் திருவவதரித்த) இடமும் - தன்னிலொக்குமோ? தன்னில்தான் ஸத்ருஶமோ?

செய்தேயும், (க) "தத்துக்கொண்டாள்கொலோ தானேபெற்றாள்கொலோ" என்றும் (உ) "இம்மாயம்வல்லபிள்ளை நம்பிஉன்னை யென்மகனேயென்பர் நின்றார்" என்னுமவனுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களடியாக தானும் பிறரும் சங்கிக்கும்படியான மாத்ருத்வத்தையுடைய யசோதையும், (௩) "நெடுங்காலமுங் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற" என்று, ஸக்ருதாஶ்ரயண மமைந்திருக்க ஆதராதிஶயத்தாலே சிரகாலமாஶ்ரித ஸுலபனை க்ருஷ்ணன் திருவடிகளையு மாஶ்ரயித்து, இவரைப்பெற்றவர்களாகவும் (௪) "நங்கைமீர் நீருமோர்பெண்பெற்று நல்கினீர்" என்றுதுடங்கி, பூர்ணைகளான நீங்களுமொரு பெண்பிள்ளை பெற்றுவளர்த்தி கோளிறே. பகவல்லாஞ்சநாதிகளை திவாராத்ரவிபாகமற வாய்புலத்தா நின்றுள்ள சபலையான வென்பிள்ளைபடியை யெங்கனே சொல்லுகேனென்று வாசாமகோசரமான விவருடைய முக்தவசநாதிகளை அநுபவித்தவராகவும்சொன்ன விவரைப்பெற்றவர்களுக்கு ஸத்ருஶரன்றென்கை. *

வ்யா. (எ௯) இனி மூவருடையவு முத்பத்திஸ்த்தலகந்த விஶேஷங்களைப்பார்த்தால் மற்றயவை யிரண்டிலுமிவருடைய உத்பத்திஸ்த்தலத்துக்குண்டான வைபவத்தை மூதலிக்கிறார் (மீனேத்யாதியால்) அதாவது :— மீன்வெறிநாறுகிற வ்யாஸோத்பத்திஸ்தலமும் வெண்ணெமுடைநாறுகிற க்ருஷ்ணோத்பத்தி ஸ்தலமும் (௫) "வெறிகொள் துழாய்மலர் நாறும் வினையுடையாட்டியேன்பெற்ற" என்றும் (௬) "இவளந்தண்டுழாய்க் கமழ்தல்" என்றும், பகவத் ஸம்பந்த ப்ரகாஶகமான திருத்துழாய் மணம் நாறுகிற வாழ்வார் திருவவதரித்த ஸ்தலத்துக்கு ஸத்ருஶமோவென்னபடி. ப்ராக்ருதவிஷய ஸம்ஸர்கஜமான ஹேயகந்தங்களிறே யவை. அப்ராக்ருத விஷயஸம்ஸர்கஜமான உபாதேயகந்தமிறேயிது. இத்தால், தாத்ருஶஸ்த்தலங்களிலுண்டானவவர்களுடைய உத்பத்தியில், ஈத்ருஶஸ்தலத்திலுண்டான விவருடைய உற்பத்தியினேற்றம் காட்டப்பட்டது. *

(க) பெரியா - தி - உ. க. எ. (உ) ஷை - ௩. க. ௩. (௩) தி - வி - ௩எ. (௪) தி - வா - ௪. ௯. உ. (௫) ஷை - ௪. ௪. ௩. (௬) ஷை - அ. ௯. க0.

மூ. வெறிதேயென்றறுதி யிட்டபின்

என்றறுதியிட்டபின் - என்று நிச்சயித்தபின்பு;

என்றிதுவந்தவழியின்னதென்று யிதுக்குச்சொல்லலாவதொரு ஹேது வில்லை. பேறு மிகவுமினிதாக யிராநிற்குமென்றும் (க) "வெறுதேயருள் செய்வர் செய்வார்கட்கு" என்று, தான்செய்யநினைந்தவர்களுக்கு நிர்ஹேதுகமாக க்ருபைபண்ணுவரென்றும், இப்படி விஷயீகாரம் நிர்ஹேதுகமென்று தாமேயறுதியிட்ட பின்பு (உ) "தனியேன்வாழ்முதலே" என்று, ஸம்ஸாரத்திலொருதுணை யன்றிக்கேயிருக்கிற வென்னுடைய வநுபவத்துக்கு ப்ரதமஸுக்ருதமானவனே! என்று தம்முடைய பேற்றுக்கு மூலஸுக்ருதமாக விவரருளிச்செய்தவவன் தன்னையொழிய வேறுகற்பிக்கலாவதொரு ஸுக்ருதமில்லையென்கை. 'அன்றிக்கே' யாத்ருச்சிகாதிகளுண்டாகில் தோன்றும், என்றஜ்ஞாதஸுக்ருதமு மிவர்க்கில்லை யென்னவாறேயிப்படி நேராகக்கழிக்கவேணுமோ, அநாதிகாலமங்கீகரியாதவனின்றுசெய்கையாலும் அல்லாதவாத்மாக்களெல்லாம் கிடக்க இவரையிப்படி விஷயீகரிக்கையாலும் இதுக்குடலானதே தேனுமொருஸுக்ருதமிவர்க்குண்டாகக்கூடுமென்று கார்யத்தையிட்டநுமித்தாகிலும் கற்பிக்கலாவ தொன்றில்லையோவென்ன? அப்படி கற்பிக்கலாவதில்லையென்னுமிடத்தை விஸ்தரேண ப்ரதிபாதிக்கிறரென்று ஸங்கதியாக்கி செய்தநன்றிதேடிக்காணாதே, என்றுதுடங்கி, வெறிதேயென்றறுதிட்டபின் என்றுமளவுமேகவாக்யமாகக்கொண்டு இவ்வாழ்வார் கருத்தைச் சொல்லிக்கொண்டு செல்லுகிறதாய் (ங) "எந்நன்றி செய்தேனு" என்று பகவதங்கீகாரத்துக்குடலாக தாம்செய்த ஸுக்ருதமுண்டோவென்று தேடிக்காணாதே அங்கீகாரத்துக்குடலானதில்லையாகில் அத்வேஷாபிமுக்யங்களுக்குத்தக்கது தானுண்டோ வென்னில்? அவையுமவனாலே வந்தது ஸத்கர்மத்தால்வந்ததல்ல (ச) "எண்ணிலும்வரும்"என்றபரிகணனைதானுண்டோவென்னில் ? அதுக்கெண்டானுமில்லை (ரு) "வைத்தேன்மதியால்" (சு) "யானுமென்னெஞ்சுமிசைந்தொழிந்தோம்" என்கிறவநுமதீச்சைகள்தானுண்டோவென்னில்? அவையுமவனுண்டாக்கினது. (எ) "மாதவனென்றதேகொண்டு" (அ) "திருமாலிருஞ்சோலை மலையென்றேனென்ன" இத்யாதிகளாலீச்வரன்வலியவேறிடுகிறவை வ்யாவ்ருத்யுக்த்யாதிகள். இவன் நடுவேவந்தடியனென்றுபிடித்து ப்ரமாண ஸாக்ஷிகள்காட்டி அவைகார்யகரமாகாதவளவில் வடிவழகைக்காட்டி இப்படி இவ்வஸ்துவை ஸ்வாதீநமாக்கிக்கொள்ளும்படி யிவனை நிவாரகரற்றக்ருபைசூழ்ந்தது. இவ்விஷயீகாரத்துக்கு (கூ) "வரவாறென்றில்லை" (க0) "வெறிதேயருள் செய்த" இத்தனையென்றிவர்தாமே

(க) தி-வா. அ. எ. அ. (உ) ஷி உ. ங. ரு. (ங) ஷி க0. சு. அ. (ச) ஷி. க. க0. உ. (ரு) ஷி அ. எ. க0. (சு) பெ - அ. உசு. (எ) தி - வா. உ. எ. ங. (அ) ஷி. க0. அ. க. (கூ) பெ. அ. ருசு. (க0) தி-வா. அ. எ. அ.

மூ. வாழ்முதலென்கிற ஸுக்ருதமொழியக்கற்பிக்கலாவதில்லை.

மூ—(உஅ) நலமருளினனென்கொலென்றுமூலகூடம் அருளால் மன்னுமவர்க்கன்புக்கடியானதுவேயடிசேருகைக்குஸாதநம்.

வாழ்முதலென்கிற - தம்முடைய பேற்றுக்கு மூலஸுக்ருதமாக தம்மாலேசொல்லப்பட்ட, ஸுக்ருதமொழிய-ஸாக்ஷாத்தர்மமான வீஶ்வரனொழிய, கற்பிக்கலாவதில்லை-வேறுகற்பிக்கலாவதொரு ஸுக்ருதமுமில்லை.

(அ) நலம் - பக்தியை, அருளினன் - க்ருபைசெய்தானென்று பக்ரமித்து, என்கொலென்று - என்கொலெம்மானென்றுமளவாக ஆமூலகூடம் - உபக்ரமமேபிடித்துபஸம்ஹாரத்தளவும், அருளால் - (நிர்ஹேதுக) க்ருபையாலே, மன்னுமவர்க்கு - தரிக்கவேண்டும் ஸ்வபாவரானவிவ்வாழ்வார்க்கு, அன்புக்கு - விளைந்தபக்திக்கு, அடியானதுவே- மூலமானதுவே, அடிசேருகைக்கு - திருவடிசேருகையாகிற ப்ராப்திக்கும், ஸாதநம் - உபாயம்.

யறுதியிட்டபின்பு (க) "தனியேன் வாழ்முதலே" என்று, தம் பேற்றுக்கு மூலஸுக்ருதமாக விவரருளிச்செய்த வீஶ்வரன் தன்னையொழிய இவர்க்கு வேறுகற்பிக்கலாவதொரு ஸுக்ருதமொன்றில்லையென்று இங்ஙனேயோஜிக்கவுமாம். இந்த யோஜனை யிதின்பட்டோலையான க்ரந்தத்திலிவரருளிச்செய்த மர்யாதைக்குச்சேரும். ஆகவிதுக்குக்கீழிவர் ப்ரபாவத்தையும் அதுக்கடிபகவந்நிர்ஹேதுக கடாக்ஷமென்னுமத்தையும் அத்தாலிவர்க்குண்டான பக்தியின் வ்யாவ்ருத்தியையும் அதுதான் கர்மஜ்ஞானஸாத்யை யல்லாமையும் இவரையீஶ்வரன் அங்கீகரித்ததுக்கு கேவல க்ருபையொழிய ஹேத்வந்தரமில்லாமையையும் சொல்லித்தாயிற்று. *

வ்யா. (உஅ) இப்படி நிர்ஹேதுகவிஷயீகாரபாத்ர பூதரான விவருடையபக்தி பகவத்க்ருபைகலப்தையாயிருந்ததாகிலும் உபாஸகனுக்கு கர்மஜ்ஞாநஜநிதையான பக்தி யோபாதி இவர்க்கு ப்ராப்திஸாதநமிதுவோவென்னவருளிச்செய்கிறார்மேல் (நலமருளினன்) என்றுதுடங்கி, அதாவது:— (உ) "மயர்வறமதிநலமருளினன்" என்று, தம்முடைய பக்த்யுத்பத்திகாரணம் கேவலபகவத்க்ருபையென்றுபக்ரமித்து (ங) "என்கொலெம்மான் திருவருள்" என்னுமளவாக ஜ்ஞாநதசையோடு வரணதசையோடு ப்ராப்திதசையோடு வாசியற (ஆமூலகூடம்) (ச) "மாலருளால்மன்னுகுருகூர்ச்சடகோபன்" என்று, பிடிதோறும் நெய்யொழியச்செல்லாத ஸுகுமாரரைப்போலே நின்றநிலைதோறுமவனருள் கொண்டேதரிக்கவேண்டும் ஸ்வபாவரான விவர்க்கு (ரு) "ஆராவன்பிலடியேனுன்னடிசேர்வண்ணமருளாய்" என்கையாலே, (சு) "நலமருளினன்" என்று, பக்திகாரணமாகச்சொன்ன க்ருபையே அடி சேருகையாகிற ப்ராப்திக்கும் ஸாதநமென்றபடி. *

(க) தி-வா. உ. ங. ரு. (உ) தி-வா. க. க. க. (ங) ஷை. ௪0. எ. ங. (ச) ஷை. க. ரு. கக. (ரு)　　(சு) தி-வா. க. க. க.

மூ—(உகூ) புணர்தொறுமென்னக்கலந்து பிரிந்து ஜ்ஞாநபக்திகளை வளர்த்தது கனங்குழையிடக்காது பெருக்குதலும் மாஸோபவாஸி போஜநப் புறப்பூச்சும்போலே ஆற்ற நல்ல

(அ) புணர்தொறுமென்ன - தடமுலை புணர்தோறு மித்யாதியில் ப்ரகாரமாக வபிநிவேஶம் பெருகி வராநின்றதென்று சொல்லும் படியாக, கலந்து - ஸம்ஶ்லேஷித்து, பிரிந்து - விஶ்லேஷித்து, ஜ்ஞாந பக்திகளை (க்ரமமாக) ஜ்ஞாநத்தையும் பக்தியையும், வளர்த்தது - அபிவ்ருத்தி பண்ணிவித்தது, கனங்குழையிட - அநர்க்யாபரண மிடுகைக் கிடமாம்படி, காதுபெருக்குதலும் - காதுபெருக்குமாப்போலவும், மாஸோபவாஸி - மாஸமுபவஸித்தவனுக்கு, போஜநப்புறப்பூச்சும் போலே - சோற்றையறைத்துடம்பிலே பூசுமாப்போலவும், ஆற்றநல்ல- ஸாத்மிக்க ஸாத்மிக்க தன்குண சேஷ்டி தங்களைக்காட்டி யடிமை கொண்டவனென்னும்படி,

வ்யா. (உகூ) இப்படி ப்ராப்தி ஸாதநம் க்ருபையேயாகில் (க) "இன்னின்ற நீர்மை யினியாமுறுமை" என்றபோதே இவரபேக்ஷிதம் செய்து விடலாயிருக்க இவரைவைத்து ஸ்வஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களாலே ஜ்ஞாநபக்திகளை வளர்த்ததேதுக்காகவென்னு மாகாண்க்ஷையிலேயருளிச்செய்கிறார். (புணர்தொறுமென்றுதுடங்கி) அதாவது:— (உ) "புணர்தொறும் புணர்ச்சிக்காரா" இத்யாதியாலே ஸம்ஶ்லேஷிக்கும் தோறும் ஸம்ஶ்லேஷத்துக்குத்தக்கவளவல்லாதஸுகஸாகரமானது அபரிச்சேத்யமான வாகாசத்தையுங்கடந்தவ்வருகுபட்டு விபூதித்வயத்தையும் விளாக்கொலை கொள்ளவல்லவரவையும் முழுத்தும்படிபெருகி இப்படிபெருகின விது விஶ்லேஷப்ரஸங்கத்திலே பெருக்காறுவற்றியடிச்சுடுமாப்போலே ஸ்வப்நகல்பமென்னலாம்படி வற்றிப்போய் அத்தசையிலே ப்ராணஸ்தாநமான ஹ்ருதயத்திலே பூர்வஸம்ஶ்லேஷத்தாலுண்டான புடைதோறுமுள்ளே புகுந்து ஆஶ்ரயமான வாத்மாவுக்குப்பொறுக்க வொண்ணுதபடி அபிநிவேஶம் பெருகிவாராநின்றதென்று சொல்லும்படியாக கலப்பது பிரிவதாய், கலவியாலேஜ்ஞாநத்தையும் பிறிவாலேபக்தியையும் வளர்த்தது, கனத்தபணியிடுகைக்கிடமாம்படி நூலிட்டுத்திரியிட்டு * குசும்பையிட்டு கொப்பிட்டு காதுபெறுக்குமாப்போலவும், மாஸோபவாஸிக்கு ப்ரதமத்திலே போஜநத்தையிடில் பொறுதென்று சோற்றையரைத்துடம்பிலேபூசி பொரிக்கஞ்சிகொடுத்து பொரிக்கூழ்கொடுத்து ஒழுக்கத்திலே போஜநம்பொறுப்பிக்கு மாப்போலவும் (ந) "ஆற்றநல்லவகைகாட்டு மெம்மான்" என்றெனக்குப் பொறுக்கப்பொறுக்க தன்குணசேஷ்டி தாதிகளைக்காட்டி அவ்வழியாலே யென்னை யடிமை கொண்டவனென்னும்படி பகவதநுபவம் கனக்கண்

* குசும்பை - ஓர்பூ. * கொப்பு - மரக்கொம்பு.

(க) தி-வி. க. (உ) தி-வா. கO. ந. உ. (ந) ஷ. ச. ரு. ரு.

மூ. மாபோகச்சிரமமாக.

மூ—(ங௦) இவற்றால்வரும் ஸம்ச்லேஷவிச்லேஷங்களாகிறன எளியனாய்நிற்குமரியனாய் எய்தானென்கிற தர்சனஸமான மாநஸாநுஸந்தாநமும்

மாபோக - எவ்வகையாலும் விலக்ஷணமாய் நித்யஸூரிகளனுபவிக்கிற போகத்தை, சிரமமாக - பொறுக்கைக்காக ச்ரமம் செய்வித்தபடி.

(அ) இவற்றால்வரும் - இக்காரியங்களடியாகவரும், ஸம்ச்லேஷ விச்லேஷங்களாகிறன-ஸம்யோக வியோகங்களாகிறன, எளியனாய்-நெஞ்சுக்குமிகவும் விசததமாநுபவ விஷயமாய்க்கொண்டு, நிற்கும்-முன்னேவந்து நிற்கும், அரியனாய்-என் கண்ணுக்கவிஷயமாய்க்கொண்டு, எய்தான் - கையாலணைக்கைக்கெட்டுகிறிலன், என்கிற - என்றுசொல்லுகிற, தர்சநஸமமான - ப்ரத்யக்ஷஸமமான, மாநஸாநு ஸந்தாநமும் - மாநஸிகாநுபவமும்,

டறியாதவிவர்க்கு (க) "எம்மாவீட்டு" என்றும், (உ) "கட்டெழில் வானவர்போகம்" என்றுஞ்சொல்லுகிறபடியே, எவ்வகையாலும் விலக்ஷணமாய்க்கொண்டு கட்டடங்க நன்றாயிருப்பதாய் அபரிச்சின்ன ஜ்ஞாநபக்திகரான நித்யஸூரிகளநுபவிக்கிறபோகத்தை முதலிலே கொடுக்கில் ஸாத்மியாதென்று கறுதி அது ஸாத்மிக்கைக்காகச்சிரமம் செய்வித்தபடி யென்கை. ஆனபின்பு ஜ்ஞாநபக்திகளை வளர்த்தது ப்ராப்திஸாதநதயாவன்றென்றுகருத்து. மாஸோபவாஸிக்குப்புறப்பூச்சு மாத்ரத்தால் போஜநம் பொறாமையாலே புறப்பூச்சுச்சொன்னவிது மற்றையவற்றுக்குமுபலக்ஷணம். மாபோகம் என்றது, (ங) "மாவீடு" (ச) "வானவர்போகம்" என்கிற சந்தைகளிலாத்யந்தங்களைச்சேர்த்துச்சொன்னபடி. *

வ்யா. (ங௦) ஆனால் ஜ்ஞாநபக்திகளை வளர்த்ததிதுக்காகிறது. முனியேநான் முகனளவும் மாநஸாநுபவமொழிய ப்ரத்யக்ஷாநுபவ மில்லாதவிவர்க்கு இவற்றைவளர்க்கைக் குறுப்பாகவரும் ஸம்ச்லேஷ விச்லேஷங்களாகிறவையெவையென்னவருளிச்செய்கிறார்மேல். (இவற்றாலென்றுதுடங்கி) அதாவது:— கீழ்ச்சொன்னவக்காரியங்களடியாக வரும்ஸம்ச்லேஷமும் விச்லேஷமுமாகிறன. (ரு) "கருத்துக்கு நன்றுமெளியனாய்" (சு) "நிற்கும்முன்னேவந்து" என்றுநெஞ்சுக்குமிகவும் விசததமாநுபவ விஷயமாய்க்கொண்டென் முன்னேவந்து நிற்குமென்றும் (எ) "கண்கள் காண்டற்கரியனாய்" (அ) "கைக்குமெய்தான்" என்று, கண்ணுக்கவிஷயமாய்க்கொண்டு கையாலணைக்கைக்குக் கெட்டுகிறிலனென்றும் சொல்லுகிற ப்ரத்யக்ஷதுல்யமான மாநஸாநுஸந்தாந

(க) தி-வா. உ. கூ. க. (உ) ஷை. சு. சு. கக. (ங) ஷை. உ. கூ. க. (ச) ஷை. சு. சு. கக. (ரு) ஷை. ங. சு. கக. (சு) ஷை-எ. ங. சு. (எ) ஷை. ங. சு. கக. (அ) ஷை.

மூ. திண்கொள்ளப்பெறுத மநச்சைதில்யமும்.

மூ—(நக) புண்ணியம்பாவம் புணர்ச்சிபிரிவை அவைசரித்தவர்க்கு ப்ரியஹிதபரன்தான் துளக்கற

திண்கொள்ளப்பெறுத - பாஹ்யகரணாநுபவம் பண்ணப்பெறுமையாலுண்டான, மநஸ்ஸைதில்யமும் - ஆந்தராநுபவமும் கலங்கும்படி பிறந்தவந்த꞉கரண சைதில்யமும்.

(அ) புண்ணியம்பாவம் - நாட்டார்க்குபுண்ணியபாவங்களால்வருகிற, புணர்ச்சிபிரிவை - ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களை, அவை - அப்புண்ணியபாபரூபமான ப்ரபலகர்மங்களை, சரித்தவர்க்கு - தான்போக்குகையாலே நிவர்த்தித்தவிவ்வாழ்வாருக்கு, ப்ரியஹிதபரன் - ப்ரியபரனும் ஹிதபரனுமான, தாந் - தானனவீஶ்வரன், துளக்கற - அநந்யபரனுயென்னுள்ளேபுகுந்து நிரதிஶயாநந்தயுக்தனய்க் கலந்தானென்றிவரதிப்ரீதராம்படியாகவும்,

மும், (க) "கண்கள்க்குத்திண் கொள்ளவொரு நாளருளாயுன்திருவுருவு" என்றபேக்ஷிதமான பாஹ்யாநுபவம் பெறுமையாலே ஆந்தராநுபவமுமடிமண்டியோடே கலங்கும்படி பிறந்தவந்த꞉கரணஶைதில்யமுமென்கை. *

வ்யா. (நக) ஆனலபிமதவிஷயஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்கள் புண்யபாபநிபந்தனமாகவன்றோ லோகத்தார்க்குவருவது, லோகவ்யாவ்ருத்தரான விவர்க்கு இவை வருகைக்கு நிதானமேதென்னுமபேக்ஷையிலே யருளிச்செய்கிறர். (புண்யமென்றுதுடங்கி) அதாவது:—(உ) "புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவென்றிவையாய்" என்கிறப்படியே, நாட்டார்க்கு புண்யபாப பலமாய்க்கொண்டு வருகிற ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களை (ந) "சார்ந்தவிருவல்வினைகளுஞ் சரித்து" என்று, 'திலதைலவத் தாருவஹ்நிவத்,என்கிறபடியே, ஆத்மாவோடு பிரிக்கவொண்ணுதபடி பொருந்திக்கிடக்கிற புண்யபாபரூபமான ப்ரபல கர்மங்களை விரகர் நெடுஞ்சுவர்தள்ளுமாப்போலே தான் போக்குகையாலே அவையிரண்டுமற்றிருக்கிற விவர்க்கு ப்ரியபரனும்ஹிதபரனுமான ஈஶ்வரன் தான் அந்த ஜ்ஞாநபக்திகளை வளர்க்கையில் நினைவாலே (ச) "துளக்கத்தமுதமாயெங்கும்பக்கம்நோக்கறியா னென்பைந்தாமரைக்கண்ணன்" என்று விபூதி ரக்ஷணத்தைப்பற்ற வருமந்யபரதை கலசாதபடி அத்தையொருங்கவிட்டுக்கொண்டுவந்து இனிப்பேறுதபடி என்னுள்ளேபுகுந்து அத்தாலே விகஸிதஸஹஜ ஸார்வைஜ்ஞுமாய்,

(க) தி - வா. ரு. கo. எ. (உ) ஷை சு. ங. ச. (ந) ஷை. க. ரு. கo. (ச) ஷை ஷை. சு. ௨.

மூ. வெங்குந்தழைக்க நடத்தும்.

மூ—(கூஉ) ஜ்ஞாநத்தில் தம்பேச்சுப்ரேமத்தில் பெண்பேச்சு.

எங்கும் தழைக்க - விஶ்லேஷவ்யஸநத்தாலே நான்முடியாநிற்கையாலே என்துக்க தர்ஶநாபாவத்தால் லோகமானது ஸுகத்தைப்பெற்று ஸம்ருத்தமாகக்கடவதென்னும்படி அதிமாத்ரதுக்க நிமக்நராம்படியாகவும், நடத்தும் - நடத்திக்கொண்டுபோரும்.

(அ) ஜ்ஞாநத்தில் - ஜ்ஞாநதசையில், தம்பேச்சு - தாமானதன்மையிலேபேச்சு, ப்ரேமத்தில் - ப்ரேமதசையில், பெண்பேச்சு - நாயகிப்பேச்சு.

(க) "விஜ்வர:" "விஜ்வர:" என்கிறபடியே, * உள்நடுக்கமும் தீர்ந்து எனக்கு நிரதிஶயபோக்யனுமாய் நாச்சிமாரையும் புரிந்து பாராமல் என்னையேபுரிந்து பார்த்துக்கொண்டு இதனாலே திருக்கண்களும் செவ்விபெற்று இப்படி யென்னோடே கலந்திருந்தானென்றிவரதிப்ரீதராம்படியாகவும் (உ) "தழைநல்லவின்பம் தலைப்பெய்தெங்கும் தழைக்க" என்று, விஶ்லேஷவ்யஸநத்தாலே நான் முடியாநின்றேன், இனி யென்துக்கங் காணாமையாலே லோகமெல்லாம் விஸ்தீர்ணமாய் நன்றாக ஸுகத்தைப்பெற்று ஸம்ருத்தமாகக்கடவதென்னும்படி அதிமாத்ரதுக்கநிமக்நராம்படியாகவும் நடத்திக்கொண்டு போருமென்றபடி. *

வ்யா. (கூஉ) இப்படி யீஶ்வரன் வளர்த்துக்கொண்டுபோருகிற, ஜ்ஞாநப்ரேமைகளையுடையரான விவருடைய ஜ்ஞாநதசையிலும் ப்ரேமதசையிலுமுண்டான பேச்சுகளிருக்கும்படி யெங்ஙனே யென்னவருளிச்செய்கிறார். (ஜ்ஞாநத்திலித்யாதி) அதாவது:— ஜ்ஞாநதசையில் தாமான தன்மையிலே நின்றுபேசுவர். ப்ரேமதசையிலும் அவஸ்தாந்தராபன்னராய்பெண்பேச்சாகப்பேசுவரென்கை. *

---

"விஜ்வர:" என்கிற இந்தவிடத்தில் * உள்நடுக்கமாவது ? கடற்கரையில் பெருமாள் ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு இலங்கைமாநகரை முடிசூட்டி பின்பிதென்னாமோவென்றேங்கியும், ஸ்ரீபரதாழ்வான்போலிவனும் நேராக இராஜ்யத்தை யங்கீகரியானாகில் செய்த ப்ரதிஜ்ஞை வீணேயொழியுமேயென்று கலங்கியுமிருக்க இராவணவதாநந்தரம் இராஜ்யத்தை ஸ்ரீவிபீஷணாழ்வானங்கீகரித்தமையால் தீர்ந்த கவலையென்றபடி. அல்லது :—வி, என்று பக்ஷியாய் அது பெரிய உடையாராய் அவர் விஷயமான க்லேசமாகவுமாம். அதாவது:—உலகத்தில், தம் தம் மக்களுக்கொருகாலவிசேஷத்திலல்லாதபெருஞ்சீர்மையுண்டாகுகையில் தந்தையாவான் காலம் சென்றவனை நினைந்து துக்கிப்பதுபோல் மேலாத்தாய்தந்தையான பெருமாள் ஸ்ரீவிபீஷணாழ்வானுடைய மஹோத்ஸவத்தைப் பார்த்து அவனுமில்லாமற் போனானேயென்கிற மநத்துடிப்பு.

(க) ஸ்ரீ-ரா-யா. க. அச. (உ) தி-வா. கூ. ரு. க0. (கூ)

மூ—(௬௩) தேறுங்கலங்கியென்றுந் தேறியுந்தேறாதும் ஸ்வரூபங் குலையாது.

மூ—(௬௪) அடியோந்துடர்ந்து குற்றே வலடிச்சியோ மடிக்கீழ்க்குற்றேவலாகை யவஸ்தாந்தரம்.

(அ) தேறுங்கலங்கியென்றும் - தெளிந்ததசையிலும் கலங்கினதசையிலும் அஞ்ஜலிமாறாளென்கையாலும், தேறியுந்தேறாதும்-உபயாவஸ்தையிலுமவன் திறத்தினளாயிருக்கிறாளென்கையாலும், ஸ்வரூபம் - (ஶேஷத்வரூப) ஸ்வரூபம், குலையாது - நிலைகுலையாது.

(அ) அடியோம் - தாஸபூதர், துடர்ந்துகுற்றேவல் - ஸந்நிதியை யிடைவிடாமல் ஸகலவிததாஸ்யங்களும் (செய்யவேண்டுமென்று தம் பேச்சாலே சொல்லுகிறவிது,) அடிச்சியோம் - தாஸிகள், அடிக்கீழ் குற்றேவல் - திருவடிகளிலந்தரங்க தாஸ்யங்களைப்பண்ணவேண்டு மென்று, ஆகை - (பெண்பேச்சு) ஆகை, அவஸ்தாந்தரம் - அவஸ்தாந் தராபத்தி.

வ்யா. (௬௩) இப்படி தெளிவுங்கலக்கமுமான வித்தசைகளில் பேச்சில் பேதமொழிய ஸ்வரூபத்திலும் பேதமுண்டோவென்னவருளிச்செய்கிறார். (தேறுங்கலங்கியென்று துடங்கி) அதாவது:— (க) "தேறுங்கைகூப்பும்" (உ) "கலங்கிக்கைதொழும்" என்று தெளிந்த தசையிலும் கலங்கின தசையிலும் ஶேஷத்வப்ரகாசகமான அஞ்சலி மாறாமையாலே பிண்டத்வ கடத்வ கபாலத்வ சூர்ணத்வங்களாகிற அவஸ்தாந்தரங்களை பஜித்தாலும் ம்ருத்தானவாகாரத்துக்கழிவில்லாதாப்போலே" (௩) "தேறியுந்தேறாதமாயோன் திறத்தினளேயித்திருவே" என்கிறபடியே தெளிந்ததசையோடு கலங்கினதசையோடு வாசியற உபயாவஸ்தையிலும் சேஷத்வரூபமான ஸ்வரூபம் நிலைகுலையாதென்றபடி. *

வ்யா. (௬௪) ஆனாலிவர்க்கவஸ்தாந்தரமாவதேதென்னுமாகாண்க்ஷையிலே அருளிச்செய்கிறார். (அடியோமித்யாதி) அதாவது:— (௪) "அடியோம் போற்றியோவாதே" (௫) "தொடர்ந்து குற்றேவல்செய்து" என்று, தாமானதன்மையிற் சொல்லுமோபாதி (௬) "அடிச்சியோந் தலைமிசைநீயணியாய்" (எ) "திருவடிக்கீழ்குற்றேவல்முன்செய்ய" என்று சொல்லுகையாலே, ஸ்வரூபத்திலும் ஸ்வரூபாநுரூபவ்ருத்தி ப்ரார்த்தனையிலும் பேதமில்லை. பிராட்டியான பாவனையாலே தம்பேச்சானவிது போய் பெண்பேச்சாகை யிவர்க்கவஸ்தாந்தரமாவதென்றபடி. (அ) "அடியோம்" (௯) "தொடர்ந்துகுற்றேவல்" என்று, தம்பேச்சாலே சொல்லுகிறவிது, "அடிச்சியோம், அடிக்கீழ்குற்றேவல்" என்று பெண்பேச்சாகையிவர்க்கவஸ்தாந்தரமாவதென்று வாக்யத்துக்குச்சொற்படுத்தும் க்ரமம். *

(க) தி-வா. எ. உ. ௫. (உ) ஷி. உ. ௪. ௪. (௩) ஷி ௬. ௪. எ. (௪) ஷி. ௯.உ. ௯. (௫) ஷி ௩. (௬) ஷி க0. ௩. ௬. (எ) ஷி க. ௪. உ. (அ) ஷி-௯-உ-௯. (௯) ஷி. ௩.

மூ—(௩௫) வித்யை தாயாகப்பெற்றுபாலுமமுதுமான திருநாமத்தாலே திருமகள்போல வளர்த்தத்தஞ்சமாகிய தந்தைமற்றொருவர்க்குப் பேச்சுப்படாமல்

அ. வித்யை - வித்யையை, தாயாக - மாதாவாக, பெற்று - ஜநிப்பித்து, பாலுமமுதுமான - க்ஷீரஸுதைகள்போல் போக்யமான, திருநாமத்தாலே - திருமந்த்ரத்தாலே, திருமகள்போலவளர்த்த - லக்ஷ்மீஸத்ருஶமாக வளர்த்த, தஞ்ஜமாகிய தந்தை-மோக்ஷைகஹேதுவானவாசார்யனுகிற பிதா, மற்றொருவர்க்குப்பேச்சுப்படாமல் - அந்யஶேஷத்வ ப்ரஸங்கம்வாராதபடி,

வ்யா. (௩௫) ஆனுலிவர்க்கு தம்பேச்சன்றோ ஸ்வாபாவிகம் பிராட்டிமார் தசையை ப்ராபித்துப்பேசும் பேச்சுவந்தேறியன்றோ வென்னு? பகவதேகபாரதந்த்ரமுமாய் பகவதேகபோகமுமாயிருக்கு மாத்மவஸ்துவுக்கு ஸ்த்ரீஸாதர்மயம் ஸ்வரூபாநுபந்தியாகையாலே தத்ப்ரயுக்தமான பேச்சிவர்க்கு வந்தேறியன்றென்னு மிடத்தை ரூபகத்வேநவருளிச் செய்கிருர். மேலெருசூர்ணையாலே அதாவது :— வித்யை தாயாகப்பெற்று (க)"ஸஹி வித்யாதஸ்ஞ்ஜநயதி" "ஸஹிவித்யாதஸ்ஞ்ஜநயதி" என்கிறபடியே, ஆசார்யன் திருமந்த்ரமுகேந ஸ்வரூபஜ்ஞாநத்தையுண்டாக்கினபோதிவ்வாத்மா ஸத்பாவமாகையாலே வித்யையை மாதாவாகக்கொண்டிவ்வாத்ம வஸ்துவை ஜநிப்பித்து பாலுமமுதுமான திருநாமத்தாலே திருமகள் போல்வளர்த்த (உ) "தேனும்பாலுமமுதுமாய திருமால் திருநாமம்" என்கிற போக்யபதார்த்தமான திருமந்த்ரத்தாலே (௩) "திருமகள்போல்வளர்த்த" என்கிறபடியே, அநந்யார்ஹஶேஷத்வாதிகளாலே லக்ஷ்மீஸத்ருஶமாக வளர்த்துக்கொண்டுபோந்த (ச) "தஞ்சமாகிய தந்தை" தேஹோத்பாதகனுய்" (ரு) "ஸபித்ராச" "ஸாபித்ராச" இத்யாதிப்படியே, ஆபத்தசைகளிலே கைவிடும் பிதாவைப்போலன்றிக்கே, (சு) "பூதாநாம்யோவ்யயঃ பிதா" "பூதாநாம்யோவ்யயঃ பிதா" என்கிறபடியே, ஸ்வஸம்பந்தம் கண்ணழிவற்றிருக்க (எ) "பவமோக்ஷணயோஸ்த்வயைவஜந்துঃக்ரியதே" "பவமோக்ஷணயோஸ்த்வயை வஜந்துঃ,க்ரியதே" என்னும்படி, ஸம்ஸார மோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிருக்கும் பிதாவைப்போலு மன்றிக்கே ஸ்வரூபோத்பாதகனுய், ஒருதசையிலும் கைவிடாதேஹிதைஷியாய் உஜ்ஜீவநைகபரனுய்க்கொண்டு மோக்ஷைக ஹேதுவாயிருக்கையாலே ஆத்மரக்ஷகனுனவாசார்யனுகிற பிதா மற்றொருவர்க்குப் பேச்சுப்படாமல் (அ) "மற்றொருவர்க்கென்னைப் பேசலொட்டேன்" (கூ) "மானிடவர்க்கென்று பேச்சுப்படில்" என்கிற, அந்யஶேஷத்வப்ரஸங்கம் வரா,

(க) ஆ-ஸு. (உ) பெ-மொ. சு. ௪0. சு. (௩) பெரியா-தி. ௩. அ. ச. (ச) தி-வா. ௩. சு. ௧. (ரு) ஸ்ரீ-ரா. ஸு- ௩அ. ௩உ. (சு) ஸஹஸ்ரநாமம். (எ) ஸ்ரீர-ம். உ. அஅ. (அ) பெரியா-தி. ௩. ச. ரு. (கூ) நா-தி. ௧. ரு.

மூ. விஶ்வபதிலோகபர்த்தாவென்னும் மணவாளரை நாலிரண்டிழைகொண்டு முப்பிரியான ப்ரம்ஹஸூத்ரபந்தத் தோடே வரிப்பிக்கபரம்புருடன் கைக்கொண்டபின் சதுர்த்தியுட்புக்கு இடையீடு

விஶ்வபதிலோகபர்த்தாவென்னும் மணவாளரை - ஸர்வ ஸ்வாமியான ஸர்வேஶ்வரனை, நாலிரண்டிழைகொண்டு - எட்டிழைகொண்டு, முப்பிரியான - மூன்றுசரடா யிருப்பதான, ப்ரம்ஹஸூத்ர பந்தத்தோடே - ஈஶ்வரஸம்பந்தப்ரகாஶகமான திருமந்த்ரமாகிற மங்கள ஸூத்ரபந்தத்தோடே, வரிப்பிக்க - வரிக்கும்படிபண்ண, பரம்புருடன் - ஸர்வேஶ்வரன், கைக்கொண்டபின் - பரிக்ரஹித்த வநந்தரம், சதுர்த்தியுட்புக்கு - கைங்கர்ய ப்ரார்த்தனையோடே செல்லும் சரமசதுர்த்தியிலே யுட்புக்கு, இடையீடு - ப்ரதிபந்தகமாக,

தபடி (விஶ்வபதிலோக பர்த்தாவென்னும் மணவாளரை) (க) "𑌪𑌤𑌿𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯" "பதிம் விஶ்வஸ்ய" (உ) "𑌕𑍌𑌸𑌲𑍍𑌯𑌾𑌲𑍋𑌕𑌭𑌰𑍍𑌤𑌾𑌰𑌂" "கௌஸல்யா லோகபர்த்தாரம்" என்று, பதிஶப்தத்தாலும் பர்த்ருஶப்தத்தாலும் ஸர்வலோகநாயகனாகச் சொல்லப்படுகிற (ங) "மணவாளரவணைப்பற் பல காலமும் பள்ளிகொள் மணவாளரை" (நாலிரண்டிழைகொண்டு முப்பிரியான ப்ரம்ஹஸூத்ரபந்தத்தோடே வரிப்பிக்க) (ச) "எட்டிழையாய் மூன்றுசரடாயிருப்பதொரு மங்களஸூத்ரம்போலே" எட்டக்ஷரமாய் மூன்றுபதமாய் ஈஶ்வரஸம்பந்த ப்ரகாஶகமான திருமந்த்ரமாகிற மங்களஸூத்ரபந்தத்தோடே, (ரு) "𑌪𑌾𑌣𑌿𑌂 𑌗𑍃𑌹𑍍𑌣𑍀𑌷𑍍𑌵 𑌪𑌾𑌣𑌿𑌨𑌾" "பாணிம் க்ருஹ்ணீஷ்வபாணிநா, என்கிறபடியே, வரிக்கும்படிபண்ண (பரம்புருடன் கைக்கொண்டபின்) (சு) "பரம்புருடா நீயென்னைக்கைக்கொண்டபின்" என்கிறபடியே, பரமபுருஷரான மணவாளர் பரிக்ரஹித்த வநந்தரம் (சதுர்த்தியுட்புக்கு) விவாஹாநந்தரம் ஶேஷஹோம பர்யந்தமான சதுர்த்திவஸத்திலும் அகலுதலு மணுகுதலு மற்று அநந்யார்ஹ ஶேஷத்வாநுகுணமான பரிமாற்றத்துக்கு அர்ஹமென்னுமளவை ப்ரகாசிப்பிற்றுக்கொண்டிருக்குமோபாதிப்ரணவோக்தமான வநந்யார்ஹ ஶேஷத்வத்தில் கண்ணழிவற வங்கீகரிக்கையாலும் ததநுகுணமாகக் கிட்டி பரிமாறப்பெறுமையாலும் அகலுதலும் அணுகுதலு மற்று கைங்கர்ய ப்ரார்த்தனையோடே செல்லும் சரம சதுர்த்தியிலே யுட்புக்கு

(க) பு-ஸூ (உ) ஸ்ரீ-ரா. ஸு. ஙஅ. ருரு. (ங) நா-தி. கூ. சு. (ச) முமுக்ஷுப்படி. (ரு) ஸ்ரீ-ரா. பா. எங. உசு. (சு) பெரியா-தி. ரு, ச, உ.

மூ. நடுக்கிடக்கும் நாள்கழித்து ஜந்மபூமியை விட்டகன்று
சூழ்விசும்பிற்படியேயுடன்சென்று குடைந்து நீராடி

நடுக்கிடக்கும் - ஶரீரம் நடுவேகிடக்கிற, நாள்கழித்து - நாலுநாளையும் கழித்து, ஜந்மபூமியை - ஜநநபூமியான விவ்விபூதியை, விட்டகன்று - (முன்பாதரணீயமாய்ப்போந்தவஸ்துக்களோடேகூட) விட்டகன்று, சூழ்விசும்பிற்படியே - சூழ்விசும்பென்கிற திருவாய்மொழியில் படியே, உடன் சென்று - நாயகனோடே கூடச்சென்று, குடைந்து - விரஜையிலே யவகாஹித்து, நீராடி - தீர்த்தமாடி,

இடையீடு நடுக்கிடக்கும் நாள்கழித்து தம்பதிகளிருவருமேக ஶய்யையிலே வர்த்திக்கச்செய்தே அந்யோந்ய ஸ்பர்ஶ யோக்யதை யில்லாதபடி இடை யீடான ஸோமாதிகள் நடுவே கிடக்கும் நாள்போலே ஶேஷத்வஜ்ஞானமும் ஶேஷவ்ருத்தி ப்ரார்த்தனையுண்டாகையாலே இரண்டுதலைக்குமண்ணிமை யுண்டாயிருக்கவும் சேர்த்துப்பரிமாற வொண்ணாதபடி (க) "நண்ணியும் நண்ணகில் லேன்நடுவே யோருடம்பிலிட்டு" என்கிறபடியே அநுபவவிரோதியாய் இடையீடான ஶரீரம் நடுவேகிடக்கிற நாலுநாளையும் (உ) "நாள்கடலைக்கழிமின்" என்கிறபடியே, கழித்து (ஜந்மபூமியைவிட்டகன்று) (௩) "முற்றிலும்பைங்கிளியும்பந்து மூசலும்பேசுகின்ற சிற்றில்மென்பூவையும் விட்டகன்ற செழுங்கோதை" என்கிறபடியே, ஒருவராலும் விடவரிதான ஜந்மபூமியான விவ்விபூதியைமுன்பாதரணீயமாய் போந்தவஸ்துக்களோடேகூடப்புரிந்துபாராமல் விட்டுநீங்கி, அன்றிக்கே (௪) "அன்று நான்பிறந்திலேன்" என்னும்படி கிடந்ததனக்கு ஆசார்யன்திருமந்த்ரத்தாலுண்டாக்கின ஜந்மம் பெற்றதிங்கேயாகையாலே ஜந்மபூமியான இவ்விபூதியை ப்கவதநுபவப்ராவண்யத்தாலே, முற்றிலும் பைங்கிளியுமித்யாதிப்படியே, முன்பாதரணீயமாய்ப்போந்த வஸ்துக்களோடேகூட விட்டகன்றென்னவுமாம். பிறந்தகத்தைவிட்டுப்புக்கஹத்துக்குப் போகிறரூபகத்துக்கு மிகவும்சேருமிறே. (சூழ்விசும்பில்படியே யுடன்சென்று) (௫) "சூழ்விசும்பு" என்கிற, திருவாய்மொழியிற் சொல்லுகிறபடியே, அர்ச்சிராதிமார்க்கத்தாலே வழியிலுள்ளாரடைய ஸத்கரிக்க (௬) "அங்கவனோடுமுடன்சென்று" என்கிறபடியே, (௭) "நயாமி" "நயாமி" என்கிற, நாயகன்முன்னேபோகப் பின்னேபோய், (குடைந்துநீராடி) (௮) "குள்ளக்குளிரக்குடைந்து நீராடி" என்கிறபடியே, பர்த்ருக்ருஹத்துக்குப்போகிறபெண் அவ்வூரெல்லையிலே சென்றவாறே அவர்கள் குளிப்பாட்டக் குளிக்குமாப்போலே அம்ருதவாஹிநியான விரஜை

(க) தி-வா. (உ) தி-வா. க, ௬. ௭. (௩) பெ-மொ. ௩. ௭. அ. (௪) திருச்ச-ம். ௬௪. (௫) தி-வா. ௧0. ௯. க. (௬) நா-தி. ம. க0. (௭) ஸ்ரீவராஹசரமம். (அ) திருப்பாவை. க௩.

மூ. வியன்றுழாயஞ்சநத்தின்நீறு நானப்பொடி பீதகவாடை பலகலன்கொண்டு நோக்கியலங்கரித்து ப்பல்லாண்டிசைத்துக்கவரிசெய்ய நிறைகுடவிளக்கமேந்தி யிளமங்கையரெதிர்கொள்ள

வியந்துழாய் - திவ்யமால்யம், அஞ்சநத்தின்நீறு - திவ்யாஞ்சநம், நாநப்பொடி - திவ்யசூர்ணம், பீதகவாடை - திவ்யவஸ்த்ரம், பல்கலன் - திவ்யாபரணங்கள், கொண்டு - இவைகளைக்கொண்டு, நோக்கி - திவ்யாப்ஸரஸ்ஸுக்களால் அத்யாதரமாக, அலங்கரித்து - அலங்காரம்செய்து, பல்லாண்டிசைத்து - மங்களாஸாஸநம்பண்ணி, கவரிசெய்ய - சாமரம் பணிமாற, நிறைகுடவிளக்கமேந்தி - மங்கள தீபாதிகளை யேந்திக்கொண்டு, இளமங்கையர் - நித்யநவ யௌவனைகளான ஸ்திரீகள், எதிர்கொள்ள - எதிர்கொண்டுவர,

யிலே இப்பாலுள்ள அழுக்கறும்படி நீருடி (வியந்துழாயஞ்சநத்தின் நீறுநானப்பொடி பீதகவாடை பலகலன்கொண்டு நோக்கியலங்கரித்து) குளித்தேறினபெண்ணை பர்த்ருபந்துக்களான ஸ்த்ரீகள் வந்தலங்கரிக்குமாப்போலே (௧) "வியன்துழாய் கற்பென்றுசூடும்" (௨) "ஆராரயில் வேற்கணஞ்சநத்தின்நீரணிந்து" (௩) "மெய்திமிருநாநப்பொடி" (௪) "உடுத்துக்களைந்த நின்பீதகவாடை" (௫) "பல்கலனும்யாமணிவோம்" என்கிறபடியே, அலங்காரோபகரணங்களான திவ்யமால்யம் திவ்யாஞ்சநம் திவ்யசூர்ணம் திவ்யவஸ்த்ரம் திவ்யாபரணங்களை (௬) "ఏతంపఞ్చశతాన్యప్సరసఃప్రతిధావన్తి శతమ్మాలాహస్తాః" "ஏதம்பஞ்சஸதாந்யப்ரஸ்ஸ்ப்ரதிதாவந்தி ஸதம்மாலாஹஸ்தா:" "శతమఞ్జనహస్తాః శతంచూర్ణహస్తాః శతంవస్త్రహస్తాః శతంభూషణహస్తాః" "ஸதமஞ்ஜநஹஸ்தா: ஸதம்சூர்ணஹஸ்தா: ஸதம்வஸ்த்ரஹஸ்தா: ஸதம்பூஷணஹஸ்தா:" என்கிறபடியே, ஏந்திக்கொண்டு மானேய்நோக்கியரான திவ்யாப்ஸரஸ்ஸுக்களெதிரே வந்து (௭) "తంబ్రహ్మాలంకారేణాలంకుర్వన్తి" "தம்ப்ரம்ஹாலங்காரேணாலங்குர்வந்தி" என்கிறபடியே, போக்த்ருபூதே ஸ்வரபோக்யமாம்படி யலங்கரித்து (பல்லாண்டிசைத்துக்கவரிசெய்ய) (௮) "தொக்குப்பல்லாண்டிசைத்துக்கவரிசைவரேழையரே" என்கிறபடியே, இவ்விஷயத்தில் கிஞ்சித்கரிக்கையிலுண்டான சாபலம்தோற்ற திரளநின்று மங்களாஸாஸநம்பண்ணி சாமரம்பணிமாற (நிறைகுடவிளக்கமேந்தி இளமங்கையரெதிர்கொள்ள) அலங்க்ருதையாயுபலாலநத்தோடே செல்லுகிறபெண் பர்த்ருக்ருஹத்தையணுகச்சென்றவாறே அங்குள்ள ஸ்த்ரீகள் மங்களதீபாதிகளை யேந்திக்கொண்டெதிரேவந்து ஸத்கரிக்குமாப்போலே (௯) "நிதியிநற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும் மதிமுகமடந்தையரேந்தினர்" என்கிறபடியே, மங்களாவஹமான பூர்ணகும்பதீபாதிகளைதரித்துக்கொண்டு (௰) "சதிரிளமங்கையர்தாம் வந்தெதிர்கொள்ள" என்கிறபடியே, நித்யநவயௌவநஸ்வபாவைகளானவேறே சிலதிவ்யாப்

(௧) தி-அ. ௩. ௬௯. (௨) சி-தி. ௧. (௩) பெரியா-தி. ௧. ௪. ௯. (௪) திருப்பல்லாண்டு. ௯. (௫) திருப்பாவை-௨௭. (௬) (௭) (௮) தி-வா. ௭. ௬. ௧௧. (௯) ஷை-௧௦. ௯. ௧௦. (௰) நா-தி. ௬. ௫.

மூ. வைகுந்தம் புக்கிருந்து வாய்மடுத்துப்பெருங்களிச்சியாக வானவர்போகமுண்டு கோப்புடைய கோட்டுக்கால்கட்டில் மிதித்தாரோஹித்து

வைகுந்தம்புக்கு - ஸ்ரீவைகுண்டத்தை ப்ராபித்து, இருந்து - ஈச்வரனோடேகூடியிருந்து, வாய்மடுத்து - வாயைமடுத்து, பெருங்களிச்சியாக - மஹாநந்தத்தோடு, வானவர்போகம் - நித்யஸூரிகளனுபவிக்கும் போகத்தை, உண்டு - புஜித்து, கோப்புடைய - உபய விபூத்யாதிபத்யப்ரகாசகமான, கோட்டுக் கால்கட்டில் - ஸர்வாச்சர்யமயமான திவ்யபர்யங்கத்திலே, மிதித்தாரோஹித்து - பாதபீடத்திலே யடியிட்டேறி,

ஸரஸ்ஸூக்களெதிர்கொள்ள (வைகுந்தம்புக்கிருந்து) உபலாலநத்தோடேசென்றபெண் பர்த்ருக்ருஹத்திலே புக்கிருக்குமாப்போலே (க) "மன்னியமாதவனோடு வைகுந்தம்புக்கிருப்பார்" என்கிறபடியே, ஸ்ரீயஃ பதியானவனுக்கு போகஸ்தாநமான ஸ்ரீவைகுண்டத்தைப்ராபித்து அவனோடேகூடியிருந்து (வாய்மடுத்துப் பெருங்களிச்சியாக வானவர்போகமுண்டு) பர்த்ருக்ரஹத்திலே பெண்வந்தபின்பு தம்பதிகளும் மற்றுள்ள பந்துக்களும்கூடியிருந்து பெருங்களிச்சியுண்ணுமாப்போலே அடியார்கள் குழாங்களுமவனுமாக விருக்கிற சேற்றியிலே (உ) "அடியேன் வாய்மடுத்துப்பருகிக்களித்தேன்" என்று 'பெருங்களிச்சியாக் முழுவிடறுசெய்து (ங) "கட்டெழில்வானவர் போகமுண்பாரே" என்கிறபடியே, நித்யஸூரிகள் புஜிக்கிறபோகத்தை (ச) "[Grantha text]" "ஸோச்நுதேஸர்வாந்காமாந்ஸஹ ப்ரம்ஹணாவிபச்சிதா" என்கிறபடியே, புஜித்து (கோப்புடைய கோட்டுக்கால்கட்டில் மிதித்தாரோஹித்து) பர்த்ருஸம்ச்லேஷத்துக்குப்படுக்கையிலே யேறுமாப்போலே (ரு) "கோப்புடைய சீரியசிங்காஸநம்" என்றும், (சு) "கோட்டுக்கால்கட்டில்" என்றும் சொல்லுகிறபடியே, உபய விபூதியும் தொழிலாகவகுப்புண்டு ஸர்வாச்சர்யமயமான திவ்யபர்யங்கத்திலே (எ) "[Grantha text]" "தமேவம் வித்பாதேநாத் யாரோஹதி" என்

(க) நா-தி. ந. க0. (உ) தி-வா. உ. ங. கூ. (ங) ஷி. சு. சு. கக. (ச) தை - உ. ஆ. க. க. (ரு) திருப்பாவை - உச. (சு) ஷி - கக. (எ)

மூ. பரதாக்ரூரமாருதிகளை பரிஷ்வங்கித்த மணிமிகுமார்பிலே குருமாமணியாயணியும் வஸ்துவுக்குமணிவல்லிப் பேச்சு வந்தேறியன்று.

---

பரதாக்ரூரமாருதிகளை - இவர்களை, பரிஷ்வங்கித்த - காடாலிங்கநம் பண்ணின, மணிமிகுமார்பிலே - ஸ்ரீகௌஸ்துபம் நிறம்பெறும்படியான திருமார்விலே, குருமாமணியாய் - ஸ்ரீகௌஸ்துபத்தோபாதி போக்யமாய், அணையும் வஸ்துவுக்கு - அணைகிற ஆத்மவஸ்துவுக்கு, மணிவல்லிப்பேச்சு - நாயகிப்பேச்சு, வந்தேறியன்று - ஆரோபிதமன்று.

---

கிறபடியே, பாதபீடத்திலே அடியிட்டேறி, (பரதாக்ரூரமாருதிகளை பரிஷ்வங்கித்தமணிமிகுமார்விலே) (க) "తంసముత్థాప్య కాకుత్స్థ శ్చిరస్యాక్షిపథంగతం । అఙ్కేభరతమారోప్య ముదితఃపరిషస్వజే" "தம்ஸமுத்தாப்ய காகுஸ்தஶ்சிரஸ்யாக்ஷி பதம் கதம்। அங்கே பரதமாரோப்யமுதிதஃ பரிஷஸ்வஜே" என்றும், (உ) "సోఽప్యేనంధ్వజవజ్రాబ్జ కృతచిహ్నేనపాణినా। సంస్పృశ్యాకృష్యచప్రీత్యా సుగాఢం పరిషస్వజే" "ஸோப்யேநம் த்வஜவஜ்ராப்ஜக்ருதசிந்ஹேநபாணிநா। ஸம்ஸ்ப்ருஶ்யாச்யாக்ருஷ்யசப்ரீத்யா ஸுகாடம்பரிஷஸ்வஜே॥ என்றும், (ங) "ఏషసర్వస్వభూతస్తు పరిష్వఙ్గోహనూమతః। మయాకాలమిమంప్రాప్య దత్తస్తస్యమహాత్మనః" "ஏஷஸர்வ ஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோஹநூமதஃ। மயாகால மிமம் ப்ராப்ய தத்தஸ்தஸ்ய மஹாத்மநஃ" என்றும் சொல்லுகிறபடியே, ஸ்ரீபரதாழ்வானையும் அக்ரூரனையும் திருவடியையும் ஆதரித்தணைத்துக்கொண்ட (ச) "மணிமிகுமார்பு" என்று, ஸ்ரீகௌஸ்துபம் நிறம் பெறும்படி அழகியதிருமார்பிலே (குருமாமணியாயணையும் வஸ்துவுக்கு) (ரு) "குருமாமணிப்பூண்" என்று ஶ்லாக்யமாயீஶ்வரத்வசிஹ்நமான ஸ்ரீகௌஸ்துபத்தோபாதி போக்யமாய் தேஜஸ்கரமாய்க்கொண்டணைகிற வாத்ம வஸ்துவுக்கு (மணிவல்லிப்பேச்சு வந்தேறியன்று) (சு) "வண்பூமணிவல்லி" என்று தாரகமாய் போக்யமாய் தனக்குத்தானே ஆபரணமாம்படி அழகியதாய் கொள்கொம்புபெறுவிடில் தலையெடுக்கமாட்டாமை தறைப்பட்டுக் கிடக்கும் "கொடிபோன்றவள்" என்கிற ஸ்த்ரீத்வப்ரயுக்தமாய்வரும் பேச்சுவந்தேறியன்று ஸ்வாபாவிகமென்னபடி. பெண்பேச்சென வமைந்திருக்க மணிவல்லிப்பேச்சென்னது ? மணிமிகுமார்விலே மணியாயணியுமென்றத்தோடொக்க மணி வல்லியென்றால் சொற்கட்டளையாய்வரும் ரஸமுண்டாகையாலே. இத்தால் ஸ்த்ரீத்வம் ஆத்மவஸ்துவுக்கு ஸ்வாபாவிகமாகையாலே அத்தையுள்ளபடி தர்சித்தவிவர்க்கு தத்ப்ரயுக்தமான பேச்சு ஸ்வபாவிகமென்று சொல்லித்தாயிற்று. *

---

(க) ஸ்ரீ-ரா-யு. கூ௦. ௩௮. (உ) ஸ்ரீவி-பு. ரு. க. ௩. ரு. (௩) ஸ்ரீ-ரா-யு. க. கஉ. (ச) பெ-மொ. (ரு) பெரியா-தி. க. ௩. க௦. (சு) தி-வி. சு.

மூ—(௩௬) இன்புமன்பு முற்படுவது கொழுந்துவிடுவதாகிறது கடிமா மலர்ப்பாவையோடுள்ளஸாம் யஷட்கத்தாலே.

(அ) இன்புமன்பும் - ஸ்நேஹமானது, முற்படுவது - பிராட்டி விஷயத்திற்காட்டிலு மாச்ரிதவிஷயத்தில் முற்படுவது, கொழுந்துவிடுவதாகிறது - பிராட்டிபக்கலுள்ள தாச்ரிதரளவும் வரவளருவதும், கடிமாமலர்ப்பாவையோடுள்ள-பெரியபிராட்டியாரோடுள்ள, ஸாம்ய-ஸாத்ருச்யத்துக்குஹேதுவான, ஷட்கத்தாலே - குணஷட்கத்தாலே.

வ்யா. (௩௬) இப்படி கேவலம் ஸ்த்ரீஸாமாம்யமேயன்றிக்கே,நாரீணுமுத்தமையான பிராட்டியோடே ஸாம்யமும், பரிசுத்தாத்மஸ்வரூபத்துக்குண்டென்னுமற்றை ஸ்பஷ்டமாக வருளிச்செய்கிறார். மேல் (இன்புமன்புமென்று துடங்கி) அதாவது :—(க) "நமக்கும் பூவின் மிசை நங்கைக்குமின்பனே" என்று, இன்றுச்ரயித்த நமக்கும் நித்யஸூரிக்கு மவ்வருகாய் ரூபகுணத்தாலும் ஆத்மகுணத்தாலும் பூர்ணையாயிருக்கிற பிராட்டிக்கும் இன்பனுமிடத்தில் முற்படவிங்கே யின்பனுய் பின்பாய்த்தவளுக்கு ஸ்நேஹிப்பதென்னும்படி பிராட்டிக்கு முன்னே யிவர் பக்கலின்பனுவது (உ) "கோலமர்ப்பாவைக்கன்பாகிய வென்னன்பே" என்று நிரதிசயபோக்யையான பிராட்டிக்கன்பனுகையாலே அவள் பரிக்ரஹமான வென்பக்கலிலும் அன்பனுனவனே யென்னும்படி அவள் பக்கல் பண்ணின ஸ்நேகமிவ்வளவும் வர வளருவதாய் இப்படி யின்பு முற்படுவது அன்பு கொழுந்துவிடுவதாகிறது. (௩) "கடிமாமலர்ப்பாவை யொப்பாள்" என்று பரிமளப்ரசுரமான பூவில் பிறப்பாலும் நிருபாதிகஸ்த்ரீத்வத்தாலும் நிரதிசயபோக்யபூதையான பிராட்டியோ டொக்கச் சொல்லலாமவளென்னும்படி பிராட்டியோடித்தலைக் குள்ளஸாம்யத்துக்குடலான அநந்யார்ஹசேஷத்வம் அநந்யசரணத்வம் அநந்ய போக்யத்வம் ஸம்ச்லேஷத்தில் தரிக்கை விச்லேஷத்தில்தரியாமை ததேகநிர்வாஹ்யத்வமுமாகிற ஆறுப்ரகாரத்தாலேயென்கை. 'இன்பனென்னது' ஸ்நிக்தனென்னபடி. ஆகையால் அன்போபாதி இன்பும் ஸ்நேஹவாசியாகையாலே ஸ்நேஹம்முற்படுவது கொழுந்து விடுவதாகிறதென்னபடி. இன்புமன்பு மென்றிரண்டுபோலச் சொல்லிற்று. முற்படுதலும் கொழுந்துவிடுதலும் சொல்லுகிற ஸ்தலங்களில் ஸ்நேஹவாசகதயா ப்ரயுக்தசப்தங்களிவையாகையலே இரண்டு சங்கையும் தோற்றுகைக்காக. பிராட்டியோடுள்ள வென்றுவமைந் திருக்க கடிமாமலர்ப்பாவையோடுள்ள வென்னது அந்த சங்கையிலே பிராட்டிஸாம்யம் முக்தகண்டமாகச் சொல்லியிருக்கையாலும் கந்தல் கழிந்த ஸ்வரூபத்தையுடையவர்களெல்லாருமிப்படி சொல்லுகிறது ஸ்வரூபாநுபந்தியான விஸ்ஸாம்யஷட்கத்தாலே யென்றறிவிக்கைக்காக

(க) தி-வா. ச. ௫. அ. (உ) ஷை - ௧0. ௧0-எ. (௩) பெ-தி. ௩. எ. ௧.

சூ—(கஎ) உண்ணாது கிடந்தோர் மாயையினாலென்னும் வீறுடைய முடிக்குறியாரோடு இத்திருமண்ணேரன்ன வொண்ணுதல்

(அ) உண்ணாது கிடந்து ஓர்மாயையினால் என்னும், இப்பாட்டுக்களில்ப்ரதிபாதிதமான வீறுடைய - வைலக்ஷண்யாதிக்யமுடைய, முடிக்குறியாரோடு - (ஸர்வேஶ்வரஸாம்ராஜ்யத்திரலவனோடொக்க முடிசூடுகையாலே) முடிக்குறியாரான (ஸீதாபிராட்டி பூமப்பிராட்டி- நப்பின்னைப்பிராட்டி, இவர்களோடு) இத்திரு - (ஸாக்ஷால்லக்ஷமியோடொத்தவளென்றும், மண்ணேரன்னவொண்ணுதல் - ஸ்ரீபூமிப்பிராட்டியோடொத்தவளென்றும்,

வும் ஸாம்யத்தாலே யென்னுமல் ஸாம்யஷட்கத்தாலேயென்னது நிருபகத்வம் அநுரூபத்வம் அபிமதத்வம் ஶேஷத்வஸம்பந்தத் வாராபாவம் புருஷகாரத்வம் ப்ராப்யபூரகத்வம் முதலானஸ்வபாவ விஶேஷங்கள் ததஸாதாரணங்களாகையாலே. *

வ்யா. (கஎ) இப்படி, ஆறுப்ரகாரத்தாலே பரிஶுத்தாதம ஸ்வரூபத்துக்கு தத்ஸாம்யமுண்டாகையாலே பிராட்டிதசையிவர்க்கு வந்தேறியல்லாமையை ப்ரகாசிப்பிற்றாராய்நின்றார்கீழ். ஏவம்பூதாகாரத்தாலே பெரிய பிராட்டியாரோடுள்ள ஸாம்யமேயன்றிக்கே தம்முடைய பாவவிஶேஷங்களாலே பகவதபிமததிவ்யமஹிஷிகளான பிராட்டிமார் மூவரோடு மிவர்க்குண்டானஸாம்யம் இவர்பாசுரங்களிலே ப்ரகாசிக்குமென்கிறார்மேல். (உண்ணாதென்று துடங்கி) (க) "உண்ணாதுறங்காதொலி கடலையூடறுத்து பெண்ணாக்கையாப்புண்டு காமுற்றபோதெல்லாம்" என்கிறபடியே, ஜநககுலஸுந்தரியானதன்னைப்பிரிந்தபோது * தீரோதாத்தநாயகனாகையாலே, விகாரஹேதுக் களுண்டானாலும் தைர்யத்தாலே புறந்தோற்றாமலிருக்கும் சக்கரவர்த்தித்திருமகனை (உ) "ந மாம்ஸம் ராகவோ புங்க்தே" "நமாம்ஸம்ராகவோபுஞ்தே" (ந) "அநித்ரஸ்

(க) நா - தி. கக. எ. (உ) ஸ்ரீ - ரா. ஸு-ந்சு. சo. (ந) ஷை - சந.

* தீரோதாத்தநாயகனாவது. நாயகனாயிருப்பான் நான்குவிதம். தீரோதாத்தோ தீரத்ததோ தீரலலிதோ தீரஶாந்தஶ்சேதி" என்று ஸாஹித்யரத்நாகரம் என்னும் அலங்காரஶாஸ்த்ரத்தில் ப்ரதி பாதிக்கப்பட்டதிறே. அவற்றுள் தீரோதாத்தநாயகனாவான்:—"गम्भीरस्सारसम्पन्नः कृपावान् अविकत्थनः। परकीयगुणग्राही धीरोदात्तो निगद्यते" "கம்பீர ஸ்ஸாரஸம்பந்ந: க்ருபாவா நவிகத்தந:| பரகீயகுணக்ராஹீ தீரோதாத்தோ நிகத்யதே" என்கிறபடியிருப்பவன். காம்பீர்யமாவது. ஸந்தோஷம் வருகையில் முகவிகாஸமும் துன்பம்வருகையில் முகச்சுருக்கமுதலியவை யொன்றுமின்றிஸமமாயிருக்கை. ஸாரஸம்பந்நத்வமாவது. ஶாரீரபலபரிபூர்ணனாயிருக்கை. க்ருபாவானாவது. பிறர்துக்கத்தைக்காண்கில் ஐயோவென்றிரங்குகை. அவிகத்தனையாவது - தன்னையொருவர் கொண்டாடுகையில் அதில் கண்வையாமை. பரகுணக்ராஹித்வமாவது - பகையாளியாயினும் பிறர்குணங்களை நன்கறிகையாம். இவையித்தனையும் சக்ரவர்தித் திருமகன்பக்கல் ஸுஸ்பஷ்டமாகக்காணலாம்.

மூ. பின்னை கொலென்கிற ஒப்புத்தென்பால்

பின்னைகொலென்கிற - நப்பின்னைப்பிராட்டியோ வென்னும்படியான, ஒப்பு - ஸாம்யம், தென்பால் - ,

..." "அநித்ரஸ்ஸததம்ராமः" (க) "..." "நைவதம்ஸாங்கமஸகாங்" இத்யாதிப்படியே, ஊணுமுறக்குமுமற்று கடித்தது மூர்ந்ததுமறியாதபடி பண்ணவல்ல வைலக்ஷண்யத்தால் வந்தவீறுடையளாய் ஸர்வேஶ்வரஸாம்ராஜ்யத்திலே யவனேடொக்க முடிசூடுகையாலே முடிக்குறியளான பெரியபிராட்டியாரோடும் (உ) "கிடந்திருந்து நின்றளந்து" என்கிற பாட்டின்படியே, ஸர்வஜ்ஞனுயவாப்த ஸமஸ்தகாமனுன ஸர்வேஶ்வரனை (பஹுப்ரகாரமாக தன்னையநுபவித்தாலும் பர்யாப்தனுகாதபடி பிச்சேற்றவல்லவைலக்ஷண்ய ப்ரயுக்தமான வீறுடையளாய் பெரியபிராட்டியாரோபாதிமுடிக்குறியளான ஸ்ரீபூமிப்பிராட்டியாரோடும் (ங) "ஓர்மாயையினுல்" இத்யாதிப்படியே, நித்யஸூரிகள் ஸமாராதநபரராய்நிற்க அவர்களறியாதபடியத்தையுபேக்ஷித்து தாழ்வுக்கெல்லையான இடக்குலத்திலே க்ருஷ்ணனுய் வந்துபிறந்து தன்னைப்பெறுகைக்கு ஶுல்கமாகவிட்ட ம்ருத்யுஸமங்களானருஷபங்களின் கொம்பினிடையிலே கருமாரிபாய்ந்தாப்போலே தன்னைப் பேணுமல் சென்றுவிழும்படி பண்ணவல்ல வைலக்ஷண்யவீறுடையளாய் முற்பட்ட மஹிஷிகளோபாதிமுடிக்குறியளான நப்பின்னைப்பிராட்டியாரோடும் (ச) "மாயோன்திறத்தினளேயித்திரு" என்று (ரு) "அநந்யாராகவேணாஹம்" "அநந்யாராகவேணுஹம்" என்கிறபடியே, ஸர்வதசையிலுமவன்திற மல்லதறியாளாய் ஸாக்ஷால்லக்ஷ்மியோடு விகற்பிக்கலாம் ஸ்வபாவையான விவளென்றும் (சு) "மண்ணேரன்ன வொண்ணுதல்" என்று, ஸ்ரீபூமிப்பிராட்டியோடொற்ற வைலக்ஷண்யத்தையுடையவளென்றும் (எ) "பின்னைகொல் நிலமாமகள்கொல்திருமகள்கொல்" என்று, நப்பின்னைப்பிராட்டியோ ஸ்ரீபூமிப்பிராட்டியோ பெரியபிராட்டியாரோ வென்றும் சொல்லுகிரபடி யிவர்க்குண்டானஸாம்யம் (அ) "தென்பாலிலங்கைவெங்களஞ்செய்த நம் விண்ணேர்பிரானுர்துழாய் துணையா நங்களைமாமைகொள்வான்வந்துதோன்றி நலிகின்றதே" என்று, சக்கரவர்த்தித்திருமகனைப்பிரிந்து பாதகபதார்த்தங்களாலே நோவுபடுவது (கூ), "வழாநெடுந்துன்பத்தளென்றிரங்காரம்மனே விலங்கைக்குழாநெடுமாடமிடித்த பிரானுர்கொடுமைகளே", என்று, ப்ரணயித்வமில்லையானுல் ஸாமாந்யக்ருபையுமில்லையோ என்று கொடு

(க) ஸ்ரீ-ரா-ஸு-ஙகூ. சக. (உ) தி-வா. உ. அ. எ. (ங) தி-வி. உக. (ச) தி-வா. ச. ச. எ. (ரு) ஸ்ரீ-ரா. ஸு. உக. கரு. (சு) தி - வி, சகூ. (எ) தி-வா. சு. ரு. க0. (அ) தி-வி. எஎ. (கூ) தி - வி. ஙகூ.

மூ. நெடுமோடங்கடுஞ்சிலை யம் பெரியூட்டி நீரெழவெரித்த பெரும்தோற்றத்தாருயிர் காகுத்தன் ஆதியங்காலம் மண்புரைபொன்மாதின்

நெடுமோடம் - கடும்சிலை - அம்பெரி - ஊட்டி நீரெழ - எரித்த - பெரும் தோற்றத்து-ஆருயிர் - காகுத்தன்-ஆதியங்கால-மண்புரை-பொன்மாதின்

மைசொல்லுவது, (க) "காயும்கடுஞ்சிலையென்காகுத்தன்வாரானல்" என்றெதிரிகள்பக்கல் தான்கண்ப்பார்க்கிலும் கண்பாராதவில்லையுடைய காகுத்தன் இத்தசையில் வருகிறிலனென்றுவெறுப்பது, (உ) "இலங்கைநகர் அம்பெரியுய்த்தவர்தாளிணைமேலணிவம்பவிழ் தண்ணந்துழாய் மலர்க்கேயிவள் நம்பும்" என்று, இலங்கையை ஸராக்நியாலே தக்தமாக்கினவர் திருவடிகளில் திருத்துழாயையாசைப்படுவது (ங) "தீமுற்றத் தென்னிலங்கையூட்டினன் தாள்நயந்தயாமுற்றதுற்ருயோ" என்று, இலங்கையையெல்லாம் அக்நிக்குவிருந்திட்டவன் திருவடிகளையாசைப்பட்டநான்பட்டது பட்டாயோவென்று ஸமதுக்கிகளைக் கட்டிக்கொண்டழுவது(ச)"மாறில்போரரக்கன் மதிள்நீறெழச்செற்றுகந்தவேறுசேவகனுர்க்கென்னையுமுளளென்மின்களே" என்றெதிரில்லாதபோரையுடைய ராவணன் தனக்கரணக்விட்ட மதிளைத்துகளாக்கிப்பொகட்ட ப்ரவஹித்த ஸேவகத்தையுடையவர்க்கு ரக்ஷ்யவர்க்கத்திலே நானுமொருத்தியுண்டென்றுசொல்லுங்கோளென்று தூதுவிடுவது (ரு) "களரரக்கன் நகரெரித்தகளிமலர்த்துழா யலங்கல் கமழ்முடியன் கவராதவறிவினல் குறைவிலம்" என்றைஶ்வர்யோத்ததனன ராவணனுடைய நகரத்தை தக்தமாக்கி முடிசூடி வளைய மேந்திருக்கிறவன்விரும்பாதவறிவினலென்னகார்ய முண்டென்று அவனுக்குறுப்பல்லாதத்தையுபேக்ஷிப்பது ( சு ) "காண்பெருந்தோற்றத்தெங்காகுத்தநம்பிக்கென்பூண்புனைமென்முலை தோற்றதுபொற்பே" என்று, கண்ணுக்கினிதாய் அப்பரிச்சேத்ய போக்யமான ஸந்நிவேஶத்தையும் குணபூர்த்தியையுமுடைய சக்கரவர்த்தித் திருமகனுக்கு இவள் தன்னழகையிழந்தாளென்னும்படியவனையாசைப்பட்டழகழிவது ( எ ) "என்னுருயிர்க்காகுத்தன் நின்செய்யவாயொக்கும்வாயன் கண்ணன் கைகாலினன் நின்பசும்சாமநிறத்தன் கூட்டுண்டு நீங்கினன்" ( அ ) "சிறுகிளிப்பெய்தலே யின்குறல் நீமிழற்றேல்" என்று, விஶ்லேஷித்தல், தரிக்கவொண்ணுதபடி எனக்குப்ராணபூதனனசக்கரவர்த்தித் திருமகனென்னோடே கலந்துவைத்து பிரிந்தான் இத்தசையிலேயவனுக்குப்போலியான வுன்வடிவாலே நலிகிறதுக்குமேலே பேச்சாலும் நலியாதேகொள்ளென்று கிளியைப் பார்த்து நிஷேதிப்பதாய்க்கொண்டுபேசின பாசுரங்களிலும் ( கூ ) "ஆதியங்காலத் தகலிடங்கீண்டவர் பாதங்கள் மேலணிபைம் பொர்த்

(க) தி-வா. ரு. ச. ங. (உ) ஷை ௨. உ- அ. (ங) ஷை உ. க. ங. (ச) ஷை சு. க. க0. (ரு) ஷை ச. அ. ரு. (சு) ஷை சு. சு. கூ. (எ) ஷை கூ. ரு. சு. (அ) ஷை (கூ) ஷை ச. உ. சு.

மூ. துகளாடி யெருதேழ்தழீஇச் சறையினாரென்னுமவற்றிலே தோன்றும்.

துகளாடி - ஏறுதேழ்தழி - சறையினர் - என்னுமவற்றிலே - தோன்றும் - ப்ரகாசிக்கும்.

துழாயென்றே ஓதுமாலெய்தனள்" என்னும்படி வராஹகல்பாதியிலே மஹாப்ருதிவியை அண்டபித்தியி நின்றும் விடுவித்து எடுத்தவனுடைய திருவடிகளில் திருத்துழாயென்றே பலகாலும் சொல்லும்படி பிச்சேறுவது, (க) "மண்புரைவைய்ய மிடந்தவராகற்கென் கண்புனை கோதையிழந்ததுகற்பே" என்னும்படி, அவனையாசைப்பட்டறிவிழப்பது, (உ) "ஞாலப்பொன்மாதின் மணாளன்துழாய் நங்கள் சூழ்குழற்கேலப்புனைந்தெனன்னைமார் எம்மைநோக்குவதென்றுகொல்" என்று, ஸ்ரீபூமிப்பிராட்டி செவ்விகொள்ள விட்டுப்பிறந்தவன் சூடின திருத்துழாயை பந்துக்களானவர்களொக்கவே கொண்டுவந்து நங்குழலிலேசூட்டி நம்மைரக்ஷிப்பதென்றோவென்பது (ங) "ஏனமொன்றாய் மண்துகளாடி வைகுந்தமன்னாள்குழல்வாய்விரைபோல் விண்டுகள் வாரும் மலருளவோநும்வியலிடத்தே" என்று, அத்விதீய வராஹமாய் ப்ரளயகதையான பூமியையெடுத்தபோது வடிவிற்பெருமையாலே திருவயிற்றிலே கிடக்கிறபூமி ஒருதுகள்மாத்ர மென்னும்படி நின்றவனுடைய அபதாநத்தை அநுபவித்திருக்கிறவிவள்போக்யதை உபயவிபூதியிலு முண்டோவென்று விசேஷஜ்ஞர்ஸ்லாகிக்கும்படியை ப்ரகாசிப்பதாய்க்கொண்டு பேசினபாசுரங்களிலும் (ச) "எருதேழ்தழீஇக்கோளியார் கோவலனார் குடக்கூற்றனார் தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றேநாளுநாள்நைகின்றது" என்னும்படி, ஏறு தழுவுகைமுதலான வபதாநங்களையுடைய க்ருஷ்ணன் திருவடிகளில் திருத்துழாயை யாசைப்பட்டு நாள்தோறும் சைதில்யத்தை யடைவது (ரு) "சறையினார் துவருடுக்கை கடையாவின்கழிகோல்கைசறையினார்க்கவராத தளிர்நிறத்தால் குறைவிலம்" என்று, கோபவேஷதரனாய் ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்துக்காகத்தன்னுடம்புபேணாமல்திரியும் க்ருஷ்ணன் விரும்பாதஸ்நிக்தமான நிறமெனக்கு வேண்டா மென்பதாய்ப்பேசின பாசுரங்களிலும் தோன்றுமென்னபடி. இத்தால் திவ்யமஹிஷிகள் மூவரோடிவர்க்குண்டான ஸாம்யம் ஜநககுலஸுந்தரியான பிராட்டிக்கஸாதாரணமான ராமாவதாரததபதாநங்களிலும் ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கஸாதாரணமான வராஹாவதாரததபதாநங்களிலும் நப்பின்னைப்பிராட்டிக் கஸாதாரணமான க்ருஷ்ணாவதாரததபதாநங்களிலும் அந்தபிராட்டிமார்தங்களைப்போலே அதிமாத்ரப்ரவணராயருளிச்செய்தவவ்வவதிவ்யஸூக்திகளிலே அபிவ்யக்தமென்றதாயிற்று. *

(க) தி-வா. ரு. ரு. ரு. (உ) தி-வி. சo. (ங) ஷை ருரு. (ச) தி-வா. ச. உ. ரு. (ரு) ஷை ஷை அ. ச.

மூ—(௩அ) இவர்கள் தேடிநிற்கப்பொய்கை முதுமணல் முல்லைப்பந்தல்முற்றும் மச்சொடுமாளிகையவ்வவிடம்புக்குவாரிச்சிதைத்துப் பறித்துக்கிழித்துக்கோயின்மை குறும்புசெய்து

(அ) இவர்கள் - இப்பிராட்டிமார், தேடிநிற்க - தேடிக்கொண்டிருக்க, பொய்கை - ஸரஸ்ஸு - முதுமணல்-ஸைகதஸ்தலம், முல்லைப்பந்தல் - மல்லிகாவலயம், முற்றம் - திருமுற்றம், மச்சொடுமாளிகை - மச்சுமாளிகைமுதலான, அவ்வவிடம்புக்கு - அவ்வவஸ்தலங்களில் ப்ரவேசித்து, வாரி - (பரிதாநங்களை) வாரியும், சிதைத்து - (சிற்றில்) சிதைத்தும், பரித்து - (பந்து) பரித்தும், கிழித்து - (கச்சொடுபட்டைக்) கிழித்தும், கோயின்மை - தன்ஸ்வாதந்த்ர்யத்தையும், குரும்பு - ஶாட்யத்தையும் செய்து - பண்ணினவனாய்,

வ்யா. (௩அ) இப்படி ப்ரதானமஹிஷிகளான விவர்களோடுள்ள ஸாம்யமேயன்றிக்கே, இவர்களையுபேக்ஷித்தும்தங்களையுகக்கும்படியவனுக்கபிமதைகளான திருவாய்ப்பாடியில் பெண்களுடையவும் அவர்களையும் தங்கள் பேச்சழகாலே யவன்மறக்கும்படிபண்ணும் ஸ்ரீமதுரையில் பெண்களுடையவும் நரகவதாநந்தரம் பரிக்ரஹித்த ஸ்ரீமத்வாரகையில் பதினாறுயிரம்தேவிமாருடையவும் பாவங்க ளிவர்க்குண்டென்னுமிடம் இவர்தம்பேச்சிலே தோன்றுமென்கிறார். (இவர்கள் தேடிநிற்கவென்று துடங்கி) அதாவது :— (க) "தேடித்திருமாமகள் மண்மகள்நிற்க" என்கிறபடியே, ப்ரதாந மஹிஷிகளானவிவர்கள் தன்னைத்தேடிநிற்கும்படி யிவர்களையுபேக்ஷித்து (உ) "இப்பொய்கைக்கெவ்வாறுவந்தாய்" (௩) "முதுமணற்குன்னேறி" (௪) "முல்லையின்பந்தர் நீழல் மன்னியவளைப்புணரப்புக்கு" (௫) "முற்றத்தூடுபுகுந்து" (௬) "மச்சொடுமாளிகையேறி" (எ) "அவ்வவிடம்புக்கவ்வாயர் பெண்டிற்கணுக்கனாய்" என்கிறபடியே, அவர்கள் ஜலக்ரீடைபண்ணுமிடம் விளையாடுமிடம் மற்றுமவர்களிச்சாநுகுணமாக தனியவும் திரளவுமிருக்குமிடங்களான பொய்கைமணற்குன்றம் முல்லைப்பந்தல் முற்றம் மச்சொடுமாளிகை அவ்வவஸ்தலங்களிலேசென்றுபுக்கு துகில்வாரியும் சிற்றில்சிதைத்தும் பந்துபரித்தும் துகில்பற்றிகச்சொடுபட்டைக்கிழித்து" என்கிறபடியே, குடைந்து நீராடுகிறவர்கள் கூறைகளைவாரிக்கொள்வது, இட்டமாய்விளையாடுகிறவர்களிழைத்த சிற்றிலைச்சிதைப்பது, பந்துகழல்முதலானலீலோபகரணங்களைப்பறிப்பது, அவர்களோடே இட்டீடுகொண்டு பட்டுக்கள் கச்சுக்கள் எட்டினவற்றைப்பற்றிவலித்து கிழிப்பதாய்" (அ) "கோயின்மை செய்து கன்மமொன்றில்லை" (௯) "குறும்புசெய்வானோர்மகனைப்பெற்ற" என்னும்படி நியாமகரற்ற ஸ்வதந்த்ரர்செய்யுமத்தைம் நியாமகர்கீழ

(க) (உ) நாச்சி-தி. ௩. உ. (௩) பெரியா-தி. க. கO. அ. (௪) பெருமா-தி. ௬. அ. (௫) நாச்சி-தி. உ. ௯. (௬) பெரியா-தி. உ. எ. ௩. (எ) பெரியா-தி. ௩. உ. ௫. (அ) தி-வா. ௬. உ. ௬. (௯) நாச்சி - தி. கஉ. ௩.

மூ. அல்லல்விளைத்துக்கவருமுகக்கு நல்லவர் முழுசியாவரென்றும் தென்மொழிகளாலே கோகுலத்தைமறப்பிக்கும் நகரஸ்த்ரீகள் நரகனைத்துலைத்துக்கவர்ந்த பதினாறு பல்லாயிரமெண்ணிறந்தார்பாவம்

அல்லல்விளைத்து - ஆரவாரம்விளைத்து, கவரும்-விரும்பிபுஜிக்கும், உகக்கு நல்லவர் - ஆநனந்தத்துக்கு விஷயமான பஞ்சலக்ஷங்குடிப்பெண்கள், முழுசி, ஆவர் - இவ்விரண்டு பாசுரங்களிற்படியே, தென்மொழிகளாலே - உக்திசாதுர்யங்களாலே, கோகுலத்தை - திருவாய்ப்பாடியை, மறப்பிக்கும் - விஸ்மரிப்பிக்கும், நகரஸ்த்ரீகள் - மதுராபுரிஸ்த்ரீகள், நரகனைத்தொலைத்து - நரகனைநிரஸித்து, கவர்ந்த - பரிக்ரஹித்த, பதினாறு - பல்லாயிரம், எண்ணிறந்த - இப்பாசுரங்களின்படியே,

டங்காமல்மூலையடியே நடத்துவார் செய்யுமற்றையும்செய்து" (க) "அல்லல்விளைத்தபெருமான்" என்கிறபடியே, பேராரவாரம்விளைத்து, (உ) "ஆயர்பாடிக்கவர்ந்துண்ணும்" என்று, திருவாய்ப்பாடியில் பெண்களையடைய முற்றூட்டாக விரும்பிபுஜிக்கும், என்கிறபடியே, அவன்விரும்பப்படுமவர்களாய் அத்தாலே" (ங) "நீயுகக்குநல்லவர்" என்னும்படி, அவனுகப்புக்குவிஷயமானவைலக்ஷண்யத்தையுடையவர்களென்று நிரூபகமாயிருக்கிற திருவாய்ப்பாடியில் பெண்களுடையபாவம் இவர்க்குண்டென்னுமிடம் க்ருஷ்ணவிரஹமாற்றமாட்டாமல் (ச) "దుష్టకాళీయతిష్ఠాత్ర కృష్ణోహమితిచాపరా । కృష్ణోహమేషలలితం వ్రజామ్యాలోక్యతాంగతిః" "துஷ்டகாளீயதிஷ்டாத்ரக்ருஷ்ணோஹமிதிசாபரா। க்ருஷ்ணோஹமேஷலலிதம் வ்ரஜாம்யாலோக்யதாங்கதிః" இத்யாதிப்படியே, அவர்களநுகரித்தாப்போலே, இவரவனைப்பிரிந்தாற்றாமையாலே அநுகரித்த (ரு) "கடல்ஞாலத்திலும்" அந்யவிஷயங்களிலே பரப்பனைகையாலே அபேக்ஷிதஸமயத்தில் வாரமல் அவன்விளம்பித்துவந்தால் அவர்களூடுமாப்போலே இவரவனோடின(சு) "மின்னிடைமடவாரிலும்" பகலெல்லாம் பசுமேய்க்கப்போயவற்றினுடனேவரும் க்ருஷ்ணனை பசுக்களின்முற்கொழுந்தில்காணாதே பிற்குழையிலேவருகிறவவன் வரப்பற்றாமல் ஒருஸந்த்யையிலே பஞ்சலக்ஷங்குடியில்பெண்களும் பாதகபதார்த்தங்களுக்கிடைந்து கூப்பிட்டாப்போலே யிவர்கூப்பிட்ட மாலைப்பூசலான (எ) "மல்லிகைகமழ்தென்றலிலும்" இரவெல்லாம் க்ருஷ்ணஸம்ஶ்லேஷம் பண்ணியிருந்து பொழுதுவிடிந்தவாறே அவன் பசுமேய்க்கப்போகுங்காலமென்னும் நினைவாலே அவனை யணைத்துக்கொண்டிருக்கச்செய்தேபோனாகவே கருதி பாதகபதார்த்தங்களும் ஸம்ஶ்லேஷதசையில் அவன்பரிமாற்றங்களும் புறம்புமுள்ளும்நின்றுநலிகிறநலிவை அவர்களவந்தனக்குச் சொல்லிகூப்பிட்டாப்போலே யிவர்கூப்பிட்ட காலைபூசலான(அ) "வேய்

(க) நாச்சி - தி-கங. க0. (உ) ஷை-கச. உ. (ங) தி-வா. க0. ங. அ. (ச) வி-பு. ரு. கங. உசு. (ரு) தி - வா. ரு. சு. க. (சு) ஷை. சு. உ. க. (எ) ஷை. கூ. கூ. க. (அ) ஷை. க0. ங. க.

மூ. கடல்ஞாலம் மின்னிடை மல்லிகை வேய்மரு பேய்முலை
முனிந்து மற்பொருவிறற்கஞ்சனை மங்கனூற்ற

அநேக ஸஹஸ்ரஸங்க்யைஹளானதேவிமாருடையவும், பாவம் - பாவ
மானதிவற்குண்டென்னுமிடம் கடல்ஞாலம் முதல் தீர்பாரைவரையில்,

ய்மருதோளிணையிலும், தனக்கு பாதகங்களாய்வந்து கிட்டினபூதனு சகட யமுளார்ஜுநாதிகள்நினைவையவைதன்னோடேபோக்கி தன்னை நமக்காக நோக்கித்தந்த உபகாரகனை நான்கிட்டுவதென்றோ? என்றும், அப்படிசெய்த க்ருஷ்ணனாகிற உபகாரகனுக்கு என் ஸ்த்ரீத்வத்தையிழந்தேனென்றும் சொன்ன (க) "பேய்முலையுண்டு முனிந்து சகடமுதைத்த" என்கிறபாட்டுக்களிலும் தோன்றும். ஸ்ரீமாலாகாரரும் கூனியும்கொடுத்த திருமாலையையும் சாந்தையும் சாத்திக்கொண்டு ராஜமார்க்கத்தாலெழுந்தருளி குவலயாபீட நிரஸநம்பண்ணிநிற்கிறபோது (உ) "முழுசிவண்டாடிய" (௩) "ஆவரிவை செய்தறிவார்" என்கிறபாட்டுக்களில் சொல்லுகிறபடியே, ஒப்பனையழகிலும் வடிவழகிலும் குவலயாபீடநிரஸநமாகிற சேஷ்டிதத்திலும்தோற்று (ச) "సఖ్యఃపశ్యతకృష్ణస్య ముఖమత్యరుణేక్షణమ్ । గజయుద్ధకృతాయాస స్వేదాంబు కణికాచితమ్" "ஸக்யஃபஶ்யத க்ருஷ்ணஸ்யமுகமத்யருணேக்ஷணம்। கஜயுத்தக்ருதாயாஸஸ்வேதாம்புகணிகாசிதம்" இத்யாதிப்படியே, அந்யோந்யம் தங்களிலே பேசுகிற (ரு) "மழறுதேன்மொழி" என்கிறபடியே, மழலைத்தேன்போலே யினிதானப்பேச்சுக்களாலே (கூ) "మధురాంప్రాప్యగోవిన్దః కథంగోకులమేష్యతి । నగర స్త్రీకలాలాప మధుశ్రోత్రేణపాస్యతి" "மதுராம் ப்ராப்யகோவிந்தஃகதம்கோகுலமேஷ்யதி। நகரஸ்த்ரீகலாலாபமதுஶ்ரோத்ரேண பாஸ்யதி" என்று கோகுலத்தில் பெண்கள் பேசும்படியவன் கோகுலத்தை மறக்கப்பண்ணும் ஸ்ரீமதுரையில்பெண்களுடைய பாவமிவர்க்குண்டென்னுமிடம் (எ) "மற்பொருதோளுடைமாயப்பிரானுக்கென்கற்புடையாட்டி யிழந்ததுகட்டே" என்று ப்ரபலரான மல்லரோடே தோளிற்சாந்தழியாதபடி மல்லைப்பொருத ஆஶ்சர்யபூதனாய் ஸ்ரீமதுரையில் பெண்களுக்கவ்வழகையுபகரித்தவனுக்கு அறிவுடையளாயிருக்கிறவென்பெண் தனக்குள்ள தடங்கலுமிழந்தாளென்றும், (அ) "விறற்கஞ்சனைவஞ்சனைசெய்தீர் உம்மைத்தஞ்சமென்றிவள்பட்டனவே" என்று, பெருமிடுக்கனைகம்ஸனை அவன்வஞ்சனையவனோடேபோம்படிபண்ணினவரே! மதுரையில்பெண்களுக்குதவின உம்மையேதனக்குத்தஞ்சமென்றிவள்பட்டவெள்ளமென்தானென்று தமக்குப் பரிவரானவர்கள் சொன்னபாசுரத்தாலே மல்லரையும் கம்ஸனையும் நிரஸித்தக்ருஷ்ணனை அச்சுவடோடேயனுபவிக்க வாசைப்பட்டமையைப்

(க) தி-வா. ரு. ௩. அ. (உ) பெ-மொ. உ. அ. எ. (௩) ஷி ௩. ௩. எ. (ச) வி-பு. ரு. உ0. ரு௩. (ரு) தி-வா. கூ. உ. ரு. (கூ) வி-பு. ரு. க௮. க௩. (எ) தி-வா. கூ. கூ. ௪0. (அ) தி-வா. உ. ச. அ.

மூ. வாயுந் தீர்ப்பாரென்னுமவற்றிலேதோன்றும்

என்னுமவற்றிலே - என்கிற திருவாய்மொழிகளிலும், பாசுரங்களிலும், தோன்றும் - ப்ரகாசிக்கும்.

பேசினபாசுரத்திலேதோன்றும். (க) நரகனைத்துலைத்தகரதலத்த" என்றும், (உ) "நரகன்தன்னைச்சூழ்போகி வளைத்தெறிந்து கன்னிமகளிர் தம்மைக்கவர்ந்த" என்றும் சொல்லுகிறபடியே, நரகாஸுரன் கன்னிகைகளாகக்கொண்டுவந்து திரட்டிவைக்க, அவனைநிரஸித்துப் பொகட்டுபரிக்ரஹித்தவர்களாய்(ங)"பதினாறுமாயிரவர் தேவிமார்"(ச)"பல்லாயிரம் பெருந்தேவிமார்"(ரு)"எண்ணிறந்த பெருந்தேவிமார்"என்கிறபடியே, ஆயிரமிரண்டாயிரமல்லாமையாலே பல்லாயிரமென்றும் எண்ணிறந்தவென்றும் சொல்லப்படுவாராய்(சு) "[Grantha]" "ஷோடஶஸ்த்ரீஸஹஸ்ராணி"என்று, புராணஸித்தரான பதினாறாயிரம் தேவிமார்பாவமிவர்க்குண்டென்னுமிடம் (எ) "நூற்றுவரையன்றுமங்க நூற்றநிகரில் முகில்வண்ணன்னேமியானென்னெஞ்சம் கவர்ந்தனவூழியான்" என்று, துர்யோதனாதிகள் மண்ணுண்ணும்படி மந்த்ரித்தக்ருஷ்ணனுக்கு நெஞ்சுபறிகொடுத்தமை சொன்னதிலும், துர்யோதனாதிகளை நிரஸிக்கைக்காக அவனெழுந்தருளினபோதவர்கள் பிரிவாற்றாமையாலே கண்ணுஞ்சுழலையிட்டு (அ) "[Grantha] [Grantha]" "குரரிவிலபஸித்வம் வீதநித்ராநஶேஷேஸ்வபிதிஜகதிராத்ர்யாமீஶ்வரக்ரஸ்தபோதே। வயமிவஸகிகச்சித்காட நிர்வித்தசேதாநயநநளிநஹாராஸோதாரலீலேக்ஷணேந" இத்யாதிகளாலே ப்ரலாபித்தாப்போலே, நாரை அன்னில் துடக்கமானவற்றுக்கு வெளுப்பு விரஹக்கூப்பீடு முதலானவை நியதஸ்வபாவமென்றறியாதே தமக்குப்போலே பகவத்விரஹஜமான வைவர்ண்யாதிகளாகக்கருதி அவற்றுக்குமாகத்தான்நோவுபட்டு ப்ரலாபித்த (கூ) "வாயுந்திரையுகளிலும்" (க0) "தேர்ப்பாகனார்க்கிவள் சிந்தை துழாய்த்திசைக்கின்னதே" என்று, ஆஶ்ரிதர்க்காக ஸாரத்யம் பண்ணினவனையநுபவிக்கைக்காக இவளந்தஃகரணங்கலங்கி அறிவுகெடுகிறதென்றுதுடங்கி (கக) "வண்டுவராபதி மன்னனையேத்துமினேத்துதலும் தொழுதாடுமே" என்று, ஸ்ரீமத்வாரகைக்கு நிர்வாஹகனானவனை மங்களாஶாஸநம்பண்ண, இவள் நோவுபரிஹ்ருதமாமென்று தலைக்கட்டின (கஉ) "தீர்ப்பாரையாமினியிலும்" தோன்றுமென்றபடி. *

(க) பெ - மொ. க0. கூ. ச. (உ) பெரியா-தி. ச. ங. ங. (ங) ஷை. ஷை. கூ. ச. (ச) ஷை. ஷை. க. சு. (ரு) ஷை. ஷை. உ. க0. (சு) ஷை. (எ) தி - வா.
(அ) ஸ்ரீ-பாக. க0. கூ0. கச. (கூ) தி-வா. உ. க. க. (க0) ஷை. க. (கக) ஷை. க0. (கஉ) ஷை. க.

மூ—(நகூ) இரானெனில் நசவாகக்குழைத்தவன் பின்றொடரவிருந்த
வன்சிறையிலும் விதிதன்புணையென்று

(அ) இரானெனில் - சக்கரவர்த்தித்திருமகன் தம்முள்) இராளெ
னில், நசவாக - (தன்விஶ்லேஷத்தில் ஸத்தாஹாநிபிறக்கும்படியாக,
குழைத்தவன் - ஒருநீராகக்கலந்தவன், பின்துடர - அதிவ்யாமுக்தனுய்
தாமிருந்திடத்தேவரும்படி, இருந்த - (தேவதாஸ்த்ரீகள் சிறையறப்பி
ராட்டி சிறையிருந்தாப்போலே ஸம்ஸாரிகள் சிறையைவிடுவிக்கைக்காக
வீஶ்வரன் ஸம்ஸாரத்திலேவைக்க) இருந்த, வஞ்சிறையிலும் - (க்ரூர
மான ஸம்ஸாரமாகிற) சிறையிருப்பிலும், விதிதன் - (ஶரணாகதவத்ஸல
ராக ப்ரஸித்தரான பெருமாளோடுறவுபண்ணென்று ராவணனுக்கு பிரா
ட்டிஹிதோபதேஶம்பண்ணினப்போலே, புணவன் - ஸம்ஸாராப்திதி
தீர்ஷுக்களுக்குநிஸ்தரணோபாயம், என்று - அவனென்றிவருமுபதே
சிக்கையாலும்,

வ்யா. (நகூ) இப்படி ப்ரதாநமஹிஷிகளோடும் மற்றும் பகவத்ப
ரிக்ரஹமுடையாரோடும் இவர்க்கு ஸாம்யமுண்டேயாகிலும், அல்லாதா
ரெல்லாமிவர்க்கொருவகைக்கொப்பா மித்தனையாகையாலே ஸர்வதாஸா
ம்யம் ஜநககுலஸுந்தரியான பிராட்டியோடேயென்கிறார்மேலொரு
சூர்ணையாலே (இரானெனில் நசவாகக்குழைத்தவன் பின்துடரவிருந்த
வஞ்சிறையிலும்) (க) "ந ச ஸீதா" "நசஸீதா" இத்யாதி ஶ்லோகத்தில்
படியே, ஜலாதுத்ருதமான மத்ஸ்யம்போலே விஶ்லேஷத்தில் ஸத்தா
ஹாநிபிறப்பிக்கும்படி (உ) "మనస్వీతద్గతః" "மநஸ்வீதத்கதஃ" என்று
ஜாதிக்குணங்கள் த்ரவியத்துக்கு ப்ரகாரமாய் பிரிக்கவொண்ணதபடி
யிருக்குமாப்போலேபிரிக்கவொண்ணதபடி ஒருநீராகக்கலந்த சக்கரவ
ர்த்திதிருமகன் (ங) "உண்ணதுறங்காதொலிகடலை யூடறுத்து"
லங்காத்வாரத்தளவும் பின்துடர்ந்துவரும்படியாக (ச) "தனிச்சிறை
யில் விளப்புற்ற" என்கிறபடியே, ஒருத்திச் சிறையிருந்து ரக்ஷிக்கும்
படியேயென்று, லோகமடையக்கொண்டாடும்படி, தேவஸ்த்ரீகள் சிறை
யைவிடுவிக்கைக்காக பிராட்டிலங்கையிலே தனிப்பட்டு சிறையிருந்தா
ப்போலே" (ரு) "மராமரமெய்த மாயவனென்னுளிராளெனில் பின்
னையாளெட்டுவேனோ" என்று, சக்கரவர்த்தித்திருமகன், என்பக்கலிலே
நின்று மகலுமாகில் பின்னை நான் தொங்குவனோவென்று, விரஹத்தில்
ஸத்தாஹாநி பிறக்கும்படியாக (சு) "இலங்கைசெற்றா யுன்னை என்னு
ள்ளே குழைத்தவெம்மைந்தா" என்கிறபடியே, ஏகதத்வமென்னலாம்
படி ஸம்ஶ்லேஷித்தவன், பிரிவில் தம்மாற்றாமை குளப்படியாம்படி கட
ல்போன்ற வாற்றாமையோடே விண்ணுலகம் தரவிரைந்து தாமிருந்தவி
டத்தேறவரும்படி (எ) "வன்சிறையிலவன்வைக்கில்" என்கிறபடியே

(க) ஸ்ரீ-ரா. அ. ருங. நக. (உ) ஸ்ரீ-ரா. (ங) நாச்சி-தி. கக. எ. (ச) தி-வா. ச. அ. ரு. (ரு) டை. க. எ. கூ. (சு) டை. உ. சு. கூ. (எ) டை. க. ச. க.

மூ. ஜீவிதாதிகளாற் குறைவின்றிமாயும்வகைவிஷஶஸ்த்ரங்கள் தேடிவில்வலவாஹாயென்று

ஜீவிதாதிகளால் குறைவின்றி - ஶேஷிவிஷயவிநியோகத்துக்குறுப்பல்லாத ஜீவிதாதிகளையுபேக்ஷிக்கையாலும், மாயும்வகை விஷஶஸ்தரங்கள் தேடி - ஆற்றாமையின்கனத்தாலே மரணஸாதனங்களைத்தேடினாப்போலே முடியும்வகை தேடுகையாலும், வில்வலவாஹாயென்று - ஹாராம! என்றுகூப்பிட்டாப்போலே ரக்ஷகரான பெருமாளுடைய வீரப்பாட்டைச்சொல்லி கூப்பிடுகையாலும்,

ஸம்ஸாரிகள் சிறையைவிடுவிக்கைக்காக அவன்ஸம்ஸாரத்திலே வைக்க இருந்தவஞ்சிறையிலும் (விதிதன்புணையென்று) அச்சிறையிருப்பிலேயுமவள் விமுகனானராவணனுக்கு (க) "విదితస్సహిధర్మజ్ఞ శ్శరణాగతవత్సలః । తేనమైత్రీభవతుతే యదిజీవితుమిచ్ఛసి" "விதிதஸ்ஸஹிதர்மஜ்ஞஶ்ஶரணாகதவத்ஸலஃ । தேநமைத்ரீபவதுதே யதிஜீவிதுமிச்சஸி" என்று, நீ ப்ராணனோடேயிருக்கவேண்டியிருந்தாயாகில், ஶரணாகதிதர்மஜ்ஞருமாய் ஶரணாகதவத்ஸலருமாக ப்ரஸித்தராயிருக்கிற பெருமாளோடே உறவுபண்ணென்று ஹிதோபதேஶம் பண்ணினாப்போலே இவரும், விமுகரான ஸம்ஸாரிகளுக்கு (உ) "புணைவன்பிறவிக்கடல் நீந்துவார்க்கு" என்று, ஸம்ஸாரஸமுத்ரதிதீர்ஷுக்களுக்கு தன்னிஸ்தாரணோபாயமவனென்று ஹிதோபதேஶம் பண்ணுகையாலும் (ஜீவிதாதிகளால்குறைவின்றி) அவள்,(ங) "నహిమేజీవితేనార్థో నైవార్థైర్నచభూషణైః । వసన్త్యారాక్షసీమధ్యే వినారామంమహారథమ్" நஹிமே ஜீவிதேநார்த்தோநைவார்த்தைர் நசபூஷணைஃ । வஸந்த்யாராக்ஷஸீமத்யே விநாராமம் மஹாரதம்" என்று, பெருமாளைப் பிரிந்து ராக்ஷஸிகள் நடுவேயிருக்கிறவெனக்குப்ராணாதிகளாலென்ன ப்ரயோஜநமென்று தத்விநியோகத்துக்குப்புறம்பானவற்றை யுபேக்ஷித்தாப்போலே இவரும் (ச) "மாணாளன் கவராத மணிமாமைகுறைவிலம்" என்று துடங்கி, அத்தலைக்குறுப்பல்லாத வாத்மாத்மீயங்களையுபேக்ஷிக்கையாலும், (மாயும் வகைவிஷஶஸ்த்ரங்கள்தேடி) அவளாற்றாமையினதிஶயத்தாலே (ரு) "విషస్యదాతానహిమేస్తికశ్చిచ్ఛస్త్రస్యవావేశ్మనిరాక్షసస్య" "விஷஸ்யதாதா நஹிமேஸ்திகஶ்சிச்சஸ்த்ரஸ்யவாவேஶ்மநிராக்ஷஸஸ்ய" என்று, உயிர்க்கொலையாக்கி வைத்தவனுடைய க்ரஹத்தில் நற்கொலையாக்குவதித்தனை விஷந்தருவாரில்லையோ? விஷம்போலே சிறுதுபோது நின்றுகொல்லுகையன்றிக்கே அப்போதே முடிப்பதொரு ஶஸ்த்ரம் தருவாரில்லையோவென்று முடியும் வகை தேடினாப்போலே இவரும் (சு) "மாயும்வகையறியேன்", என்று, முடியும்வகை தேடுகையாலும், (வில்வலவாஹா) என்று, அவள்

(க) ஸ்ரீ-ரா-ஸு. உக. கக. (உ) தி-வா. உ. அ. க. (ங) ஸ்ரீ-ரா-ஸு. உகூ. ௪. (ச) தி-வா. ௪. அ. க. (ரு) ஸ்ரீ-ரா-ஸு. உ அ. கரு. (சு) தி-வா. ரு. ௪. ங.

சூ. இரக்கமெழாக்கொடுமைகள்சங்கித்தென்னையும் ஜீவந்தீமெ ன்றருள்விட்டுச்சுடரையடைந்து

இரக்கமிழாக்கொடுமைகள் ஶங்கித்து - தம்மாற்றாமைக்குதவாமையா லே நிர்க்ருணனென்று சங்கிக்கையாலும், என்னையும் ஜீவந்தீமென்றருள் விட்டு - ஸத்தைபோவதற்கு முன்னேவந்துநோக்கிக்கொள்ளும்படி செ ய்யவேணுமென்று தூதுவிடுகையாலும், சுடரையடைந்து - ப்ரபாப்ரபா வான்களுக்குப்போலே ப்ருதகுபலப்த்யபாவத்தைப்பேசுகையாலும்,

அதிமாத்ரதுக்கிதையாய் ரக்ஷகரானபெருமாளுடைய பௌர்யாதிகளை நினைத்து (க) "హా రామ" "ஹாராம!" என்று, கூப்பிட்டாப்போலே, இவ ரும், (உ) "புணராநின்றமரமே ழன்றெய்த வொருவில்வலவாவோ" என்று, அவன்வீரப்பாட்டைச் சொல்லிக்கூப்பிடுகையாலும், (இரக்க மிழாக்கொடுமைகள் ஶங்கித்து) அவள், தன்னாற்றாமைக்குதவவந்து முக ங்காட்டாமையாலே (ங) "ఖ్యాతః ప్రాజ్ఞః కృతజ్ఞశ్చ సానుక్రోశశ్చ రాఘవః। సద్వృత్తో నిరనుక్రోశ శ్శంకే" "க்யாதஃப்ராஜ்ஞஃக்ருதஜ்ஞஶ்சஸாநுக்ரோஶ ஶ்சராகவஃ। ஸத்வ்ருத்தோநிரநுக்ரோஶஶ்ஶங்கே" என்று பெரு மாளை நிர்க்ருணராக ஶங்கித்தாப்போலே இவரும் (ச) "இரக்கமெ ழீர் (ரு) "வழாநெடுந்துன்பத்தளென்றிரங்காரம்மனோ இலங்கைக் குழாநெடுமாட மிடித்தபிரானார் கொடுமைகளே" என்று, இத்தசையில் க்ருபைபண்ணுமலிருக்கிற கொடுமையாலே (சு) "அறிவொன்றும் சங் கிப்பன்" என்கிறபடியே, நைர்க்ருண்ய ஶங்கைபண்ணுகையாலும் (என் னையும்ஜீவந்தீமென்றருள்விட்டு) அவள் (எ) ""జీవన్తీం మాం యథా రామ స్సంభావయతి కీర్తిమాన్। తత్త్వయా హనుమన్వాచ్యో వాచా ధర్మమవాప్నుహి" "ஜீவந்தீம் மாம்யதர்ராமஸ்ஸம்பாவயதிகீர்த்திமாந்। தத்வயாஹநுமங்வாச்யோவாசா தர்மமவாப்நுஹி" என்று, ஸத்தையோடே கிடக்கிறவென்னை, இஸ்ஸத் தைபோவதற்கு முன்னே யாதொருபடி பெருமாள்வந்து நோக்கிக் கொள்வர் அப்படியவர்க்கு விண்ணப்பம் செய்யென்று தூதுவிட்டாப் போலே இவரும் (அ) "எறுசேவகனார்க்கென்னையுமுளளென்மின்க ளே"என்றென்ஸத்தைகிடந்தமையை அவர்க்கறிவியுங்கோளென்று ஆற் றாமை தோற்றத்தூது விடுகையாலும், (சுடரையடைந்து) அவள், (கூ) "అనన్యా రాఘవేణాహం భాస్కరేణ ప్రభా యథా" "அநங்யாராகவேணா ஹம்பாஸ்கரேணப்ரபாயதா" என்று, ஆதித்யனோடுப்ரபைபோலே நான்பெருமாளோடநங்யையாயிருப்பனென்றாப்போலே இவரும் (கo) "அரக்கியை மூக்கீர்ந்தாயை, சுடரை, அடியேனடைந்தேன் முதல் முன்னமே" என்று, அநாதியான ப்ரகாரதயாஶேஷத்வத்தாலே அவ

(க) ஸ்ரீ-ரா-ஸு-உஅ. எ. (உ) தி-வா. சு. கo. ரு. (ங) ஸ்ரீ-ரா-ஸு. உசு. கஉ. (ச) தி-வா. உ. ௧. ங. (ரு) தி-வி. ஙசு. (சு) தி-வா. (எ) ஸ்ரீ-ரா-ஸு. ஙக. கூ. (அ) தி-வா. சு. க. ௪o. (கூ) ஸ்ரீ-ரா-ஸு. உக. கரு. (கo) தி - வா. உ. ங. சு.

மூ. அகலகில்லாமுற்றுவமை பெருமகளோடே.

மூ—(சு0) பிரியிலிலேனுக்கிளங் கோவுமக்குளத்தில் மீனிறே.

அகலகில்லா - க்ஷணகாலமும்பிரியசக்தனல்லேனென்கையாலும், முற்றுவமை - ஸர்வதாஸாத்ருஶ்யம், பெருமகளோடே - பெரியபிராட்டியோடே.

(அ) பிரியில் - விஶ்லேஷிக்கில், இலேனுக்கு - இலராகைக்கு, இளங்கோவும் - (பின்துடர்ந்த) இளையபெருமாளும், அக்குளத்தில் அந்தஜலத்தில், மீனிறே - மத்ஸ்யமிறே.

ளோடு தாம்நித்யஸம்யுக்தராகப் பேசுகையாலும் (அகலகில்லா) அவள், (க) "அகலகில்லே னிறையுமென்றலர்மேல் மங்கையுறைமார்பா" என்கிறபடியே, உன்னைக்ஷணகாலமும் அகலஶக்தையல்லே னென்னுமாப் போலே இவரும், (உ) "அடியேனுனபாத மகலகில்லே னிறையும்" என்றுன்னைக்ஷணகாலமும் பிரியஶக்தனல்லேனென்கையாலும் (முற்றுவமைபெருமகளோடே) இவர்க்குளர்வதாஸாத்ருஶ்யம் (ங) "பெருமகள் பேதைமங்கை" என்கிற பெரியபிராட்டியாரோடே யென்னபடி. 'இராளெனில் நசவாக' என்றுதுடங்கி, "அகலகில்லா" என்று தலைக்கட்டுகையாலே, ஜீவிதாதிகளால் குறைவறுதிமுதலாக ஆள்விடுகையீறாக நடுச்சொன்னவையும் விரஹதுக்காஸஹத்வகார்யங்களாகையாலும், பிறியில்தரியாமையிறேயிச்சூர்ணையிலே ப்ராசுர்யேண ப்ரதிபாதிக்கப்பட்டது. *

வ்யா. (சு0) இப்படி பிராட்டியோபாதிபிரியில்தரியாமையிவரொருவருமேயோ? பின்னையுமுண்டோவென்னுமாகாங்க்ஷையிலேயருளிச்செய்கிறார். (பிரியிலிலேனுக்கிளங்கோவுமக்குளத்தில்மீனிறே) என்று அதாவது :—நிருபாதிகஶேஷியானவனைப்பிரியில் (ச) "நின்னலாலிலேன்காண்" என்றிலராகைக்கு (ரு) "நேரிழையுமிளங்கோவும்பின்பு போக" என்கிறபடியே, பிராட்டியோபாதிபின்துடர்ந்துபோனஇளையபெருமாளும்; நிறுத்திப்போவதாகபெருமாளருளிச்செய்தபோது (சா) "ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராகவ । முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ" "நசஸீதாத்வயாஹீநாநசாஹமபிராகவ। முஹூர்த்தமபிஜீவாவோஜலாந்மத்ஸ்யாவிவோத்ருதௌ" என்கையாலே, அந்த ஜலத்தில் மத்ஸ்யமிறேயென்கை. இத்தால், பிராட்டியைப்போலேபிரியில் முடிக்கைக்கு இளையபெருமாளுமிவருமொக்குமென்றதாயிற்று. *

(க) தி-வா-, சு. க0. க0. (உ) ஷெ-கூ. (ங) பெ-மொ. ச. ரு. ரு. (ச) தி-வா உ. ங. எ. (ரு) பெருமாள். தி. கூ உ. (சா) ஸ்ரீ-ரா. அ. ருங. ங0.

மூ—(சக) அழுந்தொழும் ஸ்நேகபாஷ்பாஞ்ஜலியோடேருசிரஸாநுக்களில் கூவிக்கொள்ளும் பிரியாவடிமைக்குச்சரணேசரணென்று

(அ) அழுந்தொழும் ஸ்நேகபாஷ்பாஞ்ஜலியோடே (இளையபெருமாளைப்போலே விஶ்லேஷாஸஹஸ்நேஹஜமானபாஷ்பத்தோடேகையுமஞ்ஜலியுமாய்க்கொண்டு, ருசிரஸாநுக்களில் - மநோஹரமான திருமலையின்ருசிரப்ரதேஶங்களில், கூவிக்கொள்ளும்பிரியாவடிமைக்கு-ஏவிக்கொள்ளுகிற விச்சேதமற்ற ஸர்வவிததாஸ்யங்களுக்கு, ஶரணேஶரணென்று-புருஷகாரபூர்வகமாக பெருமாள் திருவடிகளைப்பற்றி,

வ்யா. (சக) இனிமேல் பகவதநந்யராய்ஸஹஜபக்தராயிருக்கும்லக்ஷ்மண பரத ஶத்ருக்நர்கள்படியும், பகவத்ப்ரத்யாஸந்நராய் தத்பக்தியுக்தரானதஶரத யஶோதா ப்ரஹ்லாத விபீஷண மாருதி பார்த்தர்படிகளும் இவர்பக்கலிலேயுண்டென்றுமற்றை தனித்தனியே யடைவேதர்சிப்பிக்கிறுரொருசூர்ணையாலே. த்ருஷ்டாந்ததார்ஷ்டாந்தங்களிரண்டுக்கும் தனியேவாசகமிடாதே, இரண்டுமொரு ஸந்தர்ப்பத்திலே பலிக்கும்படி வாக்யத்தைச்சுருக்கி அருளிச்செய்கையாலே, த்ருஷ்டாந்தத்திலாதல் தார்ஷ்டாந்திகத்திலாதல் வசநமில்லாதவற்றுக்குப்ரதிகோடிக்கநுகுணமாகக்கூட்டிநிர்வஹிக்கக்கடவது. இந்தந்யாயமிவர்ப்ரபந்தத்திலிப்படி வந்த ஸ்தலங்களுக்கெல்லாமொக்கும். (அழுந்தொழுமித்யாதி) அதாவது:— இளையபெருமாள் (க) "బాల్యాత్ప్రభృతి సుస్నిగ్ధః" "பால்யாத்ப்ரப்ருதிஸுஸ்நிக்தஃ" என்கிறபடியே, பால்யமேதுடங்கி பிரியில் தரியாதஸ்நேஹத்தாலே (உ) "బాష్పపర్యాకులముఖః" "பாஷ்ப பர்யாகுலமுகஃ" என்றும், (ந) "ప్రహ్వాంజలిపుటం స్థితమ్" "ப்ரஹ்வாஞ்ஜலிபுடம் ஸ்திதம்" என்றும் சொல்லுகிறபடியே, விஶ்லேஷ ப்ரஸங்கஜமான ஶோகவேகத்தாலே சொரிகிற பாஷ்பத்தோடே ஸ்வரூப ப்ரகாஶகமான அஞ்சலியும்கையுமாய்க்கொண்டு (ச) "స్వయంతు రుచిరే దేశే క్రియతామితి మాం వద" "ஸ்வயந்து ருசிரேதேஶேக்ரியதாமிதிமாம்வத" என்றும், (ரு) "భవాంస్తు సహ వైదేహ్యా గిరిసానుషు రంస్యతే। అహం సర్వం కరిష్యామి జాగ్రతః స్వపతశ్చ తే" "பவாம்ஸ்து ஸஹவைதேஹ்யாகிரிஸாநுஷுரம்ஸ்யதே। அஹம்ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத ஸ்வபதஶ்சதே" என்றும் சொல்லுகிறபடியே, திருச்சித்திரகூடத்தாழ்வரைமுதலான ருசிரதேஶங்களிலே (பிராட்டியோடேகூடதேவரீர், ஸ்வைரமாகயெழுந்தருயிருக்க) ஸர்வவித கைங்கர்யங்களையுமடியேன் செய்யவேணும், அது செய்யுமிடத்திலேவிக்கொண்டருளவேணுமென்று ப்ரார்த்தித்து, அப்படியேவிக்கொள்ள செய்யப்படுமதாய் (சு) "కురుష్వ మామనుచరమ్" "குருஷ்வமாமநுசரம்" என்கிறபடியே, விச்சேதமறப்பின்துடர்ந்து செய்யுமடிமைத்தொழிலைப் பெறுகைக்காக

(க) ஸ்ரீ-ரா-பா. கஅ. உசு. (உ) ஸ்ரீ-ரா-அ. நக. க. (ந) ஸ்ரீ-ரா. (ச) ஷை-ஆ. கரு. சு. (ரு) ஸ்ரீ-ரா. அ. நக. உசு. (சு) ஷை-உந.

மூ. வாளும்வில்லுங்கொண்டு பந்துவும்பிதாவுமவரே யென்கை
யும் அன்னையென்செய்யிலென்ராஜ்யமும் யானேயென்று
பெருஞ்செல்வமுமிச்சியாமல் வேண்டிச்சென்று

வாளும்வில்லுங்கொண்டு - ஸாயுதராய்க்கொண்டு பின்னே திரியவாசைப்பட்டு, பந்துவும் பிதாவுமவரேயென்கையும் - ஸர்வவிதபந்துவுமவரேயென்கையாலும், அன்னையென்செய்யிலென் - மாதாஜீவிக்கிலென் முடியிலென்னென்றுபேக்ஷித்து, ராஜ்யமும் யானேயென்று - ஆத்மாத்மீயங்களிரண்டுமத்தலைக்குஶேஷமென்று, பெருஞ்செல்வமு மிச்சியாமல் - நிரவதிகைஶ்வர்யத்தையு மபிலஷியாமல்,

(க) "స భ్రాతుశ్చరణౌ గాఢం నిపీడ్య రఘునన్దనః । సీతాముపాచా తియశా రాఘవ శ్చ మహావ్రతమ్" "ஸப்ராதுஶ்சரணௌகாடம் நிபீட்யரகுநந்தநঃ। ஸீதாமுவாசாதியஶாராகவஞ்சமஹாவ்ரதம்" என்கிறபடியே, புருஷகாரபூர்வகமாக திருவடிகளைக்கட்டிக்கொண்டு (உ) "అగ్రతః ప్రయయౌ రామ స్సీతా మధ్యే సుమధ్యమా । పృష్ఠతస్తు ధనుష్పాణి ర్లక్ష్మణో నుజగామహ" "அக்ரதঃ ப்ரயயௌராமஸ்ஸீதாமத்யேஸுமத்யமா। ப்ருஷ்டதஸ்து தநுஷ்பாணிர்லக்ஷ்மணோநுஜகாமஹ" என்கிறபடியே, ஸாயுதராய்க்கொண்டு பெருமாளைப்பின்சென்று (௩) "భ్రాతా భర్తాచ బన్ధుశ్చ పితాచ మమ రాఘవః" ப்ராதாபர்த்தாச பந்துஶ்சபிதாசமமராகவঃ" என்று, தமக்கு ஸர்வவிதபந்துவும் பெருமாளே யென்றாப்போலே இவரும் (௪) "அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து" என்கிறபடியே, பருவம் நிறம்புவதற்குமுன்னே, பிரியில் தரியாதபடி பிறந்தஸ்நேஹத்தாலே (௫) "அழுந்தொழும்" என்று, விஶ்லேஷம்பொறுமல் கண்ணும் கண்ணநீரும் கையுமஞ்சலியுமாய் (௬) "திருவேங்கடத்தெழில் கொள்சோதி எந்தை தந்தைதந்தைக்கு (௭) "ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னிவழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்றும் (௮) "மொய்த்தசோலையும் மொய்பூண்தடந்தாழ்வரையுமானபோக ஸ்தாநங்களையுடைய திருமலையிலே "அலர்மேல்மங்கையுறைமார்பன்" ஆகையாலே, பிராட்டியோடேகூடி ரஸோத்தரமாகவிருக்கிற பரமஶேஷியானவனுக்கு, ஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸகலஶேஷ வ்ருத்திகளையும் பண்ணவேணும், அதுதன்னிலும், (௯) "முகப்பேகூவிப்பணிகொள்ளாய்" என்று ஸன்னிதியிலேயேவிக்கொள்ளவும் வேணுமென்று ப்ரார்த்தித்தபடி, ஏவிக்கொள்ளப்படுமதாய் "பிரியாவடிமை" என்கிறபடியே, யாவதாத்மாநுவர்த்தியான கைங்கரியத்தைப்பெறுகைக்குபாயமாக (க0) "நாகணைமிசைநம்பிரான் சரணேசரண்ணமக்கு" என்று, புருஷகாரம் முன்னாகவவன் திருவடிகளைப்பற்றி (கக) "வாளும்வில்லும் கொண்டுபின் செல்,

(க) ஸ்ரீ-ரா. அ. ௩க. உ. (உ) ஷை-ஆ. கக. க. (௩) ஷை. அ. ௫அ. ௩0. (௪) தி-வா. உ. ௩. ௩. (௫) ஷை. எ. உ. அ. (௬) ஷை. ௩. ௩. க. (௭) ஷை. (௮) ஷை. க0. (௯) ஷை. ௫. அ. எ. (க0) ஷை. ௫. க0. கக. (கக) ஷை. அ. ௩. ௩.

சூ. திருவடியேசுமந்து விரைந்துவருமளவுங் கண்ணநீர்பங்கமாகநிலந்துழாவி குடிக்கிடந்த கையறவும் கோதிலடிமை

திருவடிகளையேசுமந்து-கொடுத்ததிருவடிகளை சிரஸாகவஹித்து, விரைந்துவருமளவும் - த்வரையோடேமீண்டெழுந்தருளுமளவும், கண்ணநீர்பங்கமாக நிலந்துழாவி - கண்ணநீராலுண்டான ஸேற்றிலிருந்தாற்றுமையாலே நிலந்துழாவி, குடிக்கிடந்தகையறவும் - ஸ்வகுலமர்யாதையை தப்பாமல் நோக்கிக்கொண்டபேக்ஷிதம் பெறுதவிழவோடிருக்கையாலும், கோதிலடிமை - ததீயஶேஷத்வத்தின்ரஸமானது,

வார்மற்றில்லை" என்று, திவ்யுதங்களைக்கொண்டு தாம்பின்னேதிரியவாசைப்பட்டு (க) "சேலேய் கண்ணியரும்பெரும் செல்வமும் நன் மக்களும் மேலாத்தாய்தந்தையுமவரே" என்று, ஶேஷியான ஸர்வேஶ்வரனேதமக்கு மாதாபித்ராதி ஸர்வவித பந்துவுமென்கையாலும், ஸ்ரீபரதாழ்வான், பெருமாள் திருமுடிசூடியிருக்கத்தாமடிமைசெய்துவாழப்பெறுதபடி அவரைக்காட்டிலே யகலவடித்துதம்மேலேஸ்வாதந்த்ரத்தையாரோபித்த கொடுமையாலே (உ) "హన్యామహమిమాం పాపాం కైకేయీం దుష్టచారిణీమ్" "ஹந்யாமஹமிமாம்பாபாம் கைகெயீம் துஷ்டசாரிணீம்" என்று, மாதாவானவவளைச் சீறியுபேக்ஷித்து ஸ்வாதந்த்ர்யாஸஹதைதோற்ற (ங) "రాజ్యఞ్చాహఞ్చ రామస్య" "ராஜ்யஞ்சாஹஞ் சராமஸ்ய" என்று, ராஜ்யமும் நானும் பெருமாளுக்கு ஶேஷமென்று (ச) "మృతే తు తస్మిన్ భరతో వసిష్ఠప్రముఖైర్ద్విజైః । నియుజ్యమానో రాజ్యాయ నైచ్ఛద్రాజ్యం మహాబలః" "ம்ருதேதுதஸமிந்பரதோவஸிஷ்டப்ரமுகைர்த்விஜை: । நியுஜ்யமானோராஜ்யாயநைச்சத்ராஜ்யம்மஹாபல:" என்கிறபடியே, வஸிஷ்டாதிபுரோஹிதர், நீர்ராஜாவாக வேணுமென்று நியோகியா நிற்க (ரு) "ఇక్ష్వాకూణామియం భూమిస్సశైలవనకాననా" "இக்ஷ்வாகூணமியம் பூமிஸ்ஸஶைலவநகாநநா" என்கிற, மஹதைஶ்வர்யத்தையுமிச்சியாதே பெருமாளை மீட்டுக்கொண்டுவந்து திருவபிஷேகம் பண்ணிவைக்கையிலபேக்ஷைதோன்ற (சு) "ఏభిశ్చ సచివైస్సార్ధమ్" "ஏபிஶ்ச ஸசிவைஸ்ஸார்த்தம்" என்கிறபடி, அவர்திருவடிகளிலே சென்று "అయాచద్భ్రాతరం రామమ్" "அயாசத்ப்ராதரம்ராமம்" என்கிறபடியே, மீண்டெழுந்தருள வேணுமென்று அபேக்ஷித்தவிடத்தில் அவரது செய்யாதே (எ) "పాదుకే చాస్య రాజ్యాయ న్యాసం దత్వా పునః పునః" "பாதுகேசாஸ்யராஜ்யாயந்யாஸம் தத்வாபுந:புந:" என்கிறபடியே, திருவடிநிலையைக்கொடுத்துவிட (அ) "తతస్తు శిరసా కృత్వా పాదుకే భరతస్తదా । ఆరురోహ రథం హృష్టః శత్రుఘ్నసహితః" "ததஸ்துசிரஸாக்ருத்வாபாதுகேபரதஸ்ததா।ஆருரோஹரதம்ஹ்ருஷ்டஶ்ஶத்ருக்நஸமந்வித:" என்கிறபடியே,

(க) தி-வா. ரு. க. அ. (உ) ஸ்ரீ-ரா. அ. (ங) ஷை-அஉ.கக. (ச) ஷை-பா. க. ஙஉ. (ரு) ஷை-கி. கஅ. ரு. (சு) ஷை. அ. கOச. கக. (எ) ஷை. பா-க.௱௲சு. (அ) ஷை. அ. ககங. க.

மூ. யுறுமோ வென்பித்த புலன்கொள் நித்யஶத்ருவிசிந்தநமு
மான

உறுமோவென்பித்த - ததீயரைவிட்டு பகவத்விஷயாவகாஹநமுசிதமோ வென்று சொல்லிவிக்கப்பட்டதாய், புலன்கொள் - ஸர்வேந்த்ரியாபஹாரக்ஷமமாகையாலே, நித்யஶத்ரு - ததீயநிஷ்டா விரோதியென்று நித்யஶத்ருவாகவறுதியிட்டிருக்கச்செய்தே, விசிந்தனமான - உத்தேஶ்யப்ரீதியென்றத்தைப்பற்ற பகவத்விக்ரஹத்தைநிரந்தரம் மநதில்குடிகொண்டிருக்கையாலும்,

திருவடிநிலையைசிரஸாவஹித்துக்கொண்டு ஹ்ருஷ்டராய்மீண்டுபோந்து (௧) "శిరసాయాచతస్తస్య వచనంనకృతమ్మయా" "சிரஸாயாசதஃதஸ்ய வசநம் நக்ருதம்மயா" என்கிறவிழவு திருவுள்ளத்திலேகிடக்கையாலே (௨) "నమేస్నానంబహుమతం వస్త్రాణ్యాభరణానిచ । తంవినాకైకయీపుత్రం భరతంధర్మచారిణమ్" "ఇతఏవయథాక్షిప్రమ్ప్రతిగచ్ఛామతాంపురీమ్। అయోధ్యామాగతోహ్యేషపన్థాః పరమదుర్గమః" "நமேஸ்நாநம்பஹுமதம் வஸ்த்ராண்யாபராணாநிச । தம்விநாகைகயீபுத்ரம்பரதம்தர்மசாரிணம் ॥ இதயேவயதாக்ஷிப்ரம்ப்ரதிகச்சாமதாம்புரீம் । அயோத்யாமாகதோஹ்யேஷபந்தா꞉பரமதுர்கம꞉" என்று, நாம்பிள்ளை பரதனையொழிய குளித்தல் ஒப்பித்தல் செய்யக்கடவோமல்லோம், சீக்ரமாகநாமினியங்கே செல்லலாம்படியென்? என்று பெருமாள் த்வரையோடே மீண்டெழுந்தருளுமளவும் (௩) "పఙ్కదిగ్ధస్తుజటిలోభరతః" "பங்கதிக்தஸ்துஜடிலோபரத꞉" என்கிறபடியே, கண்ணநீராலுண்டானசேற்றிலே தரைக்கிடை கிடக்கையாலே பங்கதிக்தராய் மூற்றுரிருக்க இளையார் முடிசூடக்கடவரல்லரென்கிற இக்ஷ்வாகுகுலமர்யாதை தப்பாமல் நோக்கிக்கொண்டு (௪) "సకామమనవాప్యైవ" "ஸகாமமநவாப்யைவ" என்கிறபடியே, தாமாசைப்பட்டபொருள் கைபுகுராதவிழவோடே இருந்தாப்போலே இவரும், பகவத்ப்ராவண்யாதிஶயத்தாலே வழியல்லாவழியேயாகிலும் கிட்டுமத்தனையென்கிற த்வரைக்குடன்படாமல் விலக்கும்மாதாவை, ஶத்ருபக்ஷமாகக்காண்கையாலே (௫) "அன்னையென்செய்யிலென்" என்று, ஜீவிக்கிலென் முடியிலென்னென்று சீறி உபேக்ஷித்து (௬) "யானேயென்தனதே" என்கிற ஸ்வாதந்த்ர்யாஸஹமானராய்க்கொண்டு (௭) "யானேநீ யென்னுடைமையும் நீயே" என்றுத்மாத் மீயங்களிரண்டுமெங்குத்தைக்குஶேஷமென்று (௮) "கொள்ளென்று கிளர்ந்தெழுந்தபெருஞ்செல்வம் நெருப்பு" என்றுமென்மேலும் ஸம்ருத்தமாய் வருகிற நிரவதிகவைஶ்வர்யத்தையும் அக்நிஸமமாகக்கொண்டு (௯) "வேங்கடவாணனை வேண்டிச்சென்று" என்று, திருச்சித்திரகூடத்திலிருந்தாப்போலேதிருமயிலையிலேயிருக்கிற,

(௧) ஸ்ரீ-ரா-யு. ௧௨௪. ௧௯. (௨) ஷை-௬. (௩) ஷை-௧௨௬. ௩. (௪) ஸ்ரீ-ரா-பா. ௧. ௩௰௭. (௫) தி-வா. ௫. [illegible]. ௬. (௬) ஷை-௨. ௯. ௯. (௭) ஷை. (௮) தி-வா ௪. ௯. ௪. (௯)

மூ. ப்ராதாக்கள்

ப்ராதாக்கள் - இளையபெருமாள் பரதாழ்வான் ஶத்ருக்நாழ்வான் ஆகிற திருத்தம்பிமார் மூவர்படியும்,

அவனை யதாமநோரதமநுபவிக்கைக்காக வபேக்ஷித்துசென்று தம்மபேக்ஷிதமவனப்போது செய்யாதே ஒருவைசித்யமுகத்தாலே (க) திருவடியே சுமந்துழலகூட்டரிய திருவடிக்கண் கூட்டினை" என்று திருவிடிகளைத்தந்தாயென்று ஹ்ருஷ்டராம்படிபண்ணிவிட, அப்படியவன்கொடுத்த திருவடிகளைசிரஸாவகித்து வீடுதிருத்தப்போனவன், விண்ணுலகந்தரவிரைந்துவருமளவும் (உ) "கண்ணநீர்க்கைகளாலிறைக்கும்" "இருநிலங்கைதொழாவிருக்கும்" என்கிறபடியே, "கண்ணநீர்வெள்ளத்தாலுண்டானசேற்றிலேயிருந்தாற்றுமையாலே (ந) "நிலந்துழாவி" (ச) "குடிக்கிடந்தாக்கம்செய்து" என்கிறபடியே, ப்ரபன்னகுலத்தில்செய்துபோரும் மரியாதைதப்பாமல் (ரு) "காமுற்ற கையறவோடு" என்கிறபடியே, தாமாசைப்பட்டபொருள்கைபுகுராதவிழவோடேயிருக்கையாலும் ஸ்ரீஶத்ருக்நாழ்வான் (சு) "[Telugu-script Sanskrit quotation] கச்சதாமாதுலகுலம் பரதேநததாநகஃ ஶத்ருக்நோநித்யஶத்ருக்நோ நீதஃப்ரீதிபுரஸ்க்ருதஃ" என்கிறபடியே பாகவதசேஷத்வமே பரமபுருஷார்த்தமென்று ஸ்ரீபரதாழ்வானுக்கே ஶேஷபூதராய் அவருடைய பாவநத்வ போக்யத்வங்களிலேகால்தாழ்ந்து (எ) "[Telugu-script Sanskrit quotation]" "பும்ஸாம்த்ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்கிறபடியே, வைரவுருக்காய், ஆண்களையும் பெண்ணுடையுடுத்தும் பெருமாளுடையவடிவழகில் துவக்குண்ணுதே பரதாநுவ்ருத்தியில் போகாதபடி தன்பக்கலிலே துவக்கவற்றென்றுமற்றுலே தம்முடைய நிஷ்டைக்கது நித்யஶத்ருவென்றறுதியிட்டிருக்கச்செய்தே, ஸ்ரீபரதாழ்வானுக்குகப்பாகையாலே உத்தேஶ்யப்ரீதியென்று புரிந்து பெருமாள் வடிவழகிலே நெஞ்சுசென்று (அ) "[Telugu-script Sanskrit quotation]" "விசிந்தயந்" என்கிறபடியே, எப்போதுமற்றை மநஸ்ஸில் கொண்டிருக்குமாப்போலே இவரும் (கூ) கோதிலடியார்" என்று, ப்ரதமாவதியில் நிலைபோலன்றிக்கேஸ்வரூபத்தினுடைய எல்லை நிலமாகையாலே கோதிலடிமை என்று சொல்லப்படுகிற பாகவதஶேஷத்வத்தினுடைய ரஸம் (க0) "அவனடியார் சிறுமாமனிசராயென்னையாண்டாரிங்கேதிரிய" அவர்களைத்தவிர்ந்து (கக) "செந்தாமரைக்கள் திருக்குறளன் நறுமாவிரை நாண்மலரடிக்கீழ்ப்புகுதல் பாவியேனுக்குறுமோ" என்றுசொல்லிவிக்கப்பட்டதாய் ஸர்வேந்த்ரியா பஹாரக்ஷமமாகையாலே அந்தபாகவதஶேஷத்வநிஷ்டாவிரோதியான பகவத்விக்ரஹத்தை உத்தேஶ்யப்ரீதியென்றுமற்றைப்பற்ற "திரிதந்தாகிற்" படியேமீண்டு, (கஉ) "புலன்கொள்வடிவென்மநத்ததாய்" என்றெப்போதும் மநஸ்ஸுக்கு விஷயமாகக்கொண்டிருக்கையாலும் கீழ்ச்சொன்னவாகாரங்களையுடையரான இளையபெருமாள் ஸ்ரீபரதாழ்வான் ஸ்ரீஶத்ருக்நாழ்வானுகிறதிருத்தம்பிமார்மூவர்படியுமிவர்பக்கலிலேகாணலாம். விசிந்தநமென்கிறவிதுக்கிப்படி வ்யாக்

(க) தி-வா. ச. கூ. கூ. (உ) ஷி-எ. உ. க. (ந) ஷி (ச) ஷி-கூ. உ. உ. (ரு) ஷி-உ. க. ந. (சு) ஸ்ரீ-ரா-அ. க. க. (எ) ஷி. ந. உஅ. (அ) ~ (கூ) தி-வா, அ. க0. கூ. (க0) தி-வா. அ. க0. ந. (கக) (கஉ) தி-வா. அ. க0. ச.

மூ. அப்பொழுதைக்கப்பொழுது போனுயென்றும் மாதாபிதாக்கள் செந்தீத்தண்காற்றிளநாகமுதலான பகையறச்சிந்தைசெய்து

அப்பொழுதைக்கப்பொழுது - (சக்ரவர்த்தியைப்போலே) நிரந்தரமநுபவியாநின்றாலும், த்ருப்திபிறவாமல்-மென்மேலத்யபிநிவிஷ்டராகையாலும், போனுயென்றும் - (யஶோதைப்பிராட்டியைப்போலே) வயிறெரிந்து பெரியமருதுகளின் நடுவேபோனுயென்று வெறுக்கையாலும், மாதாபிதாக்கள் - மாதாபிதாக்களிருவர்படியும், செந்தீத்தண்காத்திளநாகம்முதலான - பாதகபதார்த்தங்களுடைய, பகையறச்சிந்தைசெய்து- பகவதாத்மகத்வேநவநுகூலமாக வநுஸந்தித்து,

யாநம் பண்ணிற்று இதின்பட்டோலையானதிலே உறுமோவென்றுநித்யஶத்ருவைவென்று,புலன்கொள்வடிவை விசிந்தயனுயிருக்குமென்று,விசிந்தயந்,என்றொருவசநமுண்டாகவுமெடுத்து,இப்படியிவர் தாமேயருளிச்செய்துவைக்கையாலே,இவ்விடத்திலும் சிந்தநமென்றாமல்,விசிந்தநமென்றது, அவ்வசநஸ-ஏசநமாகவிறே. விசிந்தயன் என்கிறவசநம் இன்னவிடத்திலேயென்று த்ருஷ்டமாய்த்தில்லை,வந்தவிடத்திலேகண்டுகொள்வது. (அப்பொழுதைக்கித்யாதி) சக்கரவர்த்தி (க) "నతతర్పసమాయాన్తం పశ్యమానో నరాధిపః" "நததர்ப்பஸமாயாந்தம் பஶ்யமாநோ நராதிப꞉" என்கிறபடியே, வைத்தகண்வாங்காதே உத்தரோத்தரமநுபவியாநிற்கச்செய்தே ஒருக்காலும் த்ருப்தனுகாமல் அநுபுபூஷுவாய்ச் செல்லுமாப்போலே இவரும் (உ)"எப்பொழுதுநாள்திங்களாண்டு"இத்யாதிப்படியே,யாவத்காலமநுபவியாநின்றாலும் (ந) அப்பொழுதைக்கப்பொழுதென்னுராவமுதம்"என்று, அநுக்ஷணமெனக்கத்ருப்திகரமான போக்யவஸ்துவென்று மென்மேலுமபிநிவிஷ்டராகையாலும் (ச) "యమళార్జునయోర్మధ్యే జగామ" "யமளார்ஜுநயோர்மத்யேஜகாம" என்று, க்ருதஸங்கேதமாய்நலியவந்துநின்றயமளார்ஜுநங்களின்நடுவே க்ருஷ்ணன் போனபோது யஶோதைப்பிராட்டியோடிச் சென்றெடுத்துக்கோள்ளாநிற்க, மருதுகளின்பெருமையையும் இவன் மௌக்த்யத்தையுங்கண்டு வயறெரிகொளிந்தி முகத்தைப்பார்த்து இப்பெரியமருதுகளின்நடுவே போனுயென்று வெறுத்தாப்போலே இவரும், அதீதகாலஸ்தமாயிருக்கவும் ஸமகாலத்தில்போல ப்ரகாசிக்கையாலே அப்படிவயிறெரிந்துகொண்டு(ரு)"ே "ஞய்மாமருதின்நடுவே" என்கையாலும், பிதாவும்மாதாவுமானவவர்களிருவர்படியு மிவர் பக்கலிலேகாணலாம். ஸ்ரீப்ரஹ்லாதன் (சா) "నాగ్నిర్దహతి నైవాయం శస్త్రైశ్ఛిన్నో న చోరగైః। క్షయం నీతో న వాతేన న విషేణ న కృత్యయా॥ (எ) సర్వాసక్తమతిః కృష్ణే దశ్యమానో మహోరగైః। న వివేదాత్మనో గాత్రం తత్స్మృత్యాహ్లాదసంస్థితః" "நாக்நிர்தஹதிநைவாயம்ஶஸ்த்ரைச்சிந்நோநசோர

(க) ஸ்ரீ-ரா-அ. ந. உகூ. (உ) தி-வா. உ. ரு. ச. (ந) ஷை. (ச) வி-பு. ரு. சா. கரு. (ரு) தி-வா. ரு. க. உ. (சா) வி-பு. க. ககூ. ருஅ. (எ) ஷை. க. கஎ. நஅ.

மூ. எங்குமுளனென்னும் பள்ளிப்பிள்ளைமுற்றவிட்டு மற்றி லேனென்றும்

எங்குமுளனென்றும் - அவனுடைய ஸர்வகதத்வத்தை அருளிச்செய்கையாலே, பள்ளிப்பிள்ளை - ப்ரஹ்லாதாழ்வான்படியும், முற்றவிட்டு - ப்ரக்ருதிப்ராக்ருதங்களை யெல்லாத்தையும்விட்டு,

கைஃ। க்ஷயம்நீதோ நவாதேநநவிஷேஷண நக்ருத்யயா। ஸத்வாஸக்தமதிஃ க்ருஷ்ணேதஶ்யமாநோமஹோரகைஃ॥ நவிவேதாத்மநோ காத்ரம் தத்ஸ்ம்ருத்வாஹ்லாதஸம்ஸ்திதஃ" என்கிறபடியே, அக்நி முதலானவை பாதகமாகாதபடி: (க) "సర్వభూతాత్మకే తాత జగన్నాథే జగన్మయే। పరమాత్మని గోవిన్దే మిత్రామిత్రకథా కుతః" "ஸர்வபூதாத்மகேதாத ஜகந்நாதேஜகந்மயே। பரமாத்மநிகோவிந்தே மித்ராமித்ரகதாகுதஃ" என்று, மித்ராமித்ரகதாவகாஶமற ஸர்வமும் பகவதாத்மகதயா அநுகூலமாகவநுஸந்தித்து (உ) "எங்குமுள்ன் கண்ணன்" என்கிறபடியே, (௩) "ఉర్వ్యామస్తి" "உர்வ்யாமஸ்தி" என்றுதுடங்கி (௪) "సర్వత్రాస్తి" "ஸர்வத்ராஸ்தி" என்று பிறர்க்கு முபதெசித்தாப்போலே இவரும் (௫) "அறியுஞ்செந்தீயைத்தழுவியச்சுதனென்றும் மெய்வேவாள் எரியுந்தண்காற்றைத் தழுவியென்னுடைக்கோவிந்தனென்றும்போமிளநாகத்தின்பின் போயவன்கிடக்கையீதென்றும்" என்று, அக்நி முதலான பாதகபதார்த்தங்கள் பகவதாத்மகத்வேந அநுகூலமாம்படி (௬) "என்முன்னைக்கோளரியே (எ) "உன்னைச்சிந்தைசெய்துசெய்து" (அ) "என்முன்னைத்தீவினைகள் முழுவேறரிந்தனன்யான்"(௯) "முடியாததென்னெனக்கு"என்றவனை அநவரதாநுஸந்தாநம்பண்ணி" (க0) கரந்தசிலிடந்தொறுமிடந்திகழ் பொருடொறும் கரந்தெங்கும்பரந்துளன்" என்று, அவனுடைய ஸர்வகதத்வத்தை பிறருமறியும்படி யருளிச்செய்கையாலே (கக) "பள்ளியிலோதிவந்ததன் சிறுவன்" என்றும், (க௨) "பிள்ளையைச்சிறி" என்றும், சொல்லப்பட்டபள்ளிப்பிள்ளையான ப்ரஹ்லாதன்படியுமிவர்பக்கலிலேகாணலாம். ஸ்ரீவிபீஷணாழ்வான் (க௩) "త్యక్త్వా పుత్రాంశ్చ దారాంశ్చ రాఘవం శరణం గతః" "த்யக்த்வாபுத்ராம்ஶ்சதாராம்ஶ்சராகவம்ஶரணங்கதஃ" என்றும், (க௪) "పరిత్యక్తా మయా లఙ్కా మిత్రాణి చ ధనాని చ। భవద్గతం మే రాజ్యం చ జీవితం చ సుఖాని వై" "பரித்யக்தாமயாலங்காமித்ராணிசதநாநிச। பவத்கதம்மேராஜ்யஞ் சஜீவிதஞ்சஸுகாநிவை" என்றும், லங்கையோடேகூட புத்ரதாராதிகளான ஸர்வத்தையும்விட்டு சக்ரவர்த்தித்திருமகனையே தமக்கெல்லாமாகப்பற்றினாப்போலே இவரும் (க௫) "பர்தமடைவதன்பாசத்தாலே மற்றவன் பாசங்கள் முற்றவிட்டு" என்று, ஸாம்ஸாரிகஸகலஸங்கங்களையும் ஸவாஸநமாகவிட்டு (க௬) "தயரதற்குமகன்தன்னையன்றிமற்றி

(க) வி-பு. க. கக, ௩௬. (உ) தி-வா. உ. அ. ௯. (௩) (௪) (௫) தி-வா. ௪. ௪. ௩. (௬) (எ) (அ) (௯) (க0) தி - வா. க.க. எ. (கக) பெ-மொ. உ. ௩. அ. (க௨) ஷை. (க௩) ஸ்ரீ-ரா - யு. கஎ. க௩. (க௪) ஷை - க௯. ௪. (க௫) தி-வா. அ. உ. கக. (க௬) ஷை - ௩. ௬. அ.

மூ. தர்மாத்மாவாளிபொழிந்த நிற்குண விஶ்வாத்மாவுள்ளே யுறைய

மற்றிலேனென்றும் தர்மாத்மா - சக்கரவர்த்தித்திருமகனையே ஸர்வப்ரகார ரக்ஷகனாகப்பற்றுகையாலே விபீஷணாழ்வான்படியும், வாளிபொழிந்த நிர்க்குணவிஶ்வாத்மாவுள்ளேயுறைய-ஶரங்களைவருஷித்து விரோதிவர்க்கத்தை யழித்த ஸர்வாந்தர்யாமியான பெருமாளைதம்முள்ளே யுடையராய்,

லேன் தஞ்சமாக" என்று, சக்ரவர்த்தித்திருமகனையே தமக்கு ஸர்வப்ரகார ரக்ஷகனாகப்பற்றுகையாலே (க) "విభీషణస్తుధర్మాత్మా" "விபீஷணஸ்து தர்மாத்மா" என்றும், தர்மபுத்தியுடையவனென்கிறமாத்ரமன்றிக்கே (௨) "రామోవిగ్రహవాన్ధర్మః" "ராமோவிக்ரஹவாந்தர்மஃ" என்று சொல்லப்பட்ட தர்மஸ்வரூபனை சக்ரவர்த்தித்திருமகனை தனக்கு தாரகமாகவுடையனாகையாலே, தர்மாத்மாவென்று விஶேஷஜ்ஞர் சொல்லும் ஸ்ரீவிபீஷணாழ்வான்படியுமிவர்பக்கலிலேகாணலாம். திருவடி (௩) "నిర్గుణఃపరమాత్మాసౌ దేహం వ్యాప్యతిష్ఠతి" "நிர்க்குணஃபரமாத்மாஸௌ தேஹந்தே வ்யாப்யதிஷ்டதி" என்கிறபடியே, விரோதிவர்க்கத்தைக்கிழங்கெடுக்கையாலே, எறிட்டநாணியிறங்கிட்டு (௪) "భవాన్నారాయణోదేవః" "பவாந்நாராயணோதேவஃ" என்கையாலே, பரமாத்மஶப்தவாச்யனாய்க்கொண்டு (௫) "విశ్వాత్మానమ్" "விஶ்வாத்மாநம்" என்கிறபடியே, விஶ்வத்துக்கும் ஆத்மபூதனாயிருக்கிற சக்ரவர்த்தித்திருமகனை தன்னுள்ளே யுடையனாய் (௬) "స్తోత్రైర్వహన్తహనుమాన్ పరమాంవిముక్తిం బుద్ధ్యావిధూయచరితం తవసేవతేసౌ" ஸோத்ரைவஹந்தஹநுமாந் பரமாம்விமுக்திம்புத்யாவிதூயசரிதம்தவஸேவதேஸௌ" என்கிறபடியே, சக்ரவர்த்தித்திருமகனுடைய 'வீரசரிதத்தை போக்யமாகவுடையனாய் (௭) "స్నేహోమేపరమోరాజన్ త్వయినిత్యంప్రతిష్ఠితః। భక్తిశ్చనియతావీర భావోనాన్యత్రగచ్ఛతి" "ஸ்நேஹோமே பரமோராஜந்த்வயிநித்யம் ப்ரதிஷ்டிதஃ। பக்திஶ்சநியதா வீரபாவோநாந்யத்ரகச்சதி" என்று, குணத்தாலும் சரத்தாலும் அநுகூலரையும் ப்ரதிகூலரையும் ஜயிக்கும் வீரனை சக்ரவர்த்தித்திருமகனளவிலே யெப்போதும் ப்ரதிஷ்டிதமாய் இதுக்குமேலில்லையென்னும்படி யிருக்கிற ஸ்நேஹத்தாலும் நியதையானபக்தியாலும் இவ்விஷயத்தைவிட்டுபரத்வத்தில் தன்'னெஞ்சுபோகாமை சொல்லுகிறவிடத்தில் பரத்வத்தின்பேரும்சொல்லவொண்ணாத அஸஹ்யமாய் அந்யத்ர என்னும்படி சக்கரவர்த்தித்திருமகனையல்லதறியேனென்றிருந்தாப்போலே இவரும் (அ) செருக்கடுத்தன்று திகைத்தவரக்கரையுருக்கெடவாளிபொழிந்த ஒருவன் திருக்கடித்தானமு மென்னுடைச்சிந்தையு மொருக்கடுத்துள்ளே

(க) ஸ்ரீ-ரா-அ. ௧௭. ௨௩. (௨) ஷெ. ௩௭. ௧௨. (௩) (௪) ஸ்ரீ-ரா-யு. ௧௨0. ௧௩. (௫) (௬) அதிமாநுஷஸ்தவம் - ௩௨. (௭) ஸ்ரீ - ரா. ௨. ௪0. ௧௪. (அ) தி - வா. அ. ௬. ௨.

மூ. ஊணுகவீரசரிதம் கர்ப்பார் பாவம் மற்றிலேனென்றும் ராமதாஸன்பல்வகையுங்கண்டு வெண்பஙகேந்தினரூபபரனுன

ஊணுக வீரசரிதம்கர்பார்-அவருடைய வீரசரிதமேபோக்யமாகவுடையராய், பாவம் மற்றிலேனென்றும் - பரத்வாதிகள்பேர்சொல்லுகையுமஸஹ்யமாம்படியிருக்கையாலே, ராமதாஸன் - திருவடியுடையபடியும், பல்வகையுங்கண்டு - பலபடியாக விஸ்த்ருதனுயிருக்கிறவனேக்கண்டு, வெண்பஙகேந்தினரூபபரனுன - ஶங்க சக்ரகதாதராஸாதாரணதிவ்யரூபாவலோகநாபிலாஷையுடையவராகையாலே,

யுரையும் பிரான்கண்டீர்" என்று, மூலபலம்முதலறும்படி ஶரவர்ஷத்தைவர்ஷித்தவேகவீரனுன சக்ரவர்த்தித்திருமகனே தம்முள்ளே உடையராய் (க) "கணேநாளிலோவாத்தொழில் சார்ங்கன்தொழில் சிரை நன்னெஞ்சேயு ஓவாதவூணுகவுண்" என்கிறபடியே, அவனுடைய வீரசரிதத்தை போக்யமாகவுடையராய் (உ) "கற்பாரிராமபிரானேயல்லால் மற்றும்கற்பரோ" என்று, ப்ரியஹிதங்களைப்பற்ற ஒன்றைக் கற்குமவர்கள் ரமணீயனுமாய் உபகாரகனுமான சக்ரவர்த்தித் திருமகனையொழிய பரத்வாதிகளையு மவதாராந்தரங்களையும் கற்பரோவென்று தமக்கிவ்விஷயத்திலுண்டான பராவண்யாதி ஶயத்தாலே பரத்வாதிகளைக்கழிக்கிறவிடத்தில் அவற்றின்பேர் சொல்லுகை யுமஸஹ்யமாய், மற்றும் என்னும்படி (ந) "தயதரற்கு மகன்றன்னையன்றி மற்றிலேன்" என்றிருக்கையாலே (ச) "దాసోహంకోసలేన్ద్రస్య" "தாஸோஹம்கோஸலேந்த்ரஸ்ய" என்று, ராமதாஸனுயிருக்கும் திருவடியுடையபடி யுமிவர்பக்கலிலேகாணலாம். அர்ஜுநன் (ரு) "పశ్యామిదేవాం స్తవ దేవదేహే॰సర్వాం స్తథా భూత విశేష సంఘాన్। బ్రహ్మాణమీశంకమలాసనస్థ మృషీంశ్చ సర్వా నురగాంశ్చదీప్తాన్" "பஶ்யாமிதேவாம்ஸ்தவதேவதேஹே ஸர்வாம்ஸ்ததா பூதவிஶேஷஸங்காந் | ப்ரும்ஹாணமீஶம் கமலாஸநஸ்தம் ருஷீம்ஶ்ச ஸர்வாநுரகாம்ஶ்சதிப்தாந்" என்று, விஶ்வரூபங்கண்டவநந்தரம் (சு) "అదృష్టపూర్వం హృషితోస్మిదృష్ట్వా భయేనచప్ర వ్యథితంమనోమే। తదేవమేదర్శ య దేవరూపం ప్రసీదదేవేశ జగన్నివాస । (எ) కిరీటినంగదినంచక్రహ స్త మిచ్ఛామిత్వాం ద్రష్టుమహం స్తథైవ। తేనైవరూపేణచతుర్భుజేన సహస్రబాహో. భవవిశ్వమూర్తే" "அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோஸ்மித்ருஷ்ட்வா பயேநசப்ரவ்யதிதம்மநோமே| ததேவமேதர்ஶயதேவ ரூபம் ப்ரஸீத தேவேஶஜகந்நிவாஸ || கிரீடிநம்கதிநம் சக்ரஹஸ்தமிச்சாமித்வாம் த்ரஷ்டு மஹந்ததைவ | தேநைவரூபேண சதுர்ப்புஜேநஸஹஸ்ரபாஹோபவ விஶ்வமூர்த்தே" என்று, திவ்யசக்ஷுஸ்ஸாலே இப்போது கண்டவிஶ்வரூபம் அத்ருஷ்டபூர்வதையாலும் உக்ரதையாலும் ஹர்ஷபயங்களிரண்டையும் விளைக்

(க) பெ - அ. எஅ. (உ) தி - வா. எ. ரு. க. (ந) ஷெ-ந. சு. அ. (ச) ஸ்ரீ - ரா, ஸு. சுந. அ. (ரு) ஸ்ரீ-கி. கக. கரு. (சு) ஷெ-சரு. (எ) ஷெ-சஎ.

மூ. ஶ்வேதன் முதலானர்படிகளும் காணலாம்.

மூ.—(௪௨) குழலில் நெஞ்சும்

ஶ்வேதன் முதலானர் - அர்ஜுனன் முதலானருடையபடிகளும், ப்ரகாரங்களும், காணலாம் - தர்சிக்கலாம்.

(அ) குழலில்நெஞ்சும் - குழல் என்கிறபாட்டில் சொல்லுகிறபடியே பிராட்டிமாரும் நித்யஸூரிகளு மவனுமான சேற்றியிலே பூற்றின மநஸ்ஸையுடையராய்,

கையாலே ஸததஹர்ஷஹேதுவாய் பூர்வபரிசிதமுமான ஸௌம்யரூபத்தைக்காணவாசைப்பட்டு, சதுர்ப்புஜமாய் ஶங்கசக்ரகதாதரமான திவ்ய விக்ரஹத்தைக் காட்டவேணுமென்று, தத்தர்ஶந தத்பரனாய் அபேக்ஷித்தாப்போலே இவரும் (க) "நல்குரவும்" என்று துடங்கி "பல்வகையும் பரந்தபெருமானே திருவிண்ணகர்க்கண்டேனே" என்று, விருத்த விபூதியுக்தனைக்கொண்டு விபூதிமுகத்தாலே பலபடியர்க விஸ்த்ருதனையிருக்கிறவனைக்கண்டு (உ) "நீராய்நிலனாய்" என்றுதுடங்கி 'சிவனாயயனானாய்" என்று, கார்யகாரணங்களிரண்டையும் ஶரீரமாகக்கொண்டு நீஜகதாகாரனாயிருக்கிறவிருப்பை யெனக்குக் காட்டித்தந்தாயாகிலும் இத்தால் நான்பெற்றது உன்னுதானவஸ்துக்களை யென்னுதென்றும் பிறருதென்றுமிருக்கும் விப்ரதிபத்திபோய், உன்னதே ஸகலமுமென்றிருக்கிறமர்த்மிதெனக்காகர்ஷகமாயநுபாவ்யமாயிருக்கிறதில்லை. ஆனபின்பு (௩) "கூராராழிவெண் சங்கேந்திவாராய்" என்று, ஶங்கசக்ரகதாதரமான உன் அஸாதாராண விக்ரஹத்தோடேயென் முன்னேவரவேணுமென்று அஸாதாரண விக்ரஹாநுபவதத்பரராயபேக்ஷிக்கையாலே (ச) "சினப்போர்ச்சுவேதனன்" என்று சொல்லப்பட்ட அர்ஜுநன்படியுமிவர் பக்கலிலே காணலாமென்கை. ஶ்வேதனென்னது, ஶ்வேதவாஹனனென்னபடி. முதலானரென்னது (ரு) "ఉపమానమశేషాణాం సాధూనాం యస్సదాభవేత్" "உபமாநமஶேஷாணாம் ஸாதூநாம்யஸ்ஸதாபவேத்" என்கிறபடியே, எல்லார்க்கும் தம்முடைய ஓரோவகைகளாலே உபமான பூமியாயிருக்குமவராகையாலே இன்னமும் ஜ்ஞாநிகளானவர்கள் பலர்படியு மிவர்பக்கலிலே காணலாமென்று தோற்றுகைக்காக. பிராட்டிமாரோடு ஸாம்யம் சொன்னபின்பு ஸ்ரீ கோபிமார் முதலானரோடு ஸாம்யம்சொன்னவோபாதியிறே லக்ஷ்மணாதிகளோடே ஸாம்யம் சொன்னபின்பு, தஶரதாதிகளோடு ஸாம்யம்சொன்ன விதுவும். *

வ்யா. (௪௨) ஆகயிப்படி நித்யஸூரிகளில் தலைவராய் துடர்ந்தடிமைசெய்யப்பிறந்த லக்ஷ்மணாதிகளோடும், நித்யஸம்ஸாரிகளிலே அந்யதமராய்வைத்து பகவத்ப்ரத்யாஸந்நராகப்பெற்ற தஶரதாதிகளோடும், இவர்க்குண்டான ஸாம்யத்தை யருளிச்செய்தார்கீழ். அவர்களனைவர்களிலுமிவர்க்குள்ள வேற்றத்தை அருளிச்செய்கிறார்மேல். (குழலில்நெஞ்சுமருகலில்சுவையுமானவிவர்களளவல்லவொன்று) அதர்

(க) தி - வா. ௬. ௩. க. (உ) ஷை - ௬. கூ. க. (௩) ஷை (ச) (ரு) வி - பு. க. க௬. கருரு.

மூ. அருகலில் சுவையுமான விவரவர்க ளளவல்லர்.

மு.—(சங) எற்றைக்கும்

அருகலில் சுவையுமான - அருகலில் என்கிற பாட்டின்படி பிராட்டிமார் திருவடி திருவநந்தாழ்வான் முதலானுரோடோரோவகையாலுள்ள பரிமாற்றரஸங்களெல்லாத்தையு முடையருமான, இவர் - இவ்வாழ்வார், அவர்களளவல்லர் - பூர்வோத்திஷ்டரோடொற்றவரல்லர்.

(அ) எற்றைக்கும் - ஸர்வகாலமும்,

வது:— (க) "குழற்கோவலர்" என்கிறபாட்டிற் சொல்லுகிறபடியே, பிராட்டிமாரும் நித்யஸூரிகளு மவனுமான திரளிலேபற்றின நெஞ்சையுடையராய் (உ) "அருகலிலாய" என்கிறபாட்டிற் சொல்லுகிறபடியே, பிராட்டிமாரோடும் திருவடி திருவநந்தாழ்வான் முதலான நித்யஸூரிகளோடும், ஓரோவகையாலே பரிமாறுமவன் அவர்களோடு பரிமாறுமாப்போலே ஒருவழியால்வந்த ரஸத்தைத் தந்துவிடுகிறில னென்னளவில், அவர்களெல்லார்பக்கலிலும் பண்ணுமாதரத்தை யென் பக்கலிலே பண்ணு நின்றானென்னும்படி, எல்லா வழிகளாலு முள்ள ஸம்ஶ்லேஷரஸத்தை, அவன் தமக்கு விளைக்கையாலே போகரஸமும் விஞ்சப்பெற்றவரானவிவர் ஓரோரவதாரமாத்ரத்திலும், கேவலமவன் தன்னளவிலும்பற்றின நெஞ்சையுடையராய், பகவத்ப்ராவண்யம் காதாசித்கமாய், விஷயாந்தர ப்ராவண்யமும் கலசியிருப்பாரும், இதரவிஷய வைராக்ய பூர்வகமாக எப்போதும் நடந்துசெல்லும் பகவத்ப்ராண்ய முண்டாயும், ததீயரு மவனுமான சேர்த்தியில், ரஸமறியாதாருமானதஶ ரதாதிகளும், பரத்வாவதாரவிபாகமற அவகாஹித்தநெஞ்சை யுடையராயும், ஒருவழியால்வந்தரஸத்தைப்பெற்றிருக்கும் லக்ஷ்மணாதிகளு மானவவர்களில், அத்யந்தவ்யாவ்ருத்தரென்கை. ஆகலக்ஷ்மணாதிகள் தஶரதாதிகளோடு இவர்க்குள்ள ஸாம்யத்தைதர்சிப்பித்தாப்போலே, அவர்களி லிவர்க்குண்டான ஆதிக்யத்தையும் தர்சிப்பித்தாராயிற்று. *

வ்யா. (சங) இப்படிப்பட்டநெஞ்சையும் ஶுவையையுமுடைய இவர் தம்முடைய வபிநிவேஶத்தாலே அவன்பிறவிக்கநுகுணமாகப் பிறந்து அநேகாநுவ்ருத்திகளைப்பண்ணும் பிராட்டிமாரையும், அஶேஷஶேஷதைகரதிகராய் அநேகதாபாவித்து அநேகவிதகைங்கர்யங்களைப்பண்ணும் அநந்த வைநதேயாதிகளையும், அவர்கள்தானென்னலாம்படிபாவிப்பரென்கிறார். (எற்றைக்குமென்றுதுடங்கி) அதாவது :— ஸ்ரீபூமிப்பிராட்டியவதாரமானஆண்டாள்ப்ரார்த்தனை மூவர்க்குமொக்குமாகையாலே (ங) "எற்றைக்குமேழேழு பிறவிக்குமுன்றன்னோடுற்றோமேயாவோமுனக்கேயாமாள்செய்வோம்" என்று அநேக ஜன்மங்கள்பிறந்து உன்னோடு ஶேஷஶேஷிபாவமாகிற உறவையுடையோமாய்

(க) தி - வி. ங. (உ) தி - வா. க. கூ. ங. (ங) திருப்பாவை - உகூ.

மூ. என்றது தோன்றப்பிறந்தொப்பித்துவீசி காப்பிட்டு

என்றதுதோன்ற - (உன்னுகப்பே பலமான கைங்கர்யங்களைச் செய்ய வேணுமென்னும்படியான) ப்ரார்த்தனைதோன்றும்படி, பிறந்து - (அநு குணமாக) திருவவதரித்து, ஒப்பித்து - அலங்கரித்து, வீசி - திருவால வட்டம்பரிமாறி, காப்பிட்டு - மங்களாஶாஸநம்பண்ணி,

உனக்கே யுகப்பானவடிமைகளை நாங்கள்செய்யவேணுமென்றபேக்ஷித்ததுதோன்ற (க) "దేవత్వే దేవదేహోయం మనుష్యత్వే చ మానుషీ । విష్ణోర్దేహానురూపాం వై కరోత్యేషాత్మనస్తనుమ్" "தேவத்வேதேவதேஹோயம் மநுஷ்யத்வே சமாநுஷீ । விஷ்ணோர்தேஹாநுரூபாம்வைகரோத் யேஷாத்மநஸ்தநும்" என்கிறபடியே, ஈஶ்வரன் லோகரக்ஷணார்த்தமாக தேவமநுஷ்யாதி ஸஜாதீயனாயவதரிக்குமளவில், அவன்கொண்ட வடிவுக்கநுரூபமான வடிவுகொண்டு தோற்றுமவளாகையாலே (உ) "రాఘవత్వేభవత్సీతా" "ராகவத்வேபவத்ஸீதா" என்கிறபடியே, அவன் சக்கரவர்த்தித்திருமகனாய் வந்தவதரித்தபோது, தானும் ஸ்ரீஜநகராஜன் திருமகளாயவதரித்து (ங) "వరాహరుధిరాభేణ శుచినా చ సుగంధినా । అనులిప్తం పరార్థేన చందనేన పరంతపమ్" "வராஹருதிராபேண ஶுசிநாசஸுகந்திநா । அநுலிப்தம்பரார்த்தேநசந்தநேநபரந்தபம்" என்கிறபடியே, திருவபிஷேகார்த்தமாக வலங்கரித்து (ச) "స్థితయా పార్శ్వతశ్చాపి వాలవ్యజనహస్తయా । ఉపేతం సీతయా భూయశ్చిత్రయా శశినం యథా" "ஸ்திதயாபார்ஶ்வத ஶ்சாபிவாலவ்யஜநஹஸ்தயா உபேதம்ஸீதயாபூயஶ்சித்ரயாஶஶிநம்யதா" என்கிறபடியே, அப்போதருகேஸேவித்து நின்று திருவெண்சாமரம் பணிமாறி, அநந்தரம்சக்கரவர்த்திமாளிகைக்கெழுந்தருளுகிறபோது (ரு) *"పతిసమ్మానితా సీతా భర్తారమసితేక్షణా । ఆద్వారమనువవ్రాజ మంగళాన్యభిదధ్యుషీ ॥" (சு) "పూర్వాం దిశం వజ్రధరో దక్షిణాం పాతు తే యమః । వరుణః పశ్చిమామాశాం ధనేశస్తూత్తరాం దిశమ్" "பதிஸம்மாநிதாஸீதாபர்தாரமஸிதேக்ஷணா । ஆத்வாரமநுவவ்ராஜமங்களாந்யபிதத்யுஷீ । பூர்வாம்திஶம்வஜ்ரதரோதக்ஷிணாம்பாதுதேயம: । வருண:பஶ்சிமாமாஶாம்தநேஶஸ்தூத்தராம் திஶம்" என்கிறபடியே, பெருமாள்

* இந்தஶ்லோகத்துக்கு தாத்பர்யம், ஆழ்வானும் பட்டரும் இரண்டுபடியாக நிர்வஹித்துப்போறுவர்கள். எங்ஙனேயென்னில்? யௌவராஜ்ய பட்டாபிஷேகத்துக்கர்ஹமான திவ்யாலங்காரத்தோடு ப்ரகாசித் தொளிவிடும் பெருமாளுடைய அப்பொழுதிய நிரதிஶயஸௌந்தர்யாதிகளைக்கண்ட பிராட்டி, இவ்வெழிலுக்கென்ன தீங்கு நேரிடுமோவெனக்கலங்கி, அதுக்கொரு தீங்குவாராமல்படி மங்களாஶாஸனம்பண்ணிக்கொண்டு தாம் அனுஸரிப்பதர்க்குசிதஸ்தலமான த்வாரபர்யந்தமெழுந்தருளினாள். பெருமாளுமப்போது, இனியிவள் வருவதுதகாதென்று அவளை நிறுத்துவதுக்கு ஸூசகமாக தாமணிந்திருக்கும் திருமாலையைக்கழட்டிச் சாற்றினாறென்று ஆழ்வான். அவனிரு திருவடிகளையும் பிடித்து வேண்டினாரென்றுபட்டர், இவ்வளவுக்கும், பதி ஸம்மாநிதா, என்கிற பதமிறே.

(க) வி - பு. க. கூ. கசச, (உ) ஷை - கசஙு. (ங) (ச) (ரு) ஸ்ரீ - ரா. அ. கசு, உ௦. (சு) ஷை-உங.

மூ. காட்டுக்கு முற்பட்டு தர்மஞ்சொல்லிக் கேட்டு சிஷ்ய தாஸீபக்தைகளாய்ப்பாடி

காட்டுக்குமுற்பட்டு - அரண்யகமநத்துக்கு முற்பட்டு, தர்மஞ்சொல்லி- தர்மோபதேஶமும்பண்ணின (பெரியபிராட்டி யாரையும்,) கேட்டு - (ஸ்ரீவராஹநாயனார் பக்கலிலேபரமதர்மம்) கேட்டு, சிஷ்யதாஸீ பக்தை களாய் - சிஷ்யையும் தாஸியும் பக்தையுமாய், பாடி-கவிபாடி,

வடிவழகைக்கண்டு, இது நமக்கு தொங்கப்புகுகிறதோவென்று வயி றுபிடியாலே அந்தப்புரத்வாரத்தளவும் பின்சென்று மங்களாஶாஸநம் பண்ணி, ததநந்தரம்காட்டுக்கெழுந்தருளுகிறபோது (க) "అగ్రతస్తే గమిష్యామి మృద్నన్తీ కుశకణ్టకాన్" "அக்ரதஸ்தேகமிஷ்யாமிம்ருத்நந்தீ குஶ கண்டகாந்" என்று, தான்முற்பட்டு, ஸ்ரீதண்டகாரண்யத்திலெழுந்த ருளுகிறபோது அவராயுதங்களைத் தரித்துக்கொண்டு நிற்கிற நிலை யைக்கண்டு (உ) "నహిమేరోచతేవీర గమనం దణ్డకాన్ప్రతి। కారణం తత్రవక్ష్యామి వదన్త్యా శ్రూయతాం మమ। త్వం హి బాణధనుష్పాణిర్భ్రాత్రా సహ వనం గతః। దృష్ట్వా వనచరాన్సర్వాన్ కచ్చిత్ కుర్యాశ్శరవ్యయమ్। క్షత్రియాణామిహ ధను ర్హుతాశస్యేన్ధనానిచ। సమీపతస్థితం తేజో బలముచ్ఛ్రయతే భృశమ్" "நஹிமேரோசதேவீரகமநம்தண்டகாந்ப்ரதி, கா ரணம் தத்ரவக்ஷ்யாமிவதந்த்யாஶ்ரூயதாம்மம 'த்வம்ஹிபாணதநுஷ்பா ணிர்ப்ராத்ராஸஹவநங்கத:' த்ருஷ்ட்வாவநசராந் ஸர்வாங்கச்சித்குர் யாத் சரவ்யயம்॥ க்ஷத்ரியாணாஞ்சஹிதநுர்ஹுதாஶஸ்யேந்தநாநிச "ஸமீ பதஸ்திதம்தேஜோபலமுச்ரயதேப்ருஶம்" என்றிவர்ஸாயுதராய் நிற் கில், ஆரேனையும் மேல்விழுந்து ப்ரமாதம் விளையக்கூடுமென்று பயப் பட்டு (ங) "ధర్మాదర్థః ప్రభవతి ధర్మాత్ప్రభవతే సుఖమ్" "தர்மாதர்த்த: ப்ரபவதி தர்மாத் ப்ரபவதேஸுகம்" இத்யாதியாலே, ஸர்வத்துக்கும் தர்ம்மமே மூலமென்னுமிடத்தை ஸ்மரிப்பித்து, ஆனபின்பு ஆயுதத்தைவைத்து தாபஸவேஷத்தோடே தர்மத்தையநுஷ்டிக்க வமையுமென்றுதர்மோப தேஶத்தையும் பண்ணின பெரியபிராட்டியாரையும், (ச) "అహం శిష్యాచ దాసీచ భక్తాచత్వయి మాధవ। మత్కృతే సర్వభూతానాం లఘూపాయం వదప్రభో" "அ ஹம்சிஷ்யாசதாஸீசபக்தாசத்வயிமாதவ, மத்க்ருதே ஸர்வபூதாநாம் லகூபாயம் வதப்ரபோ" என்று, ஸ்ரீ வராஹநயினார்பக்கலிலே பரமதர் மங்கேட்டு தந்மூலமாக சிஷ்யையும் தாஸியும் பக்தையுமாய் (ரு) "உன்தன்னைப்பாடி" என்கிறபடியே, கவிபாடி (சு) "திருமகளும்புவி யும் செம்பொர்த்திருவடியினிணைவருட" என்கிறபடியே, பெரியபிரா ட்டியாரோபாதி அவன் திருவடிகளைப்பிடித்து (எ) "இன்றுவந்தித் தனையமுது செய்திடப்பெறில் நானொன்றுநூறுயிரமாகக்கொடுத்து பின் னுமாளுஞ் செய்வன்" என்று, தன்னை கைங்கர்யம்கொண்டாலதுக்கு

(க) ஸ்ரீ-ரா. அ. உஎ. சு. (உ) ஷை - ஆ. க. கஉ. (ங) ஷை - உக. (ச) வரா ஹபு-கை-ம். (ரு) திருப்பாவை, உஎ. (சு) பெ-மொ. எ. அ. க. (எ) நாச்சி-தி-கூ. எ.

மூ. வருடி யின்று வந்தென்பாராயுஞ் சென்றாலூரும் நிவாஸ
தாஸ பேதங்கொள்வாராயுந் தானவனாகப் பாவிப்பர்.

மூ.—(௪௪) எழுவதோருருவழிக்கச்செய்கிற

வருடி - திருவடிகளைப் பிடித்துக்கொண்டு, இன்றுவந்து - இன்றைக்கு கைங்கர்யங்கொண்டா லதுக்கு ப்ரத்யுபகாரம் பண்ணுவன், என்பாராயும் - என்ன (ஸ்ரீபூமிப்பிராட்டியையும்,) சென்றால் - ஊரும் இப்பாட்டுக்களில் ப்ரகாரமும், நிவாஸ தாஸ - இப்ஶ்லோகங்களில் ப்ரகாரமும், பேதங் கொள்வாராயும் - சத்ரஸிம்ஹாஸந வாஹநவ்யஜநாதி தேஹபேதம்கொண்டனேக கைங்கர்யங்களைச்செய்யும் திருவநந்தாழ்வான் திருவடி முதலானாரையும், தானவனாக பாவிப்பர் - அவர்கள் தானாகவே பாவிப்பர்.

(அ) எழுவதோருரு - தேஜோராசிமத்யே வுந்நேயமான திவ்யமங்கள விக்ரஹம், அழிக்க - (இவருடைய பும்ஸ்த்வத்தை)யழிக்க, செய்கிற - பண்ணுகிற,

ப்ரத்யுபகாரமும் பண்ணுவனென்ற ஸ்ரீ பூமிப்பிராட்டியாரையும், (க) "சென்றால் குடையாம்" என்கிறபாட்டிலும் (உ) "𑌨𑌿𑌵𑌾𑌸𑌶𑌯𑍍𑌯𑌾" "நிவாஸ ஶய்யா" இத்யாதி ஶ்லோகத்திலுஞ்சொல்லுகிறபடியே, பகவத்விநியோகாநுகுணமாக, சத்ரஸிம்ஹாஸநபாதுகாம்ஶுகாதி ஶரீரபேதங் கொண்டு,ஸகலவிதகைங்கர்யங்களையும் செய்யும் திருவநந்தாழ்வானையும் (௩)"ஊரும்புட்கொடியுமஃதே" என்கிறசந்தையிலும், (௪) "𑌦𑌾𑌸𑌸𑍍𑌸𑌖𑌾" "தாஸஸ்ஸகா" இத்யாதி ஶ்லோகத்திலும் சொல்லுகிறபடியே, வாஹநத்வஜவிதாநவ்யஜநாதி தேஹபேதங்களைக்கொண்டு அநேககைங்கர்யங்களைச்செய்யும் பெரியதிருவடியையும்போலே இவரும் (௫) "பிறந்திட்டாள்" என்கிறபடியே,பிறந்துபிராட்டியார் தசையிலேநின்று பேசும்படியான பல்பாவ வ்ருத்திகளையும் (௬) "ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னிவழுவிலா வடிமைசெய்ய வேண்டுநாம்" என்று, ஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் உசிதமான ஸகலஶேஷ வ்ருத்திகளையும், பண்ணவேணுமென்று மபிநிவேஶாதி ஶயத்தையு முடையராகையாலே, பிராட்டிமாரையும் அநந்தாதிகளான ஸூரிகளையும், அவர்களுக்கும் தமக்கு மொருவிஶேஷமற அவர்கள் தானாகவேபாவிப்பரென்னபடி. *

வ்யா. (௪௪) இப்படி யிவர்க் கிவ்வவஸ்தை விளையும்படி 'ஈஶ்வர விக்ரஹ வைலக்ஷண்யம்,' இவர் பும்ஸ்த்வத்தையழித்து ஸ்திரீத்வபாவனையை ஜநிப்பித்ததுக்கும், இத்திருமேனியோடே யிவர்க்கிவ்விஷயத்தில் அநேகவிதாநுவ்ருத்திக ளுண்டானதுக்கும், த்ரௌபதீ கௌஸல்யைகள் படிகளை, த்ருஷ்டாந்தமாகச் சொல்லலாமோவென்னு மாகாங்க்ஷையிலே, இதுக்கவற்றைத்ருஷ்டாந்தமாக்குகை ஸ்தூலமென்னு மிபத்தை தர்சிப்பிக்கிறார். (எழுவதோருருவென்று துடங்கி.) அதாவது:—

(க) தி-அ. க. ௩௩. (உ) ஆ-தோ. ௩௬. (௩) தி-வா. ௬0. உ. ௩. (௪) ஆ-ஸ்தோ. ௪0. (௫) தி-வா. ௬. ௫. ௬0. (௬) தி-வா. ௩. ௩. க.

மூ. வழுவிலா வடிமைக்குப் பாஞ்சாலி படுத்துமதும் கௌஸல்யாநு வ்ருத்தியு மொப்பாக்குகைபரிசு.

மூ.—(சரு) பெருக்காறு பலதலைத்துக்

வழுவிலாவடிமைக்கு - நாநாவிதாநுவ்ருத்திகளுக்கு, பாஞ்சாலிபடுத்துமதும் - த்ரௌபதி ஸ்வதேஹ ஸௌந்தர்யத்தாலேபும்பாவத்தை யடைவித்ததும், கௌஸல்யாநுவ்ருத்தியும் - கௌஸல்யையானவளௌபாதிகபர்த்ரு விஷயமாகப்பண்ணின கதிபயாநுவ்ருத்திகளையும், ஒப்பாக்குகை - ஸத்ருஶமாக்குகை, பரிஸு - ஸ்தூலம்.

(அ) பெருக்காறு - கிண்ணகமெடுத்தவாறு, பலதலைத்து - பலதலையாய்ப் பரந்துசென்று,

(க) "சோதிவெள்ளத்தினுள்ளே யெழுவதோருருவு" என்று, தேஜோராசிமத்யே, உங்நேயமாம்படியிருப்பதாய் (உ) "పుంసాం దృష్టిచిత్తాపహారిణం" "பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்கிறபடியே, வைரவுருக்காய் ஆண்களையும் பெண்ணுடையுடுத்துமதான வவனுடைய அப்ராக்ருத விக்ரஹம், இவருடைய பும்ஸ்த்வத்தை யழித்து ஸ்த்ரீத்வபாவனையை விளைத்ததுக்கும், நிருபாதிக ஶேஷியானவவன் விஷயத்தில், நிரதிஶயப்ரேமத்தாலே (ங) "வழுவிலாவடிமைசெய்ய" என்கிறபடியே, தம்முடைய பாவவிஶேஷங்களால் இவர் செய்கிற நாநாவிதாநுவ்ருத்திகளுக்கும் (ச) "పాఞ్చాల్యాః పద్మపత్రాక్ష్యా స్నాయన్త్యా జఘనం ఘనం । యాః స్త్రియో దృష్టవత్యస్తాః పుంభావం మనసా యయుః" "பாஞ்சால்யா꞉ பத்மபத்ராக்ஷ்யா ஸ்நாயந்த்யாஜகநம்கநம் । யாஸ்த்ரியோ த்ருஷ்டவஸ்த்யஸ்தா꞉ பும்பாவம் மநஸாயயு꞉" என்கிறபடியே, ப்ராக்ருதமாய் மாம்ஸாஸ்ருகாதி மயமான தேஹத்தையுடைய த்ரௌபதி,ஸ்வதேஹஸௌந்தர்யத்தாலே ஸஜாதீயனா ஸ்த்ரீத்வத்தையழித்து பும்பாவத்தையடைவித்தைத்தையும் (ரு) "యదా యదా హి కౌసల్యా దాసీవచ్చ సఖీవచ । భార్యావద్భగినీవచ్చ మాతృవచ్చోపతిష్ఠతి" "யதாயதாஹிகௌஸல்யாதாஸீவச்சஸகீவச। பார்யாவத்பகிநீவச்சமாத்ருவச்சோபதிஷ்டதி" என்கிறபடியே, கௌஸல்யையார், ஔபாதிகபர்த்ருவிஷயத்தில், அவஸ்தாநுகுணமாகப்பண்ணின பாவவிஶேஷ ப்ரயுக்தகதிபயாநுவ்ருத்தியையும், த்ருஷ்டாந்தமாக்குகை ஸுஸத்ருஶமல்லாமையாலே ஸ்தூலமென்னபடி. இத்தாலொருபுடை ஒப்புச்சொல்லுவோமென்றாலும் இதுக்கதுபற்றாதென்றதாயிற்று. *

வ்யா. (சரு) இப்படி யவஸ்தாந்தராபன்னராலும் தாமான தன்மையால் செல்லும் மபிநிவேஶம், இவர்க்குக் குறையாதென்னு மத்தஸத்ருஷ்டாந்தமாகவருளிச்செய்கிறார் மேல். (பெருக்காறென்று துடங்கி) அதாவது :— கிண்ணகமெடுத்தவாறு, பலதலையாய்ப்பரந்து

(க) தி-வா. ரு. ரு. கo. (உ) ஸ்ரீ-ரா. அ. ங. உஅ. (ங) தி-வா. ங. ங. க. (ச) ஸ்ரீ-பா. உ. (ரு) ஸ்ரீ-ரா. அ. கஉ. சுஎ.

மூ. கடலை நோக்குமாப்போலே நெக்கொசிந்து கரைந்தலைந் திடிந்துடையப் பெருகுகாதல் கடலிடங்கொண்ட கடலை பஹுமுகமாக வவகாஹிக்கும்.

மூ—(சகூ) அச்சேத்யமென்றுமது ௦ஈரும்

கடலைநோக்குமாப்போலே - ஸமுத்ரத்தை யவகாஹிக்குமாப்போலே, நெக்கொசிந்து - சிதிலராய், கரைந்து - த்ரவீபூதராய், அலைந்து - நிலை கலங்கி, இடிந்து - நெஞ்சுகட்டழிந்து, உடைய - உருக்குலைந்துபோம் படி, பெருகுகாதல் - அபிவ்ருத்தமாகிறகாதல், கடலிடங்கொண்ட கடலை - க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளின, ஸ்ரீய: பதியை பஹுமுக மாக - நாநாப்ரகாரமாக, அவகாஹிக்கும் - ப்ரவேசிக்கும்.

(அ) அச்சேத்ய மென்றுமது - சேதநாத்யநர்ஹமான வாத்ம வஸ்து, ஈரும் - ஈருநின்றது,

செல்லாநிற்க தனக்கொருகுறைவின்றியே, (க) "பெயரும்கருங்கடலே நோக்குமாறு" என்கிறபடியே, தனக்குப்புகலானகடலை நோக்கிச்சென்று புகுறுமாப்போலே (உ) "நெக்கொசிந்துகரையும்" (ங) "நீராயலைந்து" (ச) "நெஞ்சிடிந்து" (ரு) "என்மனமுடைவதுமவர்க்கே" என்று, புடைக்கு லைப்பட்டு சிதிலராய் பரவசராய் த்ரவீபூதராய் நிலைகலங்கி நெஞ்சுகட் டழிந்து உருக்குலைந்துபோம்படி (சு) "பெருகுமால்வேட்கை" (எ) "கழியமிக்கதோர்காதல்" என்கிறபடியே, கரையழியப்பெருகுகிற காத லானது (அ) "கடலிடங்கொண்ட கடல்வண்ணு" என்கிறபடியே, ஒரு கடலொருகடலிலே,சாய்ந்தாப்போலே திருப்பாற்கடலிலே கண்வளர்ந் தருளின பரமஹ்ரமானவடிவையுடைய பெரியபெருமாளாகிற அபரிச் சேத்யவஸ்துவை தாமானதன்மையாலும் அவஸ்தாந்தராபத்தியாலு முண்டான பேதத்தாலே பலமுகமாகச்சென்று அவகாஹிக்குமென்கை. இத்தால் உக்தவக்ஷ்யமாணவஸ்தைகளுக்கெல்லாமுடலான இவரு டைய பக்திவைபவம் ப்ரதிபாதிக்கப்பட்டது. *

வ்யா. (சகூ) இவருடையபக்திதான் ஶாஸ்த்ரங்களில் சொல்லுகிற படியே, ஸக்ரமமாய் ஸாத்ம்யமாய் யேகமுகமாயிராமலிப்படி அமர்யா தமாய் அஸாம்யமாய் அநேகமுகமாய் நடப்பானென்னென்னுமாகாங் க்ஷையிலே அருளிச்செய்கிறார். (அச்சேத்யமென்றுதுடங்கி) அதா வது:— (கூ) "[Telugu-script quotation]" "அச்சேத் யோயமதாஹ்யோயமக்லேத்யோ ஶோஷ்யயேவச" என்று, சேதந தஹந க்லேதந ஶோஷணநர்ஹமாகச் சொல்லப்படுமாத்மவஸ்து (க0) "சிவனொடு பிரமன்வண்டிருமடந்தை சேர்திருவாகமெம்மாவியீரும்" என்றும், பிராட்டியோடு ருத்ராதிகளோடுவாசியற உடம்புகொடுக்கு

(க) தி-அ. க. கூஎ. (உ) தி-வா. கூ. ரு. உ. (ங) ஷை-ரு. அ. க. (ச) ஷை-கூ. கூ. உ. (ரு) ஷை-ங. கூ. (சு) ஷை-கூ. க. (எ) ஷை-ரு. ரு. க0. (அ) ஷை-எ. உ. எ. (கூ) ஸ்ரீ-கீ. உ. உச. (க0) தி-வா. கூ. கூ. கூ.

மூ. வேம் ஈரியாயுலர்த்த வென்னப்படசித்தம் சிற்றுயல்லே னென்று நீங்கக்கரணங்கள் முடியானே யிலவையாக

வேம் - வேவாநின்றது, ஈரரியாய் - ப்ரேமரஸார்த்ரம், உலர்த்த - ஶோஷிப்பித்தது, என்னப்பட - இப்படிசேதநாத்யர்ஹமாய்த் தென்று தாமே செல்லும்படியாக, சித்தம் - மநஸ்ஸு, சிற்றுயல்லேனென்று விஶ்லிஷ்டரான வுமக்குகரணமாவேனல்லேனென்று, நீங்க - விட்டுப் போக, கரணங்கள் - அவயவங்கள், முடியானேயிலவையாக - முடியானேயென்கிற திருவாய்மொழியிற்படியே ஓருகரணம் கரணாந்தரவ்ருத்தியை ஆசைப்படும்படி விடாய்க்க,

மவனுடையசீலம்ஸ்மாரகமாய் என்னுத்மாவை ஈராநின்றதென்றும், (க) "வேமெமது யிரழல்மெழுகிலுக்கு" என்று, என்னுத்மாவானது நெறுப்பிலிட்ட மெழுகுபோலே உருக்குலைந்து வேவாநின்றதென்றும், (உ) "கண்ணனுக்கென்றீரியாய்" என்று, நல்லதுகண்டால் க்ருஷ்ணனுக்கென்கிறவநுஸந்தாநத்தாலே ஆர்த்ரதையடையுமென்றும், (ங) "வேட்கைநோய்மெல்லாவியுள்ளுலர்த்த" என்று, ப்ரெமவ்யாதியானது ம்ருதுஸ்வபாவமான என்னுத்மவஸ்துவை குருத்துவற்றுக உலர்த்த என்றும், இப்படி சேதநாநர்ஹமாய்த்தென்று ஸ்வயமேவசொல்லும்படியாக (ச) "என்னெஞ்சென்னைநின்னிடையேனல்லேனென்று நீங்கி" என்று, அசேதநமானசித்தமானது, சேதநஸமாதியையடைந்து அவன் விஶ்லேஷித்துப்போன வுனக்குகரணமாவே னல்லேனென்று (ரு) "ஸங்கல்பத்தமயா" "ஸங்யஸ்தம்மயா"என்கிறபடியே, உரவறச்சொல்லித், தம்மைவிட்டுநீங்க, பாஹ்யகரணங்கள் முடியானேயிற்படியே சேதநஸமாதியாலே ஓருகரணத்தினுடைய வ்ருத்தியை கரணாந்தரமாசைப்படும்படிவிடாய்க்க (சு) "உடலம் நின்பாலன்பாயேநீராயலேந்துகரைய" என்று, பகவத் ப்ரேமபாரவஶ்யத்தாலே ஆத்மாசிதிலமாய்ப் போகாதபடி கட்டினகரையானஶரீரம், த்ரவ்யமிருந்த குறைஹயுமுருகுமாப்போலே, அன்பும் அதுக்காஶ்ரயமும் என்றிரண்டின்றியே அன்புதானொருவடிவுகொண்டாப்போலேயாய் உத்தரோத்தரம் சைதில்யத்தையடைந்து ஆத்மதர்மத்தையேறுட்டுக்கொள்ள (எ) "கடலும் மலையும், இருளும்திணிவண்ணம்" இத்யாதிகளில்படியே, காற்றுக்கு ஸததகதித்வமும், கழிக்கு யேறுவதுவடிவதாகையும், நியதஸ்வ்பாவமென்றியாதே அவற்றுக்கவை பகவத்விரஹக்லேஶஜநிதமாகக்கறுதி, அசேதநமானவவற்றை தமக்குஸமதுக்கிகளாகக்கொண்டு (அ) "எம்மாற்றுமை சொல்லியழுவோமை" என்று, தாமவற்றைக்கட்டிக்கொண்டு கிடந்து கதறும்படியாக (கூ) "அலர்தூற்றிற்றது மூலமாக்கொண்டுவெங்காதல்" என்றும், (க0) "மயற்பெருங்காதல்" என்றும், சொல்லுகிறபடியே, பிறர்பழிசொன்னதுவே எருவாகப்பணை

(க) திவா. க0. ங. எ. (உ) ஷெ-சு. எ. கூ. (ங) ஷெ-உ. க. க0. (ச) ஷெ - அ. உ. க0. (ரு) (சு) திவா. ரு. அ. க. (எ) ஷெ-உ. க. ச. அ. (அ) ஷெ - எ. (கூ) ஷெ-எ. ங. அ.

மூ. வுடலமாத்மதர்மங்கொள்ளக்காத்துங்கழியுங்கட்டிஅழக்கொ
ண்டபெருங்காதலுக்குப் பத்திமைநூல்வரம்பில்லையே.

மூ—(௭௪) ஸம்பந்தோபாய பலங்களில் உணர்த்தி துணிவுபதற்ற

உடலம் - ஶரீரம், ஆத்மதர்மங்கொள்ள - ஆத்மதர்மத்தையேறிட்டுக்கொள்ள, காத்துங்கழியும் - காத்தையுங்கழியையும், கட்டியழ, கட்டிக்கொண்டு கிடந்து கதறும்படியாக, கொண்டபெருங்காதலுக்கு - உண்டானவபரிச்சேத்ய பக்திக்கு, பத்திமைநூல்வரம்பில்லையே - ஶாஸ்த்ரோக்தக்ரம மில்லையே.

(அ) ஸம்பந்த - (அநந்யார்ஹஶேஷத்வாதி) ஸம்பந்தத்திலும், உபாய - ஸித்தோபாயத்திலும், பலங்களில் - ப்ராப்யத்திலும், உணர்த்தி-(க்ரமமாக) ஞ்ஞாநம், துணிவு - துடிப்பு, பதற்றம் - த்வரை,

த்துச்சொல்லுமதாய் க்ருத்யாக்ருத்யம் தெரியாதபடி அறிவுகேட்டை விளைப்பதுமானவபரிச்சேத்யபக்திக்கு (௧) "ನಶಾಸ್ತ್ರಂನೈವಚಕ್ರಮಃ" "நஶாஸ்த்ரம் நைவசக்ரமஃ" என்கிற, தேஶவிஶேஷத்தில் அநுபவோபகரணபக்திபோலேசென்றபடிகண்டிருக்குமத்தனையல்லது (௨) "பத்திமைக்கன்புடையேனவதே" என்கிறபடியே, நூற்பிடித்துப்பரிமாறும்படி வரம்புகட்டவொண்ணுதிறேயென்கை. இத்தால் (௩) "ನಿಧಿಧ್ಯಾಸಿತವ್ಯಃ" "நிதித்யாஸிதவ்யஃ" என்கிறவிதிப்ரேரிதையாய் சேதநஸாத்யையாய் க்ரமபரிணுமிநியான பக்திபோலன்றிக்கே, அதுக்கெதிர்த்தட்டாய் கரையழிந்து செல்லுகிறவிது ஶாஸ்த்ரமர்யாதையின் கீழடங்காதென்றதாயிற்று. ஆக 'ஜ்ஞாநத்தில் தம்பேச்சு' என்றுதுடங்கி இவ்வளவும் ஜ்ஞாநதசையில் தாமானதன்மையாலும், ப்ரேமதசையில் ஸ்த்ரீத்வரூபேணவும் பேசுவரென்றும், ஸ்த்ரீத்வம் ஆத்மாவுக்குவந்தேயல்லாமையாலே, இவர்க்கிதுஸ்வா பாவிகமென்றும், அதுதான்ஸாமாந்யமன்றிக்கே ஆறுப்ரகாரத்தாலே லக்ஷ்மீஸமரென்று மற்றைப்பிராட்டிமார் பகவத்பரிக்ரஹமுடையாரெல்லாரோடும்ஸாம்யமுடையவரென்றும், ஸர்வதாஸாம்யமிவர்க்கு லக்ஷ்மீயோடென்றும், மற்றும் பகவதநந்யராயும் பகவத்ப்ரத்யாஸந்நராயுமுள்ள லக்ஷ்மணுதிகள் தஶரதாதிகள்படியு மிவர்க்குண்டென்றும், அவர்களிலிவர் வ்யாவ்ருத்தரென்றும், 'பிராட்டிமாரையும் அநந்தாதிகளையும் அவர்கள் தானுகவேபாவிப்பரென்றும், இந்தபாவநாஹேதுவான விவருடைய ஸ்த்ரீத்வவரவாற்றுக்கும் அநேகவ்ருத்திகளிலபிநிவேஶத்துக்கும் த்ரௌபதி கௌஸல்யைகள் படிகளைத்ருஷ்டாந்திக்கைஸ்தூலமென்றும், இந்தபாவ வ்ருத்திகளுக்கு மூலமான பக்திப்ரகாரங்களையும் சொல்லிற்றுயிற்று. *

வ்யா. (௭௪) ஏவம்பூதபக்திதஶையில், இவர் பெண்பேச்சாகப் பேசுமிடத்தில் தோழி தாய் மகளென்று த்ருவிதமாகப் பேசுகிறவிதுக்கு கருத்தென்னென்னு மபேக்ஷையிலே அத்தைப்ரகாசிப்பிக்கிறுர்; மேல் (ஸம்பந்தோபாயபலங்களிலுணர்த்தி துணிவு பதற்றமாகிற ப்ரஜ்

(௧) (௨) திருக்குறுந்தாண்டகம் - ௪0, (௩)

மூ. மாகிற ப்ரஜ்ஞாவஸ்தைகளுக்கு தோழி தாயார் மகளென்று பேர்.

ஆகிற-இப்படியிருக்கிற, ப்ரஜ்ஞாவஸ்தைகளுக்கு, தோழி தாயார் மகளென்றுபேர் - தோழியென்றும் தாயென்றும் மகளென்றும் பேர்.

ஞாவஸ்தைகளுக்கு தோழி தாயார் மகளென்று பேரென்று) அதாவது:— தோழியாவாள், நாயகநாயகிகளை யிணக்கி சேர்ப்பிக்குமவளாகையாலே, திருமந்த்ரத்தில் ப்ரதமபதத்தாலீஶ்வரனோடாத்மாவுக்குச்சொல்லப்பட்ட அநந்யார்ஹஶேஷத்வாதி ஸம்பந்தஜ்ஞாநமே அவனோடிவ்வாத்மா சேறுகைக்கு ஹேதுவாகையாலே, அந்தஸம்பந்தஜ்ஞாநமாகிற ப்ரஜ்ஞாவஸ்தையை தோழியென்றும்; தாயாராவாள், பெற்றுவளர்த்து பெண் பிள்ளை ப்ராப்தயௌவனையாய் நாயகவிஷயத்திலதிமாத்ர ப்ராவண்யத்தாலே அவனிருந்தவிடத்தேறப்போகவேணுமென்று பதறுமளவிலும், அவன்தானேவரக்கண்டிருக்கையொழிய படிகடந்துபுறப்படுகைகுலமர்யாதைக்குப்போராதென்று நிஷேதித்துப்போருமவளாகையாலே, ஸித்தோபாயத்தைப்பற்றினார்க்குப்ராப்யவிளம்ப ஹேதுவில்லாமையாலே சீக்ரமாகப்ராப்யத்தைப்பெறவேணுமென்கிறத்வரையினுடைய உத்பத்யாதிகளுக்குப்ரதமஹேதுவாயும், அந்தத்வரைப்ராப்யவைலக்ஷண்யதர்ஶநத்தாலே க்ரமப்ராப்திபற்றாமல் முறுகிநடக்குமளவில். இதுப்ரபந்நகுலமர்யாதைக்குச்சேராதென்று நிஷேதித்து ஶேஷியானவன்தானே வந்து வீஷயீகரிக்கக் கண்டிருக்கவேணுமென்று, இதின் துடிப்பையடக்கப்பார்க்கிறமத்யமபத ப்ரதிபாதித உபாயாத்யவஸாயமாகிற ப்ரஜ்ஞாவஸ்தையைத்தாயென்றும், தலைமகளாவாள், இயற்கையிலே புணர்ந்து நாயகன் வைலக்ஷண்யத்திலே யீடுபட்டு குலமர்யாதைகளையும் பாராதே கிட்டியல்லது தரியேனென்றும் பதற்றற்றையுடையளாகையாலே, ப்ரதம மத்யம பதங்களாலறியப்பட்ட ஶேஷியாய் ஶரண்யனானவனுக்கு சரமபதப்ரோக்தமான ஸ்வரூப ரூப குண விபூதிகளால் வந்த வைலக்ஷண்யத்தை யநுஸந்தித்து ததநுபவ விளம்பாக்ஷமத்வத்தாலேததேகோபாயத்வாத்யவஸாயத்தையுமதிக்ரமித்துக் கிட்டியநுபவித்தல்லது தரியாதபடி நடக்கிற ப்ராப்யத்வரையாகிற ப்ரஜ்ஞாவஸ்தையை மகளென்றும் பேரிட்டுச்சொல்லக்கடவதென்கை. ப்ரஜ்ஞாவஸ்தைகளென்னாமல் ப்ரஜ்ஞாவஸ்தைகளென்னது, த்ருவிதாவஸ்தையுமிவர்க்கு ஸர்வகாலமுமுண்டென்னுமிடந்தோற்றுகைக்காக (க) "[illegible]" "ப்ரஜ்ஞாத்ரைகாலிகீமதா" என்னக்கடவதிறே. பதத்ரயார்த்தஜ்ஞாநமும் திருவுள்ளத்தியலெப்போதுமுண்டாயிறேயிருப்பது. *

(க) நிகண்டு.

மூ.— (சஅ) ஸகி

(அ) ஸகி - தோழி,

வ்யா. (சஅ) இவ்வவஸ்தைகள் மூன்றும், இவர்பேச்சுலே தோற்றுமோவென்னு மபேக்ஷயிலே தோழி தாயார் மகள்பேச்சான திருவாய்மொழிகளிலே இவை தெரியுமென்று மற்றை ஸூக்ஷ்மமாக வருளிச்செய்கிறார், ( ஸகி ) என்றுதுங்கி, அதாவது:— எம்பெருமானோடே யியர்க்கையிலே புணர்ந்து பிரிந்தாற்றமாட்டாமையாலே மோஹங்கதையாய் கிடக்கிற பிராட்டி தசையைக்கண்ட தாய்மார் கலங்கி இவள் நோவையும் அதுக்கு நிதாநத்தையும் பரிஹாரத்தையு மறியாதே ப்ரதிபன்னபாஷிணியா யிருப்பாளொரு கட்டுவிச்சி சொல்லைக்கொண்டு இன்னேய்க்கு பரிஹாரமாகக்கறுதிவெறியாடலுற, இவள் ப்ரக்ருதியறியுமுயிர்த்தோழி அநந்யார்ஹையான விவளுக்கு அந்யஸ்பர்ஶம்ஸஹியாது; நாமித்தை விலக்காதொழியில் இவளையிழக்கவருமென்று பார்த்து இப்போதுநிரூபித்தறிந்தாளாக, இவள்நோவையும் அதுக்கு நிதாநத்தையுமவர்களுக்குச்சொல்லி ததுசிதபரிஹாரங்களையும் விதித்து (க) “அங்கோர் கள்ளுமிறைச்சியும் தூவேல்மின்” (உ) “உணங்கல்கெடக் கழுதையுதடாட்டங்கண்டென்பயன்” இத்யாதிகளாலே, வெறியைவிலக்கினபாஶுரத்தாலேப்ராப்யத்வராதஶையில் அவஸாதமடியாக உபாயத்யாவஸாயம் கலங்கி ( ஈ ) “धर्मेण पापमपनुदति” “ தர்மேணபாபமபநுததி ” என்கிறபடியே, தர்ம்மாநுஷ்டாத்தாலே துக்கஹேதுவைப் போக்கலாமென்பார்வார்த்தையைக்கொண்டு, இவ்வவஸாதத்தைபரிஹரிக்கலாமோவென்றுதேவதாந்தர்யாமிபரமான கர்டிகலாபங்களிலே ப்ரவர்த்திக்கத்தேட; அவ்வளவிலே ஸம்பந்தஜ்ஞாநமானது, இவ்வவஸாதம் கர்மபலமன்றிக்கேஆகஸ்மிகபகவத்கடாக்ஷபலமாய் அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனனவனை அநுபவிக்கையிலுண்டானப்ராவண்யகார்யமாகையாலே, இதுக்கது பரிஹாரமுமன்று, அநந்யார்ஹ ஶேஷத்வத்துக்கு விருத்தமாகையாலே ஸ்வரூபநாஶகமுமாமென்று, அந்யஸ்பர்ஶத்தை நிவ்ருத்திப்பித்த (ச) “தீர்ப்பாரையாமினியும்” திருத்துலைவில்லிமங்கலத்திலே, அதிப்ரவணையாயிருக்கிற பெண்பிள்ளைமீட்க்கப்பார்க்கிறதாய்மாரைக்குறித்து தோழியானவள் ( ரு ) “இவளைநீரினியன்னைமீருமக்காசையில்லை” என்று நீங்களேயன்றோ திருத்துலவில்லி மங்கலத்திலே கொண்டுபுக்கு இப்ராவண்யத்தை விளைத்திகோள், இனி, ப்ராப்தவிஷய ப்ரவணையான விவளை உங்களால் மீட்கப்போகாது; ஆனபின்பிவள்பக்கலுங்களுக்கு ஆசையறவமையும், என்ற பாசுரத்தாலே, அர்ச்சாவதார ஸுலபமான விஷயமே உபாயமாகையாலே, எப்போதுமதிலே நோக்காயிருக்கு

(க) தி-வா. ச. ௬. ௩. (உ) ஷெ-எ. (௩) தை-உ. உ. ௬. ௧. (ச) தி-வா. ச. ௬. ௧. (ரு) ஷெ-௬. ரு. ௧.

மூ. வெறிவிலக்கி ஆசையறுத்து அறத்தொடுநின்ற மூன்றில் அநந்யார்ஹத்வமும்

வெறிவிலக்கி - (அந்யஶேஷத்வத்தை) நிவ்ருத்திப்பிற்றும், ஆசையறுத்து - இவள்பக்கலுங்களுக்காசையறவமையுமென்றும், அறத்தொடுநின்ற - (அநந்யார்ஹத்வாவிருத்த) தர்மத்தோடும்நின்ற, மூன்றில் - (தோழிப்பேச்சான) மூன்றான (திருவாய்மொழியிலும்), அநந்யார்ஹத்வமும் - அநந்யார்ஹஶேஷத்வமும்,

முபாயாத்யவஸாயம், அவ்விஷயவைலக்ஷண்யத்தைவிஷயீகரித்த ப்ராவண்ய கார்யமானத்வரையும் உபாயத்திலே அந்வயிக்கிறதோவென்று மதிஶங்கையாலே அத்தை நிவர்த்திப்பிக்கத்தேட, அவ்வளவிலே ஸம்பந்தஜ்ஞாநம், ஶேஷவஸ்துகதமானப்ராவண்யம் ஶேஷியுகப்புக்கு விஷயமாமித்தனையல்லது உபாயகோடியிலன்வயியாது, ப்ராப்தவிஷயவைலக்ஷண்யாதீநமாகவந்ததாகையாலே, நிதர்த்திப்பிக்கவும் போகாது. இத்தைஸ்வநிவர்த்யமாக நினைத்திருக்கிறஸ்வாதந்த்ர்யம்அத்யந்த பாரதந்த்ர்யமாகிறஸ்வரூபத்துக்கு விருத்தமாகையாலே த்யாஜ்யமென்று ஸ்வஸ்பர்ஶத்தை நிவ்ருத்திப்பிற்ற (க) "துவளில்மாமணியும்" தலைமகள் பருவத்தைக்கண்ட பந்துஜநங்கள், ஸ்வயம் வரத்துக்கு ராஜலோகத்தைத் திரட்டுகைக்கு மணமுறசறைவிக்க, திருப்புலியூர் நாயனாரோடே இவளுக்கு கலவியுண்டாயிற்றென்று மிடத்தை இவள்வடிவிலும் பேச்சிலு முண்டானவேறுபாட்டாலே, அறிந்தஉயிர்த்தோழியானவள், இத்வநிபெண்பிள்ளைசெவிப்படுமாகில் (உ) "மானிடவர்க்கென்று பேச்சுப்படில்" வாழாத தன்மையளாயிருக்கிற விவளைக் கிடையாது, ஏற்கனவேபரிகரிக்கணுமென்று இவள் பந்துஜநங்களைக்குறித்து, இவளுக்கு திருப்புலியூரில் நாயனாரோடே ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாய்த்து போலே யிராநின்றது. தத்குண சேஷ்டிதங்களையே வாய்புலத்தாநின்றாள், ஆனபின்பு நீங்கள் செய்கிறது தர்மமல்லவென்ன, ஆகிலிவளுக்குத் தக்கவவயவஶோபை ஆபரணஶோபை முதலான நாயகலக்ஷணங்களவனுக்குண்டோவென்ன, அவையெல்லாங்குறையில்லை, அவையொன்றுமில்லையேயாகிலும் இவளங்கே அநந்யார்ஹையானமைக்கடையாளம் ஸுவ்யக்தமாகக்காணலாம். ஆனபின்பித்தைத்தவிருங்கோளென்று மத்யஸ்தையாய் நின்று தர்மஞ்சொல்லுகிறாளாய், அந்தமணத்தை விலக்கினபாசுரத்தாலே ப்ராப்யத்வரையினுடைய பரிபாகத்தை உபாயாத்யவஸாயதஶையிலேநின்று தர்சித்தவநந்த்ரம், அதுபகவதநந்யார்ஹமானமையை யறியாதே அந்யவிஷயத்துக்கு மர்ஹமோவென்று நிருபிக்க, அவ்வளவிலே ஸம்பந்தஜ்ஞாநம், இதுக்கநந்யஶேஷத்வ ப்ரஸங்கமும்ஸ்வரூபநாஶகம். ஶேஷியானவவனுடையபோக்யதையாலும், அதுதன்னையொழியவும்நிருபாதிகஶேஷித்வத்தாலும், இவ்வஸ்து

(க) தி-வா. ௬. ரு. க. (உ) நாச்சி - தி. க. க. ரு.

ரூ. வாடி மெலிந்து பித்தேறி ஏறப்பேசிக்கட்டழந்தகன்று
சார்வதே வலித்தமை ஸாதநமாமோவென்று மாதாவஞ்சி
முறைப்பட்டு முறையிடுகிற வேழிலத்யவஸாயமும்

வாடி-(ததியஸம்ஶ்லேஷம் பெறாமையாலே தளிர்போலே) வாடி, மெலிந்து-க்ருசித்து, பித்தேறி-(ஸத்ருஶ பதார்த்தங்களையுமவனாக)ப்ரமித்து, ஏறப்பேசி - ஈஶ்வரனாவேசித்தானோவென்னும்படியவனாகப்) பேசி, கட்டிழந்து - ஸமஸ்தத்தையுமிழந்து, அகன்று - (தனக்குதவாதே போனானென்று தாய்மாரநுதபிக்கும்படி) அகன்று, சார்வதே வலித்தமை - அவன் ஸந்நிதியிலே முடியவேணுமென்று வ்யவஸிதையானமை, ஸாதநமாமோவென்று - உபாயாந்தரமாமோ வென்று, மாதா - தாய், அஞ்சி-பயப்பட்டு, முறைப்பட்டு - (அவனைக்குறித்து) முறைப்பட்டு, முறையிடுகிற - கூப்பிடுகிற, ஏழிலத்யவஸாயமும் - ஏழு திருவாய்மொழியிலத்யவஸாயமும்,

ஸ்து அவனுக்கே ஶேஷமென்றறுதியிட்ட (க) "கருடாணிக்கமலே" யுமாகிற தோழிப்பேச்சான யிம்மூன்று திருவாய்மொழியிலும் அநந்யார்ஹஶேஷத்வம் தோன்றுமென்கை. ஆகவிற்றால் தோழியானவள் வெறிவிலக்கியும் ஆசையறுத்தும் அறத்தொடுநின்றும் இவ்வஸ்து அந்யஶேஷமுமன்று, ஸ்வஶேஷமுமன்று, பகவதேகஶேஷமென்று சொன்ன இம்மூன்று திருவாய்மொழியும் ஸம்பந்தஜ்ஞாந தசையில் பேச்சென்றுமிடம் ஸம்ப்ரதிபந்ந மென்றதாயிற்று. (வாடிமெலிந்தித்யாதி) அதாவது:— (உ) "ஆடியாடியிலே வாடிவாடும்" என்று, "அடியார்கள் குழாங்களையுடன்" கூடப்பெறாமையால் வந்தக்லேஶத்தாலே ஆஶ்ரயத்தையிழந்ததளிர் போலேவாடி (ங) "பாலனாயேழுலகிலே" (ச) "கண்ணன்கழல்துழாய்பொன்செய்பூண்மென்முலைக்கென்றுமெலியும்" என்று, கைகழிந்தவற்றை யாசைப்பட்டு மெலிந்து (ரு) "மண்ணிருந்து துழாவியிலே" (சா) "என்பெண்கொடியேறியபித்தே" என்னும்படி, ஸத்ருஶபதார்த்தங்களையும் ஸம்பந்திபதார்த்தங்களையுமவனாகநினைத்து, கிட்டும்படிபிற்றேறி (எ) "கடல்ஞாலத்தீசன் வந்தேறக்கொலே" என்று' ஆற்றாமையாலே, அநுகரிக்கிறமையறியாதே, ஈஶ்வரனாவேசித்தானோ வென்னும்படியவனாகப்பேசி, (அ) மாலுக்குவையத்திலே" (கூ) "கற்புடையாட்டி யிழந்ததுகட்டே" என்னும்படி, பகவதலாபக்லேஶத்தாலே கட்டடங்கவிழந்து(க0) "உண்ணுஞ்சோற்றிலே" (கக) "இன்றெனக்குதவாதகன்ற" என்று, தன்னைப்பிரிந்துக்லேஶப்படுகிறவிவ்வாபத்தசையிலெனக்குதவாதேபோனாளென்னும்படியகன்று (கஉ) "கங்குலும்பகலிலே"(கங)"சந்தித்துன்சரணம் சார்வதேவலித்த

(க) தி-வா. அ. கூ. க. (உ) ஷி-உ. ச. க. (ங) ஷி-ச. உ. க. (ச) ஷி-க0. (ரு) ஷி-ச. க. (சா) ஷி-சா. (எ) ஷி-ரு. சா. க. (அ) ஷி-சா. சா. க. (கூ) ஷி-க0. (க0) ஷி-எ. க. (கக) ஷி - சா. (கஉ) ஷி-எ. உ. க. (கங) ஷி - ரு.

மூ. புத்ரி பலகாலாள்விட்டு ஆற்றுமை சொல்லிக் கவராதவை விட்டு இரைக்க மடலெடுத்துக் கண்புதையப்போக்கற்று உரு நெஞ்சுள்ளெழக் கூடுநாள்தேடி.

புத்ரீ - தலைமகள், பலகாலாள் விட்டு - நாலாவர்த்தி தூதுவிட்டு, ஆற்றுமைசொல்லி - தரியாமையை முறையிட்டு, கவராதவைவிட்டு-அவன் விரும்பாதவற்றை யுபேக்ஷித்தும், இறைக்க - ஜகக்ஷோபம்பிறக்க, மடலெடுத்து - மடலூர்ந்து, கண்புதைய - கண்ணைமூட, போக்கற்று - கத்யந்தரசூந்யமாய், உரு - திவ்யமங்களவிக்ரஹம், நெஞ்சுள்ளெழ - நெஞ்சுக்குள்ளே ப்ரகாசிக்க, கூடுநாள்தேடி - அவனைக்கூடும் நாளைப்ரார்த்தித்து,

தையலே" என்னும்படி, அவனைக்கிட்டி ஸந்நிதியிலே முடியவேணுமென்று, வ்யவஸிதையானமை, உபாஸகர்க்கு பரபக்திதசையிலுண்டான ஜ்ஞாநகார்யாதிகள்போலே, ஸாதநத்திலே முதலிடுமோவென்று, மாதாவானவளஞ்சி அவன்தன்னையும் வினவவந்தவர்களையும் குறித்து வாடாநின்றாள், மெலியாநின்றாளென்றாப்போலே முறைப்பட்டு (க) "முறையோ வரவணைமேற்பள்ளிகொண்ட முகில்வண்ணனே" என்றத்தலையில் க்ருபையொழிய, இவள் பக்கலுள்ளவையொன்றும் ஹேதுவல்ல, ஆனபின்பிவளையிப்படி துடிக்கவிட்டிருக்கை, உம்முடைய க்ருபைக்கும் ரக்ஷகத்வத்துக்கும் பொருமோவென்று கூப்பிடுகிற ஏழுதிருவாய்மொழியிலும் உபாயாத்யவஸாயம் தோன்றுமென்கை. இத்தால் தாய்ப்பேச்சான ஏழுதிருவாய்மொழியும், உபாயாத்யவஸாயதசையில் பேச்சுமென்றுமிடம் ஸ்பஷ்டமென்னபடி. (புத்ரிஇத்யாதி)அதாவது:—தலைமகளானவள், (உ) "அஞ்சிறையமடநாரை" (ங) "வைகல்பூங்கழி" (ச) "பொன்னுலகாளீ" (ரு) "எங்கானல்" என்கிற, நாலுதிருவாய்மொழியிலும் க்ரமப்ராப்திபற்றாமல் தூதுவிட்டு (சு) "அற்றுமைசொல்லியழுவோமை" என்று, (எ) "வாயுந்திரையுகளிலே" ஸகலபதார்த்தங்களும் பகவதலாபத்தாலே நோவுபடுகிறனவாகக்கறுதி அவற்றை ஸமதுக்கிகளாக்கொண்டழுது, (அ) "ஏறாளுமிறையோனிலே" (கூ) "மாறாளன்கவறாதமணிமாமைகுறைவிலம்" என்று,அவன்விரும்பாதவற்றையுபேக்ஷித்து, "மாரறுசோதியிலே" (க0) "நாடுமிறைக்கவேயாமடலூர்ந்தும்" என்று, ஜகத்க்ஷோபம் பிறக்கும்படி, மடலூர்வனென்று (கக) "ஊரெல்லாந்துஞ்சியிலே" "பின்னின்றகாதல்நோய் நெஞ்சம்பெரிதிடுமோல் முன்னின்னிராவூழிக்கண்புதைய மூடித்தால்" என்று, ப்ரேமவ்யாதியும் ராத்திரியுமாகிற கல்பமும் க்ருதஸங்கேதிகளாய்ச் சூழப்பொருகையாலே, போக்கடியற்று (கஉ) எங்ஙனேயோவிலே, சோதி

(க) தி-வி. கூஉ. (உ) தி-வா. க. ச. க. (ங) ஷை - கூ. க. க. (ச) ஷை - அ. க. (ரு) ஷை - கூ. எ. க. (சு) ஷை - உ. க. எ. (எ) ஷை - க. (அ) ஷை - ச. அ. க, (கூ) ஷை-க. (க0) ஷை-ரு. ங. க0. (கக) ஷை-ரு. ச. க. (கஉ) ஷை-ரு. ரு. க.

மூ. தாழ்த்ததுக்கூடி யுசாத்துணையற்றுச் சூழவும் பகைமுகஞ் செய்யத் தடைநில்லாதே புயக்கற்று மாலையுங் காலையும் பூசலிடுகிற பதினேழில் த்வரையுந்தெரியும்.

தாழ்த்ததுக்கு - விளம்பித்துவந்ததுக்கு, ஊடி - (ப்ரணயரோஷத்தால்) ஊடி, உசாத்துணையற்று - உசாத்துணையுமின்றி, சூழவும் பகைமுகம் செய்ய - பாதகவர்க்கமேகமுகமாய்நலிய, தடைநில்லாதே - தாய்தோழிகளையதிக்ரமித்து, புயக்கற்று - முடிகையிலே வ்யவஸிதையாய், மாலையும் - ஸாயங்காலத்திலும், காலையும் - உதயத்திலும், பூசலிடுகிற - (பாதகபதார்த்தங்கள்நலியா நின்றதென்று) முறையிடுகையுமாகிற, பதினேழில் - (கஎ) திருவாய்மொழியிலும், த்வரையும் - ப்ராப்யத்வரையும், தெரியும் - தோன்றும்.

வெள்ளத்தினுள்ளே எழுவதோருருவென்நெஞ்சுள்ளெழும்" என்று, தேஜஸ்தரங்கமத்யே உன்னேயமான வப்ராக்ருதவிக்ரஹம்,ப்ரீத்யப்ரீதி ஸமமாம்படி உருவெளிப்பாடாய் நெஞ்சிலே ப்ரகாசிக்க, (க) "மானேய்நோக்கியிலே" (உ) "திருவல்லவாழுறையுங் கோனையடியேனடிகூடுவதென்றுகொல்" என்று, அவனைக்கூடும் நாளைப்ரார்த்தித்து, இப்படி ப்ரார்த்யாநிர்க்கவும், தாழ்த்துவந்தவாறே, மின்னிடைமடவாரில் (ங) "போகுநம்பியென்று" ப்ரணயரோஷத்தாலே ஊடி (ச) "வெள்ளைச்சுரிசங்கிலே" (ரு) "என்னெஞ்சினுருமங்கே யொழிந்தார் இனியாரைக்கொண்டென்னுசாகோ" என்று, அபஹ்ருதசித்தையாகையாலே உசாத்துணையுமின்றி (சு) "ஏழையராவியிலே" (எ) "கண்ணன்கோளிழைவாண் முகமாய் கொடியேனுயிர்கொள்கின்றதே" என்று, உருவெளிப்பாட்டாலே பாதகவர்க்கமொருமுகமாய்நலிய (அ) "நங்கள்வரிவளையிலே" (கூ) "காலம்பலசென்றுங்காண்பதாணை யுங்களோடெங்களிடையில்லை" என்று, ஹிதஞ்சொல்லுகிற தாய்மார் தோழிமாரையதிக்ரமித்து (க0) "இன்னுயிர்ச்சேவலிலே" (கக) "இழைநெல்லவாக்கையும் பெய்யவே புயக்கற்றது" என்று, போலிகண்டு நொந்து முடிகையிலே வ்யவஸிதையாய் (கஉ) "மல்லிகைகமழ்தென்றலிலே" ஸந்த்யாகாலத்திலே க்ருஷ்ணனைப்பசுக்களின்முற்கொழுந்தில் வரக்காணுமல் பாதகபதார்த்தங்களாலே நலிவுபட்டுக்கூப்பிட்டும் (கங) "வேய்மருதோளிணையிலே ப்ராதꞏ காலத்திலே க்ருஷ்ணன் பசுமேய்க்கப்போனுகை வதிசங்கைபண்ணி, அவன்முகத்தைப்பார்த்து நீ பசுமேய்க்கப்போனல் நலியக்கடவபாதகபதார்த்தங்கள் நலியாநின்றதென்றுங்கூப்பிடுகிற பதினேழ்திருவாப்மொழிலும் ப்ராப்யத்வரை தோன்றுமென்கை. இத்தால் தலைமகள் பேச்சான பதினேழ்திருவாய்மொழியிலும் ப்ராப்யத்வராதசையிற் பேச்சென்றுமிடம் வ்யக்தமென்றபடி. *

(க) தி-வா. ரு. கூ. க. (உ) ஷை (ங) ஷை-சு. உ. க. (ச) ஷை - ௭. ங. க. (ரு) ஷை-ச. (சு) ஷை-எ. எ. க. (எ) ஷை-அ. (அ) ஷை - அ. உ. க. (கூ) ஷை - எ. (க0) ஷை - கூ. ரு. க. (கக) ஷை. க0. (கஉ) ஷை-கூ. கூ. க. (கங) ஷை-க0. ங. க.

மூ.—(சகூ) தோழிமாரன்னையரென்கிறபன்மை ரக்ஷகத்வாதிபந்த வாத்ஸல்யாதிவ்யவஸாய புத்திபேதத்தாலே.

மூ.—(ரு0) அபிலாஷா சிந்தநாநுஸ்ம்ருதிச்சாருசி

(அ) தோழிமாரன்னைய ரென்கிற - தோழி தாய் விஷயமாகச் சொல்லுகிற, பன்மை - பஹுவசநம் - ரக்ஷகத்வாதி - ரக்ஷகத்வ ஶேஷித்வாதிஸம்பந்தத்தினுடையவும், வாத்ஸல்யாதி - வாத்ஸல்ய ஸ்வாமித்வாதிகளையுடையவும், வ்யவஸாயபுத்தி பேதத்தாலே - அத்யவஸாய ரூபஜ்ஞாநத்தின் பேதத்தாலே.

(அ) அபிலாஷா - தர்ஶநாபேக்ஷை, சிந்தந - ஸ்மரணம், அநுஸ்ம்ருதி - அநவரதபாவனை, இச்சா - அவஶ்யமநுபவிக்கவேணுமென்றுமாசை, ருசி - அநந்ய நிவார்யமாயதிஶயிக்கிறப்ரேமம்,

வ்யா. (சகூ) ஆனுல் தோழியென்றும் தாயென்றும் சொல்லுகிறது, ஸம்பந்தஜ்ஞாநத்தையும் உபாயாத்யவஸாயத்தையுமாகில் தத்தத்விஷயமானபன்மைச்சொல்லுக்கு தாத்பரியமே தென்னுமாகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறுர். (தோழிமாரென்றுதொடங்கி) அதாவது:— (க) "தோழிமார்களு மன்னையரும்" (உ) "அன்னையரும்தோழியரும்" (ங) "தோழிமார் விளையாடப்போதுமினென்ன" (ச) "அன்னையர் நாண" (ரு) "ஊரென்சொல்லிலென்தோழிமீர்" (சா) "எங்ஙனேயோவன்னைமீர்காள்" என்றிப்படி, தோழித்தாய்விஷயமாகச் சொல்லுகிற பன்மை, திருமந்த்ரத்திற் சொல்லுகிறபடியே, இவ்வாத்மாவோடீஶ்ரனுக்கு ரக்ஷகத் ஶேஷித்வ காரணத்வ ஶரீரத்வாதிஸம்பந்தங்கள், பலவுமுண்டாகையாலே, அவ்வோஸம்பந்தங்களை விஷயீகரித்தஜ்ஞாநத்தினுடையபேதத்தாலும், உபாயபூதனானவனுடைய வாத்ஸல்ய ஸ்வாமித்வஸௌசில்ய ஸௌலப்ய ஜ்ஞாந ஶக்திக்ருபாதிகளைப்பற்றிவரும் வ்யவஸாயரூபமான ஜ்ஞானத்தினுடைய பேதத்தாலுமென்கை. 'புத்தி' ஶப்தம் ஜ்ஞாநவாசி. (எ) "[Grantha text]" "புத்திர்மநீஷாதிஷணதீ: ப்ராஜ்ஞாஶேமுஷீமதி:" என்கைக்கடவதிறே. இத்நால், ஸம்பந்தஜ்ஞா[illegible]நுக்கும் உபாயாத்யவஸாயத்துக்கும் விஷயபேதத்தாலே வ்யக்தி பேதமுண்டாகையாலே தத்தத்விஷயபஹுவசந ப்ரயோகத்துக்குக் குறைவில்லையென்றதாயிற்று. *

வ்யா. (ரு0) தலைமகளென்கிறதுப்ராப்யத்வரையையாகில்? தலைமகளுக்குச்சொல்லும்பருவம்ஏழுமிங்குகொள்ளும்படி யென்னென்னுமபேக்ஷையிலே அருளிச்செய்கிறுர். (அபிலாஷேத்யாதி) அதாவது:— அநுபாவ்யவிஷய ப்ரதமதர்ஶநத்திற்பிறக்குமாசையாகிற வபிலாஷையும், த்ருஷ்டமான வவ்விஷயத்திலுண்டான ஸ்மரணமாகிறசிந்

(க) தி - வா. ரு. ரு. கூ. (உ) ஷை-ரு. ச. ரு. (ங) ஷை-சா. உ. அ. (ச) ஷை-ரு. ங. அ. (ரு) ஷை-சா. (சா) ஷை-ரு. ரு. க. (எ)

மூ. பரபரம பக்திகளிலேபேதை முதலான பருவங்கொள்ளும்.

மூ—(௫௧) மயில் பிறை வில்லம்பு

பர - (தத்ஸம்யோகவியோகங்களே ஸுகதுக்கங்களாகிற) பர பக்தி, பரமபக்திகளிலே - (தத்விப்லேஷத்தில் ஸத்தாபாவுந்யையாகிற பரம பக்தியும், (ஆகிறஏழவஸ்தையிலும்) பேதைமுதலான பருவங்கொள்ளும் - பேதை பெதும்பைமுதலான ஏழுபருவமுங்கொள்ளும்.

(அ) விகாஸ ஜ்ஞாநவிகாஸத்தை மயில் மயிலாகவும், ஶுத்தி - அநவத்யதையை பிறை சந்த்ரனாகவும், தாந்தி பாஹ்யாப்யந்தர கரண நியமநத்தை வில் வில்லாகவும், ஜ்ஞாந - ஜ்ஞாநத்தை, அம்பு - அம்பாகவும், ஆநந்த ஆநந்ததை

தையும், அந்தஸ்மரணம் அநவரதம்நடையாடுகிற அநுஸ்ம்ருதியும், அவ்விஷயத்தையவஶ்யமநுபவித்தேநிற்கவேணுமென்றுமானஸயுமாகிற விச்சையும், அவ்வாசைதான்ரஸாந்தரத்தால் மாற்றவொண்ணதபடி முதிருகையாகிறருசியும், அவ்விஷயத்தில் ஸம்ஶ்லேஷ விப்லேஷங்களே ஸுகதுக்கங்களாகையாகிற பரபக்தியும், அவ்விஷயத்தினுடைய விப்லேஷத்தில் ஸத்தைகிடவாதொழிகையாகிற பரமபக்தியுமாகிற ஏழவஸ்தையிலும், பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண், என்கிற, ஏழுபருவமும், தலைமகளான ப்ராப்யத்வரைக்குக்கொள்ளுமென்றபடி. இத்தால் பக்திரூபையான ப்ராப்யத்வரைக்கு பக்தியினுடைய ப்ரதமதசைதுடங்கி சரமதஶாபர்யந்தமான அவஸ்தாவிஶேஷங்களிலே பர்வஸப்தகமும் கொள்ளலாமென்றதாயிற்று.

வ்யா. (௫௧) இனி, தலைமகளானவவஸ்தையில் வர்ணிக்குமவயவ விஶேஷங்களெவையென்னுமாகாங்க்ஷையிலே அத்தைதர்சிப்பிக்கிறார். (மயில்பிறை) என்றுதுடங்கி அதாவது:— (௧) "தோகைமாமயிலார்கள்" என்று, ஸ்த்ரீகளை மயிலாகச்சொல்லுகிறது அளகபாரவிஸ்த்ருதையையிட்டாகையாலே அத்தாலிந்தாத்மாவினுடைய ஜ்ஞாநவிகாஸத்தைச்சொல்லுகிறது. (௨) "பிறையுடைவாணுதல்" என்று, நெற்றியைப் பிறையாகச்சொல்லுகையாலே அதின் தாவள்யத்தையிட்டு ஸ்வாதந்த்ர்யாந்யஶேஷத்வங்களாகிற தோஷஸ்பர்ஸங்களற்றிருக்கும் ஶுத்தியைச்சொல்லுகிறது., (௩) "விற்புருவக்கொடி" என்று, புருவத்தை வில்லாகச்சொல்லுகிறது. வளைவையிட்டாகையாலே பாஹ்யாந்தரகரண நியமனரூபதாந்தியைச் சொல்லுகிறது (௪) "அம்பன்னகண்ணள்" என்று, கண்ணை லக்ஷ்யபாதியான அம்பாகச்சொல்லுகையாலே (௫) "தாமரையாள் கேழ்வனொருவனையே நோக்குமுணர்வு" என்று, தனக்கடைத்தவிஷயத்தை அவலம்பித்த ஜ்ஞாநத்தைச்சொல்லுகிறது.

(௧) தி-வா. ௬. ௭, ௨, (௨) பெ-மொ. ௨. ௯. ௯. (௩) தி-வா. ௬. ௬. ௯. (௪) பெ-மொ. ௬. ௮. ௬. (௫) தி-அ. ௧. ௬௭.

மூ. முத்துப்பவளம் செப்பு மின் தேரன்னம் தெய்வவுருவு விகாஸஸம்ருத்தி தாந்தி ஜ்ஞாநாநந்தாநு ராகபக்த்யணுத்வ போக்யதாதிகளையுடைய அகமேனியின் வகுப்பு.

முத்து முத்தாகவும், அநுராக ப்ரேமத்தை பவளம் ப்ரவாளமாகவும், பக்தி பக்தியை செப்பு முலையாகவும், அணுத்வ (ஜ்ஞாநாஸ்ரயமான வாத்மஸ்வரூபத்தின்) அணுத்வத்தை மின் மின்னாகவும், போக்யதா - (ஶேஷிக்குரஸாவஹமாயிருக்கும் ஆத்மவஸ்து வின் போக்யதையை தேர்தேராகவும், கதிகளைஸ்வரூபாநுரூபப்ரவ்ருத்தியை அன்னம்-அன்னநடையாகவும், உடைய - (இப்படிரூபகமாக) வுடைத்தான, தெய்வவுரு-அப்ராக்ருதமாகச் சொன்னரூபத்தினுடைய, அகமேனியின் வகுப்பு - ஆந்தரமான ஆத்மஸ்வரூபத்தின்வகுப்பு.

(க) "முத்தன்னவெண் முறுவல்" என்று, முறுவலைமுத்தாகச்சொல்லுகையாலே (உ) "ஸ்மிதம் ப்ரீதிப்ரகர்ஷஜம்" "முத்ப்ரீதி ப்ரமதோஹர்ஷ:" என்கிறபடியைக்கொண்டு அவ்விஷயாநுபவத்தாலுண்டான வாநந்தத்தைச்சொல்லுகிறது. (ங) "பவளவாயாள்" என்று, அதரத்தை ப்ரவாளமாகச்சொல்லுகிறது சிவப்பையிட்டாகையாலே அவ்விஷயத்தைப்பற்றவுண்டான அநுராகத்தைச் சொல்லுகிறது. (ச) "செப்பன்னமென் முலை" என்று பரிணதமானமுலையை, செப்பாகச்சொல்லுகையாலே ஶேஷிவிரும்பி மேல்விழும்படி பரிணதையான பக்தியைச் சொல்லுகிறது. (ரு) "மின்னனையநுண் மருங்குல்" என்று, இடையை, மின்னாகச்சொல்லுகிறது நுண்மையையிட்டாகையாலே கீழ்ச்சொன்ன ஜ்ஞாநாவஸ்தா விஶேஷங்களுக்கெல்லாமாதாரமான ஆத்மஸ்வரூபத்தின் அணுத்வத்தைச் சொல்லுகிறது. (சா) "தேரணங்கல்குல்" என்கிற, நிதம்பவைலக்ஷண்யம், போக்தாவுக்குபோக்யமாயிருக்குமதாகையாலே (எ) "தேனும்பாலுங் கன்னலுமமுதுமாகித்தித்தித்து" என்கிறபடியே, ஶேஷிக்குமிகவும் ரஸாவஹமாம்படியிருக்கிற ஆத்மவஸ்துவின்போக்யதையைச்சொல்லுகிறது. (அ) "அன்னமன்னநடையாள்" என்று, அன்னத்தை யொப்பிடுகிறது நடையழகுக்காகையாலே ஶேஷியும் ததீயரும் ஶ்லாகிக்கும்படி ஸ்வரூபாநுரூபமாக நடக்கையாகிற கதியைச்சொல்லுகிறது. ஆகயிப்படி மயில்பிறை யித்யாதிவர்ணநார்ஹாவயவ விஶேஷயுக்தமாய் தெய்வவுருவென்ற ப்ராக்ருதமாகச் சொன்னரூபமாவது, ஜ்ஞாநவிகாஸஸம்ருத்த்யாதிகளுக்காஸ்ரயமாய் (கூ) "அகமேனி" என்று, ஆந்தரமாயிருக்கிற ஆத்மஸ்வரூபத்தின் வகுப்பென்னபடி. வகுப்பாவது? தர்மி தர்மவைசிஷ்டியாலே ஏவம்பூதரூபகத்வார்ஹமாம்படி யிருக்கிறகட்டளை, கீழ்ப்ராப்யத்வரையயன்றோ

(க) நாச்சி-தி. ரு. சா. (உ) (ங) பெ-மொ. ச. அ. க. (ச) திருப்பாவை. உ0. (ரு) பெ-மொ. ங. கூ. ரு. (சா) ஷ-க. ச. சா. (எ) தி-வா. ச. ங. க0. மொ. ங. எ. கூ. (கூ) தி - வா. கூ. எ. க0.

மூ—(ருஉ) சூட்கூஷியகற்றி நீரென்னும்பழி இணைக்கியெங்ஙனே யென்னும் மேலெழுத்து —

(அ) சூட்சி - (பகவத்விஷயத்திலே யகப்படுத்தியிப்படி யாக்கினுளென்று தாய் தோழிமார்மேலே) பழியிடுவது, அகற்றினீரென்னும் பழி - (பகவத்விஷயத்திலே ப்ரவணையாக்கி கைகழியப்பண்ணிகோளென்று (தோழிதாயார்மேலேபழியிடுவதும்) இணைக்கி-பார்வையாய்நின்று (பகவத்விஷயத்திலகப்படுத்தின தோழிமாராலே வந்ததென்பது,) எங்ஙனே - (பகவத்விஷயத்தில் ப்ராவண்யமுண்டாக்கின தாய்மாரான நீங்களென்னைப்பொடிகிறது) எங்ஙனே, (என்பதாய்) என்றும் - இப்படி, மேலெழுத்து - (தலைமகள்) மேலெழுத்திடுகையும்,

தலைமகள்ளாகச்சொல்லிற்று. அவயவவர்ணனையில் ஆத்மஸ்வரூபபரமாகச் சொல்லுவானென்னில்? மூன்றவஸ்தையுமிவர்தமக்கே யாகையாலே தத்தவஸ்தைகளோடு சேர்ந்தவேஷத்தாலே ஸகலமுமிவர்தாமேயாய் நின்றுபேசுகையாலே ப்ராப்யத்வரையை யடைந்துநிற்கிற இவர்ஸ்வரூபத்துக்கே தலைமகளான நிலையாகையாலே அப்படி சொல்லக்குறையில்லை. *

வ்யா. (ருஉ) ஆக, தோழிதாயென்றும் அவஸ்தைகளில் சொல்லும் பஹுவசநத்துக்கு விஷயங்களையும், தலைமகளான வவஸ்தையிற் சொல்லும் பருவங்களையும், அவயவங்களையும் தர்சிப்பிற்றாராய்நின்றார்கீழ் இவ்வவஸ்தாத்ரயத்தினுடைய வ்ருத்தி விசேஷங்களை யெல்லாரு மறியும்படி ப்ரகாசிப்பிக்கிறார்மேல் (சூட்சி) என்றுதுடங்கி, அதாவது:— (க) "தோழிமார் பலர்கொண்டு பொய்செய்த சூட்சியை யார்க்குறைக்கேன்" என்று, தோழிமாரன்றோ விவளைக் கொண்டுபோய் அவ்விஷயத்திலே யகப்படுத்தியிப்படியாக்கினுர்களென்றுதாயானவள்தோழிமார்மேலேபழியிடுவது (உ) " துலவில்லிமங்கலம்கொண்டுபுக்க முதமென்மொழியாளை நீருமக்காசையின்றியகற்றினீர் " என்று, அவ்வூரிலே கொண்டுபுக்க வ்விஷயத்தைக்காட்டி நீங்களேயன்றோ இவளையிப்படி கைகழியப்பண்ணிகோளென்று தோழியானவள்தாய்மார்மேலே பழியிடுகிறதாகிற விதுவும், (ந) "இணைக்கி யெம்மையும்தோழிமார் விளையாடப்போதுமினென்னப்போந்தோமை" என்று, என்னை வெறுக்கிறதென்? இணக்குப்பார்வையாய்நின்றுன்பக்கலிலே யகப்படுத்தின தோழிமாராலே வந்ததன்றோவிதென்பது, (ச) "எங்ஙனேயோவன்னைமீர்காளென்னைமுனிவதுநீர்" என்று, எனக்கவ்விஷயத்தைக் காட்டி, இப்ராவண்யத்தைவிளைத்த தாய்மாரான நீங்களென்னைப் பொடிகிறபடி யெங்ஙனேதானென்பதாய் கீழ்ச்சொன்னபழியிரண்டுக்கு மொக்கு

(க) பெரியா - தி. ந. எ. ச. (உ) தி - வா. சு. ரு. உ. (ந) ஷெ - சு. உ. அ. (ச) ஷெ. ரு. ரு. க.

மூ. முன்னின்று யிவளைநீரென்று மிருபடை மெய்க்காட்டும் நீரென்னே யென்னுமுடன்பாடு இடையில்லையென்று

முன்னின்றுயென்று -(தாய்மாரோடே கூடதோழியும்) பொடிவது, இவளைநீர் - (தாய்மார்க்குகர்தவ்யாம்ஶமறிவிப்பாரைப்போலே தலைமகளுக்கு துணைசெய்வதாய்க்கொண்டு, இருபடைமெய்க்காட்டு - இரண்டு தலைக்கும் ஸஹகரிக்கையாகிற) இருபடைமெய்க்காட்டும், (நீரென்னே யென்னுமுடன்பாடு - (தாய்மாரும் தோழிமாருமான நீங்களித்தசையிலென்னை யாஶ்வஸிப்பியாதே உறங்காநின்றுகளென்று தலைமகளுக்குண்டான) வுடன்பாடும், இடையில்லையென்று-(பகவத்விஷயத்தினின்று மீட்கப்பார்ச்கிற வுங்களோடெனக்கொரு) ஸம்பந்தமில்லையென்று,

ன்று தலைமகள் மேலெழுத்திடுகையும், (க) "முன்னின்றுயென்று தோழிமார்களுமன்னையரும்முனிதர்" என்னும்படி, இதுக்கு முன்பொருவர் கண்படாமல் வளர்ந்துபோந்தநீ இப்போதெல்லாரும் காணப்புறப்பட்டு முன்னின்றுயென்று தோழி தாய்மாரோடேகூடிநின்று தலைமகளைப்பொடிவது, (உ) "இவளை நீரினியன்னை மீருமக்காசையில்லை விடுமினோ" என்று, தாய்மாருக்கு கார்யோபதேஶம்பண்ணுவாளைப்போலே, தோழி தலைமகளுக்குத்துணைசெய்வதாய்க்கொண்டு இரண்டு தலைக்கு மோரொருபோதிலே ஸஹகரிக்கையாகிற இருபடைமெய்க்காட்டும், (ங) "அன்னையரும் தோழியரும் நீரொன்னேயென்னுதே நீளிரவும் துஞ்சுவரால்" என்று, தாய்மாரும் தோழிமாரு மித்தசையிலென்னையாஶ்வஸிப்பியாதெ" இரவுமுழுக்க உறங்காநின்றுர்களென்று, தாய்மாரோடும் தோழிமாரோடும் தலைமகளுக்குண்டான உடன்பாடும், அன்னைமீர்காள்! என்னுடைத் தோழிமீர்காள்! என்செய்கேன், என்னவளவில் அவர்களெங்களைக்கேட்கில், மீளவமையுமென்ன, (ச) "உங்களோடெங்களிடையில்லை" என்று, இவ்விஷயத்தில் நின்றும்,மீட்க நினைக்கிற உங்களோடெனக்கு ஒரு ஸம்பந்த மில்லையென்று இரண்டுதலையையு முதறுகையும்(ரு)"இருந்திருந்தர விந்தலோசனவென்றென்றே நைந்திரங்கும்" என்று, ஒருக்கா லரவிந்தலோசனவென்னும்போது பலஹாநியாலே நடுவேபலகாலிளைத்திருந்து அவன் கண்ணழகுக்கு வாசகமான வத்திருநாமத்தை யிப்படிபலகாலும் சொல்லி சிதிலையாய் அழியாநின்றுளென்று, இவள் ப்ராவண்யத்தைக்கண்டு தோழிகொண்டாடுவது (சு) "திருக்கோளூர்க்கே நேரிழைநடந்தாள்" என்று, அவன் வர்த்திக்கிற தேஶத்தைக்குறித்துப் போனுளென்ன வமைந்திருக்க பகவத் ப்ரேமாதி ஶயத்தைப்பற்ற பஹுமாநம்பண்ணி நடந்தாளென்று, தாயார் கொண்டாடுவதாகிற விதுவும், தோழி தாய்மகளென்கிற அவ

(க) தி-வா. ரு. ரு. கூ. (உ) ஷை-சு. ரு. க. (ங) ஷை-ரு. ச. ரு. (ச) ஷை-அ. உ. எ. (ரு) ஷை - சு. ரு. அ. (சு) ஷை - எ. கூ.

மூ. உதறுதல் இருந்திருந்து நடந்தாளென்றுங் கொண்டாட்டம்

உதறுதல் - (இரண்டுதலையையும்) உதறுகையும், இருந்திருந்து - அரவிந்தலோசநனென்னும்போது பலிஹானியாலே நடுவிலிளைத்திருந்தவன் கண்ணழகிலே சிதிலையாகிறதைத் தோழிகொண்டாடுவதும், நடந்தாளென்னுங்கொண்டாட்டம்-(கௌரவித்துச் சொல்லிதாய்மார்) கொண்டாடுகிற விதுவும்,

ஸ்தாத்ரயத்தினுடையவும் வ்யாபாரமென்றபடி. இதில்பழி, மேலெழுத்து, என்கிற விரண்டாலும் (க) "𑌅𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑌰𑌸𑍍𑌯 𑌶𑍇𑌷𑌤𑍍𑌵𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌃" "அகிஞ்சித்கரஸ்ய ேஶஷத்வாநுபபத்திஃ" என்கிறபடியே, ேஶஷவ்ருத்யந்வயமில்லாதபோதுேஶஷத்வ ஸித்தியில்லாமையாலே ேஶஷவ்ருத்தியிலே நோக்காயிருக்கும் ஸம்பந்தஜ்ஞாநம், ப்ராப்யருசிக்கு ஹேதுவாகையாலும், விலக்ஷணகுண விக்ரஹ விசிஷ்டமாய் உபேயமாயிருக்கிறவஸ்துதன்னையேதத் ப்ராப்த்யுபாயமாக பரிக்ரஹிக்கையாலே உபாயாத்ய வஸாயம் உபேய வைலக்ஷண்யத்தை முன்னிட்டுக்கொண்டிருக்கையாலே உபேயருசிக்கி ஹேதுவாகையாலும், இவற்றிலோரொன்றைப்பார்த்தால், இதுவே ப்ராப்யத்வராஹேதுவென்னும்படி யிருக்கையும், ப்ராப்யத்வராவேஷந்தன்னை நிரூபித்தாலும்,அவையிரண்டுமடியாக இது வந்ததென்றுதோற்றும்படியிருக்கையும்சொல்லுகிறது. இப்படிஸம்பந்தஜ்ஞாநமும் உபாயாத்யவஸாயமும், ப்ராப்யத்வரைக்குக் காரணமாயிருக்கிற விது ப்ரதமதசை. இருபடைமெய்க்காட்டு, உடன்பாடு, என்கிற விரண்டாலும், ஸம்பந்த ஜ்ஞாநமானது ேஶஷத்வம் ஸ்வரூபமான பின்பு ேஶஷிதானேவந்து விஷயீகரிக்கக் கண்டிருக்கையொழிய தான் பதறுகை ஸ்வப்ரயோஜநத்திலே முதலிடுகையால் ஸ்வரூப விருத்தமென்னு மாகாரத்தாலே ஸ்வப்ரவ்ருத்தி நிவருத்தகமான உபாயாத்யவஸாயத்துக்கு ஸஹகரித்தும், இவ்வதிப்ராவண்யம் உபாயத்திலே முதலிடில் செய்வதென்னென்று இத்வரையை நிவர்த்திப்பிக்கப் பார்க்கிற உபாயாத்ய வஸாயத்தை ப்ராப்தவிஷயத்திலே ப்ராவண்யம் ஸ்வரூபாதிரேகியல்லாமையால் இது நிவர்த்த நீயமுமன்று, நிவர்த்திப்பிக்கத்தானும் போகாதென்று நிவர்த்தநோத் யோகத்தைக்குலைத்து ப்ராப்யத்வரைக்கு ஸஹகரித்தும், இப்படியிரண்டுக்குமநுகூலிக்கத்தக்கதா யிருக்கும்படியும் ேஶஷிக்கதிஶயகரமான கைங்கர்யத்தில் அந்வயிப்ப தெப்போதோவென்னுமற்றுலும் ஸித்தோபாயத்தைப் பற்றினர்க்கு விளம்பஹேதுவில்லாமையாலே சீக்ரமாக ப்ராப்யத்தைப் பெறவேணுமென்னு மத்தாலும் செல்லுகிற ப்ராப்யத்வரைக்கு, ஸம்பந்த ஜ்ஞாநமும் உபாயாத்யவஸாயமும், அநுகூலமா யிருக்கும்படியையும் சொல்லுகிறது. இப்படி ஸம்பந்தஜ்ஞாநம் உபயஸஹகாரியாவது:—ப்ராப்யத்வரைக்கு நிரோதகங்களான ஸம்பந்தஜ்ஞாநோபாயாத் யவஸாயங்கள் முகபேதேநதத்ததநுகூலங்களாவுதாகிறவிது மத்யமதசை. உதருதல், கொண்

(க)

மூ. அவஸ்தாத்ரய வ்ருத்தி.

மூ—(ருஈ) தாயாரேதலருற்றீர்களென்றும் ஸாத்யஸித்த ஸாதநநிஷ்டரை மகள் நம்முடையேதலர் யாமுடைத்துணை யென்னும் ஸித்த ஸாதந ஸாத்யபரரை.

அவஸ்தாத்ரய - (தோழி தாய் மகளாகிற) அவஸ்தாத்ரயத்தினுடைய, வ்ருத்தி - வ்யாபாரம்.

(அ.) தாயார் - தாய் - ஏதலர் - ஶத்ருக்கனென்றும், உற்றீர்களென்றும் - பந்துக்களென்றும், ஸாத்யஸித்த ஸாதநநிஷ்டரை-ஸாத்யஸாதநநிஷ்டரையும், ஸித்தஸாதநநிஷ்டரையும், மகள் - தலைமகள், நம்முடையேதலர் - தம்முடைய ஶத்ருக்களென்றும், யாமுடைத்துணையென்றும் - தமக்கு ஸஹாயபூதைகளென்றும், ஸித்தஸாதநஸாத்யபரரை ஸித்தஸாதநபரரையும், ஸாத்யஸாதநபரரையும்.

டாட்டம் என்கிற விரண்டாலுமிப்படி அநுகூலமாய் தோற்றியிருக்கிற ஸம்பந்தஜ்ஞாநமும், உபாயாத்யவஸாயமும், க்ரமப்ராப்தியே அமையுமென்னும் த்வரைக்கு நிவர்த்தகமாமளவில் த்வரையிரண்டையு மதிக்ரமித்துப் போம்படியையும் அப்படியதிக்ரமித்தகாலத்தில் அந்தத்வரை, ஸம்பந்தஜ்ஞாநத்துக்கும், உபாயாத்யவஸாயத்துக்கும், அவத்யமாய்தோற்றுகையன்றிக்கே, ஶ்லாக்யமாயிருக்கும்படியையும்சொல்லுகிறது. இப்படி ப்ராப்யத்வரை, ஸம்பந்தஜ் ஞாநோபாயாத்யவஸாயங்களை அதிக்ரமிக்கையும், அதுதான்ஶ்லாக்யமாகையாகிற விதுசரமதஶை. ஆக ஸம்பந்த ஜ்ஞாநம், உபாயாத்யவஸாயம், ப்ராப்யத்வரை ஆகிற அவஸ்தாத்ரயத்தினுடைய வ்ருத்திவிஶேஷங்களை ஸர்வருமறிந் தநுஸந்திக்கும்படி ஸங்க்ரஹேண தர்சிபிற்றாராயிற்று. *

வ்யா. (ருஈ) இவ்வவஸ்தாத்ரயத்தில், தாயாரென்றும், மகளென்றும், சொல்லுகிறவவஸ்தைகளில், ஸ்வஸ்வஶத்ருக்களும் பந்துக்களுமாகச்சொல்லுகிற தாரையென்னுமாகாங்க்ஷையிலே அவற்றை அருளிச்செய்கிறார். (தாயாரென்றுதுடங்கி) அதாவது:— தாயாரான உபாயாத்யவஸாய தஶையில் (க) "ஏதலர்முன்னாவென்னினைந்திருந்தாய்" என்று, ஶத்ருக்ளாகவும்,(உ)"ஊற்றீர்கட்கென் சொல்லிச்சொல்லுகேன்யான்." என்று, பந்துக்களாகவும் சொல்லும் ஸித்தஸாதநநிஷ்டாப்ரதிகூலரான ஸாத்யஸாதநநிஷ்டரையும், அநுகூலரான ஸித்தஸாதனநிஷ்டரையும் மகளான ப்ராப்யத்வராதஶையில் (ஈ) "நம்முடையேதலர்முன்புநாணி" என்று, அந்தரங்க ஶத்ருக்களாகவும் (ச) "யாமுடைத்துணையென்னும் தோழிமார்" என்று, ஸ்வஸமான ஸுகதுக்கரானபந்துக்களாகவும்சொல்லும், பகவதேகபரராயிருக்கச்செய்தே ததுபாயபா

(க) பெ - மொ. உ. எ. ரு. (உ) தி - வா. ரு. கூ. எ. (ஈ) ஷெ - அ. ௨. க. (ச) ஷெ - கூ.க. ரு.

மூ—(ருச) நாலயலார் அயற்சேரியார் உபாயசதுஷ்டயாந்தர்யாமித்வபரர்.

மூ—(ருரு) கீழை மேலை வடக்கிலவைபுறம் பாகத்தன்பற்றுள்ளசல்.

அ. நாலயலார்-நாலயலாரென்றும், அயற்சேரியார் - அயற்சேரியாரென்றும் சொல்லப்படுகிறவர்கள், உபாயசதுஷ்டயாந்தர்யாமித்வபரர் - கர்மாத்யுபாய சதுஷ்டயபரரும் அந்தர்யாமித்வபரரும்.

அ. கீழை மேலை வடக்கிலவை - இப்பாட்டுக்களிற்சொல்லுகிற கர்மஜ்ஞாநபத்திகள், புறம்பாக - (ஸித்தஸாதநர்க்குப்) புறவசலாய், தன்பற்று - ஸ்வகதஸ்வீகாரம், உள்ளஸல் - உள்ளஸலாயிருக்கும்.

வத்திலேயூன்றிநின்று த்வரைபாரதந்த்ர்யத்துக்குச்சேராதென்று நிஷேதிக்கும்ஸித்தஸாதநபரரையும், தன்னைப்போலே உபாயபாவத்திலே யூன்றியுடன்பாடராயிருக்கும் ஸாத்யபரரையுமென்கை. கீழ்வாக்யத்திலே 'சூட்சி' என்றும், இவ்வாக்யத்திலே 'ஏதலர்' என்றும், மற்றையாழ்வார்கள் சந்தைகளையும் கூட்டியெடுத்தது ஆழ்வார்களெல்லாரும், ஏக கண்டராகையாலே அருளிச்செயலுக்கெல்லாம் இந்தஸ்வாபதேஸமொக்குமென்றுதோற்றுகைக்காக. *

வ்யா. (ருச) இந்தப்ரஸங்கத்திலே அருளிச்செயலில்வரும்பல அந்யாபதேஸங்களுக்கும்ஸ்வாபதேஸங்களை அருளிச்செய்கிறார்மேல் பல வாக்யங்களாலே(நாலயலாரித்யாதி)அதாவது:— (க) "நாலயலாருமறிந்தொழிந்தார்" என்கிற, நாலயலாரும், அயற்சேரியாரும், (உ) "அயற்சேரியீர்காள்" என்கிற, அயற்சேரியாருமாகிறார். கர்ம ஜ்ஞாந பக்தி ப்ரபத்திகளாகிறஉபாயசதுஷ்டயத்திலுமூன்றியிருக்குமவர்களும், அர்ச்சாவதாராதி ஸாபேக்ஷையற்று தேவதாந்தர்யாமித்வத்திலே யூன்றியிருக்குமவர்களுமென்கை. *

வ்யா. (ருரு) ப்ரபத்திபரரையும் அசலாகச்சொல்லலாமோவென்கிறஸங்கையிலே அருளிச்செய்கிறார். (கீழையித்யாதி) அதாவது:— (ங) "கீழையகத்துத்தயிர்கடைய" என்றும், (ச) "மேலையகத்துநங்காய் வந்துகாண்மின்கள்" என்றும் (ரு) "வடக்கிலகம்புக்கிருந்து மின்போல் நுண்ணிடையாளொருகன்னிகையை வேற்றுருவம் செய்துவைத்த" என்றும், க்ரியையும் தர்மமும் அநுபவமுமாகிற கர்மயோகமும், ஜ்ஞாநயோகமும், பக்தியோகமும், ஸித்தஸாதநபரர்க்குப் புறவசலாய் அவ்விஷயந்தன்னில்ஸ்வகதஸ்வீகாரமுள்ளசலாயிருக்குமென்றபடி. *

(க) நாச்சி-தி. கஉ. உ. (உ) தி-வா. எ. ங. உ. (ங) பெருமாள்-தி. சு. உ. (ச) பெ-மொ. க0. எ. உ. (ரு) பெரியா-தி. ங. க. உ.

மூ—(ருசு) ஊரார் நாட்டார் உலகர் கேவலைஸ்வர்யகாமஸ்வதந்த்ரர்.
மூ—(ருஎ) இறுகலிறப்புக்கும் இறந்தாற்றங்கு மூரொக்குமே.
மூ—(ருஅ) சிறுசீரார்சுளகுகள்

(அ) ஊரார்-ஊராரென்றும், நாட்டார்-நாட்டாரென்றும், உலகர்-உலகரென்றும் (சொல்லப்படுகிறவர்கள்) கேவலைஸ்வர்ய காமஸ்வதந்த்ரர் - கேவலரும் இஹபரலோகைஸ்வர்யகாமருமான ஸ்வதந்த்ரரும்.

(அ) இறுகலிறப்புக்கும் - ஸங்கோசரூபமான கைவல்யமோக்ஷத்திற்கும், இறந்தால் - ப்ரக்ருதி ஸம்பந்தநிவர்த்தியானால், தங்குமூர் - நிவஸிக்குமூர், ஒக்குமே - ஸமானமாமே.

(அ) சிறுசீரார்சுளகுகள்-சிறுசுளகென்பதும், சீரார்சுளகென்பதும்,

வ்யா. (ருசு) (ஊராரித்யாதி) அதாவது:— ஊராரிகழிலும் (க) "ஊரவர்கவ்வை" (உ) "நாட்டாரோடியல்வொழிந்து" (ந) "எங்கள் கண்முகப்பே யுலகர்களெல்லாம்" (ச) "இம்மடவுலகர்" ஊரும் நாடும் உலகமும்" என்கிறவிடங்களில், ஊராரென்பது ஆத்மப்ராப்தி காமரான கேவலரை. நாட்டாரென்பது புத்ரபஸ்வந்நாதிகளான இஹலோகைஸ்வர்யகாமரை. உலகரென்பது ஸ்வர்க்காதி பரலோகைஸ்வர்ய காமரான ஸ்வதந்த்ரரையென்கை. *

வ்யா. (ருஎ) கேவலரை ஊருராகச்சொல்லுவானேன்? என்கிற சங்கையிலே அருளிச்செய்கிறார். (இறுகலித்யாதி) அதாவது:—அபரிச்சின்ன ஸ்வரூப ரூப குண விபூதிக பரப்ரும்ஹாநுபவம்போலன்றிக்கே, அணுபூதாத்மாநுபவமாத்ரமாகையாலே 'இறுகலிறப்பு' என்கிற ஸங்கோசரூபமான மோக்ஷத்திற்கும் (ரு) "జరామరణమోక్షాయ" "ஜராமரணமோக்ஷாய" என்கிறபடியே, ஜராமரணாதிகளில் அந்வயமற்றிருந்தனுபவிக்கும்போது ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்கு கர்மீபவிக்கும் ப்ரக்ருதிமண்டலத்துக்கு அவ்வருஹான பரமாகாஸத்திலே யிருந்தனுபவிக்கவேண்டுகையாலே (சா) "యోగినామమృతంస్థానం స్వాత్మసంతోషకారిణం" "யோகிநாமம்ருதம்ஸ்தாநம ஸ்வாதம் ஸந்தோஷகாரிணம்" என்கையாலே, (எ) "இறந்தாற்தங்குமூரண்டமே" என்கிறபடியே ப்ரக்ருதி ஸம்பந்தமற்றுப்போய் வஸிக்குந்தேஸமொக்குமென்னபடி. *

வ்யா. (ருஅ) (சிறுசீரார்) இத்யாதி அதாவது:— (அ) "சிறுசுளகுமணலுங்கொண்டு" என்றும் (கூ) "சீரார்சுளகில் சிலநெல்பிடித்தெறியா" என்றும் சொல்லுகிறவிடங்களில் சிறுசுளகாவது:— பெறுமணலையும் நுண்மணலையும் பிரிப்பதொன்றாகையாலே தேஹாத்மவிவேகத்

(க) தி-வா. ரு. ந. ச. (உ) ஷை-க0. சா. உ. (ந) ஷை-கூ. உ. அ. (ச) ஷை - எ. (ரு) ஸ்ரீ - கீ. எ. உகூ. (சா) (எ) தி-மொ. க0. உ. க0. (அ) நாச்சி-தி. உ. அ. (கூ) சிறிய - தி. உக.

மூ. உபயவிவேகபரிகரம்.

மூ—(௫௬) மாலே கங்குல் காலே பகல் ரஜஸ்தமஸ் ஸத்வஶுத்த ஸத்வஜ்ஞாநங்கள்.

உபயவிவேக - தேஹாத்மவிவேகத்துக்கும் ஆத்மபரமாத்மவிவேகத்துக்கும், பரிகரம் - உபகரணமான ப்ரமாணம்.

(அ) மாலே - ஸாயங்காலமாகவும், கங்குல் - ராத்ரியாகவும், காலே - உதயகாலமாகவும், பகல் - பகலாகவும் சொல்லப்படுகிறவை, ரஜஸ்தமஸ் ஸத்வஶுத்த ஸத்வஜ்ஞாநங்கள்-ராஜஸதாமஸ ஸாத்விகஶுத்த ஸாத்விகஜ்ஞாநங்கள்.

துக்கு பரிகரமானப்ரமாணம். சீரார்சுளகாவது:—இவளுக்கிவ்யாமோஹத்தைவிளேத்தார் யார்? என்றுருய்கிறவளவில் (க) "சிலநெல் பிடித்தெறியா" என்றுதுடங்கி (உ) "பேராயிரமுடையான் என்றாள்" என்று, தேவதாந்தரங்களன்று, ஸர்வேஶ்வரன் என்று விவேகிக்கிறபோதைக்கு உபகரணமாகையாலே ஆத்ம பரமாத்ம விவேகத்துக்கு பரிகரமானப்ரமாணமென்கை. உபயவிவேகமாவது:— த்யாஜ்யோபாதேயரூபோபயவஸ்து விவேகமாகையாலே ப்ரகரணோசிதமாக இப்படி சொல்லத்தட்டில்லே.

வ்யா. (௫௬) (மாலே) இத்யாதி அதாவது (௩) "செங்களம்பற்றி நின்றழகு புன்மாலே" (௪) "செல்கருமாலே" இத்யாதிகளால் சொல்லுகிற மாலேயாவது:— ராகோத்தரமாய் பதார்த்தங்கள் விஶதமாக ப்ரகாசியாமைகொண்டயதா ப்ரதிபத்திக்குறுப்பாயிருக்கும் ஸந்த்யாகாலமாகையாலே பதார்த்தங்களில் அந்யதா ப்ரதிபத்திக்குறுப்பான,ராஜஸஜ்ஞாநம் (௫) "சூழ்கின்றகங்குல்" (௬) "செல்கின்றகங்குல்" (எ)"கங்குல்நாழிகை"இத்யாதிகளாற்சொல்லுகிற கங்குலாவது:—பதார்த்தங்ளோடொன்றும் தோற்றுதபடியாய் ஏதேனும் தோற்றுமதுண்டாகில் விபரீதமாக தோற்றும்படியாயிருக்கும் திமிரோபஹத ராத்ரிகாலமாகையாலே ஜ்ஞாதவ்யார்த்த ப்ரகாஶமுமின்றியே விபரீத ப்ரதிபத்திக்கு ஹேதுவாயிருக்கும் தாமஸஜ்ஞாநம். (அ) "காலேயெழுந்திருந்து" (௯) "காலே நன்ஞாலத்துறை படிந்து" இத்யாதிகளால் சொல்லுகிறகாலேயாவது:— ப்ராம்ஹமுஹூர்த்தமாகையாலே ஸத்வோத்தரமாய் இருள்நீங்கி வெளிச்செறுத்துவருகிற ப்ராதகாலமாகையாலே பதார்த்த யதாப்ரதிபத்திக்குறுப்பாகாநிற்கும் ஸாத்விகஜ்ஞாநம் (௧0) "பகல்கண்டேன்" இத்யாதியிற் சொல்லும்பகலாவது:— பதார்த்தங்களேஸம்ஶய விபர்யயமறவிஶதமாக ப்ரகாசிப்பிக்கும் காலமாகையாலே(௧௧)"நாரணனேக்கண்

(க) சிறி - தி. உக. (உ) ஷை-உஉ. (௩) தி-வி. எஎ. (௪) (௫) தி-வி. எஉ. (௬) தி-வா. ௫. ௪. ௧0. (எ) பெ-மொ. ௯. ௫. ௩. (அ) நாச்சி-தி. ௯. அ. (௯) தி-வி. ௯௩. (௧0) தி - அ. உ. அக. (௧௧) ஷை.

மூ—(சுO) நிலாமுற்றம் ப்ரஜ்ஞா ப்ராஸாதமென்னுமெல்லைநிலம்.

மூ—(சுக) கலைவளை அஹம்மமக்ருதிகள்.

(அ) நிலாமுற்றம் - நிலாமுற்றமாவது, ப்ராஜ்ஞா ப்ராஸாதமென்னும் - ப்ரஜ்ஞையாகிறஹர்ம்யமென்று சொல்லப்படுகிற, எல்லைநிலம் - சரமாவதியான புருஷார்த்தஜ்ஞாநம்.

(அ) கலைவளை - கலையும்வளையுமாவன, அஹம்மமக்ருதிகள் - அஹங்கார மமகாரங்கள்.

டேன்" என்கிறபடியே, ஸமஸ்தகுணவிக்ரஹ விபூதிவிசிஷ்டனை ஸர்வேஶ்வரனை ஸம்யக்ஸாக்ஷாத்கரிக்கிற ஶுத்தஸத்வஜ்ஞாநமென்கை. இத்தால் அந்யதாஜ்ஞாநம் விபரீதஜ்ஞாநம் யதாஜ்ஞாநம் தத்பலமான ஸாக்ஷாத்காரமென்கிற வற்றைச்சொன்னபடி. *

வ்யா. (சுO) (நிலாமுற்றம்) இத்யாதி, அதாவது:—(க) "நீணிலாமுற்றற்று நின்றவணேக்கினள்"என்கிற, நிலாமுற்றமாகிறது :—(உ) "ప్రజ్ఞాప్రాసాదమారుహ్య అశోచ్యశ్శోచతో జనాన్। భూమిష్ఠానివ శైల స్థోహ్యజ్ఞాన్ప్రాజ్ఞః ప్రపశ్యతి" "ப்ரஜ்ஞாப்ராஸாதமாருஹ்ய அஶோச்யஶ் ஶோசகாந்ஜநாந் । பூமிஸ்தாநிவஶைலஸ்தோஹ்யஜ்ஞாந்ப்ராஜ்ஞ:ப்ரபஶ்யதி" என்கிறபடியே, உத்துங்கமாக நின்றுஸர்வத்தையும் தர்சிக்கைக்கைக்குறுப்பாகச் சொல்லப்படுவதாய் அதிலேநின்று தர்சித்தவளவில் "காணுமோகண்ணபுரமென்று காட்டினள்" என்கையாலே, ததீயவிஷயமே பரமப்ராப்யமென்று பிறர்க்கும் ப்ரகாசிக்கும்படி சரமாவதியான புருஷார்த்த ஜ்ஞாநமென்கை. *

வ்யா. (சுக) (கலை) இத்யாதி அதாவது:— (ங) "கைவளையும் மேகலையும் காணேன்" (ச) "கலையாளா வகுலல்குல் கனவளையும்கையாளா" இத்யாதிகளில் சொல்லுகிறகலையும் வளையுமாவன:—பகவதநுபவவிரோதியான அஹங்க்ருதியும் மமக்ருதியுமென்கை. அஹங்காரமமகாரங்களிரண்டும் பகவதநுபவவிரோதியாகையாலேயிறே. மத்யமபதத்தாலே யிவையிரண்டையும் கழித்துக்கொண்டு த்ருதீயபதத்திலே பகவதநுபவம் சொல்லிற்று. (ரு) "கழல்வளை பூரிப்பயான் கண்டுகைதொழக் கூடுங்கொலோ" "ஈண்டியசங்கும் நிறையுங்கொள்வான்" "தூதுரைத்தல் செப்புதிரேல் சுடர்வளையுங்கலையும்" என்கிற விடங்களில், த்யாஜ்யமானவஹம் மமக்ருதிகளன்றிக்கே, ஶேஷோஹம் "என்னுடைய திருவரங்கர்" என்றுப்போலே யிருந்துள்ள அஹம்மமதைகளை சொல்லித்தாகக் கொள்ளலாமாகையாலே அங்குத்தைக்கு மிதுவேஸ்வாபதேஶமாகக்குறையில்லை. *

(க) பெ-மொ. அ. உ. உ. (உ) (ங) தி-நெடு. உஉ. (ச) பெ-மொ. ரு. ரு. உ. (ரு) தி-வா. ஞ. சு. சு.

ஸூ—(௯உ) பட்டஞ்சூடகமாவன பராவரகுருக்கள்பூட்டுமாத்ம பூஷணங்கள்.

ஸூ—(௯௩) பந்து கழல் பாவை குழமணன் யாழ் தென்றல் மதிய மடிசில் சாந்தம் பூண கில் சிற்றில் தூதை முதலாவன

(அ) பட்டஞ்சூடகமாவன - பட்டம் சூடகம் முதலானவாபரணங்களாவன, பராவரகுருக்கள் - உத்தாரகவாசாரியர், பூட்டும் - அலங்கரிக்கும், ஆத்மபூஷணங்கள் - ஆத்மாலங்காரங்கள்.

(அ) பந்துமுதல் - தூதைவரையில் இப்படிசொல்லுகிற லீலோபகரண போக்ய போகோபகரணாதிகளாவன, குணத்ரய - ஸத்வாதிகளாகிற குணத்ரயத்தோடே விசித்ரகர்மஸூத்ரத்தாலேகட்டி, லீலயா கப்ரேரிக்க - ஸவிலாஸமாகப்ரேரிக்க, விழுந்தெழுந்தும் - தாழவிழுந்தும், உயரவெழுந்தும் ஸூழன்று, சக்ரப்ரமணம்போலேசுழன்றும்,

வ்யா. (௯உ) (பட்டம்) இத்யாதி, அதாவது:— (க) "பட்டங்கட்டி பொற்தோடுபெய்தி வள்பாடகமும் சிலம்புமிட்டமாகவளர்த்தெடுத்தேனுக்கு" என்றும், (உ) "சூடகமே தோள்வளேயே தோடே செவிப்பூவே பாடகமே யென்றணையப்பல்கலனும் யாமணிவோம்" என்றும் சொல்லுகிற ஆபரணங்களாவன (௩) కృష్ణాంఘ్రితులసీమౌళిః పట్టంకృష్ణాభివన్దనమ్ కుణ్డలేకృష్ణచరిత శ్రవణంకఙ్కణోఞ్జలిః" "க்ருஷ்ணாங்க்ரிதுளஸீமௌளி꞉ பட்டம் க்ருஷ்ணாபிவந்தநம் । குண்டலேக்ருஷ்ணசரித ஶ்ரவணம் கங்கணோஞ்ஜலி꞉" என்கிறபடியே, ப்ரதமத்திலே, இவ்வாத்மாவை அங்கீகரித்த ஆசார்யன் உண்டாக்கும் நாமரூபங்களும், பகவத்வந்தநாதிகளும், பின்பவ்வாசார்யவைபவத்தையுணர்த்தி அவனுக்குண்டாக்கும் ஶேஷத்வஜ்ஞாநாதிகளுமாகிற ஆத்மாலங்காரங்களென்கை. *

வ்யா. (௯௩) இனி லீலோபகரணங்களாகச் சொல்லப்படுமவற்றுக்கு ஸ்வாபதேஶமருளிச்செய்கிறார். (பந்துகழலென்றுதுடங்கி) அதாவது:—(ச) "பந்துங்கழலும் தந்துபோகுநம்பி" (௫) "கன்மமன்றெங்கள் கையில்பாவைபறிப்பது" (௬) "குழகியெங்கள் குழமணங்கொண்டு" (எ) "யாழ்நரம்பு" (அ) "தைவந்ததண்டென்றல்" (௯) "மேவுதண்மதியம்" (௧௦) "இன்னடிசிலொடுபாலமுதூட்டி" (௧௧) "சாந்தமும்பூணும்" (௧உ) "சீருற்றவகில்புகை" (௧௩) "எங்கள்சிற்றிலும்" (௧ச) "வட்டவாய்ச்சிறுதூதை" இத்யாதிகளால் சொல்லுகிறலீலோபகரண போக்யபோகோபகரணாதிகளாவன:—(௧௫) "లోహితశుక్లకృష్ణామ్" "லோஹிதஶுக்லக்ருஷ்ணாம்" என்கிறபடியே, சென்னூல் வெண்ணூல் கறுநூலினுடைய ஸ்தாநே

(க) பெரியா - தி. ௩. எ. ௬. (உ) திருப்பாவை. உஎ. (௩) (ச) தி - வி. ௬. உ. க. (௫) ஷை - எ. (௬) ஷை - ௬. (எ) ஷை - ௯. ௯. எ. (அ) ஷை - ௫. ச. அ. (௯) ஷை-௯. ௯. ச. (௧௦) நாச்சி-தி. ௫. ௫. (௧௧) பெ - மொ. உ. எ. ௩. (௧உ) தி-வா. ௯. ௯. எ. (௧௩) ஷை-௬. உ. ௯. (௧ச) நாச்சி-தி. உ. அ. (௧௫)

குணத்ரய விசித்ரகர்மஸூத்ரத்தாலேகட்டி லீலையாகப் ப்ரேரிக்க விழுந்தெழுந்தும் சுழன்றுழன்றும் பரிபட்டும் அற்பசாரமாமவையுமாய் மதீயமென்னில் விட்டகலவும் ததீயமென்னிலிகழ்வரவும் முனிவது மிக்காலமீதோவெ ன்னப்படும்

உழன்றும் - போவதுவருவதாயுழன்றும், பரிபட்டும் - ஈச்வரன்விடு விக்க 'விட்டும்,' அற்பஸாரமாமவையுமாய் - அற்பரஸங்களா யிருக்கு மவையுமாய்; மதீயமென்னில் - ஸ்வஸம்பந்தத்தையிட்டு பார்க்கும் போது, விட்டகலவும் - த்யாஜ்யங்களாய், ததீயமென்னில் - தத்ஸம் பந்தத்தையிட்டுக்காணுமளவில், இகழ்வரவும் - உபாதேயங்களாய், முநி வதும் - இக்காலம் ஈதோ, என்னப்படும் - இப்பர்சுரங்களின் ப்ரகாரம் செல்லப்படுமவையுமான,

யான் குணத்ரயத்தோடே (க) "కర్మసూత్రోపపాదితైః" "கர்மஸூத்ரோ பபாதிதை:" என்கிறபடியே, விசித்ரமான கர்மஸூத்ரத்தாலே கட்டி (உ) "హరేర్విహరతః క్రీడా కన్దుకైరివ జన్తుభిః" "ஹரேர்விஹரதஸ்க்ரீடாகந்துகை ரிவஜந்துபி:" என்கிறபடியே, ஈச்வரன் தன்னுடைய லீலைகளுக்குறுப் பாக (ங) "అజ్ఞో జన్తురనీశోఽయమాత్మనస్సుఖదుఃఖయోః। ఈశ్వరప్రేరితో గచ్ఛేత్స్వర్గం వాశ్వభ్రమేవ వా" "அஜ்ஞோஜந்துரநீசோயமாத்மநஸ்ஸுகதுக்கயோ:। ஈச்வரப்ரேரிதோகச்சேத் ஸ்வர்கம்வாச்வப்ரமேவவா" என்கிறபடி யே, அஜ்ஞனாய் அசக்தனானவிவன் கர்மாநுகுணமாக உபரிதநலோகாதி களிலே போவது மீளுவதாம்படி ஸ்வஸங்கல்பத்தாலே ப்ரேரிக்க (ச) "న్యఞ్చద్భిరుదఞ్చద్భిః" "ந்யஞ்சத்பிருதஞ்சத்பி:" என்கிறபடி யே, தாழவிழுந்தும் உயரவிழுந்தும் (ரு) "సంసృతిచక్రస్థే భ్రామ్యమాణే" "ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே ப்ராம்யமாணே" என்கிறபடியே, சக்ரப்ரமணம் போலே சுழன்றும் (சு) "యమాలయమహాశాలే మాతుర్జఠరతోల్పతః। యాతాయాతసహస్రాణాం మునేర్జీవస్య సాధనమ్" "யமாலயமஹாசாலே மாதுர்ஜடர தோல்பத:। யாதாயாதஸஹஸ்ராணாம் முநேர்ஜீவஸ்யஸாதநம்" என்கிற படியே, ஒருக்கால் போனவிடத்திலே அநேகபர்யாயம் போவது வரு வதாயுழன்றும்போருகிற ஆத்மா வோட்டையவ்வயத்தாலே விழுந்தெழு கை முதலான ஸ்வபாவ யுக்தமாய் (எ) "பந்துபறித்து" என்கிறபடியே ஈச்வரன் தன்னுடைய போகவிரோதியென்று, வலியவிடுவிக்கவிட்டும், (அ) "அற்பசாரங்கள்" என்கிறபடியே, பகவத்விஷயத்தினின்று மகற் றும் தொழிய தன்பக்கல்புஜிக்கலாவ தொன்றில்லாதபடி அற்பரஸங்க ளாயிருக்குமவையுமாய், மதீயமென்று ஸ்வஸம்பந்தத்தையிட்டுப்பார்க் கும்போது (கூ) "சிற்றிலுமென்பூவையும் விட்டகன்ற" என்கிறபடியே

(க) (உ) (ங) (ச) (ரு) (சு) (எ) பெ-மொ. க0. எ. ரு. (அ) தி-வா. ங. உ. சு. (கூ) பெ-மொ. ங. ச். அ.

௱. பொங்கைம்புலனில் போக்யாதி ஸமூஹம்.

## இத்யாசாரியஹ்ருதயே த்விதீய ப்ரகரணம் ஸமாப்தம்.

அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் திருவடிகளேசரணம்.

பொங்கைம்புலனில்-பொங்கைம்புலன் என்கிற பாசுரத்தில் சொல்லப்பட்ட, போக்யாதிஸமூஹம்-போக்ய போகோபகரண போகஸ்தாநங்கள்.

த்யாஜ்யங்களாய், ததீயமென்று தத்ஸம்பந்தத்தையிட்டுக்காணும்போது (க) "இகழ்விலிவ்வனைத்தும்" என்கிறபடியே, கட்டடங்க உபாதேயமாமவையாய்" (உ) "அன்னைமுனிவதும் அன்றிலின்குரலீர்வதும்" இத்யாதிப்படியையும்" (௩) "பனிப்பியல்வாகவுடைய தண்வாடையிக்கால மிவ்வூர்பனிப்பியல் வெல்லாம் தவிர்ந்தெரிவீசும்" என்கிறபடியையும், அவனையொழியக்கண்டபோது ப்ரதிகூலங்களாகவும் (ச) "அவ்வாடையீதோவந்துதண்ணென்றதெ" என்றவனோடேசேர்த்துக்கண்டபொதநுகூலங்களாகவும், சொல்லப்படுமவையான (ரு) "பொங்கைம்புலனும்" என்கிறபாட்டில் சொல்லப்பட்ட போக்யபோகோபகரண போகஸ்தாந ஸமூஹமென்றபடி. இதில் சென்னூல் வெண்ணூல் கருநூலாலே சமைக்கப்பட்டபந்தாகச் சொல்லிற்று, போகஸ்தானமான தேஹத்தையென்னுமிடம் மேலே வர்ணித்ததிலே தெரியும். கழலாவது:— சிறுகி அஞ்சாயிருக்குமதாகையாலே போகோபகரணமான பஞ்சேந்த்ரியங்க்ள். பாவை குழமணங்களாவன :— லீலோபகரணவிஶேஷங்கள். யாழ்தென்றல் மதியம் அடிசில் சாந்தம் பூண் அகில் ஆவன :— போக்யங்களானஶப்தாதி விஷயங்கள். இதில் பூண் அகில் என்கிறவைரூபகந்தங்கள்பிதை, சிற்றிலாவது :— கொட்டகமாகையாலே, போகஸ்தாநம். தேஹமும் வாஸஸ்தாநமான க்ரஹாதிகளும் போகஸ்தாந விஶேஷமிறே. தூதையாவது :— சிறுசோறடுகைக்குபகரணமாகையாலே இந்த்ரிய வ்யதிரிக்தங்களானபோகோபகரணங்களுக்குபலக்ஷணம். போகஸ்தாநமான தேஹத்தையும் போகோபகரணமான இந்த்ரியங்களையும், பந்துகழலித்யாதியாலேலீலோபகரணமாகச் சொல்லுகிறது. லீலையாவது :—தாதாத்விகரஸமான வ்யாப்ராமாகையாலே தாத்ருஶ வ்யாபாரத்திற்குமிவை உபகரணமாயிருக்கையாலே. ஆகையாலிவையனைத்தும் பொங்கைம்புலனில்போக்யாதிஸமூஹமென்னக்குறையில்லை. *

இத்யாசாரியஹ்ருதயவ்யாக்யானே

## த்விதீயப்ரகரணம் ஸமாப்தம்.

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

(க) தி-வா. ௩. ச. க. (உ) பெ - மொ. கக. உ. ரு. (௩) தி - வி. ரு. (ச) ஷை. உஎ. (ரு) தி-வா. ௧0. எ. ௧0.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஆசாரியஹ்ருதயவ்யாக்யாநம்.

# த்ருதீயப்ரகரணம்.

மூ—(க) சேர்ப்பாரைப்பக்ஷிகளாக்கி ஜ்ஞாநகர்மங்களைச்சிறகென்று குருஸப்ரம்ஹசாரி புத்ர சிஷ்யஸ்தாநே பேசும்.

(அ) சேர்ப்பாரை - (பகவத்விஷயத்தில்) கடகராமவர்களை, பக்ஷிகளாக்கி - பக்ஷிகளாக ப்ரதிபத்திபண்ணி, ஜ்ஞாநகர்மங்களை - அவர்களுடைய ஜ்ஞாநாநுஷ்டாநங்களை, சிறகென்று-சிறகுகளாகச்சொல்லி, குரு- குருக்களுடையவும், ஸப்ரம்ஹசாரி - ஸப்ரம்ஹசாரிகளுடையவும், புத்ர - புத்ரர்களுடையவும், சிஷ்ய - சிஷ்யர்களுடையவும், ஸ்தாநே - ஸ்தாநத்திலே, பேசும் - சொல்லும்,

வ்யா. (க) இனி பகவத்விஷயத்தில் கடகராகவிருக்கிற பக்ஷிகளுக்கு ஸ்வாபதேசமேதென்னு மாகாங்க்ஷையிலே யத்தையருளிச்செய்கிறார், மேல் (சேர்ப்பாரை) என்று தொடங்கி, அதாவது:— பகவத்விஷயத்தில் கடகராமவர்களை பக்ஷிகளாக ப்ரதிபத்திபண்ணி (க) "வீசும் சிறகால் பறத்தீர்" (உ) "அஞ்சிறையமடநாராய்" இத்யாதிகளாலே (ந) "ఉభాభ్యామేవపక్షాభ్యాం యథాఖేపక్షిణాంగతిః । తథైవజ్ఞానకర్మభ్యాం ప్రాప్యతేపురుషో త్తమః" உபாப்யாமேவபக்ஷாப்யாம் யதாகேபக்ஷிணாங்கதி: । ததைவஜ்ஞாநகர்மப்யாம் ப்ராப்யதே புருஷோத்தம:" என்கிறபடியே, பகவத்விஷயத்தில் சீக்ரப்ராப்திக்கு றுப்பானவவர்களுடையஜ்ஞாந கர்மவ்ருத்தங்களை, பக்ஷங்களென்றுசொல்லி, (ச) "நீயும் நின்னஞ்சிறைய சேவலுமாயாவா வென்றெனக்கருளி, (ரு) "இதுசொல்லியருளாழிவரிவண்டே" (சு) "வந்துமேயுங்குருகினங்காள்" "கைகள்கூப்பிச்சொல்லீர்" உடன்மேயும் மடவன்னங்காள்" "அடியேனுக்கும்போற்றுமினே" (எ) நன்னலப்புள்ளினங்காள் வினையாட்டியேன் நானிரந்தேன்" என்முல்லைகள்மேல்தும்பிகாள் (அ) "யாமிதுவோதக்கவாறென்னவேண்டுங்கண்டீர்" (கூ) செங்காலமடநாராய், குடக்கூத்தர்க்கென்தூதாய், நுமரோடேநுங்கால்களென்தலைமேல்கெழுமீரோ, கொக்கினங்காள், குருகினங்காள் தக்கிலமேகேளீர்கள்" இத்யாதிகளாலே, குருக்களுடையவும், ஸப்ரஹ்மசாரிகளுடையவும்,, (கo) ' இளங்கிளியே யான்வளர்த்தநீயலையே, நீயலையே சிறுபூவாய், யான்வளர்த்தகிளிகாள் தீவினையேன்வளர்த்த சிறுபூவைகளே, இத்யாதிகளாலே, புத்ரர்களுடையவும் சிஷ்யர்களுடையவும் ஸ்தாநேயாகவும், சொல்லுமென்கை. *

(க) தி-வி. ருச. (உ) தி-வா. க. ச. க. (ந) (ச) தி-வா. க. ச. க. (ரு) ஷை. சு. (சு) ஷை. சு. க. க. (எ) ஷை. அ. க. (அ) ஷை-ச. (கூ) ஷை - கூ. எக. (கo) ஷை- க. ச. எ.

மூ—(உ) விவேகமுகராய் நூலுரைத்தள்ளலில் ரதியின்றியணங்கின்
நடையைப்பின்சென்று குடைநிழலிலே கவரியசையச்சங்
கமவைமுரல வரிவண்டிசைபாட

(அ) விவேகமுகராய் - த்யாஜ்யோபாதேயவிபாகசதுரராய், நூலுரைத்து - ஶாஸ்த்ரங்களையுபதேசித்து, அள்ளலில்ரதியின்றி - ஸம்ஸார கர்த்தமத்தில் பொருத்தமுடையரன்றிக்கே, அணங்கின்நடையைப்பின் சென்று-பிராட்டியையனுகரித்து, குடைநிழலிலே - பத்மச்சதஶ்யாமளமான திருமால் திருமேனிநிழலிலே, கவரியசைய - ஆஶ்ரிதர்வாலவ்யஜநாதிகளாலநுகூல வ்ருத்திசெய்ய, சங்கமவைமுரல - ஶுத்தஸ்வபாவர்ஸ்துதிக்க, வரிவண்டிசைபாட - ஸாரக்ராஹிகள் ஸாமகாநம் பண்ண,

வ்யா. (உ) இனி யிந்தபக்ஷிகளில், அவாந்தரபேதங்களுக்கு ஸ்வாபதேஶமருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி இதிலன்னமாகச் சொல்லுகிறதாரையென்று மாகாங்க்ஷையிலேயருளிச்செய்கிறார். (விவேகமுகராய்) என்று துடங்கி, அதாவது :— (க) "హంసోయథాక్షీరమివాంబుమిశ్రమ్" "ஹம்ஸோயதாக்ஷீரமிவாம்புமிஶ்ரம்" என்கிறபடியே, ஹம்ஸமானது நீரக்ஷீரவிபாகம் பண்ணுமாப்போலே, ஸாராஸாரவிவேகோந்முகராய், (உ) "அன்னமதாயிருந்தங்கறநூலுரைத்த" என்று, ஹம்ஸரூபியாய், ஶாஸ்த்ரப்ரதாநம் பண்ணினாப்போலே, ஶ்ரோதாக்களைக்குறித்து ஶாஸ்த்ரங்களை யுபதேசித்து, (௩) "నపద్మనాతిరతిం హంసః కదాచిత్కర్దమాంభసి" நபத்நாதிரதிம்ஹம்ஸ: கதாசித்கர்தமாம்பஸி" என்கிறபடியே, ஹம்ஸமானது, கர்தமஜலத்தில் பொருந்தாதாப்போலே, (ச) "வன்சேற்றள்ளல் பொய்நிலத்து அழுந்தார்" என்கிறபடியே, ஸம்ஸார கர்த்தமத்திற் பொருத்தமுடையரன்றிக்கே, (௫) "அன்னம்மெய்யனையார்தம்பின்சென்று, என்று, ஹம்ஸமானது, ஸ்த்ரீகள்நடையழகைக் கண்டு தானுமப்படி நடைக்கைகாகப்பின்செல்லும் என்கிறபடியே, (௬) "அன்னநடையைவணங்கு" என்று, ஹம்ஸகதியான பிராட்டியுடைய அநந்யார்ஹ ஶேஷத்வாதிகளும், புருஷகாரபாவமுமாகிற நடையையநுகரித்து, (எ) "அன்னமென்கமலத்தணிமலர்ப்பீடத்தலை புனலிலைக்குடைநீழல்ச்செந்நெலொண்கவரியசைய வீற்றிருக்கும்" என்றும், (அ) "சங்கமவைமுரலச் செங்கமல மலரையேறி" என்றும், (௯) "வரிவண்டிசைபாட வன்னம்பேடையோடுடன்நாடும்" என்றும், சொல்லுகிறபடியே, ஹம்ஸமானது, மேலையெழுந்ததாமரையிலைக்கொடையாகவும், பக்வபலமானசென்னலின்னசைவுகவரியாகவும், ஶங்குகளின்த்வநி ஜயகோ

(க) (உ) பெ-மொ. கக. ௮. அ. (௩) (ச) தி-வி. க00. (௫) பெ-மொ. ௬. ௫. ௫. (௬) பெ-ல்-௫. (எ) பெ-மொ. ௯. க. ௫. (அ) பெ-மொ. எ. அ. ௨. (௯) ஷெ-எ. ௫. ௯.

ரு௦. மாநஸ பத்மாஸநத்திலேயிருந்து விதியினல்லிடரிலந்தரமின்றி இன்பம்படக் குடிச்சீர்மையிலேயாதல் பற்றற்ற பரமஹம்ஸராவுதலான நயாசலன் மெய்ந்நாவன் நாதயாமுனர் போல் வாரையன்ன மென்னும்.

மாநஸ பத்மாஸநத்திலேயிருந்து - அந்தரங்கருடைய மாநஸ கமலாஸநமிருப்பிடமாக உடையராய், விதியினல் - ஶாஸ்த்ரமார்க்கத்திலே, இடரில், தாபத்ரயாதிகளில்லாமல், அந்தரமின்றி - விச்சேதமில்லாமல், இன்பம்பட - ஆநந்தமபிவ்ருத்தமாம்படி, குடிச்சீர்மையிலேயாதல்-பார்யாபுத்ராதிகளோடிருந்து பகவதநுபவம் பண்ணுமவர்களும், பற்றற்றபரமஹம்ஸராவுதலான - ஸம்ஸாரஸங்கமற்று பரமஹம்ஸ ஶப்தவாச்யருமான, நயாசலன் - செல்வநம்பி, மெய்ந்நாவன் -பெரியாழ்வார், நாத - நாதமுனிகள், யாமுனமுனிகள் - ஸ்ரீஆளவந்தார்போல்வாரை, அன்னமென்னும் - அன்னமாகச்சொல்லும்.

ஷங்களாகவும், வண்டுகளின்மிடற்றோசை பாட்டாகவும், மாநஸஸரஃ பத்மமாஸநமாகவிருக்குமாப்போலே (க) "அக்கமலத்திலைபோலும் திருமேனியடிகள்" என்று, பத்மபத்ர நிபஶ்யாமலமான திருமேனியை, ஸம்ஸாரதுக்கார்க்கதாபம் வாராதபடி, தங்களுக்கொதுங்க நிழலாகவுடையராய், (உ) "𑌅𑌹𑌮𑌨𑍍𑌨𑌮𑍍" "அஹமந்நம்" என்னும்படி, பரிபக்வஜ்ஞாநரானவர்களநுகூலவ்ருத்திசெய்ய, ஶுத்தஸ்வபாவர்ஸ்துதிக்க, ஸாரக்ராஹிகள் ஸாமகாநம்பண்ண, (௩) "𑌗𑍁𑌰𑍁𑌪𑌾𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌤𑍍" "குருபாதாம்புஜம்த்யாயேத்" என்கிறபடியே, ஆசார்யசரணயுகளங்களை அநவரதம் நெஞ்சுக்குள்ளே கொண்டிருக்கும் சிஷ்யர்களுடைய பிரமகுருவுக்கிருப்பிடமான (ச) "போதில்கமலவன்னெஞ்சம்" என்கிற, மாநஸ பத்மத்தைவஸ்தவ்யமாக வுடையராய் (ரு) "விதியினல்படைமணக்கும்" என்றும் (சு) இடரில்போகம்மூழ்கி" என்றும், (எ) "அந்தரமொன்றுமின்றி" என்றும், (அ) "மிகவின்பம்படமேவும்" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஶாஸ்த்ரோக்தமான ப்ரகாரத்திலே, ஸாம்ஸாரிக ஸகலதுரிதங்களும் தட்டாதபடியாகவும், ஒருவிச்சேதமும் வாராதபடியாகவும், மென்மேலு மாநந்தமபிவ்ருத்தமாம்படியாகவும் (௯) "குடிச்சீர்மையிலன்னங்கள்" என்கிறபடியே, பார்யாபுத்ராதிகளோடேயிருந்து பகவதநுபவம் பண்ணுகிற (க௦) "நளிர்ந்தசீலன் நயாஶலன்" என்று, சொல்லப்பட்ட செல்வநம்பி, (கக) "மெய்ந்நாவன் மெய்யடியான் விஷ்ணுசித்தன்" என்கிறபெருயாழ்வார்போல்வாரையும், (கஉ) "பற்றற்றூர்கள்" என்றும், (க௩) "சிற்றெயிற்றுமுற்றன்மூங்கின் மூன்றுதண்டரொன்றினரற்றபத்தர்" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஸாம்ஸாரிகஸகலஸங்கமுமற்று உத்தமாஶ்ரமிகளாய், பரமஹம்ஸ ஶப்தவாச்யரான நாதமுனிகள், யாமுனமுனிகள் போல்வாரையும், இந்த குணஸாம்யத்தையிட்டன்னமென்றுசொல்லுமென்கை. *

(க) தி-வா. ௯. எ. ௩. (உ) தை - உ. (௩) (ச) பெரியா-தி. ரு. உ. அ. (ரு) தி-வா. க.ச. ௩. (சு) ஷை-சு. க. ச. (எ) ஷை. சு. அ. க௦. (அ) தி - வா. ௯. எ. க௦. (௯) தி-வி. உ௯. (க௦) பெரியா-தி. ச. ச. ச. (கக) ஷை. ௯. கக. (கஉ) பெருமாள் - தி. க. ச. (க௩) திருச்சந்த-வி. ருஉ.

மூ—(ங.) என்பெறுதியென்னப்ரமியாதுள்ளத்துளூறியமதுவ்ரதமாய்
தூ மதுவாய்கள்கொண்டு குழல்வாய்வகுளத்தின்ஸாரம்
க்ரஹித்தேதெனவென்றூ லம்வைத்துச்சிறுகாலெல்லியம்
போது

(அ) என்பெறுதியென்ன - தெளிவித்து நிவர்த்திப்பிக்கவேண்டும்படி, ப்ரமியாது - ப்ரமிக்காதே, உள்ளத்துளூறிய மதுவ்ரதமாய் - ஆச்ரிதஹ்ருதயத்திலூறினதே னுனபகவத்விஷயமே தாரகாதிகளாய், தூமதுவாய்கள்கொண்டு - பரிசுத்தமாயி னிதானவாயைக்கொண்டு, குழல்வாய்வகுளத்தின் ஸாரம்க்ரஹித்து - திருக்குழலில் கேஸரகுஸுமஸாரத்தைக்ரஹித்து, தேதெனவென்றூளம்வைத்து- அநுபவஜநிதஹர்ஷத்தாலாளத்திவைத்து, சிறுகாலெல்லியம்போது-ப்ராதக்காலராத்ரிகளில்,

வ்யா. (ங) வண்டுதும்பிகளென்கிற தாரையென்னவருளிச்செய்கிறார்மேல் (என்பெருதி)என்றுதுடங்கி அதாவது:— (க)“எநார்மலரெல்லாமூதி நீயென்பெறுதி” என்று, நிவர்த்திப்பிக்கவேண்டும்படி, அப்ராப்தவிஷயங்களைபோக்யமென்று ப்ரமியாதே, (உ) “உளங்கனிந்திருக்குமடியவர்தங்களுள்ளத்துளூறியதேனை” என்று, தன்னுடையஸௌந்தர்யசீலாதிகளைநினைத்துஹ்ருதயம்பக்வமாயிருக்கும்சேஷபூதருடையஹ்ருதயத்திலே ‘ஊறினதேன்என்கிற பகவத்விஷயமாகிறமதுவை விரும்பி’ (ங.) “తవామృతస్యన్దిని పాదపఙ్కజే నివేశితాత్మా కథమన్యదిచ్ఛతి। స్థితేరవిన్దే మకరన్దనిర్భరే మధువ్రతో నేక్షురకం హి వీక్షతే” “தவாம்ருதஸ்யந்திநிபாத பங்கஜேநிவேசிதாத்மாகதமந்யதிச்சதி । ஸ்திதேரவிந்தே மகரந்தநிர்ப்பரே மதுவ்ரதோநேக்ஷுரகம்ஹிவீக்ஷதே” என்கிறபடியே, மற்றொன்றைப்புரிந்துபாராதே இத்தைபுஜிக்கையே வ்ரதமாகவுடையராய் (ச) “சூடியதண்டுளபமுண்ட தூமதுவாய்கள்கொண்டு” என்று, பகவத்போக்யதாநுபவத்தாலே பரிசுத்தமாய், இனிதானவாயைக்கொண்டு (ரு) “என்குழல்மேலொளிமாமலரூதீரோ” என்கிறபடியே, நாட்கமிழ்மகிழ்மாலைமார் வராகையாலே, வகுளதரரானவாழ்வாருடைய (சா) “வைகுந்தமன்னாள்குழல்வாய்விரைபோல்விண்டுகள்வாரும் மலருளவோநும் வியலிடத்தே” என்று, பரத்வாதிகளில் போக்யதையும்பரிச்சின்னமென்னும்படியான திருக்குழலில்வைத்த வொளிமாமலரான வகுளத்தின் ஸாரத்தைக்ரஹித்தவ்வழியாலே, இத்தலையிற்போக்யதையை யநுபவித்து (எ) “யாழினிசைவண்டினங்களாளம் வைக்கும் (அ) “வரிவண்டுதேதெனவென்றிசைபாடும்” என்கிறபடியே, இப்படிபகவத்பாகவத போக்யதைகளையநுபவித்த செருக்குக்குப்போக்குவீடாக ஆளத்திவைத்து, (கூ) “அறுகால்வரிவண்டுகளாயிரநாமஞ்சொல்லிச்சிறுகாலைப்பாடும்” (க0) “எல்லியம்போதிருஞ்சிறைவண்டெம்பெருமான் குணம்

(க) பெ - மொ. அ. ச. ரு. (உ) ஷை. ச. ங. கூ. (ங) ஆ - ஸ்தோ. உசா. (ச) தி-வா. சா. அ. ங. (ரு) ஷை. (சா) தி - வி. ருரு. (எ) பெரியா - தி. ச. அ. சா. (அ) பெ-மொ. ச. க. க. (கூ) பெரியா-தி. ச. உ. அ. (க0) ஷை. அ. அ.

௯. குறிஞ்சிமருள் காமரங்கந்தாரம் தலைக்கொள்ளப்பாடித்து ன்னிட்டு நெருக்க நீக்கென்றுகடந்து புகுந்தகையறப்புக்கு வண்டொத்திருண்டகுழலிலே சங்கையறமருவி யருளாத யாமென்றோடிவந்து வாசமேயூதிவண்டே கரியான தெய் வவண்டோடே

குறிஞ்சி மருள் காமரங் கந்தாரந் தலைக்கொள்ளப்பாடி - இப்பண்களை ந்தலைமைப்பெறும்படிபாடி), துன்னிட்டு - ஸேவாபரர்நிறைந்து, நெருக்க - புகுரவொண்ணாதபடி நெருக்க, நீக்கென்று - திருக்கதவுதிறக்க வேணுமென்றபேக்ஷித்து, கடந்து புகுந்து தகையறப்புக்கு - அதினழகிலே துவக்குண்ணாதே ஆக்ரமித்துள்ளேபோய் ப்ரவேசித்து, வண்டொத்திருண்டகுழலிலே-ஸ்வஸத்ருபமுள்ளவிடத்திலே, ஸங்கையறமருவி-நிஸ்ஸங்கமாகப்பொருந்தி, அருளாதயாமென்று - இத்தலையிலார்த்தியை யவனுக்கறிவித்து, ஓடிவந்து-(அவன்வரவையறிவிக்கமுன்னமாக) வந்து, வாஸமேயூதி - அவனிடத்திலநுபவித்த போக்யதையை தன் வாக்காலேசொல்லி ஆஸ்வஸிப்பிற்று, வண்டேகரியான தெய்வவண்டோடே - ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பன்னனை முன்னிட்டங்கீகரிக்கு மீஸ்வரனோடே,

பாடி" (க) "வண்டுகுறிஞ்சி மருளிசைபாடும்" (உ) "வண்டினங்கள் காமரங்களிசைபாடும்" (௩) "கந்தாரமந்தேனிசைபாட" என்கிறபடியே, காலோசிதமான (௪) "பண்கட்தலைக்கொள்ளப்பாடி" என்கிறபடியே, பண்களைத் தலைமைப்பெறும்படிபாடி (௫) "பின்னிட்ட சடையானும் பிரமனுமிந்திரனும் துன்னிட்டுப்புகலறிய" என்றும், (௬) "சுந்திரர்நெருக்க" என்றும், சொல்லுகிறபடியே, திருவாசல்களிலே ஸேவாபரரானவர்கள் நிறைந்து தலைநுழைக்கவொண்ணாதபடி நெருக்க, (௭) "நேசநிலைக்கதவைநீக்கு" என்று, திருவாசற்காப்பானை திருக்கதவு திறக்கவேணுமென்றபேக்ஷித்து (அ) "பொன்னியலுமாடக்க வாடங்கடந்துபுக்கு" என்கிறபடியே, த்ருஷ்டி சித்தாபஹாரம் பண்ணும் திருவாசலழகிலே, துவக்குண்ணாதே, அத்தைக்கடந்துபுக வேண்டுகையாகிற தகைவறப்பாடுவாரான அந்தரங்கதையாலும், ஏகாக்ரசித்ததையாலும் போய்புக்கு(௯) "வண்டொற்றிருண்டகுழல்" என்கிறபடியே,ஸ்வஸமான விஷயமுள்ளவிடத்திலே சேர்ந்து "நீமருவியஞ்சாதேநின்று" என்கிறபடியே, நிஸ்ஸங்கமாகவவனுக்கு, ஸமீபவர்த்திகளாய் (௧௦) "அருளாதநீரருளி" என்றும், "யாமிதுவோதக்கவாறு" என்றும், இத்தலையிலார்த்தியை, அவனுக்கறிவித்து (௧௧) "ஓடிவந்தென்குழல்மேலொளிமாமலரூதீரோ" என்று, அவனோடேகூடிவரவிராதே

(க) பெ-மொ. உ. க. உ. (உ) பெருமாள்-தி. அ. ௪. (௩) பெ-மொ. ௩. அக. (௪) தி-வா. ௩. ரு. உ. (ரு) பெருமாள். தி. ௪. ௩. (௬) திருப்பள்ளி-தி. எ. (எ) திருப்பாவை-கசு. (அ) பெ-ல்-எஉ. (௯) பெரியா-தி. உ. ரு. எ. * திருநெடுந்தாண்டகம். உஎ. (௧௦) தி-வா. க. ௪. ௬. (௧௧) ஷ-௬. அ. ௪.

மூ. சேர்விக்கும் சேமமுடைநாரதன் முனிவாஹநர்தம்பிரா
ன்மார் போல்வாரைவண்டுதும்பியென்றும்.

மூ—(ச) கண்வலைப்படாதே அகவலைப்பட்டு வளர்த்தெடுப்பார்கை
யிருந்து

சேர்விக்கும் - கடிப்பிக்கும், சேமமுடைய நாரதன் - க்ஷேமத்தையு
டைய நாரதபகவான், முனிவாஹநர் - திருப்பாணாழ்வார், தம்பிரான்
போல்வாரை - வண்டுதும்பியென்னும் - வண்டென்றும் தும்பியென்
றும் சொல்லும்.

(அ) கண்வலைப்படாதே - (மத்ஸ்யநேத்ரிகள்) த்ருஷ்டியாகிற
வலையிலகப்படாதே, அகவலைப்பட்டு - ப்ராப்தஸேஷிகடாக்ஷங்களுக்
கப்பட்டு, வளர்த்தெடுப்பார் கையிருந்து - போஷககரதலாஸ்திதி
யுடையராய்,

ஓடிவரவேணுமென்ற பேக்ஷித்துவிட்டபடியே,இத்தலையிலர்த்திக்கிடா
கவவன் வரவையறிவிக்க விரைந்துவந்து, தங்கள்வரவாலே, இத்தலை
யிற்பிறந்த செல்வினையை யநுபவித்து (க) "துளவின்வாசமே வண்டு
கொண்டுவந்தூதுமாகில்" என்கிறபடியே, அத்தலையிற்தாங்களநுபவித்த
போக்யதையை, தங்கள் வாக்காலே, இத்தலைக்கு ப்ரகாசிப்பியாநின்று
கொண்டு ஆஸ்வஸிப்பிற்று (உ) "கொங்குண்வண்டேகரியாகவந்
தான்" என்கிறபடியே, ஸாராக்ரஸாரக்ராஹியாய் ஷட்பதநிஷ்ட
னாய், பக்ஷத்வயயோகத்தாலே அப்ரதிஹதகதியானவனை முன்னிட்டங்
கீகரிக்குமவனாய், (ங) "தூவியம்புள்ளுடைத் தெய்வவண்டு" என்று,
வேதாந்த வேத்யனென்று தோற்றும்படி, கருடவாஹனனாய், ஸாரக்
ராஹியாயிருக்கிற ஸர்வேஸ்வரனோடே சேர்விக்கும், சேமமுடைய நார
தன் என்று, ப்ரும்ஹபாவனைக நிஷ்டதையாகிற ரக்ஷையையுடையனாய்
பகவத்குணாநுபவஹர்ஷப்ரகர்ஷத்தாலே ந்ருத்தகீதபரனாயிருக்கும், ஸ்ரீ
நாரதப்ரம்ஹர்ஷி, லோகஸாரங்க மஹாமுனிகளாலே வஹிக்கப்படுகை
யாலே முனிவாஹனரென்று நிரூபகரான திருப்பாணாழ்வார், திருவாய்
மொழி இசையே தங்களுக்கு போக்யமாயிருக்கிற தம்பிரான்மார்போல்
வாரை, இக்குணஸாம்யத்தாலே வண்டென்றும், தும்பியென்றும்,சொல்
லுமென்கை. தும்பியாவது:— ப்ருங்கஜாதியிலே, ஓரவாந்தரபேதம்,
ஆகையிறே, வண்டினங்காள் தும்பிகாள் என்றேகஸ்தலத்திலே இரண்
டையும்பிரிய வருளிச்செய்தது. *

வ்யா. (ச) கிளிபூவை முதலானவையாகச் சொல்லுவதாரையென்
னுமபேக்ஷையிலே அருளிச்செய்கிறார். (கண்வலை) என்றுதுடங்கி,
அதாவது:— (ச) மாதரார்க்கயற்கணென்னும் வலையுள்பட்டு என்று,
ஸ்த்ரீகளுடைய த்ருஷ்டியாகிறவலையிலே யகப்பட்டநர்த்தப்படாதே

(க) பெ-மொ. கக். க. கூ. (உ) ஷெ-கூ. ங. ச. (ங) தி - வா. கூ. கூ. கூ. ச. திரு
மாலை-கசு.

சூ. தயிர்நெய்யமர்பாலமுதுண்டு ஒருமிடராய் போற்றியொரு வண்ணந்திருந்தநுவலாததுக்கென்பிழைக்கும் நீயலேயே நல்வளந்துறைப்பனென்னு மவற்றுக்கு முவந்து

தயிர்நெய்யமர் பாலமுதுண்டு - தாரகபோஷக போக்யங்களானவை யை யநுபவிப்பிக்க வநுபவித்து, ஒருமிடராய் - ஏககண்டராய், போற்றி ஒருவண்ணம் திருந்தநுவலாததுக்கு - ஸ்துதித்தென்னுடைய ஸ்திதியை நாயகனுக்கறிவியென்ன அறியாததுக்கு, என்பிழைக்கும் நீயலேயே நல்வளர் துரப்பனென்னுமவற்றுக்கும், வெறுத்தநாதரித்துச்சொன்ன வார்த்தைகளுக்கும், உகந்து - (ப்ராப்தவிஷய நிக்ரஹாநுக்ரஹங்களிரண்டு முபாயதேயமென்று) உகந்து,

(க) "தாமரைத்தடங்கண் விழிகளினகவலைபடுப்பான்" என்கிறபடியே, தப்பாமலகப்படுத்திக்கொள்ளும் ஸர்வேஶ்வரனுடைய தாமரைபோன்ற திருக்கண்களின் நோக்காகிற வலைக்குள்ளேயகப்பட்டு (உ) "வளர்த்ததனுல் பயன்பெற்றேன்" என்றும் (ங) "எடுத்தவென்கோலக்கிளியை" என்றும், (ச) மங்கைமார்முன்பென்கையிருந்து" என்றும் சொல்லுகிறபடியே, ஸ்வரூபவர்த்தகராய், உபலாலித்து நோக்கிக்கொண்டுபோருமவர்கள் கைவஶமாய் (ரு) "தயிர்ப்பழஞ்சோற்றொடு பாலடிசலும் தந்து"என்றும் (சா) "நெய்யமரின்னடிசில் நிச்சல்பாலொடுமேவீரோ" என்றும், (எ) "இன்னடிசிலொடுபாலமுதூட்டி" என்றுஞ் சொல்லுகிறபடியே, அவர்கள் காலோசிதமாகவும் பாகாநுகுணமாகவும், (அ) "உபதேக்ஷ்யந்திதேஜ்ஞாநம்" "உபதேக்ஷயந்திதேஜ்ஞாநம்" என்கிறபடியே உபதேஶமுகேந தாரகபோஷக போக்யங்களான பகவத்குணங்களை அநுபவிப்பிக்க அநுபவித்து, ஆசார்யர்களோடேககண்டராய் (கூ) "போற்றியானிரந்தேன்புன்னைமேலுறைபூங்குயில்காள்" என்றும் (க0) "ஒருவண்ணம்சென்றுபுக்கெனக் கொன்றுரை யொண்கிளியே!" என்றும், (கக) "திருந்தக்கண்டெனக்கொன்றுரையா யொண்சிறுபூவாய்" என்றும், கடகபுத்திபண்ணி ஆதரித்த தசையிலும்,(கஉ)"நோயெனது நுவலென்ன" என்னுர்த்தியை, சீக்ரமாகப்போ யவனுக்கறிவியென்னச்செய்தே செய்யாததுக்கு (கங) "என்பிழைக்கு மிளங்கிளியே யான்வளர்த்த நீயலேயே" என்றும், (கச) "நீயலேயே சிறுபூவாய் நுவலாதே யிருந்தொழிந்தாய்" என்றும், ஸ்மாரகபதார்த்தங்கள் பாதகமாகிற தசையிலே அருகேயிருந்து திருநாமத்தைச்சொன்னது பொறுமல் (கரு) சொல்பயிற்றிய நல்வளமூட்டி நீர்பண்புடையீரோ" என்றும், இன்னுதானதசையிலும் (கசா) "இன்று நாராயணனை வரக்கூவாயே லிங்குற்றுநின்றும் துரப்பன்" என்றனுதரித்ததசையிலும், சொன்னவின் சொற்களும்,

(க) தி - வா. சா. உ. கூ. (உ) திருநெடுந்தாண்டகம் - கச. (ங) நாச்சியார் - தி. ரு. ரு. (ச) தி - வா. சா. அ. உ. (ரு) தி - வா. கூ. ரு. அ. (சா) தி - வா. சா. அ. உ. (எ) நாச்சியார் - தி. ரு. ரு. (அ) (கூ) தி - வா. சா. கூ. சா. (க0) ஷை-எ. க0. (கக) ஷை - எ. (கஉ) ஷை - க. ச. அ. (கங) ஷை - எ. (கச) ஷை. (கரு) ஷை - கூ. ரு. அ. (கசா) நாச்சியார் - தி. ரு. க0.

மூ. சொல்லெடுத்துச்சோர்ந்தவாறே கற்பியாவைத்த மாற்றம் கைகூப்பிவணங்கப்பாடி ஆலியாவழையாபராபிமானத்தி லே யொதிங்கின நம்பிக்கன்பர்தலைமீதடிப்பொடி உடைய வருடையார்

சொல்லெடுத்துச் சோர்ந்தவாறே - திருநாமம்சொல்லென்று பக்ரமித்து பரவசரானவாறே, கற்பியாவைத்த மாற்றம்-முன்பப்யஸிப்பித்த திரு நாமங்களைக்கைகூப்பிவணங்கப்பாடி - அப்யஸிப்பித்த தாமேயநுவர்த் திக்கும்படி யநுஸந்தித்து, ஆலியாவழையாப்பராபிமானத்திலே யொ துங்கின, திருநாமத்தால் போதுபோக்குமவர்களபிமாநாந்தர்ப்பூதரான- நம்பிக்கன்பர்தலைமீதடிப்பொடியுடையவருடையார் போல்வாரை,

வெஞ்சொற்களுமாகிற வவற்றுக்கும்,வகுத்தவிஷயத்தில், நிக்ரஹாநுக்ர ஹங்களிரண்டும், அங்குற்றை விநியோகப்ரகாரமென்னும்நினைவாலே உகந்து (க)"சொல்லெடுத்துத்தன்கிளியைச் சொல்லேயென்று துணைமு லைமேல்துளிசோரச்சோர்கின்றாளே" என்று, திருநாமத்தைச்சொல்லெ ன்றுபக்ரமித்து பலஹாநியாலே, ஒருசொற்சொல்லும் போதுமலையெடு க்குமாப்போலேயாய் அதுவும் மாட்டாதே பரவசகாத்ரரானவாறே (உ) "கன்மின்களென்றும்மை யான்கற்பியாவைத்தமாற்றம்" என்கிற படியே, முன்பே கற்பித்து வைத்த சொல்லான திருநாமத்தைச் சொல்லென்ன, (ங) "பாடக்கேட்டு வளர்த்ததனாற்பயன்பெற்றேன் வருகவென்று மடக்கிளியைக் கைகூப்பிவணங்கினாள்" என்று, கற்பித் தவர் தாங்கள், உபகாரஸ்ம்ருதிபண்ணி அநுவர்த்திக்கும்படி ப்ரீதிப் ரேரிதராய்ச்சொல்லி (ச) "ஆலியா அழையாவரங்காவென்று" என்கிற படியே, ஆநந்தத்தோடே திருநாமத்தைக்கொண்டு போதுபோக்குமவர் களாய், (ரு)"தேவுமற்றறியேன்" என்கிறபடியே, ஆசார்யாபிமானமாதல் பாகவதாபிமானமாதலாகிறபராபிமானத்திலே ஒதுங்கினவர்களான (சு) "தென்குருகூர் நகர்நம்பிக்கன்பன்" என்று, ஆசாரியரான ஆழ்வார்விஷ யத்தில், ப்ரேமமேநிரூபகமாம்படி யிருக்கும் ஸ்ரீமதுரகவிகள் (எ) "நாவி லிட்டொழிதருகின்றோம் நமன்றமர்தலைகள்மீதே" என்று திருநாமத் தையுண்டை கொண்டபலத்தாலே யமாதிகள் தலையிலே அடியிடும்படி செருக்கையுடையராய் பாகவதர்களுக்கு பாததூளிபோலே பரதந்த்ர ராய், இதுவே நிரூபகமான ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார்ராமாநுச னுடையானென்றே நிரூபகமாம்படி உடையவர்க்கு பரதந்த்ரரான ஆழ் வான், ஆண்டான் எம்பார், அருளாளப்பெருமா ளெம்பெருமானார் முத லானவர்கள் போல்வாரை, குணஸாம்ய நிபந்தனமாக கிளியென்றும், பூவையென்றும், குயிலென்றும், மயிலென்றும், சொல்லுமென்றபடி.

(க) திருநெடுந்தாண்டகம் - சங. (உ) தி - வா. சு. அ. சு. (ங) திருநெ-ம் - கச. (ச) பெருமாள்-தி. ங. உ. (ரு) கண்ணி - தி. உ. (சு) ஷை - கக, (எ) தி-மா. க, ஙச

சூ. போல்வாரைக்கிளி பூவைகுயில் மயிலென்னும்.

சூ—(௫) ஆசறு தூவியென்றும் பாஹ்யாப்யந்தர ஶுத்தியோடே திரையுக ளுவ்யஸநவ்யதையற்று தாய்வாயிலுண்ணும்பிள் ளைக்கிரைதேடி

ஸ்ரீமதுரகவிகள் தொண்டரடிப்பொடியாழ்வார் இராமாநுசனுடையார் போல்வாரை - கிளி பூவைகுயில்மயிலென்னும் சொல்லும்.

(அ) ஆஶறுதூவியென்னும்பாஹ்யாப்யந்தர ஶுத்தியோடே - (பழிப்பற்றசிறகையுடைத்தாயென்றும்) பாஹ்யாப்யந்தர ஶுத்தியோடேகூடி, திரையுகளும் வ்யஸநவ்யதையற்று - ஸம்ஸாரஸமுத்ர தாபத்ரயதரங்கங்களாலபிபூதராகிலுமிடையாதே, தாய்வாயிலுண்ணும்பிள்ளைக் கிரைதேடி - தங்கள வாக்காலுப ஜீவிக்கவேண்டுமாப்போலிருக்கிற ஸாத்ய மானவுஜ்ஜீவநார்த்தங்களையுபகரித்து,

பூவையாவது :— நாகணைவாய்ப்புள். மயிலை தூதுவிட்டமை யின்றிக் கேயிருக்க,அத்தை ஸஹபடித்தது "யான்வளர்த்தகிளி காள்பூவைகாள் குயில்காள் மயில்காள்" என்று, ஸ்தலாந்தரத்திலே அருளிச்செய்கை யாலே யதுக்கு மிதுவே ஸ்வாபதேஶமென்றறிவிக்கைக்காக. *

வ்யா. (௫) நாரை கொக்கு குருகென்று சொல்லுகிற தாரையெ ன்னு மபேக்ஷையிலே அருளிச்செய்கிறார். (ஆசறுதூவி) என்றுதுடங்கி அதாவது :—(க) "ஆசறுதூவி வெள்ளைக்குருகே" என்று, பழிப்பற்ற சிறகையுடைத்தாய் உள்ளும்புறம்புமொக்க நிர்மலமாயிருக்கும்குருகே! என்றுசொல்லப்பட்ட (உ) "యస్స్మరేత్పుణ్డరీకాక్షం సబాహ్యాభ్యన్తరశ్శుచిః" "யஸ்ஸ்மரேத் புண்டரீகாக்ஷம் ஸபாஹ்யாப்யந்தரஶ்ஶுசி:" என்கிற பாஹ்யாந்தரஶுத்தியோடேகூடி (௩) "வாயுந் திரையுகளும் கானல் மடநாராய்" என்று, ஆமிஷைகாக்ர சித்ததையாலே,நாரையானது,திரை கள் வந்துகிட்டி மேலே தாவிப்போகாநிற்கிற கானலிலே சலியாமலி ருக்குமாப்போலே, (ச) "గిరయోవర్షధారాభిర్హన్యమానా న వివ్యథుః। అభిభూయమానా వ్యసనైర్యథాధోక్షజచేతసః" "கிரயோவர்ஷதாராபிர்ஹந்யமாநாநவிவ்யது:। அபிபூயமாநாவ்யஸநைர்யதாதோக்ஷஜசேதஸ:" என்கிறபடியே, பகவதேகாக்ரசித்ததையாலே ஸம்ஸாரஸமுத்ரதரங்கங்களான தாபத்ர யரூப வ்யஸநங்கள் அஹமஹமிகயாவந்துமேலிடாநின்றாலும் அதுக்கி டையாதே(௫)"தாய்வாயில்கொக்கின்பிள்ளை வெள்ளிறவுண்ணும்" என் றும், (சு) பழனகக்கழனியதனுள்போய்புள்ளுப்பிள்ளைக்கிறைதேடும்" என்றும் சொல்லுகிறபடியே,கொக்கானதுதன்வாயாலே யெடுத்துக்கொ டுக்க ஜீவித்திருக்கும் தன்பிள்ளைக்கு வாய்க்கடங்கு மிரைதேடியிடுமாப் போலே, தங்கள் வாக்காலுபகரிக்கும் பகவத்விஷயத்தை உபஜீவித்திரு

(க) தி - வா. சு. அ. அ. (உ) (௩) தி - வா. உ. க. க. (ச) ஸ்ரீபாக. ௧௦. ௨௦. ௧௫. (௫) பெ - மொ. ௯. ௬. க. (சு) ஷெ. ௫. க. உ.

மூ. வைகலுடன் மேய்ந்து நுங்கால்பைங்கானமென்று ப்ரம்ஹரதம் பண்ணிக்கொடுத்தவை கொண்டு நல்ல பதத்தையும் வேண்டேனென்னும் தநிப்பெரும்பித்தர் நம்முதலிகள் போல்வாரை நாரைகொக்கு குருகென்னும்.

வைகலுடன்மேய்ந்து - நிரந்தரம்பிரியில் தரியாதவர்களோடேகூடி, நுங்கால் பைங்கானமென்று ப்ரும்ஹரதம் பண்ணிக்கொடுத்தவைகொண்டு- சிஷ்யர்களுபகார ஸ்ம்ருதியாலே சிரஸாவஹிக்கையாகிற ப்ரம்ஹரதம் பண்ணிகிஞ்சித்கரித்தவற்றையும்கொண்டு, நல்லபதத்தையும் வேண்டேனென்றும் - பர்வத்ரயகைங்கர்யோபயுக்தகார்ஹஸ்த்யத்தையு மே தாகப்பரிணமிக்கக்கடவதோவென்னும் பயத்தாலுபேக்ஷிக்குமவர்களான, தனிப்பெரும்பித்தர் நம்முதலிகள்போல்வாரை - ஸ்ரீகுலசேகரப்பெருமாள் நம் பூர்வாசாரியர்கள்போல்வாரை, நாரை கொக்கு குருகென்றும்-நாரையென்றும் கொக்கென்றும் குறுகென்றும் சொல்லும்.

க்கும்குழைச்சராக்கானசிஷ்யர்களுக்கு பாயாநுகுணமாக ஸாத்மயமான பகவத்விஷயார்த்தங்களை ஶாஸ்த்ரங்களிலே யாராய்ந்துபகரித்து, (க) "வைகல்பூங்கழிவாய் வந்துமேயுங்குருகினங்காள்" என்றும், (உ) "காதல்மென்படையோடுடன் மேயுங்கருநாராய்" என்றும் சொல்லுகிறபடியே, ஸர்வகாலமும் போகஸ்தலங்களிலே தாங்களே சென்று தங்களைப் பிரியில் தரியாதப்ரேமமுடைய சிஷ்யர்களுடனே கூடபகவத்குணநுபவம்பண்ணி (ங) "நுங்கால்களென் தலைமேல்கெழுமீரோ" என்றும், (ச) "பைங்கானமீதெல்லாமுனதேயாகப் பழனமீங்கவர்ந்துண்ணத் தருவன்" என்றும் சொல்லுகிறபடியே, தங்கள்பக்கலுபஜீவித்த சிஷ்யர்களுபகாரஸ்ம்ருதியாலே சிரஸாவஹிக்கையாகிற ப்ரும்ஹரதம் பண்ணி (ரு) "శరీరమర్థం ప్రాణంచ సద్గురుభ్యో నివేదయేత్" "ஶரீரமர்த்தம் ப்ராணஞ்சஸத்குருப்யோ நிவேதயேத்" என்கிற, க்ரமத்திலே, ஸாதரமாக ஸமர்ப்பித்தவற்றை யங்கீகரித்து (சு) "நல்லபதத்தால் மனைவாழ்வர்" என்று, பகவத் கைங்கர்யந்துக்குறுப்பான கார்ஹயஸ்த்யத்தையும், ஸம்ஸார வெக்காயமடியான பயத்தாலே (எ) "இன்பமருஞ் செல்வமுமிவ்வரசும்யான் வெண்டேன்" என்றுபேக்ஷிக்குமவர்களாயுள்ள (அ) "அங்கையார்ழியரங்கனடியிணைத் தங்குசிந்தைதனிப் பெரும்பித்தரான" ஸ்ரீகுலசேகரப்பெருமாள் ஆசார்யபதஸ்தரான நம்முதலிகள் போல்வாரைகுணஸாம்யத்தாலே நாரையென்றும் கொக்கென்றும் குருகென்றும் சொல்லுமென்கை. (கூ) "நன்னலமகன்னனல்காள்" என்று, மகன்றில்களையும் தூதுவிட்டமை யொத்திருக்கச்செய்தே அதுக்குஸ்வாபதேஶமருளிச் செய்யாதொழிந்தது, அதிலிப்படி பரக்கச்சொல்லத்தக்க தில்லாமையா

(க) தி-வா. சு. க. க. (உ) ஷை - உ. (ங) ஷை - கூ. எ. க. (ச) திருநெ - ம் உ . (ரு) (சு) தி-வா. அ. கo. கக. (எ) பெருமாள். ச. ரு. (அ) ஷை - ங கூ. (கூ) தி-வா. க. ச. ச.

மூ—(சு) பூண்டநாள் சீர்க்கடலையுட்கொண்டு திருமேனி நன்னிற மொத்துயிரளிப்பான் தீர்த்தகரராயெங்கும் திரிந்து ஜ்ஞா நஹ்ருதத்தைப்பூரித்து

(அ) பூண்டநாள் - பகவதநுபவம் பண்ணவவகாஹித்த நாளெல்லாம், சீர்க்கடலையுட்கொண்டு - கல்யாணகுணஸாகரத்தையுட்கொண்டு, திருமேனிநன்னிறமொற்று - விக்ரஹவர்ணத்தாலவனோடு ஸாம்யாபன்னராய், உயிரளிப்பான் - ப்ராணிஸம்ரக்ஷணத்துக்காக, தீர்த்தகரராய்- பாவநகரராய், எங்கும்திரிந்து - ஸர்வத்ரஸஞ்சாரம்பண்ணி, ஜ்ஞாநஹ்ருதத்தைப்பூரித்து - ஜ்ஞாநமாகிற தடாகத்தைநிறைத்து,

லும், இந்தந்யாயத்திலே தத்ஸமான குணரைச்சொல்லிக்கொள்ளுமத் தனையன்றேயென்னு மத்தைப்பற்றவும். மகன்றிலாவது:— அன்றிலே யோரவாந்தரபேதம். ஆகவிப்படி தூதப்ரகரணத்தில் சொல்லுகிறபக்ஷ யவாந்தரபேதங்களுக்கு ஸ்வாபதேசமருளிச் செய்தாராயிற்று. *

வ்யா. (சு) இனியிப்ரகரணத்தில் மேகமாகச்சொல்லுகிற தாரை யென்னுமாகாங்க்ஷையிலே யருளிச்செய்கிறார்மேல்,(பூண்டநாள்)என்று துடங்கி, அதாவது:— வர்ஷிக்கைக்குடலான காலங்களில் கடலிலே புக்கு அதில் நீரைப்பருகிக்கொண்டிருக்கும் மேகம்போலே (க) "நீண்டதோள்மால்கிடந்த நீள்கடல் நீராடுவான் பூண்டனாளெல்லாம்புகும்" என்றும், (உ) "திருமால் சீர்க்கடலையுள்பொதிந்த சிந்தனையேன்" என்றும் சொல்லுகிறபடியே, விடிந்த நாளெல்லாமவன் கண்வளர்ந்தருளுகிற கடலிலேபுகுந்து ஸ்ரீயஃபதியானவவனுடைய கல்யாணகுணஸாகரத்தை யுள்ளேயடக்கிக்கொண்டு (ஙு) "திருமால் திருமேனியொக்கும்" என்றும், (ச) "கண்ணன்பால் நன்னிறங்கொள்கார்" என்றும் சொல்லுகிறபடியே, மேகமானது, அவன் திருமேனியோடொத்த நிறத்தையுடைத்தாயிருக்குமாப்போலே விக்ரஹவர்ணத்தாலவனோடு ஸாம்யாபன்னராய் (ரு) "உயிரளிப்பான் மாகங்களெல்லாம் திரிந்து" என்று, மேகமானது, வர்ஷமுகேனப்ராணிரக்ஷணம் பண்ணுகைக்காக விஸ்த்ருதமான வாகாசப்பரப்பெங்கும் ஸஞ்சரிக்குமாப்போலே ஸம்ஸாரிகளான ஆத்மாக்களைரக்ஷிக்கைக்காக "தீர்த்தகராமின்திரிந்து" என்றும் (சு) "தீதில்நன்னெறி காட்டியெங்குந்திரிந்து" என்றும் சொல்லுகிறபடியே, லோகபாவநராயுஜ்ஜீவநமார்க்க ப்ரதர்சகராய்க்கொண்டு ஸர்வத்ரஸஞ்சாரம்பண்ணி, மேகம்வர்ஷத்தாலே தடாகாதிகளை நிறைக்குமாப்போலே (எ) "జ్ఞానహ్రదేధ్యానజలే రాగద్వేషమలాపహే। యస్స్నాతిమానసేతీర్థే సయాతిపరమాంగతిమ్" "ஜ்ஞாநஹ்ரதேத்யாநஜலே ராகத்வேஷமலா

(க) அ. ஙு. சுகூ. (உ) பெ - அ. சுகூ. (ஙு) தி - வி. ஙுஉ. (ச) பெ-அ. அரு. (ரு) தி - வி. ஙுஉ. (சு) பெருமாள் - தி. உ. சு. (எ)

மூ. தீங்கின்றிவாழ நிதிசொரிந்துகொடுத்தது நினையாதேலஜ்ஜித்து வெளித்தொளித்துக்கண்டுகந்து பரஸம்ருத்தியே பேறான அன்புகூருமடியவருறையிலிடாதவர் புயற்கையருள்மாரி குணந்திகழ்கொண்டல் போல்வாரை மேகமென்னும்.

தீங்கின்றி-அநர்த்தகந்தமின்றி, வாழ-உஜ்ஜீவிக்கும்படி, நிதிசொரிந்து-குணரத்நங்களைவர்ஷித்து, கொடுத்தது நினையாதே-தானுபகரித்தத்தை ஸ்மரியாதே, லஜ்ஜித்து - இன்னமுபகரிக்கப்பெற்றிலோமீயென்று லஜ்ஜித்து, வெளுத்தொளித்து - உபகரிக்கப்பெறாதே, போயுடம்புவெளுத்து - தன்னைமறைத்து, கண்டுகந்து - தானுபகரித்த ஸம்ருத்தியைக்கண்டுகந்து, பரஸம்ருத்தியேபேறான - பரஸம்ருத்தியே தங்களுக்குப்பேறாகநினைத்திருக்குமவரான, அன்புகூருமடி யவருறையிலிடாதவர் புயற்கையருள்மாரி குணந்திகழ்கொண்டல் போல்வாரை - முதலாழ்வார்கள் திருமழிசைப்பிரான் திருமங்கைமன்னன் எம்பெருமானார் போல்வாரை மேகமென்னும் - மேகமென்றுசொல்லும்.

பஹே! யஸ்நாதிமாநஸேதீர்த்தேஸ யாதிபரமாங்கதிம்" என்று, மாநஸதீர்த்தவர்ணநத்தில் சொன்ன ஜ்ஞாநமாகிற ஹ்ருதத்தைத்தாங்கள் வர்ஷிக்கிற பகவத்குணஜலங்களாலே நிறைத்து (க) "தீங்கின்றிநாடெல்லாம் திங்கள்மும்மாறிபெய்து" என்றும், (உ) "வாழவுலகினில் பெய்திடாய்" என்றும், (ங) "மாமுத்தநிதிசொரியும்" என்றும், சொல்லுகிறபடியே, அநர்த்தகந்தமின்றிக்கே அகிலருமுஜ்ஜீவிக்கும்படி பகவத்குணரத்நங்களை வர்ஷித்து, ஔதர்யாதிஶயத்தாலே உபகரித்ததை நினையாதே இன்னமுபகரிக்கப்பெற்றிலோம் நாம்செய்தது போருமோவென்றுலஜ்ஜித்து உபகரிக்கப்பெறாதபோது உடம்பு வெளுத்தொளித்து உபகரிக்கும் தசையிலே இத்தலையில் ஸம்ருத்திகண்டுகந்து அந்தபரஸம்ருத்தியே தங்களுக்குப்பேறாக நினைத்திருக்கும், (ச) "ஆங்கரும்பிக்கண்ணீர் சோர்ந்தன்புகூறுமடியவரான" முதலாழ்வார்கள், உருவினவாளுரையிலிடாதே ஆதிமத்யாந்த தேவதாந்தரபரத்வப்ரதிபாதநபூர்வகமாக பகவத்பரத்வத்தை உபபாதிக்கும் திருமழிசைப்பிரான் (ரு) "காரார்புயற்கைக்கலிகன்றி" என்றும், (சு) "அருள்மாறி" என்றும், ஔதார்யத்தில் மேகஸத்ருஶராய்க்கொண்டு க்ருபையைவர்ஷிக்கும் திருமங்கையாழ்வார், (எ) "குணந்திகழ்கொண்டல்" என்று குணோஜ்வலமான மேகமாகச் சொல்லப்பட்டவெம்பெருமானார் போல்வாரை இக்குணஸாம்யத்தையிட்டு மேகமென்றும் சொல்லுமென்னபடி. *

---

(க) திரு - பா. ங. (உ) ஷை - ச. (ங) நாச்சி - அ. உ. (ச) பெ - மொ. உ. கO. ச. (ரு) ஷை - ங. உ. கO. (சு) ஷை - ச. கO. (எ) இராமானுசநூ - சுO.

ரூ—(எ) நம்பிழையும் சிறந்த செல்வமும்

(அ) நம்பிழையும் - நம்மபராதமும், சிறந்தசெல்வமும் - ஸம்ருத்தமான ஸம்பத்தும்,

வ்யா. (எ) பேற்றுக்கடியிவர்களாகையாலே ப்ராப்யத்தில் த்வரைதோன்றப் பலகாலும் தூதுவிடுவர். இனி யிப்படியிவர் தூதுவிடும்படி முகங்காட்டாமைக்கு ஹேதுவையும், தூதுவிடுகைக்குப் பற்றுசையும் அதுக்கு விஷயத்தையும் தூது நாலுக்கும் வகையிட்டருளிச்செய்கிறார்மேல் (நம்பிழையும்) என்றுதுடங்கி, அதாவது:—அஞ்சிறையமட நாரையில் (க) "என்பிழையே நினைந்தருளி" என்று தன்மேன்மையாலே இத்தலையில் தண்மைபாராதே வந்துகலந்தான். கலக்கக்கொள்ள நம்தோஷ தர்ஶநத்தைப்பண்ணிப் பிரிந்து நம்மபராதத்தையே பார்த்துக்ஷமையைமறக்கையாலே இத்தலையைநினையாதிருந்தானத்தனை. அவனுடைய அபராதஸஹத்வத்தை அறிவிக்கவருமென்றறுதியிட்டு (உ) "என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு" என்று, அபராதஸஹத்வம் பற்றுசாக. (ங) கடலாழிநீர்தோற்றியதனுள்ளே கண்வளரும் அடலாழியம்மானைக் கண்டக்காலிதுசொல்லி" என்று, ஜகத்ஸ்ருஷ்ட்யர்த்தமாகயேகார்ணவத்திலேகண்வளர்ந்தருளினவனுக்கு ஸ்ருஷ்டி ப்ரயோஜநம் (ச) "విచిత్రాదేహసంపత్తిరీశ్వరాయనివేదితుమ్" "விசித்ராதேஹஸம்பத்தி ரீஶ்வராய நிவேதிதும்" என்கிறபடியே, திருவடிகளிலே யடிமை கொள்ளுகையன்றோ வென்றித்தைச்சொல்லவேணுமென்று வ்யூஹத்தில் தூதுவிடுகையாலே, நம்பிழையை மறப்பித்து க்ஷமையை யுணர்த்திவிட்ட வ்யூஹம் ப்ரதமதூதுக்குவிஷயம். "வைகல்பூங்கழிவாயில்" (ரு) "சிறந்தசெல்வம் மல்குதிருவண்வண்டூருறையும்" என்று ஆர்த்தரக்ஷணம்பண்ணி வாராநிர்க்கச்செய்தே திருவண்வண்டூரினைஶ்வர்யத்தில் கால் தாழ்ந்து தன்னூர்த்தரக்ஷணதீக்ஷையை மறக்கையாலே, நம்மை நினையாதிருந்தானத்தனை. ஆர்த்தரக்ஷணமொருதலையானால் மற்றொன்றில் கால்தாழுமவனல்லாமையாலே அத்தையறிவிக்கவருமென்று ஆர்த்தரக்ஷணம் பற்றுசாக; (சு) "மாறில் போரரக்கன் மதிள்நீரெழச்செற்றுகந்த வேறுசேவகனூர்க்கென்னையுமுள ளென்மின்கள் என்று, பிராட்டி நிமித்தமாக ராவணனுக்கு வாஸபூமியான லங்கையி லரணைத்துகளாக்கின ஏகவீரனை சக்ரவர்த்தித் திருமகனூர்க்கு ரக்ஷ்யவர்க்கத்திலே நானு மொருத்தியுண்டென்று சொல்லுங்கோளென்று விபவத்திலே தூதுவிடுகையாலே, சிறந்த செல்வம் மறப்பித்ததீக்ஷையையுணர்த்திவிட்ட விபவம் இரண்டாந் தூதுக்கு விஷயம். "பொன்னுலகாளியில்" (எ) "முன்னுலகங்களெல்லாம்படைத்த முகில்வண்ண

(க) தி-வா. க. ச. எ. (உ) ஷெ. (ங) (ச) (ரு) தி-வா. ரூ. க. ங. (சு) ஷெ- க0. (எ) ஷெ-அ. க.

ரூ. படைத்தபரப்புந் தமரோட்டை வாஸமு மறப்பித்த க்ஷமாதிக்ஷாஸாரஸ்ய ஸௌந்தர்யங்களையுணர்த்தும் வ்யூஹ விபவ பரத்வத்வயார்ச்சைகள் தூது நாலுக்கும் விஷயம்.

படைத்த பரப்பும் தமரோட்டைவாஸமும் மறப்பித்த - ஜகத் பரப்பை ரக்ஷிக்கிறபராக்கும் பாகவதசேர்த்தியிலினிமையும் மறப்பித்த, க்ஷமாதிக்ஷாஸாரஸ்ய ஸௌந்தர்யங்களை யுணர்த்தும் - அபராத ஸஹத்வத்தையும் ரக்ஷண தீக்ஷையையும் ஐகரஸ்யத்தையும் விக்ரஹ ஸௌந்தர்யத்தையுமுணர்த்தும், வ்யூஹ விபவ பரத்வத் வயார்ச்சைகள் - இவைகள், தூது நாலுக்கும் விஷயம்-அஞ்சிறை, வைகல், பொன்னுலகு, எங்கானல்களில், நாலு தூதுக்கும் விஷயம்.

அதாவது "ஒண்ணவினன்நலங்கொண்டபிரான் தனக்கு" என்று, ஸ்ருஷ்டமானஜகத்பரப்பை ரக்ஷிக்கிற பராக்காலே ஆஸ்ரிதரோடு தனக்குண்டான, ஐகரஸ்யத்தைமறந்து அதுகொண்டு நம்மைநினையாதிருந்தானத்தனை. (க) "தன்மன்னுநீள்கழல் மேல் தண்டுழாய் நமக்கின்றிநல்கான்" என்று, ஆஸ்ரிதரோடேகரஸனுகையாலே யத்தையறிவிக்கவருமென்று, ஐகரஸ்யம்பற்றுசாக(உ)"வானவர்கோனைக்கண்டு"(௩)"யாமிதுவோ தக்கவாறென்ன வேண்டும்" என்று, பரத்வத்திலும் (ச) "எங்குச் சென்றாகிலுங்கண்டிதுவோ தக்கவாறென்மின்" என்று, அதீந்த்ரியதயாபரத்வஸத்ருசமான அந்தர்யாமித்வத்திலும் தூதுவிடுகையாலே படைத்த பரப்பும்மறப்பித்த ஸாரஸ்யத்தையுணர்த்திவிட்ட பரத்வத்வயம் மூன்றாந்தூதுக்கு விஷயம். "எங்கானலில்" (ரு) "தமரோடங்குறைவார்க்கு" என்று, தம்மையுகந்தபாகவதர்களோட்டைச்சேர்த்தியில்இனிமையாலே பிரிந்தார்க்கு ப்ராணன்கொண்டிருக்க வொண்ணாதபடியான தம் ஸௌந்தர்யத்தை மறந்ததுகொண்டு பிரிந்திட்டுவைத்துப்போய் நம்மை நினையாதிருந்தானத்தனை, இவ்வடிவழகைப் பிரிந்தார் தரிப்பரோவென்று அவ்வழகையறிவித்துவிட்டால் வாராதிருனென்று (சு) "செக்கமலத்தலர்போலுங் கண் கை கால் செங்கனிவாயக் கமலத்திலைபோலும் திருமேனியடிகளுக்குத்தக்கிலமே கேளீர்கள்" என்றும், (எ) "பூந்துழாய் முடியார்க்கு" என்று துடங்கி, தாம்தம்மைக்கொண்டகலுதல் தகவன்று, என்றும், ஸௌந்தர்யம்பற்றாசாக திருமூழிக்களத்தார்க்கு, என்று அர்ச்சாவதாரத்திலே தூதுவிடுகையாலே, தமரோட்டைவாஸம் மறப்பித்த ஸௌந்தர்யத்தை யுணர்த்திவிட்ட அர்ச்சை நாலாந்தூதுக்கு விஷயமென்கை. *

(க) தி-வா. சு. அ. சு. (உ) ஷை. - அ. (௩) சு. அ. ச. (ச) ஷை. - ரு. (ரு) ஷை - கூ. எ. உ. (சு) ஷை - ௩. (எ) ஷை - அ.

சூ—(அ) பகலோலக்க மிருந்து கருப்புடுத்துச் சோதித்துக் கார்யம் மந்த்ரித்து வேட்டையாடி யாராமங்களிலே விளையாடும்

(அ) பகல் - பகலிலே, ஓலக்கமிருந்து - கோஷ்டியாகவிருந்து, கருப்புடுத்து - கருத்தவஸ்திரம் தரித்து, ஶோதித்து - நகரசோதநம் பண்ணுகையும், கார்யம்மந்த்ரித்து - ராஜகாரியம் விசாரிக்கையும், வேட்டையாடி - வேட்டையாடுகையும், ஆராமங்களிலே - பூந்தோப்புகளிலே, விளையாடும் - விளையாடுகையுமாகிற,

வ்யா. (அ) இப்படி பலவிஷயங்களிலும் தூதுவிட்டால் ப்ராப்ய வஸ்துவைக்யும் குலையாதோ வென்கிற ஶங்கையிலே பரத்வாதிகளில் ஸ்தலபேதமொழிய வஸ்துபேதமில்லையென்று மத்தை ஸ்த்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார். (பகலோலக்கம்) என்றுதுடங்கி, அதாவது:— ஸகலபரிஜநஸேவ்யனுய்க்கொண்டு தன்வீறு தோற்றப் பகலோலக்கமிருக்கையும், ராஜ்யத்திலுள்ளார் தோஷகுணங்களறிகைக்காக ராத்ரியிலே பிறரறியாதபடி கருப்புடுத்து நகரஶோதநம் பண்ணுகையும், ராஜ்யத்தில்சிக்ஷை ரக்ஷைகளுக்காகக் கார்யவிசாரம் செய்கையும் பின்பு துஷ்டஸத்வநிரஸநார்த்தமாக வேட்டையாடுகையும், அந்தஶ்ரமம்தீர பூம் தோப்புகளிலே அபிமத விஷயங்களோடே விளையாடுகிற ராஜநீதியானது (க) "பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகு மங்காதும் சோராமே யாள்கின்ற வெம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச்செல்வனர்" என்றும், (உ) "அருளார் திருச்சக்கரத்தால கல்விசும்பும் நிலனுமிருளார்வினைகெடச் செங்கோல்நடாவுதிர்" என்றும், சொல்லுகிறபடியே, உபய விபூதியிலும் யேகதேஶமும் ஶேஷியாதபடி தன்னுடைய் திவ்யாஜ்ஞையை நடத்துமவனுய் (ங) "பாரளந்தபேரரசே! விசும்பரசே! யெம்மைநீத்த வஞ்சத்தோரரசே!" என்றும்சொல்லப்பட்ட, ஸௌலப்யபரத்வ ப்ரணயித்வங்களாலேவந்த மூன்றுமுடிக்குரியவனாவரசான ஸர்வேஶ்வரனுக்கும் (ச) "விண்மீதிருப்பாய்" என்று, (ரு) "వైకుంఠేతుపరేలోకే శ్రియాసార్ధంజగత్పతిః । ఆస్తేవిష్ణురచింత్యాత్మాభక్తైర్భాగవతైస్సహ" "வைகுண்டேதுபரேலோகே ஶ்ரீயாஸார்த்தம்ஜகத்பதி꞉ । ஆஸ்தேவிஷ்ணுசிந்த்யாத்மாபக்தைர்ப்பாக வதைஸ்ஸஹ" என்கிறபடியே, "பகற்கண்டேன்" என்கிற, ஒருபகலானபரமபதத்திலே "ஒண்டொடியாள் திருமகளும்தானுமான நித்யமுக்தர்ஸேவிக்க ஓலக்கமிருக்கையும் "இவற்றுளெங்கும் மறைந்துரைவாய்" என்றும், (சு) "యమాత్మానవేద" "யமாத்மாநவேத" என்கிறபடியே, வ்யாப்யபதார்த்தங்களுக்கு தெரியாதபடி அந்தர்யாமியாயுள்ளு வாருள்ளத்தெல்லா மறிகையும், (எ) "கடல்சேர்ப்பாய்" என்று, பாற்கடல்யோக நித்திரைசெய்து

(க) நாச்சி - தி. கசு. ங. (உ) தி - வி. ஙங. (ங) ஷை - அப. (ச) தி - வா. சு. க. (ரு) (சு) (எ) தி-வா. சு. க. ரு.

மூ. ராஜநீதியாதுஞ் சோராமல் செங்கோல் நடாவுகிற பார
ளந்தவென்னும் மூன்று முடிக்குரிய விளவரசுக்கு விண்
மீதென்கிற வைந்திலுங்காணலாம்.

மூ—(கூ) தமருகந்தவடியோ முக்கேயென்னும்

ராஜநீதி - ராஜநீதியானது, யாதும் - ஏகதேசமும், சோராமல் - சேஷியாமல், செங்கோல் - தன்னுஜ்ஞையை, நடாவுகிற - நடத்துமவனாய், பாரளந்தவென்றும் - பாரளந்தவித்யாதியில் சொல்லப்பட்ட, மூன்று - மூன்றுவகைப்பட்ட, முடிக்குரிய - பட்டத்திற்குத்தக்க, இளவரசுக்கு - இளவரசான ஸர்வேச்வரனுக்கும், விண்மீதென்கிற - விண்மீதென்கிறவிடத்தில் சொல்லப்பட்ட, ஐந்திலும் - பரத்வாதிகளைந்திலும், காணலாம் - பார்க்கலாம்.

(அ) தமருகந்தவடியோ முக்கேயென்னும் - தமருகந்த வென்கிற பாட்டிலும் அடியோமுக்கே யெம்பெருமானல்லீரோ வென்கிறபாட்டிலும் சொல்லப்பட்ட,

சேதநரக்ஷணோபாயங்களைச் சிந்திக்கையும், அநந்தரம், (க) "மண்மீதுழல்வாய்" என்று, ரக்ஷணார்த்தமாக வந்தவதரித்து "களிரும்புள்ளூ முடன்மடிய வேட்டையாடிவருவான்" என்கிறபடியே, ஆச்ரிதவிரோதிகளான துஷ்டஸத்வநிரஸநமாகிற வேட்டையாடுகையும் (உ) "மலைமேல் நிற்பாய்" என்று, விரோதிநிரஸநப்ரமமாறும்படி நிரதிசயபோக்யங்களான,ஆராமஞ்சூழ்ந்தகோயில் திருமலைமுதலான தேசங்களிலே ரஸோத்தரமாக வஸிக்கையுமாகிற விவ்வைந்திலும்காணலாமென்கை. இத்தால் பரத்வாதிகளில் ஸ்தலபேதமொழிய வஸ்துபேதமில்லாமை காட்டப்பட்டது. *

வ்யா (கூ) ஆனாலைந்திலு மொத்திருக்கையன்றிக்கே அவதாரத்திலேயிவர் மண்டியிருப்பானென்னென்றுமாகாங்க்ஷயாலே இதின் குணபூர்த்தியையருளிச்செய்கிறார். (தமருகந்த) என்றுதுடங்கி அதாவது:— (ங) "தமருகந்த தெவ்வுருவமவ்வுருந்தானே தமருகந்ததெப்பேர் மற்றப்பேர்" என்று, ஆச்ரிதருகந்தத்ரவ்யங்களே திருமேனியாகவும், அவர்களுகந்த திருநாமங்களே தமக்குத் திருநாமமாகவும் கொண்டிருக்குமென்றும், (ச) "அடியோமுக்கே யெம்பெருமானல்லீரோ நீரிந்தளூரீரே"என்று, தேசகாலகரண விப்ரக்ருஷ்டதைகளாலே பரத்வாதிகளிலணுகைக்காளன்றிக்கே அநந்யகதிகளாயிருக்கிற வெங்களுக்குருசிபிறந்தபோதே நினைத்தவகைகளெல்லா மநுபவிப்பிக்கைக்காகவன்றோ திருவிந்தளூரிலேவந்து நிற்கிறதென்றும் சொல்லப்பட்ட

(க) தி - வா. ருு.கூ. ரு. (உ) ஷி. (ங) தி - அ. க. சச. (ச) பெ - மொ. ச. கூ. ரு.

மூ. பின்னானார்வணங்கு மிடத்திலே யெல்லாம் பூர்ணம்.

மூ—(கo) வன்பெருவானக முதலுய்யவினிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன் திருப்பதி

பின்னானார் - அவதாரத்துக்குப் பிற்பட்டவரும், வணங்குமிடத்திலே - வணங்கும்படியான அர்ச்சாவதாரத்திலே, எல்லாம்பூர்ணம்-அநுபாவ்யமான குணங்க ளெல்லாம் ஸம்பூர்ணம்.

(அ) வன்பெருவானகமுதலுய்ய - வன்பெருவானக மென்கிறபாட்டில் சொல்லப்பட்டவை யுஜ்ஜீவிக்கும்படியாக, இனிதாக-போக்யமாக, திருக்கண்கள்வளர்கின்ற-கண்வளருகிற, திருவாளன்- ஸ்ரீயஃபதியினுடைய, திருப்பதி - கோயில்,

(க) "பின்னானார்வணங்கும்சோதி" என்று, அவதாரங்களுக்குப் பிற்பாடரானவர்களுக்கு அநுபாவ்யமான அர்ச்சாவதாரத்திலே. (உ) "సర్వం సహే" "ஸர்வம்ஸஹே" என்கையாலே பரத்வாதிகளிலநுபாவ்யமான குணங்களெல்லாம் பூர்ணமென்கை. ஆக இப்படி, ஆஶ்ரிதாதீநருபஸ்தித்யாதிகமாய், (ந) "அடியோமுக்கே" என்றும்படி, கரைவிழுந்தவிடமான அர்ச்சாவதாரத்திலே முற்பட்டவைந்திலுள்ளவையுங் காணலாமாகையாலே. "தேவபிரானறியும்" என்னும்படி மண்டியிருப்பரென்று கருத்து. *

வ்யா. (கo) இப்படி யர்ச்சாவதாரத்திலே யெல்லாம் பூர்ணமாகில்? எல்லாத் திருப்பதிகளிலு மெல்லாகுணங்களு மொக்கப்ரகாசிக்குமோவென்னு மாகாங்க்ஷையிலே பரத்வாதிகளுக்கஸாதாரணமாயும் ஸாதாரணமாயுமிருக்கும் குணங்களிலோ ரோகுணமோரோதிருப்பதியிலே ப்ராதாந்யேந பிரகாசிக்கும்படியை, இவ்வாழ்வாரருளிச்செய்த திருப்பதிகள்தோறும் தர்சிப்பிக்கிறார்மேல். அதில் ப்ரதமத்திலே, பரத்வாதிகளுக்கஸாதாரணமான ஓரோகுணம் ப்ராதாந்யேந ப்ரகாசிக்கிற திருப்பதிகளை அருளச்செய்யக்கோலி அகிலதிவ்யதேசப்ரதாநமான கோயிலில் ப்ரகாசிக்கிறகுணத்தை ஆதியிலே அருளிச்செய்கிறார். (வன்பெருவானகம்) என்று துடங்கி அதாவது:— (ச) "வன்பெருவானக முய்யவமரருய்ய மண்ணுய்யமண்ணுலகில் மனிசருய்ய" என்று, முதல்ப்ரும்ஹலோகத்திலெழுந்தருளி பின்பு பூலோகத்திலெழுந்தருளின கட்டளையிலே, நைமித்திகப்ரளயத்துக்கிளையாதப் ப்ரும்ஹலோகம் முதலாக விவ்வருகுண்டான உபரிதனலோகங்களும், அங்குள்ள ப்ரும்ஹாதிகளும் பூமியும் இங்குள்ள மநுஷ்யரும் உஜ்ஜீவிக்கும்படியாக (ரு) "திருவாளனினிதாகத் திருக்கண் வளர்கின்ற திருவரங்கம்" என்றும், (சு) "திருவாளன்திருப்பதி"

(க) திருநெ-ம். கo. (உ) (ந) பெ-மொ. ச. கூ. (ரு). (ச) பெருமாள் - தி. க. சo. (ரு) பெரியா-தி. ச. கூ. கo. (சு) ஷெ. கக.

மூ. வடிவுடை கடலிடங்கட்கிலீயென்று மவற்றிலிவள்திறத் தென்கொலோ வென்பிக்கிறவ்யூஹஸௌஹார்த்த ப்ரதாநம்.

மூ—(கக) மண்ணோர்விண்ணோர் வெற்பில்போகின்ற வேழுலக்குயிர்

வடிவுடை - வடிவுடையென்கிறபாட்டிலும், கடலிடம் - கடலிடங்கொண்ட வென்கிறபாட்டிலும், கட்கிலீயென்னுமவற்றிலும் - கட்கிலீயென்கிற பாட்டிலும், தோன்றும்பரத்வாதிளில், இவள் திறத்து-இவள்திறத்தேன்சிந்திந்தாயென்றும், என்கொலோ - என்கொலோ முடிகின்றதிவட்கென்றும், என்பிக்கிற - என்றுசொல்லப்பண்ணுகிற, வ்யூஹ - வ்யூஹத்தினுடைய, ஸௌஹார்த்த - ஸௌஹார்த்தத்தை, ப்ரதாநம்:— ப்ரதானமாகவுடையது.

(அ) மண்ணோர் - பூமியிலுள்ளார்க்கும், விண்ணோர் - பரமபதவாஸிகளுக்கும் பொதுவான, வெற்பில் - திருமலையில், போகின்ற - போகின்றவென்கிற பாட்டின்படியே யெல்லாக்காலத்திலும், ஏழுலகுக்கு - ஸப்தலோகங்களுக்கு, உயிர் - உயிராயிருக்குமவனுடைய,

என்றும், சொல்லுகிறபடியே, திருவுள்ளமுகந்து கண்வளர்ந்தருளுகிற ஸ்ரீயஃ பதியினுடைய திருப்பதிகளானகோயில், (க) "வடிவுடைவானோர்தலைவனே" என்றும், (உ) "கடலிடங்கொண்ட கடல்வண்ணா" என்றும், (ங) "கட்கிலீ" என்றும், (ச) "காகுத்தா" என்றும், சொல்லுகிறபடி தோன்றும் பரத்வாதிகளில் (ரு) "இவள் திறத்தென்சிந்தித்தாய்" என்றும், (சா) "என்கொலோமுடிகின்ற திவட்கே" என்றும், இவளிடையாட்டத்தில் தேவரீர்சிந்தித்ததென்? இவள்காரியமென்னா முடியக்கடவதென்று சொல்லும்படி பண்ணுகிற, பாற்கடல் யோக நித்திரைசிந்தைசெய்யும் வ்யூஹகுணமான ஸௌஹார்ந்தத்தை ப்ரதாநமாகவுடைத்தாயிருக்குமென்கை. இஸ்தலத்திலே, வ்யூஹஸௌஹார்த்தம் ப்ராதாந்யேநப்ரகாசிக்கும் மென்றபடி. *

வ்யா. (கக) இனிகோயிலுக்கநந்தரம், சொல்லப்படுவதான திருமலையிலே ப்ரகாசிக்கிற குணத்தையருளிச்செய்கிறார். (மண்ணோர்) என்றுதுடங்கி, அதாவது:— (எ) "கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு" என்றும், "தண்திருவேங்கடமே வானோர்க்கும் மண்ணோர்க்கும்" வைப்பு என்றும், உபயவிபூதியிலுள்ளார்க்கும் சேமித்துவைத்த நிதிபோலே, ப்ராப்யமாயிருக்கிற திருமலையில் "போகின்றகாலங்கள் போயகாலங்கள் போகுகாலங்கள் தாய்தந்தையுயிராகின்றாய்"என்றும், (அ) "கண்ணாயேழுலகுக்குமுயிராய் வெங்கார்வண்ணனே" என்றும் சொல்லுகிறபடியே, ஸர்வகாலமும், ஸர்வாத்மாத்மாக்கு

(க) திவா. எ. உ. க0. (உ) ஷ - எ. (ங) ஷ. ங. (ச) ஷ (ரு) ஷ. ச, (சா) ஷ. உ. (எ) ஷ. க. அ. ங. (அ) பெ-மொ. க. கூ. க0.

மூ. பாசம்வைத்த நிகரில் வாத்ஸல்யமுஜ்ஜ்வலம்.

மூ—(கஉ) உபயப்ரதாந ப்ரணவமானவுரை கோயிலில்

பாசம்வைத்த - என்பக்கலிலே ஸங்கத்தைப்பண்ணினுனென்கிற, நிகரில்- ஒப்பில்லாத, வாத்ஸல்யம் - வாத்ஸல்யம், உஜ்வலம் - ப்ரகாசிக்கும்.

(அ) உபயப்ரதான - ஜீவேஶ்வரர்களிருவருடையவும் ப்ராதாந்யம் தோற்றுவிக்கிற - ப்ரணவமான-ப்ரணவம்போலேயிருக்கிற, உரை கோயிலில் - வர்த்திக்கிற திருநகரியிலே,

னுக்கும் ஸர்வவிதபந்துவாய்க்கொண்டு ஸர்வர்க்குமாத்மாவாயிருக்கிற வந்தர்யாமியுடைய குணமாயிருப்பதாய், (க) "என்கண்பாசம்வைத்த" (உ) "நிகரில்புகழாய்" என்றும், மிகவும் தண்ணியனுயிருக்கிற வென்பக்கலிலே ஸங்கத்தைப்பண்ணினுனென்றும், ஒப்பில்லாப் புகழையுடையவனே! என்றும் சொல்லப்பட்டவாத்ஸல்யம் (௩) "பரம்சுடர்ச்சோதி" என்று,வடிவிலேதொடைகொள்ளலாம்படி உஜ்வலமாயிருக்குமென்கை. பாசம்வைத்த நிகரில்வாத்ஸல்யமென்கையாலே, "ஒழிவில்காலம், உலகமுண்டபெருவாயன்" இரண்டையும் சேர்த்துப்பிடித்தருளிச் செய்தமைதோற்றுகிறது. கோயிலுக்கநந்தரம் திருமலையைச் சொல்லுகைதேட்டமாகில், இரண்டு திருமலையுமொவ்வாதோ? தெற்குத்திருமலைவிஷயமான 'கிளரொளியிளமை' கீழேகிடக்க, ஒழிவில்காலத்தில் சொன்னவடக்கில் திருமலையை அருளிச்செய்வானென்னென்னில்? பரத்வாதிகளுக்கஸாதாரணகுணப்ரகாசகமான ஸ்தலங்களை யருளிச்செய்கிற ப்ரகரணமாகையாலே, தெற்குத்திருமலையில் ப்ரகாசிக்கிற குணத்துக்குச்சேர்த்தியில்லாததுகொண்டு கிளரொளியிளமையை, செஞ்சொற்கவிகளோடே, சேர்த்தருளிச் செய்வதாக விட்டுவைத்து இதுமுதலாக வருளிச்செய்தாரித்தனை. *

வ்யா. (கஉ) இனி, ஒழிவில் காலத்துக்குப் பின்பு திருப்பதி விஷயமான திருவாய்மொழி 'ஒன்றும்தேவாகையாலே, திருநகரியில் ப்ரகாசிக்கிற குணத்தையருளிச்செய்கிறுர். (உபயேத்யாதியால்) அதாவது:— (௪) "𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂𑌯𑍁𑌞𑍍𑌜𑍀𑌤" "ஓமித்யாத்மாநம்யுஞ்ஜீத" என்றும், (௫) "𑌓𑌙𑍍𑌕𑌾𑌰𑍋𑌭𑌗𑌵𑌾𑌨𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃" "ஓங்காரோபகவாந் விஷ்ணுஃ" என்றும் சொல்லுகிறபடியே, ஶப்தார்த்தங்களினுடைய ப்ராதாந்யத்தாலே ஜீவேஶ்வரர்களிருவருக்கும் வாசகமாய்க்கொண்டு உபயருடையவும் ப்ராதாந்யம் தோற்றுவிக்கிற ப்ரணவம்போலே, ஆழ்வாருடையவும், பொலிந்துநின்ற பிரானுடையவும் ஆஜ்ஞை இருப்புரிந்துநடக்கையாலே உபயருடையவும் ப்ராதாந்யம் தோற்றும்படியிருப்பதாய் (௬) "அவன் மேவியுரைகோயில்" என்று, பரமபதத்தில் ஸம்ஸாரிகளிழவை நினைத்து

(க) தி-வா. ௩. ௩. ௪. (உ) ஷை. ௬. ௧௦. ௧௦. (௩) ஷை. ௩. ௩. ௪. (௪) (௫) (௬) தி-வா. ௪. ௧௦. உ.

மூ. எத்தேவுமென்னும் பரேஶத்வம் பொலியும்.

மூ—(௧௩) வைஷ்ணவ வாமநத்தில் நிறைந்த நீலமேனியின் ருசிஜநக

எத்தேவுமென்னும் - எத்தேவுமெவ்வுலகங்களுமென்கிறபாட்டில் சொல்லப்பட்ட, பரேஶத்வம் - பரத்வமும் ஈஶத்வமும், பொலியும் - ஸம்ருத்தமாயிருக்கும்.

(அ) வைஷ்ணவவாமநத்தில் - வைஷ்ணவர்களையுடைத்தாய் வாமநனுடைய க்ஷேத்ரமான திருக்குருங்குடியில், நிறைந்த - பூர்ணமான, நீலமேனியின் - கறுத்த திருமேனியுடைய, ருசிஜநக - ருசியையுண்டாக்குகிற,

உள்வெதுப் போடிருக்குமாப்போலன்றிக்கே அவர்களுக்கணித்தாக வந்து நிற்கப்பெறுகையாலே உள்வெதுப்பற்று வர்த்திக்கிற ஸ்தலமான திருநகரியில், (க) "எத்தேவு மெவ்வுலகங்களும் மற்றும் தன்பால் மறு வில் மூர்த்தியோடொற் றித்தனையும் நின்றவண்ணம் நிற்கவே" (உ) "திருக்குருகூரதனுள் குரியமாணுருவாகிய நீள்குடக்கூத்தன்" என்று, ஸ்வவ்ய திரிக்தஸமஸ்தவஸ்துக்களும் ஸ்வாஸாதாரண விக்ரஹந்தோபாதி தனக்கு ப்ரகாரமாம்படியிருக்கிற ஐஶ்வரியத்தோடேகூட திருக்குருகூரிலேஸ்தலபனாய் வந்து நின்றானென்று சொல்லப்பட்ட (௩) "திருக்குறுகூரதனுட்பரன்" (௪) "திருக்குறுகூரதனுளீசன்" என்று ஸ்தலபனான நிலையிலே ப்ரகாசிக்கிற பரத்வலக்ஷணமான ஈஶ்வரத்வம் பொலிந்த பிரானென்கையாலே அபிவ்ருத்தமாகா நிற்குமென்கை.

வ்யா. (௧௩) இதுக்குப்பின்பு திருப்பதி விஷயமான திருவாய்மொழி, எங்ஙனேயோ, வாகையாலே, திருக்குறுங்குடியில் ப்ரகாசிக்கிறகுணத்தை அநந்தரமருளிச்செய்கிறார். (வைஷ்ணவ) இத்யாதியால், திருக்குறுங்குடியிலென்னாதே "வைஷ்ணவவாமநத்தில் என்றது. ஸாபிப்ராயம். அதாவது:— வாமநாவதாரத்தில் தன்னுடைமை பெறுகைக்கர்த்தியானாப்போலே, அர்த்தியாய் நின்றும், பாஷ்யகாரர் பக்கலிலே வேதாந்தார்த்தம் கேட்டு சிஷ்யனாய், "நாமும் நம்மிராமானுசனையுடையோம்" என்கையாலே, ஸ்ரீவைஷ்ணவ நம்பியென்று திருநாமமாய், வாமனாவதாராம்ஶமாகபுராணஸித்தராயிருக்கிற நம்பியுடைய திருப்பதியென்கை. அன்றிக்கே (௫) "அறியக்கற்றுவல்லார் வைட்டணவர்" என்று, இந்நிர்த்தேஶவிஷயமான திருவாய்மொழியைக்கற்றவர்கள் வைஷ்ணவராவரென்கையாலே, வைஷ்ணவர்களுடைத்தாய், வாமநக்ஷேத்ரமாயிருக்கிறதேஶத்திலென்னவுமாம். வாமநாவ

(க) தி-வா. ௪,௧0. ௧0. (உ) ஷை. ௧0. (௩) ஷை. ௩. (௪) ஷை. ௪. (௫) ஷை. ௫. ௫. ௧௧. (௬)

மூ. விபவலாவண்யம் பூர்ணம்.

மூ—(கச) ருசிவிவசர்க்கு பாதமேஶரணுக்கு மௌதார்யம் வானமாமலையிலே கொழுந்துவிடும்.

விபவ - விபவத்தில் சொல்லப்பட்ட, லாவண்யம் - ஸமுதாயசோபையானது, பூர்ணம் - பூர்ணமாயிருக்கும்,

(அ) ருசிவிவஶர்க்கு - ருசியாலே பரவஶரானவர்க்கு, பாதமே - தன்திருவடிகளையே, ஶரணுக்கும் - ஶரணுகக்கொடுக்கும், ஔதார்யம்- ஔதார்யகுணம், வானமாமலையிலே - சிரீவரமங்கலநகரிலெழுந்தருளியிருக்கிற வெம்பெருமான் பக்கலிலே, கொழுந்துவிடும் - உத்தரோத்தரமபிவ்ருத்தமாம்.

தாரத்துக்கு ப்ரயோஜநம் (விபவலாவண்யம் பூர்ணம்) என்கிறதுக்குடலாக விபவாந்வயத்தையுணர்த்துகையும், "குறியவன்குடி குறுங்குடி என்றுமர்த்தத்தைத் தெரிவிக்கையும். ஆகவிப்படி யிருந்துள்ள திருக்குறுங்குடியில் (க) நிறைந்தசோதி வெள்ளம்சூழ்ந்த நீண்டபொன்மேனி யொடும் நிறைந்தென்னுள்ளே நின்றொழிந்தான்" என்றும், (உ) நீலமேனியும் நான்குதோளு மென்னெஞ்சம் நிறைந்தனவே" என்றும் சொல்லுகிறபடியே, இவர் திருவுள்ளத்திலே வேறொன்றுக்கிட மறும்படி ப்ரகாசிக்கிற காளமேக நிபஶ்யாமமான விக்ரஹத்தினுடைய (ந) செல்கின்றதென்னெஞ்சம்" என்னும்படி, மேன்மேலுமனுபவ ருசிஜனகமாய் (ச) "[Grantha]" "ரூபவாந்ஸு- பகஶ்ரீமாந் (ரு) "[Grantha]" "ரூபஸம் ஹநநம் லக்ஷ்மீம்" என்று விபவத்தில் ப்ரகாசிக்குமதாகச்சொன்ன ஸமுதாய ஶோபயானலாவண்யம், (சு) "நிறைந்த சோதிவெள்ளம்சூழ்ந்த" என்கையாலே, பூர்ணமாயிருக்குமென்கை. *

வ்யா. (கச) இப்படி பரத்வாதிகளுக்க ஸாதாரணமான வோரோ குணங்கள் ப்ராதாந்யேந ப்ரகாசிக்கும் குணங்களையருளிச்செய்த வநந்தரம் மற்றுமுண்டான குணங்களிலோரொன்று ப்ராதாந்யேந ப்ரகாசிக்கும் ஸ்தலங்களை சிரீவரமங்கைமுதலாக திருப்பேரெல்லையாக திருவாய்மொழியடைவிலே யருளிச்செய்கிறார்மேல் (ருசிவிவசர்க்கித்யாதி) அதாவது:— கீழ்ச்சொன்ன லாவண்யத்தாலே ஒருவராலும் நிவர்த்திப்பிக்கவொண்ணுதபடி பிறந்தருசியாலே பரவஶராய் அநந்யகதிகளானவர்களுக்கு (எ) "ஆறெனக்கு நின்பாதமேசரணுகத்தந்தொழிந்தாய்" என்னும்படி, திருவடிகளே உபாயமாகக்கொடுக்கும் "காரார்முகில் வண்ணன்" என்கிற, ஔதார்யகுணம் (அ) "சிரீவரமங்கலத்தவர் கைதொழவுறை வானமாமலை" என்று, சிரீவரமங்கையிலெழுந்தருளியிக்கிற வானமாமலை பக்கலிலே (கூ) "வந்தருளி என் நெஞ்சிடங்கொண்டவானவர்கொழுந்தே" என்கிறபடியே, தானே வந்திடங்கொண்டு தன்னையுபகரிக்கும்படி கொழுந்துவிட்டு வளருமென்கை. *

(க) தி-வா. ரு. ரு. எ. (உ) ஷை. சு. (ந) ஷை. க. (ச) (ரு) (சு) தி- வா. ரு. ரு. எ. (எ) ஷை. எ. கo. (அ) ஷை. சு. (கூ) எ.

மூ—(கரு) களைகணற்றாரையுருக்கும் மாதுர்யங்குடமூக்கிலேப்ரவ ஹிக்கும்.

மூ—(கசு) மெலிவிலும் சேமங்கொள்விக்கும் க்ருபைதென்னகரிலே நித்யம்,

மூ—(கஎ) வ்யவஸாயஜ்ஞர்ரக்ஷணஸ்தைர்யம்

(அ) களைகணற்றாரை - ரக்ஷகாந்தர ப்ரதிபத்தி நிவ்ருத்திபிறந்தாரை, உருக்கும் - சிதிலராம்படிபண்ணுகிற, மாதுர்யம் - மாதுர்யகுணம், குடமூக்கிலே - கும்பகோணத்திலே, ப்ரவஹிக்கும் - மேல்மேலனப்பெருகும்.

(அ) மெலிவிலும் - நாள்தோறும் மெலியுமளவிலும், சேமங்கொள்விக்கும் - அவனேரக்ஷகனென்றத்ய வஸிக்கும்படிபண்ணும், க்ருபை - க்ருபாகுணம், தென்னகரிலே - திருவல்லவாழாகிற அழகிய நகரத்திலே, நித்யம் - நித்யமாயிருக்கும்.

(அ) வ்யவஸாயஜ்ஞர் - ஆர்த்தரக்ஷணத்தில் தன்னுடைய வத்யவஸாயத்தையதாவாக வறிந்திருக்குமவர்களுடைய, ரக்ஷண - ரக்ஷணத்தில், ஸ்தைர்யம் - அநுகூலராலும் சலிப்பிக்க வொண்ணாதபடியான ஸ்திரத்வகுணம்,

வ்யா. (கரு) (களைகணற்றாரை) இத்யாதி அதாவது:— (க) "களைவாய் துன்பங்களையா தொழிவாய்களைகண்மற்றிலேன்" என்று, ரக்ஷகாந்தர ப்ரதிபத்தி நிவ்ருத்திபிறந்தாரை (உ) "நீராயலைந்துகரையவுருக்குகின்ற" என்று, சிதிலராம்படி பண்ணுகிற ஆராவமுதான மாதுர்யம் (குடமூக்கு) என்கிற, கும்பகோணத்திலே, மேன்மேலுமாராமல் புஜிக்கும்படி பெருகாநிற்குமென்கை. *

வ்யா. (கசு) (மெலிவிலுமித்யாதி) அதாவது:— கீழ்ச்சொன்ன நிரதிசய போக்யமான விஷயத்தை சீக்ரமாகக்கிட்டியநுபவிக்கப் பெறாமையாலே (ஙு) "வைகலும் வினையேன்மெலிய" என்று, நாள்தோறும் மெலியுமளவிலும், (ச) "அடிமேல் சேமங்கொள்தென்குருகூர்ச்சடகோபன்" என்று, அவனே ரக்ஷகனென்றத்யவஸித்திருக்கும்படி பண்ணும் (ரு) "பெருமானது தொல்லருளே" என்கிறக்ருபை, திருவல்லவாழ் சேமங்கொள்தென்னகரிலே, தொன்மைபழமையாகையாலே நித்யமாயிருக்குமென்கை. *

வ்யா. (கஎ) (வ்யவஸாயஜ்ஞரித்யாதி) அதாவது:— (சு) "ராமஸ்ய வ்யவஸாயஜ்ஞா" "ராமஸ்யவ்யவஸாயஜ்ஞா" என்றுசொல்லப்பட்ட பிராட்டியைப்போலே (எ) "ஏறுசேவகனார்க்கென்னையுமுளளென்

(க) தி-வா. ரு. அ. அ. (உ) ஷை. க. (ஙு) ஷை. கூ. க. (ச) ஷை. கக. (ரு) ஷை. கூ. (சு) ஸ்ரீ-ரா-ஸு. சகூ. ஙு. (எ) தி-வா. கூ. க. ௪0.

மூ. பம்போத்தரதேஶஸ்தம்.

மூ—(கஅ) விளம்பவிரோத மழிக்கும் விருத்தகடநாஸாமர்த்யம் நன்னகரிலே விஸ்தீர்ணம்.

மூ—(கசு) கடித கடகவிகடநா

பம்போத்தரதே ஶஸ்தம் - பம்பையினுடைய வடகரையான திருவண்வண்டூரிலே நிலைபெற்றிருக்குமென்கை.

(அ) விளம்பவிரோதம் - விளம்பிக்கையால் வந்தப்ரணயரோஷத்தை, அழிக்கும் - அழித்துப்பொகட்ட, விருத்தகடநாஸாமர்த்யம் - விருத்தங்களை கடிப்பிக்கவல்ல ஸாமர்த்யம், நன்நகரிலே - நல்லநகரமான திருவிண்ணகரிலே, விஸ்தீர்ணம் - பரந்திருக்கும்.

(அ) கடித - கடிதராணுர்க்கும், கடக-கடகராணுற்கும், விகடநா - விகடனையைப்பண்ணுவதான,

மின்கள்'' என்று, ஆர்த்தரக்ஷணத்தில் தன்னுடைய வ்யவஸாயத்தையதாவாகவறிந்திருக்குமவர்களுடைய ரக்ஷணத்தில், (க) ''ந த்யஜேயம்'' (உ) ''ஏதத்வ்ரதம்மம'' ''நத்யஜேயம், ஏதத்வ்ருதம்மம'' என்கிறபடியே, அநுகூலராலும் சலிப்பிக்கவொண்ணுதபடியிருக்குமவனுடைய ஸ்தைர்யகுணம் (ங) ''தேறுநீர்ப்பம்பை வடபாலத்திருவண்வண்டூர்'' என்று, பம்பையாகிறவாற்றுக்கு வடகரையான திருவண்வண்டூரிலே நிலைபெற்று நிர்க்குமென்கை. *

வ்யா. (கஅ) (விளம்பவிரோதம்) இத்யாதி, அதாவது:— க்ரமப்ராப்திபற்ருமல் படுகிற த்வரைக்கீடாகக்கடுகவந்து முகங்காட்டாமல் விளம்பித்து வருகையாலே (ச) ''போகுநம்பி''(ரு)''கழகமேரேல்நம்பி'' என்னும்படி, ப்ரணயரோஷத்தாலே பிறந்தவிரோதத்தை (சு) ''அழித்தாயுன் திருவடியால்''என்று, அழித்துப்பொகட்டவிருத்தங்களை கடிப்பிக்கவல்ல ஸாமர்த்யம், (எ) ''நல்குரவம் செல்வம்'' என்றுதுடங்கி, தன்னில்தான் சேராதவற்றைச் சேர்த்துக்கொடு நிற்கிற விருத்தவிபூதியோகத்தை ப்ரகாசிப்பித்த ''திருவண்ணகர் நன்னகரே'' என்று நன்னகரான திருவிண்ணகரிலே (அ) ''பல்வகையும் பிறந்த'' என்கிறபடியே பரந்திருக்கு மென்கை. *

வ்யா. (கசு) (கடிதகடிதேத்யாதி)அதாவ்து:— (கூ) ''பிரானிருந்தமை காட்டீனீர்'' என்கிற, கடகராலே தன்பக்கல் கடிதராணுர்க்கும் கடகராணுர்க்கும்(க0) ''இவளை நீரினியன்ன மீருமக்காசையில்லை விடுமினோ'' என்னும்படி, விகடனையைப்பண்ணுவதான ( கக ) ''தேவபிரானையே''

(க) ஸ்ரீ-ரா-யு. கஅ. உ. (உ) ஷை. ஙங. (ங) தி-வா. சு. க. க0. (ச) ஷை. உ. உ. (ரு) ஷை. சு. (சு) ஷை. கூ. (எ) ஷை. ங. க. (அ) ஷை. (கூ) ஷை. ரு. ரு. (க0) ஷை. க. (கக) ஷை. கக.

ரு. பாந்தவமவ்வூரிலே த்விகுணம்.

ரு—(உ0) கைம்முதலிழந்தாருண்ணும் நிதியினுபத்ஸகத்வம் புகுமூரிலேஸம்ருத்தம்.

ரு—(உக) சென்று சேர்வார்க்கு

பாந்தவம் - தந்தைதாயானபந்துத்வம், அவ்வூரிலே - திருத்துலே வில்லி மங்கலத்திலே, த்விகுணம் - இரட்டித்திருக்கும்.

(அ) கைம்முதலிழந்தார் - ப்ராப்ய ப்ராபகாபாஸங்களையிழந்தார், உண்ணும் - தாரக போஷக போக்யங்களெல்லாமாக புஜிக்கும், நிதியின்- நிதிபோலே இருக்கிறவனுடைய, ஆபத்ஸகத்வம்-ஆபத்காலத்திலுதவுகையானது, புகுமூரிலே - திருக்கோளூரிலே, ஸம்ருத்தம்- ஸம்ருத்தமாயிருக்கும்.

(அ) சென்று சேர்வார்க்கு - (ஹிதபரர்வார்த்தைகேளாதே) சென்று ப்ரவேசிப்பனென்னுமவர்க்கு,

தந்தைதாய்" என்கிறவவனுடைய பாந்தவம் (க) "அவ்வூர்த்திருநாமம் கேட்பது" என்று, தோழியானவள், திருத்துலைவில்லிமங்கலமென்று தான்சொல்லும்போது பெண்பிள்ளை சொன்னுப்போலினிதாயிராமையாலே, அவ்வூரென்று சொல்லப்பட்டதேஶத்திலே, தேவபிரானும் அரவிந்தலோசனனுமாய் நின்றிருந்துறையு மிரட்டைத்திருப்பதியாகையாலே, இரட்டித்திருக்குமென்கை. (விகடநாபாந்தவம்) என்றது:— விகடநாகரபாந்தவ மென்றபடி. *

வ்யா. (உ0) (கைம்முதலிழந்தாரித்யாதி) அதாவது:—(உ) "ஏலக்குழலியிழந்ததுஶங்கே" என்று துடங்கி (ங) "கற்புடையாட்டியிழந்ததுகட்டே" என்று, ப்ராப்யாலாபநிபந்தநமான வார்த்தியால் வந்தபாரவஶ்யத்தாலே, ப்ராப்யப்ராபகாபாஸங்களெல்லாம் தன்னடையேவிட்டுக் கழிகையாலே கைம்முதலற்றவர்கள் (ச) "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெத்திலையுமெல்லாங் கண்ணன்" என்று, தாரக போஷக போக்யங்களெல்லாம் தானேயாகபுஜிக்கும் "வைத்தமாநிதி" என்று, ஆபத்ரக்ஷகமாக சேமித்துவைத்த மஹாநிதிபோலேயிருக்கிறவனுடைய ஆபத்ஸகத்வம் (ரு) "திண்ணமென்னிளமான்புகுமூர் திருக்கோளூரே" என்று, ப்ராப்யருசிபிறந்தார்க்கு ப்ரவேஷ்டவ்யமாயிருக்கும் திருக்கோளூரிலே (சு) "செல்வம் மல்கியவன் கிடந்த", என்று, ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணமே தனக்கு நிரதிஶயஸம்பத்தாக நினைத்துவந்து கிடக்கையாலேஸம்ருத்தமென்கை. *

வ்யா. (உக) (சென்று சேர்வார்க்கு) இத்யாதி, அதாவது :— (எ) "தென்திருப்பேரையில் சேர்வன் சென்றே" என்று, க்ரமப்ராப்தி பற்

திவா. சு. ரு. கo. (உ) ஷை. சு. சு. க. (ங) ஷை. கo. (ச) ஷை. எ. க. (ரு) ஷை. (சு) ஷை. எ. (எ) ஷை. எ. ங. அ.

ருo. உசாத்துணை யறுக்கும் ஸௌந்தர்யம் மாநகரிலே கோஷிக்கும்.

ரு—(உஉ) ப்ரவணசித்தம் பரத்வவிமுகமாக்குமாநந்தவ்ருத்திநீணகரிலே.

உசாத்துணையறுக்கும் - உசாவுகைக்குத்துணையான நெஞ்ஜையபஹரிக்கும், ஸௌந்தர்யம் - ஸௌந்தர்யமானது, மாநகரிலே - மஹாநகரமான தென்திருப்பேரையிலே, கோஷிக்கும் - ஸாம கோஷத்திலே தெரியும்.

(அ) ப்ரவணசித்தம் - ப்ரவணருடைய சித்தத்தை, பரத்வ - பரத்வத்திலும், விமுகமாக்கும் - விமுகமாம்படிபண்ணும், ஆநந்தவ்ருத்தி- ஆநந்தவ்ருத்தியானது, நீணகரிலே - விசாலமான திருவாரன் விளையிலே வ்யக்தமென்றபடி.

ருதப்ரேமாதிசயத்தாலே ஹிதபரர்வார்த்தை கேளாதேசென்று ப்ரவேசிப்பனென்னும்படியானவவர்களுக்கு (க) "என்னெஞ்சினாருமங்கே ஒழிந்தாருழந்தினியாரைக் கொண்டென்றுசாகோ" என்னும்படி, உசாத்துணையான நெஞ்ஜை யபகரிக்கும் (உ) "செங்கனிவாயின் திறத்ததாயும்" இத்யாதியால் சொன்னவவனுடைய ஸௌந்தர்யம், (ந) "தென்திருப்பேரையில் மாநகர்" என்று, மஹாநகரமான தென் திருப்பேரையிலே (ச) "எழுந்தநல்வேதத்தொலி நின்றோங்கு" என்கிறபடியே, அவ்விஷயத்தை யநுபவித்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே அங்குள்ளார் பாடுகிற ஸாமகோஷத்தாலே தெரியுமென்றபடி. *

வ்யா. (உஉ) (ப்ரவணசித்தம்) இத்யாதி, அதாவது:—(ரு) "தீவினையுள்ளத்தின்சார்வல்லவாகித்தெளிவிசும்பேறலுற்றால் திருவாரன்விளையதனை மேவி வலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலென்று மென் சிந்தனை" என்னும்படி, அவித்யாதிகள், ப்ரத்யக்வஸ்துவான ஆத்மாவில் பற்றறப்போய் தெளிவை விளைப்பதான பரமபதத்தை ப்ராபிக்கவந்து கிட்டினாலும், என்நெஞ்சானது திருவாரன் விளையாகிற அத்தேசத்தைக்கிட்டி அநுகூலவ்ருத்திபண்ணி கையால்தொழக்கூடுமோவென்னுநிற்கும், என்று தன்பக்கல் ப்ரவணரானவவர்கள்சித்தத்தை (சு) "சிந்தை மற்றொன்றின்திறத்ததல்லாத்தன்மை" என்று, பரமபதத்தின்பேருஞ் சொல்லுகை யஸஹ்யமாம்படி பரத்வத்தில் விமுகமாகப்பண்ணும் (எ) "இன்பம் பயக்கவெழில் மலர்மாதரும் தானுமிவ்வேழுலகையின்பம் பயக்கவினிதுடன் வீற்றிருந்து" என்கிற, ஆநந்தவ்ருத்தி (அ) "திருவாறன்விளை" என்னும், (கூ) "நீணகரமதுவே" என்றும், நீணகரான திருவாரன்விளையிலே வ்யக்தமென்றபடி *

(க) தி-வா. எ. ந. ச. (உ) ஷை. ந. (ந) ஷை. கூ. (ச) ஷை. ௪. (ரு) ஷை. எ. க0. கூ. (சு) ஷை. க0. (எ) ஷை. க. (அ) ஷை. (கூ) ஷை. சு.

மூ—(உங) ஸாதரரைப்பரிசழிக்குஞ்சேஷ்டிதாச்சர்யங்குளந்தேகொடி விடும்.

மூ—(உச) ப்ரமம்மநஞ்சூழும் ஸௌகுமார்ய ப்ரகாசமச்சேரியிலே.

(அ) ஸாதரரை - ஆதரத்தோடு கூடினரை, பரிசழிக்கும் - ஸ்த்ரீத்வஸஹஜமான லஜ்ஜாதிகளையழிக்கும், சேஷ்டிதாச்சர்யம் - ஆச்சர்யகரமான சேஷ்டிதமானது, குளத்திலே-திருக்குளந்தையிலே, கொடி - மாடக்கொடிகளாலே, விடும் - ப்ரகாசிக்கும்.

(அ) ப்ரமம் - ப்ரமத்தைக்கண்ட, மநம் - மநஸ்ஸானது, சூழும் - ப்ரமிக்கும்படியான, ஸௌகுமார்ய - ஸௌகுமார்யத்தினுடைய, ப்ரகாசம் - ப்ரகாசமானது, அச்சேரியிலே - திருவண்பரிசாரத்திலே, (காணலா மென்றபடி.)

வ்யா. (உங) (ஸாதரரை) இத்யாதி, அதாவது:— (க) "ஆழிவலவனையாதரித்து கூடச்சென்றேன்" என்று, தன்பக்கலாதரத்தோடே கூடியிருப்பாரை (உ) "பல்வளையார் முன்பரிசழிந்தேன்" என்னும்படி, ஸ்த்ரீத்வப்ரகாரமான லஜ்ஜாதியையழிக்கும் "மாயக்கூத்தன்" என்கிற, சேஷ்டிதாச்சர்யம் (ங) "மாடக்கொடி மதிள்தென்குளந்தை" என்கிற, திருக்குளந்தையிலே, இதுக்கென்னக்கட்டின மாடக்கொடிமுகேந ப்ரகாசிக்குமென்கை. *

வ்யா. (உச) (ப்ரமம்மநம்சூழும்) இத்யாதி, அதாவது:—(ச) "பணியாவமரர்" இத்யாதிப்படியே, பரமப்ரேமயுக்தரான நித்யஸூரிகள் பரிசர்யைபண்ண, பரமபதத்திலேயிருக்குமவன்நிரதிசயஸௌகுமாரமான திருமேனியோடேஸம்ஸாரிகளுடைய துக்கத்தைப் போக்குகைக்காக தன்வாசியறியாதவிந்த லோகத்திலேவந்தவதரித்து, அடியாரல்லல் தவிர்ப்பது, படிதான்நீண்டுதாவுவதாகையால் வந்தப்ரமத்தை அநுஸந்தித்தமநஸ்ஸாநது, வ்யாகுலதமாய் ப்ரமிக்கும்படியான (ரு) "ஆழியும்சங்கும் சுமப்பார்தாம்" என்று, பூவேந்திலைப்போலே இருக்கும் திருவாழி திருச்சங்கையேந்துகிறதுப்பலேசுமந்தாப்போலே, வன்பாரமாகத் தோற்றும்படியிருக்கிறவவன் ஸௌகுமார்யப்ரகாசம், உடைய நங்கையார்பிறந்தக மாகையாலே, ஆழ்வார்க்கு அச்சேரியாயிருப்பதாய்(சு) "உருவார்சக்கரம் சங்குசுமந்திங்கும்மோடுழல்வானோரடி யானுமுளன்" என்று, (எ) "வண்பரிசாரத்திருந்தவென் திருவாழ்மார் வர்க்கென்திறம் சொல்லார்" என்ற திருவண்பரிசாரத்திலே காணலாமென்கை. *

(க) தி-வா. அ. உ. ச. (உ) ஷெ. ச. (ங) ஷெ. (ச) ஷெ. ங. சு. (ரு) ஷெ. ங. (சு) ஷெ. எ. (எ) ஷெ.

மூ—(உரு) மஹாமதிகளச்சங் கெட்டமரும் சௌர்யாதிகள் சிற்ருற்றிலே கொழிக்கும்.

மூ—(உசு) ஸாத்யஹ்ருதிஸ்தனும் ஸாதநமொருக்கடுக்கும்

(அ) மஹாமதிகள் - அஸ்தாநேபய ஶங்கிகளானவிதுரர் பேல்வார் அச்சங்கெட்டு - நிர்ப்பயராய், அமரும்-ஹ்ருட்டராம் படியான, ஶௌர்யாதிகள்-கம்ஸாதிநிரஸநப்ரகடிதஶௌர்யாதிகள், சிற்ருற்றிலே - திருச்சிற்ருற்றிலே, கொழிக்கும் - ஒதுக்கப்பட்டுப்ரகாசிக்கும்.

(அ) ஸாத்யஹ்ருதிஸ்தனும் - ஸாத்யமான ஆழ்வார் திருவுள்ளத்தில் வாஸம்லபித்திருக்கச்செய்தேயும், ஸாதநம் - ஸாதநமான திருக்கடித்தானத்தையும், ஒருக்கடுக்கும் - ஸமமாகவர்த்திக்கும்படியான,

வ்யா. (உரு) (மஹாமதிகள்) இத்யாதிஅதாவது:— (க) "ஸம்ஸ்ப்ருஶந்நாஸநம் ஶௌரேர்விதுரஸ்ஸமஹாமதி:" "ஸம்ஸ்ப்ருஶந்நாஸநம்ஶௌரெர்விதுரஸ்ஸமஹாமதி:" என்கிறபடியே, ஸௌகுமார்யாநுஸந்தாநத்தாலே, அவனுக்கிங்கே என்ன தீங்குவருகிறதோவென்று அஸ்தாநேபயஶங்கை பண்ணும் மஹாமதிகள், (உ) "எங்கள்செல்சார்வு" என்று, தங்களுக்கு நிர்ப்பயஸ்தாநமான புகலாகநினைத்துபயங்கெட்டு(ஈ) "திருச்சிற்ருற்றங்கரையானை முக்கணம்மானை நான்முகனையமர்ந்தேன்" என்று, ப்ரும்ஹருத்ரர்களுடைய ஸத்தாதிகள் ஸ்வாதீநமாம்படியவர்களை ப்ரகாரமாகவுடைய பெருமையையுடையவனுய்வைத்து ஸுலபனுய்வந்து நிற்கிறவனை அவனுக்கென்வருகிறதோ என்று, பட்டமறுகுதல் தீர்ந்து கிட்டி யநுபவிக்கப்பெற்றேனென்று ஹ்ருஷ்டராம்படியான (ச) "வார்கடாவருவி" இத்யாதியால்சொன்ன குவலயாபீட சாணூரமுஷ்டிககம்ஸாதிநிரஸநப்ரகடித சௌர்யாதிகள் (ரு) "திருச்சங்கன்றாறில் திருச்சிற்ருர்" என்கிற, திருப்பதியிலே, ஆற்றுக்குள்ளில் மணிமுக்தாதிகள் கரையிலே கொழித்துத் தோற்றுமாப்போலே ப்ரகாசிக்குமென்கை (ஶௌர்யாதிகள்) என்கிறவிடத்தில் ஆதிஶப்தத்தாலே வீர்யபராக்ரமங்களைச் சொல்லுகிறது. ஆரென்கிற ஸமாதியாலே கொழிக்குமென்றது. *

வ்யா. (உசு) (ஸாத்யஹ்ருதிஸ்தனுமித்யாதி) அதாவது:— ஸாத்யம்கைப்பட்டால் ஸாதநத்திலிழிவாரன்றிக்கேயிருக்க (சு) "திருக்கடித்தாநமுமென்னுடைச்சிந்தையு மொருக்கடுத்துள்ளெ யுறையும்பிரான்" என்று, ஸாத்யமானவாழ்வார் திருவுள்ளத்தில் வாஸம்லபித்திருக்கச்செய்தேயுமித்தைப்பெற்றது அத்தேஶத்தில் நிலையாலேயன்றோவென்றுஸாதநமான திருக்கடித்தானத்தையும் அடுத்துப்பிடித்து வர்த்திக்கும்

(க) ஸ்ரீ-பார-உ. (உ) தி - வா. அ. ச. க. (ஈ) ஷெ. கO. (ச) ஷெ. க. (ரு) ஷெ. (சு) ஷெ. சு. உ.

மூ. க்ருதஜ்ஞதாகந்தம் தாயப்பதியிலே.

மூ—(உஎ) அவகாஹித்தாரை அநங்யார்ஹமாக்கும் நாயகலக்ஷணம் வளம்புகழூமூரிலேகுட்டமிடும்.

மூ—(உஅ) போக்யபாகத்வரை

க்ருதஜ்ஞதாகந்தம் - க்ருதஜ்ஞதாபரிமளம், தாயப்பதியிலே - தனக்கு தாயப்ராப்தமான திருக்கடித்தாநத்திலே (ப்ரகாசிக்குமென்றபடி.

(அ) அவகாஹித்தாரை - தன்ப்ரஸாதத்திலே மூழ்கினவர்களை, அநங்யார்ஹமாக்கும் - மற்றொருவர்க்காகாதபடியாக்கும், நாயகலக்ஷணம் - நாயகனுடையலக்ஷணம், வளம்புகழூமூரிலே - திருப்புலியூரிலே, குட்டமிடும் - பூர்ணமாயிருக்கும்.

(அ) போக்யபாகத்வரை - போக்யரான வாழ்வார்க்குப்பரமபக்தியினுடைய பாகம்பிறக்குமளவுமுண்டான த்வரை,

படியான க்ருதஜ்ஞதாபரிமளம் ( க ) "திருக்கடித்தானநகரும் தனதாயப்பதி" என்று, தனக்கு தாயப்ராப்தமான ஸ்தாநமாகநினைத்திருக்கும் திருக்கடித்தாநத்திலேயென்கை. (க்ருதஜ்ஞதாகந்தம்) என்றது:— கடித்தாநம், என்று, மணத்தையுடைத்தான ஸ்தாநமென்கையாலே.

வ்யா. (உஎ) (அவகாஹித்தாரையித்யாதி) அதாவது:— ( உ ) "அப்பன்திருவருள் மூழ்கினள்" என்று, தன்ப்ரஸாதத்திலே மறுநனைய அவகாஹித்தாரை (ங) " அறுமாயன்பேச்சின்றிப் பேச்சிலள் " (ச) " திருப்புலியூர் புகழன்றிமற்று பரவாளிவள் நின்றிராப்பகல் " (ரு) "திருப்புலியூர் நின்றமாயப்பிரான் திருவருளாமிவள் நேர்ப்பட்டது" என்னும்படி, அநங்யார்ஹமாக்குமதாய் (சு) "கருமாணிக்கமலைமேல் மணித்தடந்தாமரைக்காடுகள்போல்" (எ) "துன்னுசூழ் சுடர்நாயிறுமன்றியும் பல்சுடர்களும்போல்" இத்யாதிகளால்சொன்ன அவயவசோபை ஆபரணசோபை முதலானநாயகலக்ஷணம் (அ) "திருப்புலியூர்வளம்புகழும்" என்று, இவர்கொண்டாடும்படியான ஐச்வர்யத்தையுடைய திருப்புலியூரிலே பூர்ணமாயிருக்குமென்கை. (குட்டமிடும்) என்றது :— குட்டநாடென்றுமத்தை நினைத்து. அருள்மூழ்கினரையென்னாதே, (அவகாஹித்தாரை) என்றது :— கலந்தவர்களையநங்யார்ஹராக்கும்படியிருக்கவேணும் நாயகலக்ஷணமென்று உத்தமநாயகலக்ஷணத்தை ஸாமாந்யேந தர்சிப்பித்து, அந்தலக்ஷணமீச்வரனுக்கு திருப்புலியூரிலே பூர்ணமாக ப்ரகாசிக்குமென்றருளிச்செய்கிறவராகையாலே. *

வ்யா. (உஅ) (போக்யபாகத்வரை) இத்யாதி, அதாவது:— பசித்தவன் அந்நம்பக்வமாவதற்கு முன்னேபதற்றத்தாலே அதுக்கணித்தாகவந்து கிடப்பதிருப்பது நிற்பதாமாப்போலே போக்யபூதரான ஆழ்

(க மு-அ-ல்) தி-வா. அ. சு. அ-ல். கண்டுகொள்க.

மூ. தெளிந்த சந்தைக்குமுன்னில் மூன்றிலும் ப்ரகடம்.

மூ—(உகூ) போகத்திற்ற தட்டுமாறுஞ்சீலங்காட்கரையிலே கரையழிக்கும்.

மூ—(௩0) மஹாத்மாக்கள் விரஹம்ஸஹியாத மார்த்தவம்

தெளிந்தஸந்தைக்கு - தெளிந்தவென்கிறஸந்தைக்கு, முன்னில் - முன்சொன்ன, மூன்றிலும் - திருப்புளிங்குடி வரகுணமங்கை ஸ்ரீவைகுண்டம் இவை மூன்றுகளில், ப்ரகடம் - தெரியும்.

(அ) போகத்தில் - அநுபவதசையில், தட்டுமாறும் - ஶேஷஶேஷிபாவம் அத்தலேயித்தலேயாம்படியான, சீலம் - ஸௌசீல்யகுணம், காட்கரையிலே - திருக்காட்கரையிலே, கரையழிக்கும் - கரையழியப் பெருகும்.

(அ) மஹாத்மாக்கள் - மஹாத்மாக்களோட்டை, விரஹம்ஸஹியாத - விரஹம்ஸஹியாமையாகிற, மார்த்தவம் - ம்ருதுத்வம்,

வார்க்கு பரமபக்தியாகிறபாகம் பிறக்குமளவுமவனுக்குண்டானத்வரை "தெளிந்தவென்சிந்தை" என்கிற, சந்தைக்குமுன்சொன்ன "புளிங்குடிக்கிடந்துவரகுணமங்கையிருந்து வைகுந்தத்துணின்று" என்று, கிடப்பதிருப்பது நிற்பதான திருப்புளிங்குடி, திருவரகுணமங்கை, ஸ்ரீவைகுண்டமாகிற திருப்பதிமூன்றிலும் தெறியுமென்கை. *

வ்யா. (உகூ) (போகத்திற்ற தட்டுமாறும்) இத்யாதி, அதாவது:—இப்படிபோக்ய பூதரானவாழ்வாருடனே கலந்துபரிமாறுமிடத்தில், (க) "ஆட்கொள்வானொத்தென்று யிருண்டமாயன்" என்றும், (உ) "ஆருயிர்ப்பட்ட தெனதுயிர்ப்பட்டது" என்றும், பேசும்படி அத்தலேயித்தலேயாய் ஶேஷஶேஷிபாவம்மாருடிப் பரிமாறும்சீலகுணம் (௩) "திருக்காட்கரை மருவிய மாயன்றன்மாயம் நினேதொறும்" என்று, வித்தராய் பேசின திருக்காட்கரையிலேகரையழியப்பெருகுமென்கை. (கரையழிக்கும்) என்றது, காட்கரையென்கிற ஸமாதியாலே. *

வ்யா. (௩0) (மஹாத்மாக்களித்யாதி) அதாவது:— (ச) "தமரோடங்குரைவார்க்கு" என்று, தம்பரிஜநங்களோடேயங்கே நித்யவாஸம்பண்ணுகிறவர்க்கென்னும்படி (ரு) "సకృత్త్వదాకార విలోకనాశయా తృణీకృతానుత్తమ భుక్తిముక్తిభిః। మహాత్మభిర్మామవలోక్యతాంనయ క్షణేపి తేయద్విరహోతిదుస్సహః" "ஸக்ருத்வதாகாரவிலோகநாஶயாத்ருணீக்ருதாநுத்தமபுக்திமுக்திபி꞉ । மஹாத்மபிர்மாமவலோக்யதாம்நயக்ஷணேபிதேயத்விஹோதிதுஸ்ஸஹ꞉" என்கிறபடியே, தம்முடைய விக்ரஹத்தை,யொருக்கால் காணவேணுமென்ருசையாலே அநுத்தமமான போகமோக்ஷங்களையும் த்ருணீகரித்திருக்கும் மஹாத்மாக்களோட்டை விரஹம்ஸஹி

(க-மு - ௩ - ல்) தி - வா. கூ. கூ - ல். கண்டுகொள்க. (ச) ஷை. எ. உ. (ரு) ஆளவந்தார் ஸ்தோ - ருரு.

மூ. வளத்தின்களத்தே கூடுபூரிக்கும்.

மூ—(௩௧) பிரிந்ததுன்பக்கடல் கடத்தும் விஷ்ணுபோதாந்ருஶம்ஸ்ய ம்நாவாயிலே நிழலெழும்.

வளத்தின் - ஆ்ரிதஸம்பத்தாயிவக்குமவனுடைய, களத்தே - திருமூழிக்களத்திலே, கூடுபிரிக்கும் - கூடுகெட்டிநிற்கும்.

(அ) பிரிந்த - அன்புடையாரைப்பிரிகையால்வந்த, துன்பக்கடல்- துக்கஸாகரத்தை, கடத்தும் - நிவர்த்திப்பிக்கும், விஷ்ணுபோதாந்ருஶம்ஸ்யம் - விஷ்ணுபோதமானவனுடைய ஆ்ரிதவிஷயத்தில் க்ருபையானது, நாவாயிலே - திருநாவாயிலே, நிழலெழும் - ப்ரதிபலிக்கும்.

யாமையாகிற மார்த்தவம் "மூழிக்களத்து வளத்தினை" என்று, ஆ்ரிதர்க்கு ஸம்பத்தாயிருக்கும் ஸ்வபாவனுனவன் திருமூழிக்களத்திலே கூடுகெட்டிநிற்குமென்கை. கூடுபூரிக்குமென்றது களமென்கிறஸமாதியலே. *

வ்யா. (௩௧) (பிரிந்ததுன்பக்கடலித்யாதி) அதாவது:— (க) "அன்புடையாரைப்பிரிவுருநோய்" என்றும், (உ) "துன்பக்கடல்புக்கு" என்றும் சொல்லுகிறபடியே, (௩) "எமராலும்பழிப்புண்டு, அணிமூழிக்களத்துறையும் தம்மாலிழிப்புண்டிங்கென்" என்று, (ச) "தந்தாமைக்கொண்டகல்தல் தகவன்றென்றுரையீர் மிகமேனிமெலிவெய்தி மேகலையுமீடழிந்தென்னகமேனியொழியாமே திருமூழிக்களத்தார்க்கு தகவென்றுரையீர்" என்றிப்படி, மேல்மேலுமாள்விடவேண்டும்படி தன்னைப்பிரிகையால் வந்த துக்கஸாகரத்தை நிஸ்தரிப்பிக்கும் (ரு) "విష్ణుపోతం వినానాన్య త్కించిదస్తి పరాయణమ్" "விஷ்ணுபோதம் விநாநாந்யத்கிஞ்சிதஸ்திபராயணம்" என்கிற விஷ்ணுபோதமான வவனுடைய (௬) "ஆவாவடியானிவனென்றருளாய்" என்றபேக்ஷிக்கலாம்படியிருக்கும் ஆ்ரிதவிஷய க்ருபையாகிற ஆந்ருஶம்ஸ்யம் (எ) "நாவாயுறைகின்ற, என்று, அவன் நித்யவாஸம் பண்ணுகிற திருநாவாயிலே, உள்ளுநிற்கிற வஸ்துவின் ஸ்வபாவமிதுவோவென்றறியலாம்படி அவ்வூரின்பேராலே நிழலெழுமென்கை. நாவாய்போலேயிருக்கிறவவன் வர்த்திக்கிறதேஶமாகையாலேநாவாய் என்று,ஊருக்குப்பேராயிருக்கிறதென்றுகருத்து. விஷ்ணுபோதத்வமித்தாலே, ப்ரகாசித்தாலதுக்குடலானவாந்ருஶம்ஸ்யம்தன்னடையேதோன்றுமிறே. (அ) "కారుణ్యేనా నృశంస్యేన" "காருண்யே நாந்ருஶம்ஸ்யோந" என்று, விபஜித்துச்சொல்லி (௯) "స్త్రీప్రణష్టేతి కారుణ్యా దాశ్రితేత్యా నృశంసతా" "ஸ்த்ரீப்ரணஷ்டேதிகாருண்யமா ்ரிதேத்யாந்ருஶம்ஸதா" என்கையாலே. ஆந்ருஶம்ஸ்யமாவது:—ஆ்ரிதவிஷயக்ருபை.*

(க) நாச்சி - நி. ரு. ச. (உ) ஷை. (௩) தி-வா. ௬. எ. உ. (ச) ஷை - ௬. (ரு) (௬) ஷை - அ. எ. (எ) ஷை. (அ) ௬.

மூ—(௩௨) ஶரண்யமுகுந்தத்வம் உத்பலாவதகத்திலே ப்ரஸித்தம்.
மூ—(௩௩) மார்க்கபந்துஶைத்யம் மோஹநத்தேமடுவிடும்.

(அ) ஶரண்யமுகுந்தத்வம் - ஶரணவரணார்ஹனுடைய மோக்ஷப்ரதத்வம், உத்பலாவதகத்திலே - திருக்கண்ணபுரத்திலே உத்பலாவதகமென்கிற விமாநத்தில் நிற்கிறநிலையிலே, ப்ரஸித்தம - எல்லாருமறியலாம்.

(ஆ) மார்க்க - மார்க்கத்துக்கு, பந்து - பந்துவானவனுடைய, சைத்யம் - தாபஹரமான குளிர்ச்சியானது, மோஹநத்தே - திருமோஹூரிலே, மடுவிடும் - நிறைந்திருக்கும்.

வ்யா. (௩௨) (ஶரண்யமுகுந்தத்வம்) இத்யாதி, அதாவது :— "சரணமாகுந்தன தாளடைந்தார்க்கெல்லாம் மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான்" என்று, கீழ்ச்சொன்னகுணவிஶேஷத்தாலே, எல்லார்க்கும் ஶரணவரணார் ஹனாயிருக்குமவனுடைய மோக்ஷப்ரதத்வம் (க) "[illegible]" "உத்பலாவதகேதிவ்யே விமாநேபுஷ்கரேக்ஷணம் ஶௌரிராஜமஹம்வந்தேஸதாஸர்வாங்க ஸுந்தரம்" என்கிறபடியே, திருக்கண்ணபுரத்தில் உத்பலாவதகமென்று பேரையுடைத்தான திவ்யவிமாநத்தில் நிற்கிறநிலையிலே யெல்லாருமறியலாம்படி ப்ரஸித்தமென்கை. முகுந்தத்வமாவது :— முக்திபூமிப்ரதத்வம். "வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்கையாலே யாய்த்திவரிப்படி யருளிச்செய்தது. பலமென்று மாம்ஸமாய், உத்பலதேஹரென்றது மாம்ஸளதேஹ ராயிருக்கையன்றிக்கேஶரீரஶோஷணத்தாலே உத்கதமாம்ஸராய்க்கொண்டு உபேக்ஷிததேஹராயிருக்கும் முமுக்ஷுக்களாய் (உ) "[illegible]" "தேஷாம்மமாவதோவாஸமுத்பலாவதகம்விதுஃ" என்கிறபடியே, அவர்களுக்கு ரக்ஷகனானவனெழுந்தருளி நிர்க்கையாலே உத்பலாவதகமென்றங்குத்தை திவ்யவிமாநத்துக்குப் பேராகையாலே யாய்த்து மோக்ஷப்ரதத்வம் அந்தஸ்தலத்திலே ப்ரஸித்தமென்றது. *

வ்யா. (௩௩) (மார்க்கபந்துசைத்யம்) இத்யாதி, அதாவது:— இப்படிமோக்ஷப்ரதனை தன்னுடைய ப்ரஸாதத்தாலே மோக்ஷபூமிக்குப்போவார்க்கு (௩) "காளமேகத்தையன்றிமற்றொன்றிலன்கதி" (ச) "ஆத்தன்தாமரையடியன்றி மற்றிலமரணே" என்றும்படி, ஆப்தனாய்க்கூடக்கொண்டுபோம் மார்க்கபந்துவானவனுடைய (ரு) "சுரிகுழல்கமலக்கட்கனிவாய்காளமேகம்" என்றும், (சு) "அவனடிநிழல்தடம்" என்றும், (எ) "மரதகமணித்தடம்" என்றும் சொல்லும்படியிருந்துள்ள ஸாம்ஸாரிகஸகலதாபஹரமானஶைத்யம் அம்ருதப்ரதாநஸமயத்தில் அஸுரர்களைமோஹிப்பித்தவிட மாகையாலே மோஹநக்ஷேத்ரமான திருமோகூரிலே நிறைந்து நிலைபெற்றிருக்குமெனகை. மடுவிடுமென்றது:—(அ)"மரதகமணித்தடம்" என்கிறஸமாதியாலே. *

(க) (உ) (௩-மூ-அ-ல்) தி-வா. ௧0. ௧0 - ல் காண்க.

மூ—(ஙச) ஸைஸங்யபுத்ர சிஷ்யஸாத்ய ஸித்தபூஸுரார்ச்சநத்துக்கு முக நாபி பாதங்கள் த்வாரத்ரயத்தாலே காட்டும் ஸாம்யம் அநந்தஶயநத்திலேவ்யக்தம்:—

மூ—(ஙரு) மோக்ஷதாநத்தில் ப்ரணதபாரதந்த்ர்யம் வளம்மிக்க நதியிலே கரைபுரளும்.

(அ) ஸைஸங்ய - ஸேநாபதியாழ்வான், புத்ர - புத்ரர்களான ப்ரம்ஹாதிகள், சிஷ்ய - சிஷ்யர்கள் இவர்களாகிற, ஸாத்ய - ஸாத்யருடையவும், ஸித்த - ஸித்தருடையவும், பூஸுர - ப்ராம்ஹணர்களுடையவும், அர்ச்சநத்துக்கு - ஆராதநத்துக்கு, முகநாபிபாதங்கள் - முகம், நாபி, பாதங்கள், இவை, த்வாரத்ரயத்தாலே - மூன்றுவாசலாலே, காட்டும்ஸாம்யம்-தாரதம்யம்பாரதேகாட்டுகிறகுணம் (அநந்தசயநத்திலே)-திருவநந்தரபுரத்திலே, வ்யக்தம் - ப்ரகாசிக்கும்:—

(அ) மோக்ஷதாநத்தில் - மோக்ஷம்கொடுக்கும்போது, ப்ரணதபாரதந்த்ர்யம் - ஆஶ்ரிதர்க்குப்பாரதந்த்ர்யனுகை, வளம்மிக்கநதியிலே - திருவாட்டாற்றிலே, கரைபுரளும் - அமர்யாதமாகப்ரவஹிக்கும்.

வ்யா. (ஙச) (ஸைஸங்யேத்யாதி) அதாவது:— (க) "அமரர் கோனர்ச்சிக்கின்றங்கப்பணிசெய்வர் விண்ணோர்" என்கிற, ஸேநாஸஹிதரானஸேனைமுதலியாராகிற (உ) "யத்ர பூர்வே ஸாத்யா:" "யத்ரபூர்வேஸாத்யா:" என்கிற, நித்யஸூரிகளில் தலைவரானஸாத்யருடையவும், (ங) "அமரராய்த்திரிகின்றார்கட்காதி" என்கையாலே, புத்ரர்களான ப்ரும்ஹாதிகளாகிறஸித்தருடையவும், (ச) "படமுடையரவில் பள்ளி பயின்றவன்பாதங்காண நடமினோநமர்களுள்ளீர்" என்று, இவருபதேஶம்கேட்ட சிஷ்யர்களான பூஸுரருடையவும், அர்ச்சநத்துக்கு திருமுகமும் திருநாபியும் திருவடிகளுமாகிற விவற்றை திருவாசல் மூன்றூலும் தர்சிப்பிக்கிற, நித்யஸூரிகள் ஸம்ஸாரிகளென்று விஶேஷம் பாராத ஸாம்யகுணம், திருவநந்தபுரத்தில் கண்வளர்ந்தருளுகிற ப்ரகாரத்திலே வ்யக்தமாயிருக்குமென்கை.

வ்யா. (ஙரு) (மோக்ஷதாநத்தஇலித்யாதி) அதாவது:— (ரு) "அருள்தருவானமைகின்றானதுநமதுவிதிவகை" என்றும், (சு) "விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் விதிவகையே" என்றுமிப்படி ஸர்வஸமனனவன், ஆஶ்ரிதர்க்குமோக்ஷப்ரதாநம் பண்ணுமளவில், அவர்கள்விதித்தப்படிசெய்வானாய்நிற்கிற வாஶ்ரிதபாரதந்த்ர்யம் (எ) "வளம்மிக்கவாட்டாற்றான்" என்று, ரக்ஷ்யவர்க்கம் குறைவற்றதேஶமாகையாலே அவனுக்குஸம்பத்துமிக்கிருக்கிறதிருவாட்டாற்றிலே அமர்யாதமாகப்ரவஹிக்குமென்கை. கரைபுரளுமென்றது:— ஆறுயென்கிற ஸமாதியாலே.

(க-ங-மு-ல்) கo-உ-ல்-காண்க. (ரு) ஷெ. சு. க. (சு) ஷெ-சு. ங. (எ) ஷெ. ஙச

மூ—(௩௬) த்யாஜ்யதேஹவ்யாமோஹம் மருள்கள்கடியும் மயல்மிகு பொழிலிலே தழைக்கும்.

மூ—(௩௭) அங்கீகரிக்கவவகாசமும் பார்க்கும் ஸ்வாமித்வம் பெருநகரிலேபேர்பெற்றது.

(அ) த்யாஜ்யதேஹவ்யாமோஹம்-விடவேண்டிய தேஹத்திலுண்டான வ்யாமோஹம், மருள்கள் - அஜ்ஞாநங்களை, கடியும் - போக்குகிற மயல்மிகுபொழிலிலே - வ்யாமோஹம்மிக்க திருமாலிருஞ்சோலையிலே, தழைக்கும் - அபிவ்ருத்தமாம்:—

(அ) அங்கீகரிக்க - இவனைவிஷயீகரிக்க, அவகாசம் - இடத்தை பார்க்கும், ப்ரதீக்ஷிக்கும், ஸ்வாமித்வம் - ஸ்வாமித்வமானது, பெருநகரிலே - திருப்பேர்நகரிலே, பேர்பெற்றது - ப்ரஸங்கமாயிற்று.

வ்யா. (௩௬) (த்யாஜ்யதேஹவ்யாமோஹம்)இத்யாதி,அதாவது:— முமுக்ஷுக்களுக்குத்யாஜ்யமான தேஹத்தில் சரமதேஹமாகையாலே, மஹிஷியுடைய உச்சிஷ்டத்தைவிரும்பும் ராஜபுத்ரனைப்போலே, (க) "வஞ்சக்கள்வனுய், நெஞ்சுமுயிருமுள்கலந்து, மாயவாக்கை யதனுட்புக்கு" என்கிறபடியே, இதின் தோஷம்பாராமல் உட்புக்கு (உ) "திருமாலிருஞ்சோலைமலையே" இத்யாதிப்படியே உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை யிதிலேகதேசத்திலேபண்ணி, (௩) "மங்கவொட்டு" என்றும், காலைக்கட்டி விடுவிக்கும்படி, இவனுக்குண்டான வ்யாமோஹம், (ச) "மருள்கள்கடியும் மணிமலை" என்றும், ஸர்வருடையவுமஜ்ஞாநத்தை ஸவாஸநமாகப்போக்குமதாய் (ரு) "மயல் மிகுபொழில்சூழ் மாலிருஞ்சோலை" என்று, போக்யப்ரகர்ஷத்தாலே, போக்தாக்களைப்பிச்சேற்றவற்றுன சோலையையுடைய தெற்குத்திருமலையிலே ஸம்ருத்தமாய்ச்செல்லுமென்கை. பொழிலென்கிற ஸமாதியாலேயாய்த்துத்தழைக்குமென்றது. *

வ்யா. (௩௭) (அங்கீகரிக்கவவகாசம்பாக்கும்) இத்யாதி, அதாவது:— (௬) "திருமாலிருஞ்சோலை மலையென்னேனென்ன திருமால் வந்துயென் நெஞ்சுநிறையப்புகுந்தான்" என்று, ஸ்வாங்கீகாரத்துக்குடலான ஸுக்ருதலவமில்லாதாரையும், மடிமாங்காயிடுமாப்போலே; என்னுரைச்சொன்னுய்,இத்யாதியான வஜ்ஞாதஸுக்ருதங்களையாரோபித்தங்கீகரிக்கைக்கிடம் பார்க்குமவனுடைய ஸ்வாமித்வம் (எ) "பெருநகராவணைமேல்" என்று, கண்வளர்ந்தருளுகிறதிருப்பேர்நகரிலே, ப்ரஸித்தமாய்த்தென்கை. ஆக, திருப்பதிகள்தோறும் ஓரோகுணம் ப்ராதாந்யேநப்ரகாசிக்குமென்னுமிடம், இவரருளிச்செய்த திருப்பதிகளெல்லாவற்றிலும் தர்சிப்பித்தாராயிற்று. *

(க-மு-ச-ல்) தி-வா-க௦-எ-ல். காண்க, (ரு) ஷை-உ. க௦. ௩. (௬) ஷை-௫௦. அ. க. (எ) பெ-மொ. ரு. கூ. ௩.

மூ—(கூஅ) இவற்றில்ப்ராவண்யமிவள்பரமே யென்னவுண்டாய் ஷோடஶகலாபூர்ணமான சந்த்ரமண்டலம்போலே பதினாறுதிருநக்ஷத்ரம் நிரம்பினவாறே தேவபோக்யமான வதிலம்ருதம்போலன்றிக்கே யென்னுத்தமிழிசைக்காரர் முதற்பத்தர் வானவரென்னம்மான் பார்பரவென்னும்படி ஸேஶ்வர விபூதி யோக்யமான

(அ) இவற்றில் - இந்தவர்ச்சாவதாரஸ்தலங்களில், ப்ராவண்யம் - ஆதராதிஶயம், இவள்பரமேயென்ன - இவளுக்குத்தகுமோவென்னும்படி, உண்டாய் - உண்டாய், ஷோடஶகலாபூர்ணமான - பதினாறுகலைகளாலும் பரிபூர்ணமான, சந்த்ரமண்டலம்போலே - சந்த்ரபிம்பம்போலே, பதினாறுதிருநக்ஷத்ரம் - பதினாறுவயஸ்ஸு, நிரம்பினவாறே - பூர்ணமானவாறே, தேவபோக்யமான - தேவதைகளுக்கே போக்யமான, அதில் - அந்தசந்த்ரமண்டலத்திலுண்டான, அம்ருதம்போலன்றிக்கே, அம்ருதத்தைக்காட்டிலும் வ்யாவ்ருத்தமாய், எந்நா - என்நாவிலுண்டான, தமிழர் - த்ராவிடபாஷாநிபுணரும், இசைகாரர்-ஸ்வரம்தெரிந்தவரும், முதல்பத்தர்-ஶ்ரேஷ்டரானபக்தரும், வாநவர்-நித்யஸூரிகளும், என்னம்மான் - எனக்குஸ்வாமியானவனும், பார் - பூமியிலுள்ளாரும், பரவென்னும்படி - பரவத்தக்கதென்னும்படி, ஸேஶ்வர - ஈஶ்வரனோடுகூடின, விபூதி யோக்யமான - விபூதிக்கநுபாவ்யமான,

வ்யா. (கூஅ) (இத்திருப்பதிகளில் ப்ராவண்ய மிவர்க்குண்டாய்த்தெப்போது ? இவர்தாம் ப்ரபந்தமருளிச்செய்யத்துடங்கிற்றெத்தனை திருநக்ஷத்ரத்தில்? இதுதனக்கு போக்த்ருநியமமுண்டோ ? இதின்போக்யதைதானிருக்கும்படியெங்ஙனே ? என்னுமகாங்க்ஷையிலேயருளிச்செய்கிறார்மேல். (இவற்றில் ப்ராவண்யம்) என்றுதுடங்கி, அதாவது:— இவ்வர்ச்சாவதார ஸ்தலங்களில் ப்ராவண்யம் (க) "முலையோமுழுமுற்றும்போந்திலபெருமான்மலையோதிருவேங்கடமென்றுகற்கின்ற வாசகமிவள்பரமே" என்னும்படி, பருவம் நிரம்புவதற்கு முன்னேயுண்டாய் பதினாறுகலைகளாலும் பரிபூர்ணமான சந்த்ரமண்டலம்போலே பதினாறு திருநக்ஷத்ரம் பூர்ணமானவாறே (உ) "కృష్ణపక్షే [illegible] దైవ సుధామయః" "க்ருஷ்ணபக்ஷேமரைஶ்ஶஶ்வத் பியதெவைஸுதாமயஃ" என்கிறபடியே, தேவர்களுக்கு போக்யமாகையாலே போக்த்ருநியமமுடைத்தான அந்த சந்தரமண்டலத்தில் அம்ருதம்போலன்றிக்கே (௩) "என்னுவிலின்கவி" என்றும், (ச) "பாலேய்தமிழரிசைகாரர்பத்தர் பரவுமாயிரம்" என்றும், (ரு) "தூமுதல்பத்தர்க்கு" என்றும், (சு) "கேட்டாரார் வானவர்கள்" என்றும், (எ) "தென்னாவென்னுமென்னம்மான்" என்றும், (அ) "பார்பரவின்கவி" என்றும்

(க) தி - வி. சுo. (உ) (௩) தி - வா. ௩. கூ. க. (ச) தி - வா. க. ரு. கக. (ரு) (சு) ஷெ - கo. சு. கக. (எ) ஷெ - எ. ரு. (அ) ஷெ. எ. கூ. ரு.

மூ. பாலோடமுதன்ன மென்மொழிமுகஞ்செய்தது.

மூ—(௩கூ) நீர்பால் நெய்யமுதாய் நிரம்பினவேரி நெளிக்குமாப்போலே பரபக்த்யாதிமயஜ்ஞாநாம்ருதாப்திநிமிக்கிற வாய்கரை மிடைந்து

பாலோடமுதன்ன - பாலோடுகூடினவம்ருதம்போன்ற, மென்மொழி - ம்ருதுவானஶப்தம், முகம்செய்தது - இவர்முகத்தில் நின்றுமுண்டாயிற்று.

(அ) நீர் - நீரானது, பால் - பாலாய், நெய் - நெய்யாய், அமுதமாய் - அம்ருதமாய், நிரம்பனவேரி - பூர்ணமானவேரி, நெளிக்குமாப்போலே - உடையுமாப்போலே, பரபக்த்யாதிமய - பரபக்த்யாதிகளாய்பரிணமித்த, ஜ்ஞாந - பகவத்ஜ்ஞாநமாகிற, அம்ருதாப்தி - அம்ருதஸாகரம், நிமிக்கிற - நெளிகிற, வாய்கரை - வாய்க்கரையாலே, மிடைந்து - நெருங்கி,

சொல்லுகிறபடியே, ஸ்வபரவிபாகம் ஸூரிஸம்ஸாரிவிபாகம் ஈஶேசிதவ்ய விபாகமற ஈஶ்வரனோடே கூடவிரண்டு விபூதியும் புஜிக்கைக்கு யோக்யமாய், (க) "பாலோடமு தன்னவாயிரம், அமுதமென்மொழி" என்கிறபடியே, வாச்யவாசக ஸம்ஶ்லேஷரஸத்தாலே பாலுமமுதமும் கலந்தாப்போலேயாய் போக்யதாதிஶயத்தாலும், புஜித்தார்க்கு நித்யத்வத்தைக்கொடுக்கையாலும், அம்ருதஸமமாய் அதிவவ்யாவ்ருத்தமான மார்த்தவத்தையுடைத்தான ஶப்தம் வந்து இவர்முகோத்கதமாயிற்றென்கை. *

வ்யா. (௩கூ) இவர்பக்கல் ப்ரபந்தமவதரிக்கத்துடங்கின காலத்தையருளிச்செய்தார்க்கீழ். இதுதானவதரிக்குமளவிலிப்படி நாமவனைக் கவிபாடவேணுமென்று ஸங்கல்பித்திருந்து பாடினரோவென்னுமாகாங்க்ஷையிலே, இதினவதரணக்ரமத்தை யருளிச்செய்கிறார்மேல். (நீர்பாலென்று துடங்கி) அதாவது :— நீர்பாலாய், பால் நெய்யாய், நெய்யம்ருதமாயத்தாலே நிரம்பினதோரேரி பொறுமல்நெளித்துடையுமாப்போலே (உ) "மயர்வறமதிநலமருளினன்" என்கிறவிடத்தில்கர்மஜ்ஞாநாநுக்ருஹீதையான பக்திஸ்தாநத்தில் பகவத்ப்ரஸாதமாய் அதடியாக பரபக்திதுடங்கி பிறக்கையாலே, ஜ்ஞாநம் முதலிலே பரபக்திரூபமாய், பரபக்தியானது பரஜ்ஞாநமாய், பரஜ்ஞாநமானது பரமபக்தியாய்(௩) "అచ్యుతభక్తితత్త్వజ్ఞానామృతాబ్ధి పరివాహశుభైర్వచోభిః" "அச்யுதபக்திதத்வஜ்ஞாநாம்ருதாப்திபரிவாஹஶுபைர்வசோபி:" என்கிறபடியே, அந்த பரபக்த்யாதிகளாய்நிறைந்தஜ்ஞாநமாகிற வம்ருதாப்தியானது ஆஶ்ரயமழியாமல் பரிவாஹாபேக்ஷபிறந்து(ச)"நிமியும்வாய்", என்கிறபடியே,

(க) தி - வா. அ. சூ. கக. (உ) ஷை. க. க. க. (௩) (ச) ஷை - சூ. ரு. உ.

மூ. உய்யக்கொண் டாரைக்கொண்டு வாளும்வில்லுங் கொண் டென்கிறவிழவுகள் தீரப்பெற்றது.

மூ—(௫எ) ப்ரும்ஹநிஷ்டரும்

உய்யக்கொண்டு - உம்மையுய்யக்கொண்டு யென்கிறவிடத்திலும், ஆரைக்கொண்டு - உழந்தினியாரைக்கொண்டு என்கிற விடத்திலும், வாளும் வில்லுங்கொண்டு - வாளும் வில்லுங்கொண்டு யென்கிறவிடத்திலும், என்கிற் - சொல்லப்பட்ட, இழவுகள் - துஃகங்கள், தீரப்பெற்றது - தீர்ந்ததுகள்.

(அ) ப்ரம்ஹநிஷ்டரும் - (ஆசார்யர்) ப்ரும்ஹநிஷ்டராயும்,

திலும் பூஜையிலுமபேக்ஷையற்று (க) "நறியநன்மலர்நாடி" என்கிறபடியே, போக்ஷத்வபரிமளயுக்தமாய் ச்லாக்யமான ஆத்மபுஷ்பங்களைத் தேடி (உ) "ஆட்செய்தாழிப்பிரானைச் சேர்ந்தவன்" என்று, கைங்கர்யரூபமாக வுபதேசிக்கையாலே ஜகத்தாகத்திருந்துகையாலும், (௩) "உம்மையுய்யக்கொண்டுபோகுறில்" என்று,ஸம்ஸாரிகளுஜ்ஜீவநநிமித்தமாகவுண்டான விழவும் (௪) "ஆரைக்கொண்டெண்ணுசாகோ" என்று, தமக்கு சாத்துணையில்லாமையால் வந்தவிழவும் (௫) "வாளும்வில்லும் கொண்டு பின்செல்வார்மற்றில்லை" என்று, அவன்ஸௌகுமார்யமறிந்து பரிகைக்கொருவருமில்லை யென்கிறவிழவும் தீரப்பெற்றதென்கை. எல்லாருமுஜ்ஜீவித்து நமக்குசாத்துணையாய் இவனுக்கு மங்களாசாஸநமும் பண்ணுகையாலே மூன்றிழவும் தீருமிறே. 'மலர்நாடி' என்கிறவிதுக்கு "நறிய நன்மலர்நாடி" என்கிறவிதுசொல்லும்போது ஸர்வ வ்யாக்யாநங்களிலும் பரிமளத்தையுடைத்தாய் ச்லாக்யமான புஷ்பங்கள்போலே ஆராய்ந்துசொன்ன ஆயிரமென்று ப்ரபந்த விசேஷமாகச்சொல்லியிருக்கையாலிவர்க்கு நினைவு ஆத்மபுஷ்பங்களைத் தேடியென்கிறவிதென்றுகொள்ளவேணும். அன்றிக்கே, "நாடாதமலர்" என்கிறவிதுக்கு "நிறியநண்மலர்நாடி" என்கிறத்தைநினைத்தருளிச்செய்தாரென்று கொள்ளிலொரு விரோதமில்லை "வாடாதமலரடிக் கீழ்வைக்க" என்று, கைங்கர்ய ப்ரஸங்கமுண்டாகையாலே "ஆட்செய்ய யென்றத்தோடே சேருமிறே. *

வ்யா. (௫எ) இப்படிவுபதேசம் பலித்ததாகில் (௬) "பரீக்ஷ்யலோகாந்" "பரீக்ஷ்யலோகாந்" இத்யாதிப்படியே, கர்மபலமான ஸாம்ஸாரிக போகங்களின் அல்பாஸ்திரத்வாதி தோஷத்தையும், நித்யனான பரமாத்மாவானவன், கர்மஸாத்யனல்லாமையையும், அநுஸந்திக்கையாலுண்டான நிர்வேதத்தோடே ஶமதமோபேதநாயுபஹாரபாணியாய்க்கொண்டுச்ரோத்ரியனுப்ப்ரம்ஹநிஷ்டனுன வாசார்யனையுபஸத்திபண்ண,அவனும்,

(க) தி-வா. ௫. ௫. கக. (உ) ஷை. ௪. க0. கக. (௩) ஷை. ௬. (௪) ஷை. எ. ௩. ௪. (௫) ஷை. அ. ௩. ௩. (௬) ஷை. மு-உ. உ. உ. கக.

மூ. ஸம்வத்ஸரவாஸிகளுமாகில் ஏபாவம்பயனன்றாகிலுஞ் சேராது.

மூ—(ருஅ) மெய்ந்நின்று மங்கவொட்டுக்கு

ஸம்வத்ஸரவாஸிகளும்-(சிஷ்யர்கள்) ஸம்வத்ஸரவாஸிகளாயும், ஆகில்-இருக்கவேணுமென்று நியமமாகில், ஏபாவம் - என்னபாபமென்று வெறுத்ததும், பயனன்றாகிலும் - பயனன்றாகிலுமென்றதுவும், சேராது - ஸங்கதமாகாது.

(அ) மெய்ந்நின்று - மெய்ந்நின்று கேட்டருளாய் என்றதுமுதல், மங்கவொட்டுக்கு - மங்கவொட்டுன் மாமாயை யென்னுமளவுக்கு,

(க) नासंवत्सरवासिने प्रब्रूयात्" "நாஸம்வத்ஸரவாஸிநேப்ரப்ரூயாத்" என்கிறபடியே, ஒருஸம்வத்ஸரம் பரீக்ஷித்துப் பின்னையுபதேசிக்கக் கடவனாகச்சொல்லுகிறசாஸ்த்ரமர்யாதையாலே இஸ்ஸம்ஸாரிகளநுவர்த்திக்க இவருமுபதேசித்தாரானாலோ வென்கிற சங்கையிலே அருளிச்செய்கிறார். (ப்ரம்ஹநிஷ்டரும்) இத்யாதி, அதாவது:— உபதேஷ்டாவானவிவர், ஸக்ரமமாகவந்துபஸத்திபண்ணினவனுக் கொழிய உபதேசியோமென்றிருக்கும் ப்ரஹ்மநிஷ்டராகில் அப்படிவந்துஉபஸத்தி பண்ணினவர்களுக்கு ப்ரீதியோடே உபதேசிக்கையொழிய அநதிகாரிகளுக்குபதேசிக்கப்புக்கு (உ) "ஏபாவம்பரமே" என்று, ஓ! பாவம், எனக்கிது பரமாவதே? என்றுபதேசோபக்ரமத்திலே வெறுத்துச்சொன்ன உக்திசேராது. இவர்பக்கலுபதேசம் கேட்டவர்கள் ஸம்வத்ஸரவாஸிகளாகில்? உபஹாரபாணிகளாய் நாமநுவர்த்தித் தன்றோபெற்றோமென்றிருக்கையொழிய இவர்க்கு ப்ரதமசிஷ்யரானவர் (ந) "பயனன்றாகிலும்பாங்கலராகிலும் செயல்நன்றாகதிருத்திப் பணிகொள்வான்" என்று, ப்ரயோஜநசூந்யராகிலும் அவிதேயராகிலும் தம்முடைய செயலாலே எல்லாம் நன்றாம்படி திரித்திக்கொள்வாரிவரென்று க்ருதஜ்ஞதையாலே உகந்து சொன்ன உக்தியும் சேராதென்கை. இப்படி ஆசார்யோக்தியும் சிஷ்யோக்தியுமாகையாலே முன்பு சொன்ன ஹேதுக்களாலே விமுகரைக்குறித் துபதேசிக்க, உபதேசசுத்தியாலே, ஸர்வரும்திருந்தி இவருடைய விழவுகளெல்லாம் தீர்ந்ததென்றே கொள்ளவேணுமென்றதாயிற்று. *

வ்யா. (ருஅ) இனியிப்படிபரோபதேசபரரானபோது பகவதநுபவம் விச்சிந்நமாகாதோ வென்கிற சங்கையிலே அருளிச்செய்கிறார் (மெய்ந்நின்று) இத்யாதி, அதாவது:— (ச) "மெய்ந்நின்றுகேட்டருளாய டியேன்செய்யும் விண்ணப்பம்" என்றதுமுதல் (ரு) மங்கவொட்டுன் மாமாயை" என்கிற, தளவாக நடுவுள்ள நாலுப்ரபந்தமும் அநு

(க) (உ) தி-வா. ௨. ௨. ௨. (ந) கண்ணி. பு. ௧0. (ச) தி-வி. ௧. (ரு) தி-வா. ௧0. ௭. ௧0.

மூ. நடுவு அநுபவகர்ப்போபதேஶம்

மூ—(ருகூ) இவற்றுக்கு மந்த்ர வித்யநுஸந்தாந ரகஸ்யங்களோடே சேர்த்தி.

மூ—(கூ0) அளிப்பானடியேன்

நடுவு - மத்யமெல்லாம் அநுபவகர்ப்ப அநுபவத்தோடு கூடின உபதேஶம் - பரோபதேஶம்,

(அ) இவற்றுக்கு-இந்த நாலுப்ரபந்தங்களுக்கும், மந்த்ர-திருமந்த்ரம், விதி - வ்ரஜயென்று விதிக்கிற சரமஶ்லோகம், அநுஸந்தாநரஹஸ்யங்களோடே-ஸதானுஸந்தேயமானத்வயம் இவைகளாகிற ரஹஸ்யங்களோடே, சேர்த்தி - ஸம்பந்தம்.

(அ) அளிப்பான்-ரக்ஷகனுயிருக்குமவன், அடியேன்-ஶேஷபூதன்,

பவமுள்ளே செல்லாநிற்கச் செய்தே உண்டான பரோபதேஶ மென்கை. இவர்தமக்கு அனுபவகர்ப்பமான உபதேஶமும், உபதேஶகர்ப்பமான அநுபவமாய்ச் செல்லுமென்றிறே நம்முதலிகளருளிச் செய்வது-ஆகையாலிவர்க்கு அநுபவவிச்சேதமொருக்காலு மில்லையிறே - ஆக இப்படி, இவருடைய பரோபதேஶ விஷயங்களும், உபதேஶஹேதுக்களும் உபதேஶஸாபல்யமும் உபதேஶந்தான் அநுபவத்தை விட்டிராதென்னுமிடமும் சொல்லித்தாயிற்று. *

வ்யா. (ருகூ) இப்படி இவ்வாழ்வாருடைய அனுபவோபதேஶரூபமான ப்ரபந்தசதுஷ்டயமும் ரஹஸ்யத்ரயார்த்தப்ரதிபாதகமாயிருக்கும்படியைப்ரகாசிப்பிப்பதாகநினைத்து பக்ரமிக்கிறார்.(இவற்றுக்கு)இத்யாதி, அதாவது:—(மெய்நின்று மங்கவொட்டிக்குநடுவு) என்று. கீழ்ப்ரஸ்துதமான இப்ரபந்தங்கள் நாலுக்கும் ஸகலஶாஸ்த்ரதாத்பர்யமான அர்த்தபஞ்சகத்தையும் ஸம்ஶயவிபர்யயமறப்ரதிபாதிக்கு மவையாய் (க) "ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்த்தம்,, ஸர்வமஷ்டாக்ஷ ராந்தஸ்த்தம்" என்னும்படி, ஸகலஶாஸ்த்ர ஸங்க்ரஹமான திருமந்த்ரமும், ஸித்தோபாயவரணத்தை ஸாங்கமாக விதிக்கிற சரமச்லோகமும் உபாயோபேயவரணப்ரார்த்தனைகளை ஸக்ரமமாக ப்ரகாசிப்பியா நின்றுகொண்டு, காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கமாகஸாரஜ்ஞராலேஸதாநுஸந்தாநம் பண்ணப்படும் த்வயமுமாகிற ரஹஸ்யத்ரயத்தோடே சேர்த்தியென்கை. *

வ்யா. (கூ0) அதிலெந்த ப்ரபந்தத்து கெந்த ரஹஸ்யத்தோடே சேற்றியென்னு மாகாங்க்ஷையிலே அத்தைவகையிட்டருளிச் செய்கிறார். (அளிப்பானென்றுதுடங்கி) அதாவது:— (உ) "உயிரளிப்பான் என்று, ப்ரணவத்தில் ப்ரதமாக்ஷரத்தில் தாத்வர்த்தமான பகவத்ரக்ஷகத்வத்தையும் (ந) "அடியேன்" என்று, தத்ரக்ஷ்யபூதமாய் சதுர்த்தி

(க) ஸ்ரீபாஞ்சம். (உ) தி-வி. க. (ந) ஷி. அரு.

ஏ. அடைக்கலஞ்சூடி பொய்யாதானு மழுந்தாரென்று ஸ்வ
ரூபவிரோதி நிவ்ருத்திகளையுந் தாமரையுந்திபெருமாமா
யனுளாகவேவாழிய வென்றுப்ராப்யபலங்களையும்

அடைக்கலம் - அடியேனடியாவி யுனக்கேபரம், சூடி - (பாகவதர்களின் திருவடிகளை சிரஸ்ஸுக்கலங்காரமாக) தரித்து, பொய் - ப்ரக்ருதிஸம்பந்தத்தில், ஆதானும் - கொஞ்சமும், அழுந்தார் - முழுகார், என்று-என்று, ஸ்வரூப-ஜீவேஶ்வரர்களுடைய ஸ்வருபம், விரோதி நிவ்ருத்திகளையும்-விரோதிநிவ்ருத்திகள் (இவைகளையும்) தாமரையுந்தி-தாமரைப்பூவை திருநாபியிலேயுடைய, பெருமாமாயன்-பெரியமஹாஶ்சர்யத்தையுடையவனுக்கு, ஆளாகவே - ஆட்பட்டே, வாழியவென்று-மங்களமுண்டாகக்கடவதென்று, ப்ராப்யபலங்களையும் - ப்ராப்யம் பலம் இவைகளையும்,

உகாரங்களில் சொல்லுகிறபடியே ததநந்யார்ஹஶேஷமாய், ப்ரக்ருதேः பரமாய், ஜ்ஞாநாநந்தலக்ஷணமாக த்ரிதீயாக்ஷரத்தில் சொல்லப்படுகிற ஆத்மஸ்வரூபத்தையும், ப்ரதமாக்ஷரத்தில் சதுர்த்தி ஸம்ப்ரதானத்திலேயாய் (க) "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌤𑍍𑌵𑌾 𑌮𑌹𑌸 𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌯𑍁𑌞𑍍𑌜𑍀𑌤" "ப்ரம்ஹணேத்வா மஹநஓமித்யாத்மாநம்யுஞ்ஜீத" என்கிறபடியே, ப்ரணவத்துக்கு ஆத்மஸமர்ப்பணமும் அர்த்தமாகையாலே, விரோதிபயத்தால் கலங்கினதசையிலே (உ) "அடியேனடியாவியடைக்கலம்" என்றந்த, ஆத்மஸமர்ப்பணத்தையும் (ங) "திருமால் திருப்பேர்வல்லாரடிக்கண்ணிசூடியமாறன்" என்று, ப்ரணவோக்தமான பகவதநந்யார்ஹஶேஷத்வம் ததீயஶேஷத்வபர்யந்தமாயிருக்குமென்று நமஸ்ஸிலார்த்தமாகச் சொல்லப்படுகிற ததீயஶேஷத்வத்தையும் (ச) "பொய்நின்றஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும்" என்றும், (ரு) "யாதானுமோராக்கையில் புக்கங்காப்புண்டுமாப்பவிழ்ந்தும்" என்றும், ஷஷ்ட்யந்தமான மகாரத்தால் சொல்லப்பட்ட அஹங்காரமமகாரங்களாகிற அநாத்மந்யாத்மபுத்யாதிரூப அவித்யையும், தத்கார்யமான அக்ருத்யகரணாதிகளையும், தத்கார்யமாய்வரும் தேவமனுஷ்யாதிரூபமான ப்ரகிருதிஸம்பந்தத்தையும் (சா) "வன்சேற்றள்ளல் பொய்நிலத்தழுந்தார்" என்று, தந்நிஷேதவாசியான நந்நாலே சொல்லப்பட்ட அவித்யைமுதலாக ஸம்ஸாரகர்த்தமமீருக உள்ளவிரோதி நிவ்ருத்தியையும் சொல்லுகையாலே ஸர்வரக்ஷகனை ஸர்வேஶ்வரனுக்கு அநந்யார்ஹஶேஷமாய் ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் ததீயஶேஷத்வபர்யந்தமாயிருக்கும் ஆத்மஸ்வரூபத்தையும், ஸம்ஸாரஹேதுபூதாவித்யாதிகளான விரோதிகளுடைய நிவ்ருத்தியையும், ப்ரதிபாதிக்கிற திருவிருத்தம் ப்ரதம மத்யம பதங்களிரண்டோடும் சேர்ந்திருக்கையாலும், (எ) "தாமரையுந்தி தனிப்பெருநாயக" என்று துடங்கி, (அ) "எம்பெருமாமாயன்" என்று தலைக்கட்டுகையாலே

(க) (உ) தி - வி. அரு. (ங) ஷை கoo. (ச) ஷை. க. (ரு) ஷை கூரு. (சா) ஷை கoo. (எ) திருவாசி-ம்-க. (அ) ஷை எ,

மூ. நெறிகாட்டி மனத்துக்கொண்டு கண்ணனலடித்து கண்டிலமால் யாதாகிலென்றுபாயத்தையும் சொன்னவை மந்த்ரஸ்லோகங்களோடே சேரும்.

நெறிகாட்டி - உபாயாந்தரங்களைக்காட்டி, மநத்துக்கொண்டு - அத்யவஸித்துக்கொண்டு, கண்ணனல் - க்ருஷ்ணனாலே, அடித்து - போக்கடித்து, கண்டிலம் - காண்கிறிலோம். ஆல் - என்னவாச்சர்யம், யாதாகில் - என்னவானால், என்று - என்கிறபதங்களால், உபாயத்தையும் - உபாயஸ்வரூபத்தையும், சொன்னவை - சொன்னவிடங்கள், மந்த்ர - திருமந்த்ரம், ஸ்லோகங்களோடே - சரமஸ்லோகம் - (இவைகளோடே) சேரும் - ஸமாநார்த்தகங்கள்.

நாராயணபதத்தில் சொல்லப்படுகிற உபயவிபூதியுக்தமான ப்ராப்யவஸ்துவையும், (க) "தனியாக்கைவைத்தடியவர்க்கினி நாமாளாகவேயிசையின்சொல்" என்றும், (உ) "ஊழிதோறூழியோவாதுவாழியவென்றுயாந்தொழ விசையுங்கொல்" என்றும், அந்தபதத்தில் சதுர்த்த்யர்த்தமான பல ஸ்வரூபத்தைம் சொல்லுகையாலே ப்ராப்யபலங்களிரண்டையும், ப்ரதிபாதிக்கிற திருவாசிரியம் ப்ரக்ருதிப்ரத்யயாம்ஸங்களாலே; தது பப்ரதிபாதகமான த்ருதீய பதத்தோடே சேர்ந்திருக்கையாலும், இரண்டுப்ரபந்தமும் திருமந்த்ரத்தோடேசெரும். (ஙு) "நெறிகாட்டி நீக்குதியோ" என்று, உபாயாந்தரங்களைக்காட்டி என்னையகற்றப்பார்க்கிறாயோ என்கையாலே "ஸர்வதர்மாந்பரித்யஜ்ய" என்கிற உபாயாந்தரங்களினுடைய பரித்யாஜ்யதையையும், (ச) "வெங்கோட்டேறேழுடனே கொன்றானையே மநத்துக்கொண்டு" என்று, மாமேகம் ஸரணம் வ்ரஜ" என்கிற மாநஸாத்யவஸாயரூபமான உபாயஸ்வீகாரத்தையும், (ரு) "சீரார்மனத்தலைவன்துன்பத்தைமாற்றினேன்வானோரினத்தலைவன் கண்ணனால்யான்" என்றும், (சு) எம்மிறையார்தந்தவருளென்னும் தண்டாலடித்து வல்வினையைக்காணும்மலையும்புகக்கடிவான்" என்றும், (எ) "[illegible]" அஹம்த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி என்று, உபாயபூதன்பண்ணும் ஸர்வபாபவிமோசநத்தையும் (அ) "வானோமறிகடலோ" என்று துடங்கி, (கூ) "வன்துயரை மருங்கு கண்டிலமால்" என்று, விரோதிகளானவை போனவிடம் தெரியாதபடி தன்னையேவிட்டு போய்த்தென்கையாலே நானும்வேண்டா நீயும்வேண்டா அவை தன்னையேவிட்டுப்போமென்கிற ணிஜர்த்தத்தையும் (க0) "அடர்பொன்முடியானை" என்று துடங்கி (கக) "யாதாகில் யாதேயினி" என்று, இனிகர்மமிருந்தென்? நசித்தென்? எதானால் நமக்கென்வருமென்று "மாசுச:" என்கிறபதத்தாலே பலிதமான நிர்ப்பரத்வாநுஸந்தாநத்தையுஞ் சொல்லுகையாலே, உபாய ப்ரதிபாதகமாயிருக்கிற திருவந்தாதிசரமஸ்லோகத்தோடேசேருமென்கை. (உபாயத்தையும் சொன்னவை) என்றது, சொன்ன ப்ரபந்தங்களென்றபடி *

(க) திருவாசிரியம் - ஙு. (உ) ஷை ச. (ங) பெரிய - அ. கூ. (ச) ஷை சஅ. (ரு) ஷை. உரு. (சு) ஷை உகூ. (எ) ஸ்ரீ கீ. கஅ. சுசு. (அ) பெரிய. அ. ருச. (கூ) ஷை. (க0) ஷை எ0. (கக) ஷை.

மூ—(௱க) த்வயார்த்தம் தீர்க்கஶரணாகதியென்றது ஸாரஸங்க்ரஹத்திலே.

(அ) த்வயார்த்தம் - த்வயத்தினர்த்தத்தை ப்ரதிபாதிக்கிறது, தீர்க்க ஶரணாகதி - தீர்க்கஶரணாகதியென்கிற திருவாய்மொழி, என்றது - என்று சொல்லப்பட்டது, ஸாரஸங்க்ரஹத்திலே - பிள்ளை லோகாசார்யருடைய அந்த க்ரந்தத்திலே.

வ்யா. (௱க) சரம ப்ரபந்தமான திருவாய்மொழியின், த்வயார்த்த ப்ரதிபாதகத்வம் விஸ்தரேணப்பாதிக்க வேண்டுகையாலும், தத்விஷயமாகத் தம்முடைய திருத்தமையனார் பிள்ளை, ஒருப்ரபந்தம் முன்பேயிட்டருளுகையாலும், அதிலே தர்சிப்பித்துவிடக்கடவோமென்று, (த்வயார்த்தம் தீர்க்கசரணாகதியென்றது ஸாரஸங்க்ரஹத்திலே) என்கிறார். அதாவது :— தீர்க்கஶரணாகதியென்று ப்ரஸித்தமாயிருக்கிற திருவாய்மொழி பத்துப்பத்தாலும், ஸ்ரீயஃபதித்வம் முதலாக கைங்கர்ய விரோதிநிவ்ருத்திபர்யந்தமாக, த்வயத்தில் ப்ரதிபாதிதமானபதார்த்தத்தையும், ப்ரதிபாதிக்கையாலே த்வயார்த்தமென்று சொல்லப்பட்டது. பிள்ளையருளிச்செய்த ஸாரஸங்க்ரஹமாகிற ப்ரபந்தத்திலேயென்கை. அந்த ப்ரபந்தமாவதுதானேதென்னில்? அகிலஜகத்திதாநுசாஸநபரமான வேதத்திலும் வேதோபப்ருஹ்மணார்த்தமாக ப்ரவ்ருத்தங்களான ஸ்ம்ருதீதிஹாஸ புராணாதி ஸமஸ்த ஶாஸ்த்ரங்களிலும் ப்ரஸித்தமாய் ஸர்வேஶ்வர ஸர்வஸ்வபமாய், ஆசார்யர்களுக்கு ஆபத்தநமாயிருந்துள்ள அர்த்தத்வயத்தை ப்ரதிபாதிக்கையாலே த்வயமென்றுதிருநாமத்தை யுடைத்தாயிருந்துள்ள வாக்யத்வயம் பதார்த்தத்தைப்ரதிபாதிக்கிறது. அதாகிறது:— ஸ்ரீயஃபதித்வமும், நாராயணத்வமும், நாராயணனுடைய ஸர்வலோக ஶரண்யமான சரணாரவிந்தயுகளமும், அதினுடைய ப்ராபகத்வமும், தத்வோசரமாய் சேதநகதமாயிருந்துள்ள ப்ரார்த்தநாகர்ப்பவிஸ்ரம்பமும், லக்ஷ்மீதத்வல்லபருடைய நிகிலாத்மகைங்கர்ய ப்ரதாநார்த்த நித்யஸம்பந்தமும், கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியானவிஶவரனுடைய நிரதிஶயபோக்யதையும், ஸர்வஸ்வாமித்வமும், நித்யகைங்கர்யமும், கைங்கர்யப்ரதிபந்தக நிஶ்ஶேஷநிபர்ஹணமுமாகிற அர்த்தவிஶேஷங்கள் ஈத்ருஶார்த்தவிஶேஷ ப்ரகாஶகமான மந்த்ரவிஶேஷத்தினுடைய விவரணரூபமாய், அபௌருஷேயோபநிஷத்தாயிருந்துள்ள திருவாய்மொழியில் பத்துபத்தாலும் இப்பதார்த்தத்தையும், பூர்வாசார்யர்கள் அடைவேபேரர்த்தநுஸந்தித்துப்போருவர்கள். அதில்முதல்பத்தால் (க) "மலர்மகள்விரும்பும் நமரும்பெறலடிகள்" என்றும் (உ.) "மலராள்மைந்தனை" என்றும், "திருமகளார்தனிக்கேள்வன்" என்றும் "திருவின்மணாளன்" என்றும், "பூமகளார்தனிக்கேள்வன்" என்றும்,

(க) தி - வா, க. ங., க.

"மைந்தனைமலராள் மணவாளனை" என்றும், "ஸ்ரீயஃபதித்வம் ப்ரதிபாதிதமாயிற்று. இரண்டாம்பத்தால் "எம்பெருமான் நாரணற்கு" என்றும், "எம்பிரானெம்மான் நாராயணனாலே" என்றும், "நாரணன்முழுவேழுலகுக்கும்நாதன்" என்றும் "நாராயணத்வம் ப்ரதிபாதிதமாயிற்று. மூன்றாம்பத்தால் "நாண்மலராமடித்தாமரை" என்றும், "அங்கதிரடியன்" என்றும், "அவன்பாதபங்கயம்" என்றும் "அன்றுதேர்கடவியபெருமான்கனைகழல்" என்றும், "மூவுலகம்தொழுதேற்றும் சீரடியான்" என்றும், நாராயணனுடைய ஸர்வலோக ஶரண்யமான சரணாரவிந்தயுகளம் ப்ரதிபாதிதமாயிற்று. நாலாம்பத்தால்: — "இலங்கைநகரம்பெரியுய்த்தவர்" என்றும், "வல்வினைதீர்க்கும்கண்ணனை" என்றும், "தொல்வினைதீர" என்றும், "வெய்யநோய்கள்முழுதும் வியன்ஞாலத்துவீயவே"என்றும், 'மேவிநின்று தொழுவார்வினைபோக" என்றும், "பிறந்தும்செத்தும் நின்றிடரும்பேதமை தீர்ந்தொழிந்தேன்" என்றும், "நோயேமூப்பிறப்புப் பிணியேயென்றிவையொழிய" என்றும், "வேட்கையெல்லாம்விடுத்து உன்கூட்டரிய திருவடிக்கள்கூட்டினை" என்றும், "அஃதேயுய்யப்புகுமாறு" என்றும், "உய்வுபாயமற்றின்மைதேறி" என்றும், அநிஷ்ட நிவ்ருத்தீஷ்டப்ராப்திகரத்வ லக்ஷணமான ப்ராபகத்வம்ப்ரதிபாதிதமாயிற்று. ஐந்தாம்பத்தால்:—"தமியேனுக்கருளாய்" என்றும், "ஆறெனக்குநின்பாதமேசரணாக" என்றும், "உன்னாலல்லால்" என்றும், "கழல்களவையே" ஶரணாகக்கொண்ட" என்றும், "நம்பெருமானடிமேல்சேமங்கொள் தென்குருகூர்ச்சடகோபன்"என்றும், நாகணைமிசைநம்பிரான்பரனே ஶரண்நமக்கு" என்றும், "நாடொருமேகசிந்தயனாய்" என்றும் ப்ரார்த்தனாகர்ப்பவிஸ்ரம்பம் ப்ரதிபாதிதமாயிற்று. ஆறாம்பத்தால்: —"திருமாமகளிருந்தாம்மலிந்திருந்து" என்றும், "அடிமைசெய்வார் திருமாலுக்கே" என்றும், "ஓசிந்தவொண்மலராள்கொழுநன்" என்றும், "என்திருமார்வற்கு" என்றும், "கோலத்திருமாமகளோடுன்னை" என்றும், கைங்கர்யப்ரதாநார்த்தமான நித்யஸம்பந்தம் ப்ரதிபாதிதமாயிற்று. ஏழாம்பத்தால்:— "கன்னலேயமுதே" என்றும், "கொடியேன்பருகி கின்னமுதே" என்றும், "அலைகடல்கடைந்தவாரமுதே" "திருமாலின்சீரிறப்பெதிர்காலம் பருகிலுமார்வனே" என்றும், "இவ்வேழுலகையின்பம்பயக்க" என்றும், கைங்கர்யப்ரதிஸம்பந்தியான ஈஶ்வரனுடைய நிரதிஶயபோக்யதை ப்ரதிபாதிதமாயிற்று. எட்டாம்பத்தால்:— "அடியனேன் பெரியவம்மானே" என்றும் "விண்ணவர் கோன்நங்கள்கோனே" என்றும், "அமர்ந்தநாதனே" என்றும், "மூவுலகாளி" என்றும், "நேர்பட்டநிறைமூவுலகுக்கும்நாயகன்" என்றும், ஸர்வஸ்வாமித்வம் ப்ரதிபாதிதமாயிற்று. ஒன்பதாம்பத்தால்:— "பண்டைநாளாலே நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்கொண்டு நின்கோயில்சீய்த்து" என்றும், "நின்தீர்த்தவடிமைக்குற்றேவல்" என்றும், "துடர்ந்துகுற்றேவல் செய்து" என்றும், "கொடுவினை

மூ—(௬௨) மூன்றில் சுருக்கியவைந்தையும் உயர்

(அ) மூன்றில் சுருக்கிய-மூன்றக்ஷரத்தில் சுருக்கின, ஐந்தையும் - ஐந்தர்த்தத்தையும், உயர் - உயர்வற,

யேனும்பிடிக்க" என்றும், "உறுவதிதுவென்றனக்காட்பட்டு "என்றும், "ஆட்கொள்வானொத்து" என்றும், நானும் மீளாவடிமைப் பணிசெய்யப் புகுந்தேன்" என்றும், நித்யகைங்கர்யம் ப்ரதிபாதிதமாயிற்று. பத்தாம்பத்தால்:—"துயர்கெடுங்கடிது" என்றும், "கெடுமிடராய"என்றும், "எழுமையுமேதஞ்சாரா" என்றும், "தீரும் நோய் வினைகளெல்லாம்" என்றும், "இப்பிறப்பறுக்கும்" என்றும், "உன்தன்திருவுள்ளமிடர் கெடுந்தோறும்' "நாங்கள் வியக்கவின்புறுதுமெம்பெண்மையாற்றோம்" என்றும், பிணியொன்றும், சாராப்பிறவிகெடுத்தாளும்" என்றும், "பிறவித்துயர் கடிந்தோம்" என்றும், " விண்டேயொழிந்த வினையாயினவெல்லாம்" என்றும், "அமராவினைகளே" என்றும், "கடுநரகம்புகலொழித்த" என்றும், "பிறவிகெடுத்தேன்" என்றும், "தடுமாற்றவினைகள் தவிர்த்தான்" என்றும், "அந்திதொழும்சொல்லு" என்றும், " அவாவற்றுவீபெற்ற " என்றும், கைங்கர்ய ப்ரதிபந்தக நிஶ்ஶேஷ நிபர்ஹணம் ப்ரதிபாதிதமாயிற்று. இப்படி, ஸ்ரீயஃபதித்வப்ரமுகங்களாய் கைங்கர்யப்ரதிபந்தக நிஶ்ஶேஷநிபர்ஹணபர்யந்தங்களாயிருந்துள்ள, உபாதேயார்த்தங்களை ப்ரதிபாதிக்கக்கடவதாயிருந்துள்ளவாக்யத்வயமும், திருவாய்மொழியும், பகவச்சரணார்த்திகளாய் அநந்யோபாயராயிருக்கு மதிகாரிகளுக்கு காலக்ஷேபஹேதுவாகவும், போகஹேதுவாகவும், ஈஶ்வரப்ரீதிஹேதுவாகவும், யாவச்சரீரபாதமநுஸந்தேயமென்றருளிச்செய்தப்ரபந்தம். இப்படி திருவாய்மொழியினுடைய த்வயார்த்தப்ரதிபாதகத்வத்தை விஶதமாக வாசார்யர்களருளிச்செய்து வைக்கையாலே ஸ்வப்ரபந்தத்தில் வக்தவ்யாம் ஶத்தை தத்ப்ரபந்தத்திலே தர்சிப்பித்தாராயிற்று. ✻

வ்யா. (௬௨) ஆக, இப்படித்வயார்த்த ப்ரதிபாதகதயா தீர்க்கஶரணாகதியாயிருக்கிற திருவாய்மொழிக்கு மற்றுமாசார்யர்களருளிச்செய்யுமர்த்த யோஜனைகளை அருளிச்செய்கிறார். (மூன்றில்சுருக்கிய) என்று துடங்கி, அதாவது:— மந்த்ர ஶ்லோகங்களில் ஸங்க்ரஹோக்தங்களான வர்தவிஶேஷங்களைத்வயத்திலேவிவரிக்குமாப்போலே, பூர்வப்ரபந்தத்ரயத்திலும் ஸங்ரஹேணசொல்லப்பட்ட அர்த்தபஞ்சகத்தையும், ஶ்ருதிச்சாயையாலே அந்வயரூபேணஸ்வாநுபவ முகத்தாலே பரத்வத்திலே பரத்வத்தை ப்ரதிபாதித்த ( க ) " உயர்வரஉயர்நலமும்" இதிஹாஸபுராணப்ரக்ரியையாலே, அந்வயவ்யதிரேகங்களிரண்டாலும், பரோபதேஶமுகத்தாலே அவதாரத்திலே பரத்வத்தைப்ரதிபாதித்த

(க) தி-வா, க, க, க.

மூ. திண் அணை யொன்று பயிலேறு கண் கருவீடு சொன்னலொருக்கொண்டநோற்ற நாலும் எம்மாவொழி நெடுவேயென்கிற விருபதிலே

திண் - திண்ணன்வீடு, அணை - அணைவதரவணை, ஒன்று - ஒன்றும்தேவு, பயில் - பயிலுஞ்சுடரொளி, ஏறு - ஏருளுமிறையோனும், கண் - கண்கள்சிவந்து, கரு - கருமாணிக்கமலை, வீடு - வீடுமின்முற்றவும், சொன்னல் - சொன்னல்விரோதம், ஒரு - ஒருநாயகம், கொண்ட - கொண்ட பெண்டீர், நோற்றநாலும் - நோற்றநோன்பு, ஆராவமுது, மானேய்நோக்கி, பிறந்தவாறு, இவைநாலும், எம்மா - எம்மாவீடு, ஒழி-ஒழிவில்காலம், நெடு - நெடுமாற்கடிமை, வேய் - வேய்மருதோளிணை, என்கிறவிருபதிலே - இவையாகிறதிருவாய்மொழிகளிருபதுகளிலும்,

(க) "திண்ணன்வீடும்" மோக்ஷப்ரதத்வகதநத்தாலே பரத்வத்தைப்ரதிபாதித்து (௨) "அணைவதரவணையும்" அர்ச்சாவதாரத்திலே பரத்வத்தை ப்ரதிபாதித்த (௩) "ஒன்றும்தேவும்" ஆகிற, நாலுதிருவாய்மொழியாலும், பரஸ்வரூபமும், பகவச்சேஷத்வத்திலும் தத்காஷ்டையான பாகவத சேஷத்வமே ஆத்மாவுக்குத்தேஶ்யமென்று ப்ரதிபாதித்த (௪) "பயிலும் சுடரொளியும்" சேஷத்வபஹிர்ப் பூதங்களான ஆத்மாத்மீயங்கள் த்யாஜ்யமென்கிற வ்யதிரேகத்தாலே சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபமென்று ப்ரதிபாதித்த (௫) "ஏருளுமிறையோனும்" பகவானுக்கிவ் வாத்மவஸ்து ப்ரகாரதயாசேஷமாய் ப்ரக்ருதேஃபரமாய் ஜ்ஞாநாநந்த லக்ஷணமாயிருக்குமென்னுமத்தைப்ரதிபாதித்த (௬) "கண்கள்சிவந்தும்" அந்யசேஷத்வ ப்ரஸங்கமு மஸஹ்யமாம்படியான அதின் அநந்யார்ஹத்வத்தைப்ரதிபாதித்த (எ) "கருமாணிக்கமலையும்" ஆகிற நாலுதிருவாய்மொழியாலும் ஸ்வஸ்வரூபமும், பகவத்வ்யதிரிக்த விஷயங்களைப்பற்றுகைக்குடலான அஹங்காரமமகாரங்கள் த்யாஜ்யமென்ற (அ) "வீடுமின்முற்றவும்" அஸேவ்யஸேவைத் த்யாஜ்யமென்ற (௯) "சொன்னல்விரோதமும்" ஐஶ்வர்யகைவல்யங்கள் த்யாஜமென்ற (௧0) ஒருநாயகமும்" ஶரீரஸம்பந்த நிபந்தனமாகவரும் பரிக்ரஹங்கள் த்யாஜ்யமென்ற (௧௧) "கொண்டபெண்டீரும்" ஆகிற நாலுதிருவாய்மொழியாலும் விரோதிஸ்வரூபமும், "நோற்றநோன்பிலேன்" என்று, ஆகிஞ்சின்யபூர்வகமாக "ஆறெனக்கு நின்பாதமே ஶரணகத் தந்தொழிந்தாய்" என்ற, (௧௨) 'நோற்றநோன்பும்' "களைவாய்துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்" என்று, அநந்யகதித்வபூர்வகமாக "கழல்களவையேசரணகக்கொண்ட" என்ற (௧௩) "ஆராவமுதும்"

(க) ஷை ௨. ௨. க. (௨) ஷை அ. க. (௩) ஷை ௪. க0. க. (௪) ஷை ௩. எ. க. (௫) ஷை ௪. அ. க. (௬) ஷை அ. அ. க. (எ) ஷை ௯. க. (அ) ஷை க. ௨. க. (௯) ஷை ௩. ௯. க. (க0) ஷை ௪. க. க. (கக) ஷை ௯. ௯. க. (க௨) ஷை ௫. எ. க. (க௩) ஷை ௫. அ. க.

மூ. விஶதமாக்கி எண்பதிலே பரப்புகையாலே ஐந்தையுமருளினன் வீடுபெற்றவென்கையாலே ஐந்திலு மிரண்டையும் தொழுது களித்தேன்சொல்லுப்பெற்றேன் பணிசெயென்கிற

விஶதமாக்கி - பரக்கச்சொல்லி, எண்பதிலே - எண்பது திருவாய்மொழிகளிலே, பரப்புகையாலே - விஸ்தரிப்பிக்கையாலே, ஐந்தையும் - அர்த்தபஞ்சகத்தையும், அருளினன் - க்ருபைபண்ணினன், வீடுபெற்ற - மோக்ஷத்தையடைந்த, என்கையாலே - என்றுசொல்லுகையாலே, ஐந்திலும் - அர்த்தபஞ்சகத்திலும், இரண்டையும் - உபாயோபேயங்களிரண்டையும், தொழுது - களித்தேன், சொல்லுப்பெற்றேன், பணிசெயென்கிற - இவைகளாலே சொல்லப்பட்ட,

"வைகலும்வினையேன்மெலிய" என்று, பக்திபாரவஶ்யம் முன்னாக "நம்பெருமானடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச்சடகோபன்" என்ற (க) "மானேய் நோக்கும்" "எனதாவியை நின்று நின்றுருக்கியுண்கின்ற" என்று, தரித்துநின்றவன் குணங்களை யநுஸந்திக்கமாட்டாதசைதில்யம் செல்லாநிற்கிற "நாகணைமிசைநம்பிரான் சரணேசரண்நமக்கென்று நாடோறுமேகசிந்தயனாய்" என்ற, (உ) "பிறந்தவாறும்" ஆகிற நாலு திருவாய்மொழியாலும் உபாய ஸ்வரூபமும், "தனக்கேயாக" என்று, கைங்கர்யத்தில் ஸ்வார்த்ததா நிவ்ருத்தியையபேக்ஷித்த" (௩) "எம்மாவீடும்" ஸர்வகாலாதி விசிஷ்டமான ஸகலஶேஷவ்ருத்திகளையும் பண்ணவேணுமென்று ப்ரார்த்தித்த (ச) "ஒழிவில்காலமும்" அதுதான் பாகவதகைங்கர்யபர்யந்தமாகவேணுமென்று மநோரதித்த" (ரு) "நெடுமால்கடிமையும்" அது தன்னில், பரஸம்ருத்யேக ப்ரயோஜனத்வத்தைச் சொன்ன (சு) "வேய்மருதோளிணையும்" ஆகிற, நாலு திருவாய்மொழியாலும் பலஸ்வரூபமாகக்கொண்டு இருபது திருவாய்மொழியிலே விஶதமாகப்ரதிபாதித்து, மற்றை யெண்பது திருவாய்மொழியாலும் அது தன்னையே விஸ்தரிக்கையாலே அர்த்தபஞ்சகத்தையும், இப்ரபந்தத்துக்கு ப்ரமேயமென்னும், "மயர்வறமதிநலமருளினன்" என்றுதுடங்கி (எ) "அவாவற்றுவீடுபெற்ற" என்று, தலைக்கட்டுகையாலே அவ்வைந்திலும் வைத்துக்கொண்டு ப்ரதானமான உபாயோபேயங்களிரண்டையும், இதுக்கு ப்ரமேயமென்றும், தொழுதெழென்மனனே" (அ) "விருப்பேபெற்றமுதமுண்டுகளித்தேன்" (கூ) "மேலைத்தொண்டுகளித்தந்தி தொழுஞ் சொல்லுப்பெற்றேன்" என்று,சொல்லப்படுகிற, பத்தாஞ்ஜலிபுடத்வ ஹ்ருஷ்டத்வ நமயித்யேவவாதித்வங்களாகிற முக்தலக்ஷணத்தா

(க) ஷை ௫. கூ. க. (உ) ஷை ௫. ௧0. க. (௩) ஷை. உ. கூ. க. (ச) ஷை ௩. ௩. க. (ரு) ஷை அ. ௧0. க. (சு) ஷை ௧0. ௩. க. (எ) தி-வா. ௧0. ௧0. ௧௧. (அ) ஷை. ௧0. ௬. (கூ) ஷை எ.

மூ. முக்தலக்ஷணவ்ருத்தியாலே இரண்டிலொன்றையுமிதுக்கு ப்ரமேயமென்னும்.

மூ—(௬௩) ரஹஸ்யத்துக்கோரெழுத்துமதுக்கோருருவும் போலேயானவற்றிலே

முக்த - முக்தர்களுடைய, லக்ஷண - அடையாளமாயிருக்கிற, வ்ருத்தியாலே - வ்யாபாரத்தாலே, இரண்டில் - உபாயோபேயங்களிரண்டிலும், ஒன்றையும் - உபேயமொன்றையுமே, இதுக்கு - இப்ரபந்தத்துக்கு, ப்ரமேயமென்னும் - ப்ரமேயமென்றுசொல்லும்,

(அ) ரஹஸ்யத்துக்கு - (திருமந்த்ரமாகிற) ரஹஸ்யத்துக்கு, ஓரெழுத்தும் - ஓ ரக்ஷரமும், அதுக்கு - அவ்வக்ஷரத்துக்கு, ஓருருவம்போலே - ப்ரக்ருதியான வகாரம்போலே, ஆனவற்றிலே - ஸங்க்ரஹமான முதற்பாட்டுக்களிலே,

லும், விபங்பவ ? என்கிற, அவர்களைப்போலே (௧) "சொற்பணிசெயாயிரம்" என்று சொல்லப்படுகிற, வாசிகவ்ருத்தியாலும், அவ்விரண்டிலும் வைத்துக்கொண்டு உபேயமொன்றையுமே இதுக்கு ப்ரமேயமென்று சொல்லுமென்கை. (இருபதிலேவிஶதமாக்கி எண்பதிலேபரப்புகையாலே ஐந்தையுமிதுக்கு ப்ரமேயமென்னும்.) என்றவிது, இப்ரபந்தங்களில் ஸூக்திகள் ப்ராப்யனான வெம்பெருமானுடைய ஸ்வரூப ப்ரதிபாதநபரமாயிருக்கும் சில, ப்ராப்தாவான ப்ரத்யகாத்ம ஸ்வரூப விஷயமாயிருக்கும்சில, ப்ராப்த்யுபாயத்தைச்சொல்லும்சில, பலத்தைச்சொல்லும் சில, ப்ராப்திவிரோதியைச்சொல்லும்சில, அவசிஷ்டமானவை இவற்றுக்குபபாதகங்களாயிருக்குமென்று யீட்டில்யோஜித்தக்ரமம். உபாயோபேயங்களிரண்டையுமிதுக்கு ப்ரமேயமென்னுமென்றவிது இவையிரண்டுமே ப்ரதாநப்ரமேயம். இவ்வுபாயோபேயங்களுக்கதிகாரியின்னானென்கைக்காக ப்ரத்யகாத்ம ஸ்வரூபமும், உபாயபூதனும் உபேயவிஷயமும் இன்னாரென்கைக்காக பரஸ்வரூபமும், உபேயப்ரதிபந்தகமாய் உபாயநிவர்த்யமாயிருக்குமதின்னதென்கைக்காக விரோதி ஸ்வரூபமும்சொல்லுகிற வித்தனையென்று நினைத்து உபேயமொன்றுமிதுக்குப்ரமேயமென்னுமென்றவிது இவற்றிலுத்தேஶ்யம் பலம். ததர்த்தமாகமற்றுள்ளநாலர்த்தமுஞ் சொல்லுகிறது என்று ஈட்டில் சொன்னபடியேகைங்கர்யமே ப்ரதாநம். மற்றைநாலும் சொன்னது கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தியையும் ததாஶ்ரயத்தையும், தத்விரோதியையும், அவ்விரோதிநிவர்த்தகத்தையும் அறிவிக்கைக்காக வாகையாலே தச்சேஷமாகச்சொன்னவித்தனை யென்றுநினைத்து. *

வ்யா. (௬௩) இனிப்ரதமசரம ப்ரபந்தங்களினுடைய ஸங்க்ரஹங்களான முதற்பாட்டுக்களில் ப்ரதிபாத்யார்த்தங்களை ஸ்பஷ்டமாகவருளிச்செய்கிறார். (ரஹஸ்யத்துக்கு) என்றுதொடங்கி, அதாவது:— ஓரெழுத்து ஓருருவென்னும்படி திருமந்த்ரமாகிற ரஹஸ்யத்துக்கு

(௧) ஷ ௧. ௧௦. ௧௧.

மூ. இமையோரதிபதி அடியேன்மனனேபொய் மயர்வு பிறந்தருளினன் விண்ணப்பம் தொழு தெழன்ற பஞ்சகத்தோடே அவித்யாதிஸ்வரூப

இமையோர் - இமையோர்தலைவா, அதிபதி - அயர்வறுமமரர்களதிபதி, அடியேன்-அடியேன், மனனே - தொழுதெழன்மனனே, பொய் - பொய்நின்றஞானம், மயர்வு - மயர்வற, பிறந்து - எந்நின்ற யோனியுமாய்ப்பிறந்தாய், அருளினன் - மதினலமருளினன், விண்ணப்பம் - அடியேன் செய்யும் விண்ணப்பம், தொழுதெழு - தொழுதெழு, என்ற - இவைகளாலே சொல்லப்பட்ட, பஞ்சகத்தோடே - அர்த்தபஞ்சகத்தோடே, அவித்யாதி - அவித்யை முதலானவைகளுடைய, ஸ்வரூப - ஸ்வரூபம்,

ஸங்க்ரஹமாய் "ஓமித்யேகாக்ஷரம், என்றேகாக்ஷரமாயிருக்கிறப்ரணவமும், (க) "தஸ்யப்ரக்ருதிலீநஸ்ய" "தஸ்யப்ரக்ருதிலீநஸ்ய" என்கிறபடியே, அந்தப்ரணவந்தனக்கு ஸங்க்ரஹமாயிருக்கிற அகாரமும்போலே, திருவிருத்தம் திருவாய்மொழியாகிற ப்ரபந்தங்களுக்கு ஸங்க்ரஹங்களான முதற்பாட்டுக்களிலே "இமையோர்தலைவா" என்றும், "அயர்வறுமமரர்களதிபதி" என்றும், ஸூரிஸேவ்யமாய் ஸர்வாதிகமாயிருக்கும் பரஸ்வரூபத்தையும், "அடியேன்" என்றும், "என்மனனே" என்றும், ஶேஷபூதமாய் பரிஶுத்தாந்தꞏகரணமாயிருக்கும் ஸ்வஸ்வரூபத்தையும், "பொய்நின்ற ஞானமும்பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும்" என்றும், "மயர்வு" என்றும், அவித்யாதிகளான விரோதிஸ்வரூபத்தையும், "உயிரளிப்பானென்னின்ற யோனியுமாய்ப்பிறந்தாய்" என்றும் "மதிநலமருளினன்" என்றும்; லோகரக்ஷணார்த்தமாக அநேகாவதாரங்களைப்பண்ணின ஸர்வேஶ்வரனுடைய க்ருபையே உபாயமென்று உபாயஸ்வரூபத்தையும் "செய்யும்விண்ணப்பம்" என்றும், "தொழுதெழு" என்றும், ஶேஷிவிஷயத்தில்கரணத்ரயத்தாலும், பண்ணும்கைங்கர்யமே பரமபுருஷார்த்தமென்று பலஸ்வரூபத்தையுமாகக்கொண்டு ஸங்க்ரஹித்துச்சொன்ன அர்த்தபஞ்சகத்தோடே "பொய்நின்றஞானம்"இத்யாதியாலே, அவித்யாதிகளைச்சொல்லுகிற வளவில் உத்பத்திவிநாஶாதியோகத்தாலே அஸத்யஶப்தவாச்யமான அசேதநவிஷயத்திலாத்மஜ்ஞாநமும், அந்ததேஹாத்மாபிமானமடியான ஸாம்ஸாரிகதுஷ்கர்மப்ரவ்ருத்தியும், அக்கர்மமடியாகவரக்கடவதானமாம்ஸாஸ்ருகாதிமலரூபதேஹஸம்பந்தமுமென்றவற்றினுடையஸ்வரூபங்களும், விப்ரதிபத்திஹேதுத்வம், ஸம்ஸாரஹேதுத்வம் ஸ்வரூபதிரோதாயகத்வம் உத்தரோத்தரங்களில் பூர்வபூர்வகாரணத்வம் "இனியாமுறுமை" என்கையாலே, அவற்றினனாதித்வம், ஸோபாதிகத்வம் "மயர்வறமதிநலமருளினன்" என்கையாலே,

(க) தைத்தரீயகே - நாராயணே இப்பக்கத்திலும் ௩௦௬ - ம் பக்கத்திலுமிருக்கிற பாசுரங்கள், தி - வா. க, க, க - ம். தி - வி. க - மே.

மூ. ஸ்வபாவாத்மேஶ்வரபந்தரக்ஷண க்ரமகுணவிக்ரஹவி பூதியோக ததீயாபிமாநோபதேஶ விஷயாந்யாபதேஶ ஹேத்வாதிகளும் ஸங்க்ரஹீதம்.

மூ—(கூச) அடிதொழுதெழுஎன்றவிதிலே வஸ்துநிர்த்தேஶ

ஸ்வபாவ - ஸ்வபாவம் - ஆத்மேஶ்வர - ஜீவாத்மா மீஶ்வரன் இவர்களுடைய, பந்த - ஸம்பந்தம், ரக்ஷணக்ரம - ரக்ஷணத்தின்க்ரமம், குண- குணங்கள், விக்ரஹ - விக்ரஹங்கள், விபூதி - விபூதிகள், யோக - ஸம்பந்தம், ததீய - பாகவதருடைய, அபிமான - அபிமானம், (இவைகளுடைய) உபதேஶ - உபதேஶத்தை, விஷய - விஷயமாக உடைய, அந்யாபதேஶ - அந்யாபதேஶத்துக்கு, ஹேத்வாதிகளும் - ஹேது முதலானவைகளும், ஸங்க்ரஹீதம் - ஸங்க்ரஹிக்கப்பட்டவைகள்.

(அ) அடி - திருவடிகளை, தொழுது - ஸேவித்து, எழு - உஜ்ஜீவிக்கக்கடவை, என்றவிதிலே - என்கிறவிடத்திலே, வஸ்துநிர்த்தேஶ- வஸ்துநிர்த்தேஶம்,

அவற்றின் அஜ்ஞாநநிவர்த்யத்வம் முதலான ஸ்வபாவங்களும் 'இமையோர்தலைவா' அடியேன், அதிபதி அடிதொழுது" என்கையாலே ஆத்மாவுக்கு மீஶ்வரனுக்குமுண்டான ஶேஷஶேஷிபாவஸம்பந்தமும், "உயிரளிப்பானென்னின்ற யோனியுமாய்ப்பிறந்தாய்" என்றும், "மயர்வற மதிநலமருளினன்" என்றும், அநேகாவதாரங்களைப்பண்ணி ரக்ஷிக்கும் படியையும்,ஸம்ஸாரஹேதுவான அஜ்ஞாநத்தைப்போக்கிஉஜ்ஜீவநஹேதுவான ஜ்ஞாநபக்திகளைத் தன்க்ருபையாலே தந்தபடியையும்சொல்லுகையாலே ஈஶ்வரனுடைய ரக்ஷணக்ரமமும், "உயர்வறஉயர்நலம், துயரறுசுடரடி,இமையோர், அயர்வருமமரர்கள்" என்று, குணவிக்ரஹவிபூதிகளும், அந்தஸூரிகளை முன்னிடுகையாலே, ததீயாபிமாநமும், 'நின்றுகேட்டருளாய்' "தொழுதெழென்மனனே" என்று, நெஞ்சுபோலேபவ்யனை ஈஶ்வரனும் அப்படிபவ்யராரும் உபதேஶவிஷயமென்றும், "நலமருளினன்" என்று, பக்தியைத்தந்தானென்கையாலே அந்யாபதேஶத்துக்குஹேதுவான பக்தியும் முதலானவர்த்தங்களும், ஸங்க்ரஹேண சொல்லப்பட்டனவென்கை. (அந்யாபதேஶஹேத்வாதிகளும்) என்றவிடத்தில், ஆதிஶப்தத்தாலே, மற்றும்வேதாந்ததாத்பர்யங்களான அர்த்தங்கள் பலவுமிவற்றில் ஸங்க்ரஹீதங்களென்னுமிடமும் காட்டப்பட்டது. *

வ்யா. (கூச) அவிக்நபரிஸமாப்தி ப்ரசயகமநார்த்தமாக ப்ரபந்தாரம்பத்திலே ஆசரிக்கப்படும் ஆசீர்நமஸ்க்ரியா வஸ்துநிர்த்தேஶங்களாகிறமங்களாசாரங்களிதிலுமுண்டோ ? என்னுமாகாங்க்ஷயிலே அருளிச்செய்கிறார். (அடிதொழுது) இத்யாதி, அதாவது:— 'துயரறுசுடரடி' என்கையாலே வஸ்துநிர்த்தேஶமும், 'தொழுது' என்கையாலே

ரு. நமஸ்காராசீஸ்ஸுக்களும் முண்டு.

ரூ—(சுரு) ஸாதுஸநம் நண்ணுமயர்வறமாஸறுக்கும் தெருள்கொள்ளப் பத்தராவரடிமையற

நமஸ்கார - நமஸ்காரம், ஆசிஸ்ஸுக்களும்-ஆசீரூபமங்களமும், உண்டு-இருக்கின்றன.

(அ) ஸாதுசநம் - ஸாதுஸநத்தைநலியுங் கஞ்சனைச்சாதிக்கைக்குப் போல, நண்ணு - நண்ணுவசுரர் நலிவெய்தும்படி (யவதரிக்கையாலும்), மயர்வற - அஜ்ஞானமறும்படியும் மதிநலமுண்டாம்படியும் அவனவதரிக்குமாப்போலே, மாசறுக்கும் - உள்ளத்துமாசறுக்கு மதாகையாலும், தெருள்கொள்ள - ஜ்ஞானோத்பாதகமாகச் சொன்னதாகையாலும், பத்தராவர் - பத்தராவர் துவளின்றியே யென்று பக்திவர்த்தகமாகையாலும், அடிமையற-உனக்கடிமையறக்கொண்டாயென்று அறவடிமைகொண்டாப்போலே,

நமஸ்காரமும், 'எழு' என்கையாலே ஆசீஸ்ஸுமுண்டென்றபடி. இப்படிநாமொரு ப்ரபந்தம் பண்ணவேணுமென்று கருதியிருந்து இவர் செய்ததன்றிக்கே, நிரம்பினவேரி நெளிக்குமாப்போலே நிமிகிற வாய்க்கரையை மிடைந்துபுறப்பட்ட சொற்கள் இவர்பாசுரத்தாலே லோகத்தைத் திருத்தக்கோலுகிற ஸர்வேஶ்வரன் நினைவாலே ஸர்வலக்ஷணோபேதமாய்த்தலைக்கட்டின ப்ரபந்தமாகையாலே, இம்மங்களாசாரங்களும் கோல்விழுக்காட்டாலே பலித்தனவித்தனையாகையாலேயாயிற்று 'அடிதொழுதெழு' என்றதிலே இவையும்பண்ணப்பட்டன வென்னுதே உண்டென்றுவிட்டது. *

வ்யா. (சுரு) இனிமேலிப்பிரபந்தம் பத்துப் பத்தாகவவுதரித்ததின் ப்ரயோஜநத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார். (சாதுசனம்) என்றுதுடங்கி அதாவது :— (க) "சாதுசனத்தை நலியும் கஞ்சனைச்சாதிப்பதற்கு" "பரித்ராணய" இத்யாதிப்படியே, ஸாதுபரித்ராண துஷ்க்ருத்விநாஶார்த்தமாகவவனவதரித்தாப்போலே இதுவும், (உ) "நண்ணுவசுரர்நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த" என்றுபகவத்ப்ரதிபக்ஷபூதராண வாஸுரப்ரக்ருதிகள் மண்ணுண்ணவும் பகவத்பக்திபரரான தேவப்ரக்ருதிகள்வாழவுமவதரித்ததென்றும் "மயர்வறமதிநலமருளிநன்" என்று, அவஜ்ஞானத்தைப்போக்கி,ஜ்ஞானபக்திகளைக் கொடுக்குமாப்போலே, இதுவும் (௩) "ஒலிபுகழாயிரத்திப்பத்துள்ளத்துமாசறுக்கும்" என்று, மனதுக்கு மாசான அஜ்ஞானத்தைப்போக்கி, (ச) "தெருள்கொள்ளச் சொன்ன ஓராயிரம்" என்றும், (ரு) "தூயவாயிரத்திப்பத்தால் பத்தராவர்" என்றும், சொல்லுகிறபடியே,ஜ்ஞானபக்திகளைக் கொடுக்குமென்றும்,(சு)"அடிமையறக்கொண்டாய்" என்று.

(க) தி-வா. ௩. ரு. ரு. (உ) க௦. எ. ரு. (௩) ரு. உ. கக. (ச) உ. க௦. கக. (ரு) ரு. ச. கக. (சு) ச. கூ. சு.

சூ. உரியநோய்க ளறுக்குமுடைந்தேற்றரும் வானின்தாளின் கீழ் அடிக்கீழின்பக்கதிபயக்கு மூடுபுக்கு மூவுலகுமுருகா நிற்பரென்னும் ஸாம்யத்தாலேவாச்யன்

உரிய - உரியதொண்டராக்குமதாகையாலும், நோய்களறுக்கும் - நோய்களறுக்கும் மருந்தாமாப்போலே, உடைந்து - உடைந்து நோய்களை யோடுவிக்கையாலும், ஏற்றரும் - ஏற்றரும்வைகுந்தத்தை யருளுமாப்போலே, வானின் - வானின்மீதேற்றியருளுகையாலும், தாளின்கீழ்- தன்தாளின்கீழ் சேர்த்துசேமம் செய்யுமாப்போலே, அடிக்கீழ் - அருளியடிக்கீழிருத்துகையாலும், இன்பக்கதி - அவனுஶ்ரிதர்க்கு இன்பகதிசெய்யுமாப்போலே, இன்பம்பயக்கும் - எங்கனேசொல்லிலுமின்பம் பயக்குமதாகையாலும், ஊடுபுக்கு - ஊடுபுக்கெனதாவியை உருக்குமாப்போலே, மூவுலகும் - மூவுலகுமுருகும்படியானதாகையாலும், உருகா நிற்பர்-ஊற்றின்கண் நுண்மலற்போலுருகாநிற்பராகையாலும், என்னும் ஸாம்யத்தாலே - ஏவம்விதத்தாலே, வாச்யன் - வாச்யனனவெம்பெருமானுடைய,

தனக்கநந்யார்ஹ ஶேஷமாகவவனங்கீகரிக்குமாப்போலே இதுவும், (க) "உரியதொண்டராக்குமுலக முண்டார்க்கே" என்று, ததநந்யார்ஹஶேஷமாக்கு மென்றும், (உ) "நோய்களறுக்கும்மருந்தே" என்கிறபடியே, அவன்ஸம்ஸார வ்யாதிபேஷஜமாமாப்போலே இதுவும், (௩) "உடைந்துநோய்களை ஓடுவிக்கும்" என்று, ஸாம்ஸாரிகஸகலதுரிதங்களையும் உருமாய்ந்துபோம்படி பண்ணுமென்றும் (ச) "ஏற்றரும்வைகுந்தத்தையருளும் நமக்கு" என்று, ஸ்வயத்நத்தால், ப்ராபிக்க வரிதான பரமபதத்தை அவன் கொடுக்குமாப்போலே இதுவும் (ரு) "வானின்மீதேற்றியருள்செய்து" என்று, பரமபதப்ராப்தியைப்பண்ணிவிக்குமென்றும், (சு) "தன்தாளின்கீழ்சேர்த்து" என்கிறபடியே, அவன்பாதோபதாநம்போலத் திருவடிகளின்கீழ்சேர்த்துக்கொள்ளுமாப்போலே இதுவும், (எ) "அருளியடிக்கீழிருத்தும்" என்று, அவன்திருவடிகளின்கீழே சேர்த்துவைக்குமென்றும், (அ) "இன்பக்கதிசெய்யும்", என்கிறபடியே, அவன்தன்னோடேநவயித்தார்க்குத் தன்னுடைய அநுபவமாகிற நிரதிஶயாநந்தயுக்தமானப்ராப்யத்தைக் கொடுக்குமாப்போலே இதுவும், (கூ) "எங்ஙனே சொல்லிலு மின்பம்பயக்கும்" என்று, ஸ்வாநிதசேதநர்க்குபகவதநுபவாநந்தத்தையுண்டாக்குமென்றும், (க0) "ஊடுபுக்கெனதாவியையுருக்கியுண்டிடுகின்ற நின்தன்னை" என்கிறபடியே அவன்தன்னை யநுபவிக்கவிழிந்தாரைத்ரவத்ரவ்யமாம்படியுருக்குமாப்போலே இதுவும், (கக) "ஒன்பதோடொன்றுக்கு மூவுலகுமுருகும்

(க) தி-வா. சு. கூ. கக. (உ) கூ. ௩. ௩. (௩) க. எ. கக. (ச) ஷ. எ. சு. க0. (ரு) அ. ச. கக. (சு) எ. ரு. க0. (எ) அ. அ. கக. (அ) எ. ரு. கக. (கூ) எ. கூ. கக. (க0) ரு. க0. க0. (கக) கூ. ரு. கக.

மூ. பத்தினையதோற்றம்போலே தோற்றங்களாயிரத்தின்பத்து
ப்பத்தான விதினாவிர்ப்பாவம்.

மூ—(௬௬) ஐந்தினோடொன்பதோ டொருபத்தென்னுமவைபோலே,
நூறேசொன்ன பத்துநூறு

பத்தினைய - பத்துவிதமான, தோற்றம்போலே - அவதாரங்கள்போலே, தோற்றங்களாயிரத்தின் - அவதாரவிசேஷங்களையுடைய வாயிரமென்கிற, பத்துப்பத்தான - அநேகவிதமான, இதின் - இந்தப்ரபந்தத்தினுடைய, ஆவிர்ப்பாவம் - அவதாரம்.

(அ) ஐந்தினோடு - ஐந்தினோடைந்தும்வல்லாரென்கிறது, ஒன்பதோடு - இவையொன்பதோடொன்றுக்குமென்கிறது, ஒருபத்து - இவையுமொருபத்தும்வல்லார், என்னுமவைபோலே - என்கிறவைபோலே, நூறேசொன்ன - நூறேசொன்னவென்ன, பத்து - பத்தென்ன, நூறு - நூறென்ன,

என்றும், (௧) "ஊற்றின்கண்நுண்மணற்போலுருகாநிற்பர்நீராய்" என்றுஞ் சொல்லுகிறபடியே, தன்னையநுபவிக்கவிழிந்தாரைத்ரவத்ரவ்யமாக்குமென்றுமிப்படியவனோடு ஸாம்யத்தை யுடைத்தாகையாலே வாச்யனான ஸர்வேஸ்வரனுடைய (௨) "பத்தினையதோற்றம்" என்கிற, பத்தவதாரம்போலே, (௩) "தோற்றங்களாயிரம்" என்கிற விதினுடைய பத்துப்பத்தான ஆவிர்ப்பாவமென்கை. இத்தால், வாச்யனான வீஸ்வரனோடு பலபடியாலும் ஸாம்யத்தையுடைத்தாகையாலே, அவன்தான் லோகரக்ஷணார்த்தமாக பத்தவதாரமாயவதரித்தாப்போலே, இதுவும், லோகரக்ஷணார்த்தமாக பத்துப்பத்தாக வவதரித்ததென்றதாயிற்று. *

வ்யா. (௬௬) இனியிப்பத்துக்களையும் இவற்றின் ஸமுதாயமான ப்ரபந்தத்தையும், ஆழ்வார்ஸ்லாகித்துப் பேசினபாசுரங்களில் ஸாபிப்ராயதையை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார் (ஐந்தினோடு) என்று தொடங்கி அதாவது:— முன்னிலேந்து பாட்டுக்கொருகருத்தும், பின்னிலேந்துபாட்டுக்கொருகருத்துமாகையிலே, (௪) "ஐந்துனோடைந்தும்வல்லார்" என்றும், ஒன்பது பாட்டுக்கொருகருத்தும், ஒரு பாட்டுக்கொருகருத்துமாகையாலே (௫) "ஒன்பதோடொன்றுக்கும்" என்றும், பத்துப்பாட்டுக்கும் சேரவொருகருத்தாகையாலே (௬) "பாடலோராயிரத்துளிவையுமோருபத்து" என்றும், சொன்னவைபோலே, (எ) "நூறேசொன்னவோராயிரம்" என்று, கிழி கிழியாகக்கொடுப்பாரைப்போலே நூறுநூறாகச்சொன்னவாயிரமென்றும், (அ) "பத்துநூற்றுளிப்பத்து" என்றும், (௯) "பத்துநூறு" என்றும், இப்படி,

(௧) தி - வா. ௬. அ. ௧௧. (௨) திருச்சந்த - வி. எ௯. (௩) தி-வா. ௬. அ. ௧௧. (௪) ௧0. ௨. ௧௧. (௫) ௯. ௧௧. (௬) ௩. ௪. ௧௧. (எ) ௯. ௪. ௧௧. (அ) ௬. எ. ௧௧. (௯)

மூ. ஓராயிரமென்றதும் ஸாபிப்ராயம்.

மூ—(௬எ) பாட்டுக்குக்ரியையும் பத்துக்குக்கருத்தும்போலே நூற்றுக்குபதேஶப்பத்து.

மூ—(௬அ) பகவத் பக்தபரங்கள்

ஓராயிரம் - ஓராயிரமென்ன, என்றதும் - என்கிற விவைகளும், ஸாபிப்ராயம் - அபிப்ராயவிஶேஷத்தோடு கூடினது.

(அ) பாட்டுக்கு - பாட்டுக்களுக்கு, க்ரியையும் - க்ரியைகளும், பத்துக்கு - தஶகத்துக்கு, கருத்தும்போலே - தாத்பர்யமும்போலே, நூற்றுக்கு - நூறுபாட்டுக்களுக்கும், உபதேஶப்பத்து - பரோபதேஶபரமான திருவாய்மொழி ப்ரதாநம்.

(அ) பகவத்பக்தபரங்கள் - பகவான்பாகவதர் இவர்கள்விஷயங்களான திருவாய்மொழிகள்,

பத்துக்களைப்பிரித்துச்சொன்னதும், (க) "தெரியச்சொன்னவோராயிரம்" "மிக்கவோராயிரம்" (உ) "அவாவிலந்தாதிகளாலிவை யாயிரமும்" என்று, ஆயிரத்தையுஞ் சேரச்சொன்னதும் பத்துக்கள்தோறும் வெவ்வேறேகருத்தாயும், ஆயிரத்துக்கும் சேர ஒருகருத்தாயுமிருக்கும்படியை நினைத்தாகையாலே ஸாபிப்ராயமென்கை. *

வ்யா. (௬எ) இனிபத்துக்கள்தோறும் உபதேஶபரமான ஒரொரு திருவாய்மொழி ப்ரதாநமாய், அவ்வோபத்துகளுக்கவ்வோ திருவாய்மொழியிலே நோக்காயிருக்கும்படியை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார். (பாட்டுக்குக்ரியையும்) இத்யாதி, அதாவது:— பாட்டானல் க்ரியையோடே தலைக்கட்டவேண்டுகையாலே, பாட்டுக்கள்தோறும் க்ரியாபதம் ப்ரதாநமாயிருக்குமாப்போலவும், ஒரொருதிருவாய்மொழிக்கு பரத்வம், பஜநீயதை, ஸௌலப்யம், அபராதஸஹத்வம் என்றுப்போலே, தனித்தனியே கருத்துக்களாகையாலே பத்துப்பாட்டுக்குக்கருத்தான நிதாநம்சொல்லும்பாட்டு ப்ரதாநமாயிருக்குமாப்போலவும், நூறுபாட்டுக்குபரோபதேஶபரமான பத்துப்பாட்டு ப்ரதாநமாயிருக்குமென்கை. இத்தால், பாட்டுக்குக்ரியையிலும், பத்துப்பாட்டுக்கு நிதாநம் சொல்லும்பாட்டிலும் தாத்பர்யமாயிருக்குமோ பாதி நூறுபாட்டுக்கும் பரோபதேஶபரமான பத்துப்பாட்டிலே தாத்பர்யமாயிருக்கு மென்றதாயிற்று.

வ்யா. (௬அ) (பிணங்கியமரர்பிதற்றும்) என்கிறபடியே, பேரளவுடையரான நித்யஸூரிகள், ஸ்வஸ்வாநுபூதகுணதாரதம்யங்களைச்சொல்லி ஸரஸவிவாத கோலாஹலம்பண்ணும்படியிருக்கிறவவனுடையபரத்வ ஸௌலப்யப்ரயுக்தமான குணவிஶேஷங்களைத்தலித்துத்தம்மால்

(க) தி-வா. ௬. ௯. ௧௧. (உ) ௧0. ௧0. ௧௧.

௩. ஆஶ்ரயணவிதிஶேஷங்கள்.

௩—(௯௯) பரத்வ காரணத்வ வ்யாபகத்வ நியந்த்ருத்வ காருணிகத்வ ஶரண்யத்வ ஶக்தத்வ ஸத்யகாமத்வ ஆபத்ஸகத்வ

ஆஶ்ரயணவிதிஶேஷங்கள் - ஆஶ்ரயணவிதிக்குஶேஷங்களாயிருக்கும்.

(அ) பரத்வ - ஸர்வஸ்மாத்பரத்வம், காரணத்வ - அகிலஜெகத்காரணத்வம், வ்யாபகத்வ-நிகிலஜெகத் வ்யாபகனுயிருக்கை, நியந்த்ருத்வ - ஸர்வநியந்த்ருத்வம், காருணிகத்வ-தயாவத்வம், ஶரண்யத்வ-ஶரணவரணார்ஹனுயிருக்கை. ஶக்தத்வ - ஸர்வஶக்தித்வம், ஸத்யகாமத்வ - நித்யமாகக்கல்பித்தபத்நீபரிஜநாதிகளையுடையனுகை, ஆபத்ஸகத்வ - ப்ரளயாத்யாபத்துக்களிலே யுதவுகை,

புஜித்துத்தலைக்கட்ட வொண்ணுமையாலே, "அடியார்கள்குழாங்களையுடன்கூடுவதென்றுகொலோ" என்று, கூட்டரானரஸஜ்ஞரைத்தேடின வளவில் கிடையாதபடி தூரஸ்தராக ஸந்நிஹிதரான ஸம்ஸாரிகளுடைய அநாத்மகுணம்பாராதே, பகவத்குணங்களிலே மூட்டித்திருத்திக்கூட்டிக்கொள்ளுகை தேட்டமாய் உபதேஶத்திலே ஒருப்படுகையாலே அதிலே நோக்காகவேணுமிறே. இவற்றில் பகவத்பக்தபரங்களாய் வருமவற்றுக்கு தாத்பர்யமேதென்னுமாகாங்க்ஷையிலே யருளிச்செய்கிறுர். (பகவத்பக்தபரங்களித்யாதி) அதாவது:— 'பயிலும் சுடரொளி முதலான பாகவதபரங்களான திருவாய்மொழிகள் " జ్యోతిష్టోమేన స్వర్గ కామో యజేత " "ஜ்யோதிஷ்டோமேநஸ்வர்க்ககாமோயஜேத" என்றவிதிக்கு, ப்ரயாஜாதிவிதிகள் ஶேஷமாய், அவற்றினுடைய அநுஷ்டாநத்தோடே அதுபலபர்யந்தமாய்த் தலைக்கட்டுமாப்போலே "திருநாரணன்தாள்காலம்பெறச்சிந்தித்துய்மினோ" 'நலமந்தமில்லதோர்நாடுபுகுவீர்' 'பலமுந்து சீரில்பணிமினோவாதே' என்றுவிதிக்கிற பகவதாஶ்ரயணம் பாகவதாஶ்ரயணத்தோடொழியத் தலைக்கட்டாமையாலே, பகவதாஶ்ரயணவிதிக்குஶேஷங்களென்கை. அதவா,பரோபதேஶபரமான விதில், பகவத்குணங்களையும், ஜீவகுணங்களையும் ப்ரதிபாதிக்கிறவற்றுக்கு விநியோகமேதென்னவருளிச் செய்கிறுர். (பகவத்பக்தபரங்களித்யாதி) அதாவது:— பகவத் பரங்களாயும் தத்பக்தரான ஜீவபரங்களாயும், அவ்வவகுணங்களை ப்ரதிபாதிக்கிறவை ஆஶ்ரயணவிஷயத்தையும், ஆஶ்ரயணகர்த்தாவையுஞ்சொல்லுகிறதாகையாலே ஆஶ்ரயணவிதிக்குஶேஷங்களித்தனையென்கை. *

வ்யா. (௯௯) இப்படிப்பத்துத்தோறுமுள்ள வர்த்தங்களை பரோபதேஶத்துக்குருப்பாக ஒருங்கவிட்டு விஸ்தரேணமேல்யோஜிப்பதாகத் திருவுள்ளம்பற்றி, பரத்வாதிகுணவிஶிஷ்டனுனஸர்வேஶ்வரன் தமக்குப்பிறப்பித்த தஶாவிஶேஷங்களைப் பத்துத்தோறும் வெளியிடுகிறுரென்றுஸங்க்ரஹேணவாக்யார்த்தமருளிச்செய்கிறுர். (பரத்வேத்யாதிசூர்ணையாலே ) அதாவது :— ஸர்வஸ்மாத்பரனுர் அந்த பரத்வம்

மூ. ஆர்த்தி ஹரத்வவிசிஷ்டன் மயர்வையறுக்க தத்வவேதந மறப்பற்றும் ஜ்ஞப்திபலமுக்தி தலேசேரநிஷ்கர்ஷித்துமோக்ஷபலவ்த்தி செய்யவர்த்தித்து புருஷார்த்தபலாந்யருசியொழிந்து விரக்திபலராகம்

ஆர்த்திஹரத்வ - ஆஶ்ரிதர்க்கு ஸம்ஸாரதாபார்த்தியை. ஹரிக்கை, (இவைகளோடே) விசிஷ்டன் - கூடினவனான வீஶ்வரன், மயர்வையறுக்க - அஜ்ஞானத்தைப்போக்க, தத்வ - பரதத்வத்தினுடைய, வேதந - அறிவுக்கு, மறப்பற்று - மறப்புநிவ்ருத்தமாய், ஜ்ஞப்திபல - ஜ்ஞாநபலமான, முக்தி - மோக்ஷம், தலேசேர - கைபுகுர, நிஷ்கர்ஷித்து - நிஷ்கர்ஷம்பண்ணி, மோக்ஷபல - மோக்ஷத்துக்குப்பலமான, வ்ருத்தி - கைங்கர்யத்தை, செய்யவர்த்தித்து - பண்ணவேணுமென்று யாசித்து, புருஷார்த்தபலாந்ய - வேறுபுருஷார்த்தம், வேறுபலம் (இவைகளில்) ருசியொழிந்து - ருசியெல்லாம் நிவ்ருத்தமாய், விரக்தி - வைராக்யத்துக்கு, பல - பலமான, ராகம் - ப்ரேமம்,

ப்ரகாஶமாம்படி ஸர்வகாரணபூதனாய், லோகத்தில்கார்யகாரணங்கள் போலன்றிக்கே உபாதாநகாரணமும் தானேயாகையாலே (கார்யபூதஸமஸ்தவஸ்துக்களுக்கும் வ்யாபகனாய், அந்த வ்யாப்திதான் ஆகாஶவ்யாப்திபோலன்றிக்கே அந்தராத்மதயாவாகையாலே ஸர்வ நியந்தாவாய், அந்த பரத்வாதிகளேக்கண்டு வெருவவேண்டாதபடி பரமகாருணிகனாய், இப்படிக்ருபாவானாகையாலே ஸர்வஶரண்யனாய்,ஶரண்யக்ருத்யமான அநிஷ்டநிவ்ருத்தீஷ்டப்ராப்திகரணத்துக்கீடாம்படி ஸர்வஶக்தியுக்தனாய், அந்த ஶக்தியாலே நித்யமாகக்கல்பித்த பத்நீபரிஜநாதிகளேயுடையனாகையாலேஸத்யகாமனாய், அந்தபோகபரனாகயிருந்துவிடாதே ப்ரளயாத்யாபத்துக்களிலேயுதவி லீலாவிபூதியை ரக்ஷிக்கையாலே ஆபத்ஸகனாய், இப்படி ஆபத்ஸகனாகையாலே ஸம்ஸாரதாபார்த்தரான ஆஶ்ரிதர்க்கார்த்திஹரனாய், இப்படி பத்துப்பத்தாலும் ப்ரதிபாதிதமான பத்துகுணத்தோடும் கூடியிருக்கிறஸர்வேஶ்வரன் "மயர்வறமதிநலமருளினன்" என்கிறபடியே, பக்திரூபாபந்நஜ்ஞாந ப்ரதாநமுகேந அஜ்ஞாநத்தை ஸவாஸநமாகப்போக்க, அத்தாலே, தத்விஷயஜ்ஞாநமாகிற தத்வவேதநத்தில் (க)"மறப்பனோவினியானென்மணியை" என்கிறபடியே விஸ்ம்ருதியற்று அந்த ஜ்ஞாநபலமான மோக்ஷத்தை " நின்செம்மாபாதபற்புத்தலேசேர்த்து" என்று, ஸ்வரூபாநுரூபமாக நிஷ்கர்ஷித்து அந்தமோக்ஷத்துக்குபலமான கைங்கர்யரூப வ்ருத்யை (உ) "வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்றர்த்தித்து, அந்தபுருஷார்த்தத்துக்குபலம் அந்யருசிநிவ்ருத்தியாகையாலேதத்பலமாக "ஐங்கருவிகண்டவின்பம்சித்தின்பமொழிந்தேன்" என்று அந்யபுருஷார்த்தங்களில் ருசியைத்தவிர்ந்து அந்தஇதரவிஷயவிரக்திக்கு பலமானபகவத்விஷயராகம்

(க) தி-வா. க. கO. கூ. (உ) ௩. ௩. க.

கழியமிக்கு ப்ரேமபலோபாயத்தேபுகுந்து ஸாதநபலோப
காரக்கைம்மாறின்றி க்ருதஜ்ஞதாபலப்ரதிக்ருதமானத்தை
யுணர்ந்து ஆத்மதர்ஶநபலப்ராப்தி

கழிய - மிகவும், மிக்கு - மிகுந்து, ப்ரேமபல-ப்ரேமபலமாயிருந்துள்ள, உபாயத்தே - உபாயத்திலே, புகுந்து - கைவைத்து, ஸாதந - ஸாதநத்துக்கு, பல - பலமாயிருக்கிற, உபகார-உபகாரத்துக்கு, கைம்மாறின்றி-ப்ரத்யுபகாரமில்லாமை, க்ருதஜ்ஞதா-செய்தஉபகாரத்தையறிந்ததுக்கு, பல - பலமான, ப்ரதிக்ருதமானத்தை - ப்ரத்யுபகாரமாம்படியானத்தை, உணர்ந்து - அறிந்து, ஆத்ம-ஆத்மாவினுடைய, தர்ஶந - ஸாக்ஷாத்காரத்தை, பல - பலமாகவுடைய, ப்ராப்தி - பகவத்ப்ராப்தியை,

(௧) "கழியமிக்கதோர்காதல்" என்னும்படி, அதிஶயித்து அந்தநிரதிஶயப்ரேமபலமான விளம்பாக்ஷமத்வத்தால் வந்தத்வரையாலே (௨) "அலர்மேல்மங்கையுறைமார்பா உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேன்" என்று, உபாயவரணம்பண்ணி அந்தஸாதநபலமான வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாக (௩) "உதவிக்கைம்மாறென்னுயிர்" என்று, ஆத்மஸமர்ப்பணம் பண்ணத்தேடி அவ்வாத்மவஸ்து ததீயமென்றறிகையாலே (௪) "அதுவுமற்றாங்கவன்றன்னது எதுவுமொன்று மில்லைசெய்வதிங்குமங்கே" என்று, ப்ரத்யுபகாரம் காணாமல் தடுமாறி அந்தக்ருஜ்ஞதைக்கு பலமான ப்ரத்யுபகாரமாக (௫) "தோள்களையாரத்தழுவி "என்னுயிரையறவிலைசெய்தனன்" என்று, ப்ரீதியாலேகலங்கி ஸமர்ப்பித்தவாத்ம வஸ்துவை(௬)"நின்றவொன்றையுணர்ந்தேன்"என்று, தேஹாதிகளில் விலக்ஷணமாயவனுக்கு ப்ரகாரதயாஶேஷமாய்க்கொண்டு அநந்யார்ஹமாயிருக்கு மென்றறிந்து அந்தவாத்மதர்ஶநபலமான பகவத்ப்ராப்தியை (௭) "மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்" என்கிறபடியே, ஶரீராவஸாநத்திலே பண்ணித்தருகிறேனென்றவன்நாளிட்டுக்கொடுக்கப்பெற்று இப்படி ப்ராப்திகாலமணித்தானதுக்குபலம் அர்ச்சிராதி மார்க்கத்தாலே தேஶவிஶேஷத் தேறப்போவதாகையாலே அவ்வர்ச்சிராதிகதிக்கு (௮) "காளமேகத்தையன்றி மற்றொன்றிலம்கதி" என்றும், (௯) "ஆத்தன் தாமரையடியன்றிமற்றிலமரணே" என்றும், பரமாப்தனானவன் தன்னையே துணையாகக்கூட்டின தம்முடைய பேற்றைப்பிறரறிந்து வாழும்படி முதற்பத்தே துடங்கி பத்துப்பத்தாலும் ப்ரகாசிப்பித்தருளுகிறாரென்றபடி. இத்தால் பரத்வாதிகுணவிசிஷ்டனான ஈஶ்வரன், தமக்குப் பண்ணிக்கொடுத்தபேறுகளைப் பலருமறிந்து வாழவேணுமென்று பத்துப்பத்தாலும் ப்ரகாசிப்பிக்கிறாரென்று பத்துநிகமநத்துக்கு வாக்யார்த்தம் சொல்லப்பட்டதாயிற்று. இதில் முதல்பத்தாலே, ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேஶ்வரன் தன்னுடைய நிர்ஹேதுகக்ருபையாலே அஜ்ஞாநத்

(௧) தி - வா. ௫. ௫. ௧௦. (௨) ஷி ௬. ௧௦. ௧௦. (௩) ஷி. ௭. ௯. ௧௦. (௪) ஷி. (௫) (௬) தி - வர். ௮. ௮. ௪. (௭) ஷி. ௯. ௧௦. ௫. (௮) ஷி. ௧௦. ௧௦. ௧. (௯) ஷி. ௬.

௱௦. மாணுவதியாகப்பெற்று காலாஸக்தி பலகதிக்குத் துணை கூட்டினதம்பேற்றைப்பிறரறியப் பத்துதோறும் வெளியிடுகிறார்:—

## இத்யாசார்யஹ்ருதயே த்ருதீய ப்ரகரணம் ஸமாப்தம்.

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் திருவடிகளேசரணம்.

மாணுவதியாகப்பெற்று - மாணுந்தாபாவியாகப்பெற்று, காலாஸக்தி - பகவத்ப்ராப்திகாலமணித்தானதுக்கு, பல - பலமாயிருக்கிற, கதிக்கு - அர்ச்சிராதிகதிக்கு, துணைகூட்டின - எம்பெருமானைத் துணையாகக் கூட்டிக்கொண்ட, தம்பேற்றை - தம்முடையபலத்தை, பிறரறிய - அயலாருமறியும்படி, பத்துத்தோறும் - எல்லாப்பத்திலும், வெளியிடுகிறார் - ப்ரகாசிப்பிக்கிறார்:—

னைப்போக்கி பக்திரூபாபந்நஜ்ஞாநத்தைக்கொடுத்து, இன்னுமிவர்நம்மை விஸ்மரிக்கக்கூடுமென்று தம்பக்கல் அவனுக்குண்டான ஸ்நேஹத்தாலேவிடாதே தம்முடைய ஹ்ருதயத்திலே நிரந்தரவாஸம்பண்ண, அத்தாலே ஸம்ஶய விபர்யய விஸ்ம்ருதிரஹிதமான தத்வஜ்ஞாநத்தையுடையரான ஆழ்வார், அவனுடைய குணங்களை தம்முடைய திருவுள்ளத்தோடே யநுபவித்து அவ்விஷயம் தனியநுபவிக்க வொண்ணாமையாலே ஸம்ஸாரிகளையும்பார்த்து, த்யாஜ்யமானஸம்ஸாரத்தின் தோஷத்தையும், தத்யாகப்ரகாரத்தையும், உபாதேயமான பகவத்விஷயத்தின் குணத்தையும், தத்பஜநப்ரகாரத்தையும், பஜநாலம்பநமந்த்ரத்தையுமுபதேசித்து, பஜநீயனானவவனுடைய, ஸௌலப்யம், அபராதஸஹத்வம், சீலவத்தை, ஸ்வாராததை, ஆஶ்ரயணரஸ்யதை, ஆர்ஜவம், ஸாத்ம்யபோக ப்ரதத்வம், பரபக்திபரகணனைகளுக் கொக்கமுகங்காட்டும் ஸாம்யமாகிறகுணங்களை தர்சிப்பியாநின்றுகொண்டு அவ்வழியாலே பஜநத்தினுடைய ஸுகரத்வ ரஸ்யதைகளையும் பஜிக்கவே ஸர்வபலங்களும் ஸித்திக்குமென்னுமத்தையும், பஜநோபக்ரமத்திலே பஜந விரோதிகளடைய நசிக்குமென்னுமத்தையுமறிவித்து, ஆனபின்பு ஸ்ரீகீதையிலவனருளிச்செய்த பக்திமார்க்கத்திலேநின்று தேவதாந்தரங்கள்பக்கல் பரத்வஶங்காநிவ்ருத்தி பூர்வகமாக, அவன்விஷயமானஜ்ஞாநத்தைக்கொண்டு அவன்பக்கலிலே அநந்யப்ரயோஜநபக்தியைப் பண்ணுங்கோளென்று தமக்கவன் மயர்வறமதிநல மருளினுப்போலே தாமுமிவர்களுக்கு அஜ்ஞாநநிவ்ருத்திபூர்வகமாகஜ்ஞாநபக்திகளை யுபதேசத்தாலே யுண்டாக்கிபஜநத்திலே மூட்டுகிறாரென்கிறார்.

இத்யாசார்யஹ்ருதயவ்யாக்யாநே
த்ருதீயப்ரகரணம் ஸமாப்தம்.

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஆசார்யஹ்ருதயவ்யாக்யாநம்.

# சதுர்த்தப்ரகரணம்.

மூ—(க) பரபரனுய் நின்றவளவேழ்வைப்பாமவனையுளும்பர்வானவரதிபதிமயர்வறமன்னி மனம்வைக்கத்திருத்தி

(அ) பரபரனுய் - முழுதுண்டபரபரனென்றும், நின்ற - ஆய்நின்ற பரனென்றும், வளவேழ் - வளவேழுலகின்முதலாய வானோரிறையென்றும், வைப்பாம் - வைப்பாம்மருந்தாமென்றும், அவன் - உயர்ந்துயர்ந்தப்பாலவனென்றும், அவையுள் - அவையுட்டனிமுதலென்றும், உம்பர்வானவவர் - உம்பர்வானவராதியென்றும் சொல்லப்பட்ட, அதிபதி - அயர்வறுமென்று ஸூரிநிர்வாஹகன், மயர்வற - அஜ்ஞாநமெல்லாம்வாஸனையோடே போம்படி, மன்னி - இவர் திருவுள்ளத்திலே வந்துபுகுந்து, மனம்வைக்க - தன்விஷயத்திலே ஹ்ருதயத்தைவைக்கும்படி, திருத்தி - பரிஷ்கரித்து,

வ்யா. (க) (பரபரனுய் நின்ற வளவேழ்வைப்பாமவையுளும்பர்வானவ ரதிபதி) (க) "வரன்முதலாயவைமுழுதுண்ட பரபரன், ஆய்நின்ற பரன் "வளவேழுலகின் முதலாயவானோறிறை" வைப்பாம் மருந்தாம் "நலத்தாலுயர்ந்துயர்ந்தப்பாலவன், அவையுள் தனிமுதல் "உம்பர்வானவராதியஞ்சோதி" "அயர்வறுமமரர்களதிபதி" (அ) என்று, ஸகல ஜகத்ஸர்க்காதி கர்த்ருத்வத்தாலும், உபயவிபூதியோகத்தாலும், உபய விபூதிநாதத்வத்தாலும் ப்ராப்ய ப்ராபகத்வத்தாலும், அபரிச்சேத்யாநந்தயுக்ததையாலும், ஸர்வஶரீரதயா ஸர்வஶப்தவாச்யத்வத்தாலும், நித்யஸூரிநிர்வாஹகத்வத்தாலும், நித்யாஸங்குசித ஜ்ஞாநரானவவர்கள் நித்யாநுபவம் பண்ணுநின்றாலும் பரிச்சேதிக்கவொண்ணுத பெருமையையுடைய னுகையாலும் ஸர்வஸ்மாத்பரனுனவன் (மயர்வறமன்னி மநம்வைக்கத்திருத்தி) "மயர்வறமதிநலமருளினன்" (கூ) "மயர்வற வென்மனத்தே மன்னினுன்" என்று ஸ்வகேவல க்ருபையாலே, * ஜ்ஞாநாநுதய அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநரூபமான அஜ்ஞாநத்தை

(க-மு-ல்-அ-ல்) தி - வா. க - ல் - க-அ + க-கக + ஞ - க + எ - உ + ஷ + கூ-க + கo-கூ + க-க + ஷ + (கூ) எ-ச.

* ஜ்ஞாநாநுதயமாவது - தேஹமே ஆத்மாவென்றிருக்கை. அந்யதாஜ்ஞாநமாவது - தேவதாந்தர ஶேஷமென்றிருக்கை. விபரீத ஜ்ஞாநமாவது, ஸ்வதந்த்ரமாகவும் போக்யமாகவும் நினைத்திருக்கும் கேவலனுடைய நினைவு. கேவலனுவான்:— ஸம்ஸார தாபத்ரயாதிகளால் மிகநலிவுபட்டு, ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாநவிஶேஷத்தால், தேஹாத்ம விவேகம்பண்ணி, யோகமஹிமையாலே தேஹத்தைவிட்டு பகவச்சேஷபூதனுன ஆத்மாவை ஸ்வதந்த்ரனுக நினைத்து "அமுதவெள்ளத்தானும் சிறப்புவிட்டு" என்கிறபடியே, நிரதிஶயாநந்த யுக்தனுன ஸர்வேஶ்வர பர்யந்தம் போகமாட்டாதே அத்யல்பமான ஆத்மாநுபவம் பண்ணிக்கொண்டிருக்குமவன்.

மூ. மறக்குமென்று நல்கிவிடாதேமன்ன அயர்ப்பிலனறுத்தே னென்சொல்லி மறப்பனோவென்னும்படி தத்வஜ்ஞானவர்

மறக்குமென்று - மறக்கப்போகிறுரோவென்று, நல்கி - இவர்பக்கலதிஸ்நேஹத்தைப்பண்ண, விடாதே - ஒருக்காலும்விடாதே, மன்ன-ஸ்தாவர ப்ரதிஷ்டையாயிருக்க, அயர்ப்பிலன் - அஜ்ஞாநத்தையெல்லாம் ஸவாஸநமாகப்போக்கினேன், அறுத்தேன் - மாயப்பிறவியாலுண்டான மயர்வையறுத்தேன், என்சொல்லி - எத்தைச்சொல்லி, மறப்பனோ - மறக்கக்கடவேன், என்னும்படி - என்றிவர்தாமேயருளிச்செய்யும்படி, தத்வஜ்ஞானவர் - தத்வயாதாத்ம்யஜ்ஞானவாழ்வார்,

இவர்க்குவாஸனையோடேபோக்கி, பக்திரூபா பந்நஜ்ஞாநத்தைக் கொடுத்து. இவர் திருவுள்ளத்திலே புகுந்து(க) "சார்ந்தவிருவல்வினைகளும் சரித்து மாயப்பற்றறுத்து தீர்ந்து தன்பால் மனம்வைக்கத் திருத்தி" என்கிறபடியே, பிரிக்கவொண்ணுதபடி இவரோடு பொருந்திக் கிடக்கிற ப்ரபலமான புண்யபாப ரூபகர்மங்களையும், பாஹ்யவிஷய * ருசிவாஸனைகளையும்போக்கி, அயோக்யதாநுஸந்தாநத்தாலே யகன்றவளவிலும், தன்சீலத்தைக்காட்டி இவரைமீட்டு அல்லேனென்றகலாதே தனக்கேதீர்ந்து தன்பக்கலிலே நெஞ்சுவைக்கும்படி தரிசுகிடந்தநிலத்தைச்சைகாலாகத் திருத்துவாரைப்போலே திருத்தி, (மறக்குமென்று நல்கிவிடாதே மன்ன) (உ) "மறக்குமென்று செந்தாமரைக்கண்ணொடு (௩) "நல்கியென்னைவிடான்" (ச) "மறப்பறவென்னுள்ளே மன்னினான்" என்கிறபடியே, இவரின்னமும் நம்மைவிஸ்மரிக்கக்கூடுமென்று நிரதிஶயஸ்நேகத்தைப்பண்ணி, இவரைவிடாதே அழகியதிருக்கண்களாலே குளிரநோக்கிக்கொண்டு ஒருநாளும் மறக்கவொண்ணுதபடி இவர் திருவுள்ளத்திலே ஸ்தாவர ப்ரதிஷ்டையாயிருக்க (அயற்பிலனறுத்தே னென்சொல்லிமறப்பனோவென்னும்படி தத்வஜ்ஞானவர்) (ரு) "பெருநிலங்கிடந்த நல்லடிப்போதயர்ப்பிலன்" தூயவமுதைப்பருகிப்பருகி யென்மாயப்பிறவி மயர்வறுத்தேன்" (சு) "எம்பிரானையென்சொல்லிமறப்பனோ" என்று குணகுணநிருபணம்பண்ணுதே பூமிப்பரப்பையளந்தபரமபோக்யமான திருவடிகளை யொருக்காலும் விஸ்மரியேன். நிரதிஶயபோக்யனானவனை நிரந்தரமநுபவித்தாச்சர்யமானஜந்மமடியாகவருமஜ்ஞாநத்தைப்போக்க

(க) தி - வா. ௧-ல் + ரு - ௧0. (உ) ௧0. ௧0. (௩) ஷை. ௬. (ச) ஷை. ௧0. (ரு) ௩. ௧0. (சு) ௧0. ௬.

* ருசியாவது:— மற்றொன்றுலும் மீட்கவொண்ணுதபடி ஒன்றிலே செல்லுகிற விருப்பு. + வாஸனையாவது:— முன்புசெய்துபோந்தவற்றிலே மீளவும் மீளுகைக் குறுப்பான ஸம்ஸ்காரம்:—

மூ. ஸூடரடி எம்பிரானைவிடாது கண்டாய் நீயும்நானும் என்கிற ஸஹ்ருதயாநுபவம் ஸம்ஸாரிகளுக்குமாம்படி வீடுமினென்று த்யாஜ்யோபாதேய

ஸூடரடி - ஸூடரடிதொழுதெழு என்றும், எம்பிரானை - எம்பிரானைத் தொழாய் என்றும், விடாது - விடாது துடர் என்றும், கண்டாய் - கண்டாயே நெஞ்சே என்றும், நீயும்நானும் - நீயும்நானுமின்னேர் நிற்கில் மேல்மற்றோர் நோயும்சார்கொடான் என்றும், என்கிற - இப்படி பண்ணப்பட்ட, ஸஹ்ருதயாநுபவம் - மநஸ்ஸோடே கூடின வநுபவம், ஸம்ஸாரிகளுக்குமாம்படி - விஷயாந்தரப்ரவணரான ஸம்ஸாரிகளுக்குமுண்டாம்படி, வீடுமினென்று-வீடுமினென்கிற திருவாய்மொழியாலே, த்யாஜ்ய - விடத்தக்கதாயிருக்கிற, உபாதேய - பரிக்ரஹிக்கத்தக்கதாயிருக்கிற,

ப்பெற்றேன். எனக்குபகாரகனானவனை யெத்தைச்சொல்லி விஸ்மரிப்பதென்னும்படி ஸம்ஶய விபர்யயவிஸ்ம்ருதிகலசாத தத்வஜ்ஞாநத்தையுடையரானவர் (சுடரடியெம்பிரானைவிடாதுகண்டாய்நீயும் நானுமென்கிறஸஹ்ருதயாநுபவம் ஸம்ஸாரிகளுக்குமாம்படி) (க) "சுடரடி தொழுதெழன்மனனே" "எம்பிரானைத்தொழாய் மடநெஞ்சமே" "நெஞ்சமே நல்லநல்லை" "மலராள்மணவாளனைத் துஞ்சும்போதும்விடாது துடர்கண்டாய்" "கண்டாயே நெஞ்சே கருமங்கள்வாய்க்கின்று" "நீயும் நானு மின்னேர் நிற்கில்மேல் மற்றோர்நோயும்சார்கொடான்நெஞ்சமே சொன்னேன்" (சு) என்று நிரவதிக தேஜோரூபமானவவன்திருவடிகளிலே நித்யகைங்கர்யத்தைப்பண்ணி உஜ்ஜீவிக்கப்பாராய்யென்நெஞ்சே! எனக்கு பவ்யமானநெஞ்சே! நமக்குபகாரகனானவனை தொழப்பாராய் நெஞ்சே! நீசெய்தபடி மிகவும்நன்று. நான் அயோக்யதாநுஸந்தாநத்தாலேயகலும்போதும், ஸ்ரீயஃபதியானவனை விடாதேகிடாய் நெஞ்சே! அவனுடைய நிர்ஹேதுகவிஷயீகாரமிருந்தபடிகண்டாயே, தொழச்சொல்லலாம்படியிருக்கிற நீயும், தொழச்சொல்லுகிறநானும், அயோக்யதாநு ஸந்தானத்தாலே அகலாமலிப்படியே நிற்கப்பெறில் அநாதிகாலார்ஜித கர்மம்விஷய ப்ராவண்யம்,ப்ரயோஜநாந்தரஸ்ரத்தை, ஸாதநாந்தரஸங்கம், முதலான துரிதங்களொன்றையும் சேரவிட்டுக்கொடான். நெஞ்சே! உனக்கிப்பரமார்த்தத்தைச் சொன்னேனென் றிப்படி திருவுள்ளத்தைக் குறித்துபதேசித்து, திருஉள்ளமும் தாமும் கூடியநுபவித்தபகவதநுபவம்,தனியேயநுபவிக்கவொண்ணாமையாலும்,(எ) "ఏకస్స్వాదు నభుంజీత" "ஏகஸ்ஸ்வாதுநபுஞ்ஜீத" என்கிறபடியே, தனியநுபவிக்கவல்லவரல்லாமையாலும், அவனோடுள்ளஸம்பந்தம் ஸர்வஸாதாரணமாகையாலும், பராநர்த்தம்பொறுத பரமக்ருபையாலும், இவ்வநுபவம் ஸம்ஸாரிகளுக்கு மாகவேணுமென்று, ஸம்ஸாரிகளைப்பார்த்து (வீடுமினென்று த்யாஜ்யோபாதேய தோஷகுணபரித்யாக ஸமர்ப்பணக்ரமத்தை ஸாலம்பநமந்த்ரமாக உபதேசித்து) வீடுமின் முற்றத்திலே "வீடு

(க-மு-சு-ல்) க-ப-ல்+க-க+கo-ரு+௸-ச+௸.+௸-ரு+௸-சு+(எ)

தோஷகுணபரித்யாக ஸமர்ப்பணக்ரமத்தை ஸாலம்பநமந்த்ரமாக உபதேசித்து எளிதாகவவதரித்துப்பிழைகளை ஸஹித்துப்புரையறக்கலந்து அல்பஸந்துஷ்டனாய்

தோஷ - தோஷத்தினுடையவும், குண - பகவத்குணங்களினுடையவும், பரித்யாக - விடுகிறத்தினுடையவும், ஸமர்ப்பண - ஆத்மஸமர்ப்பணத்தினுடையவும், க்ரமத்தை - ரீதிகளை, ஸாலம்பநமந்த்ரமாக - ஆலம்பநமந்த்ரமான திருமந்த்ரத்தோடுகூட, உபதேசித்து - உபதேசம்பண்ணி, எளிதாக - ஸுலபமாம்படி, அவதரித்து - அவதாரம் பண்ணி, பிழைகளை - அபராதங்களை, ஸஹித்து - பொறுத்து, புரையற - ஓட்டையில்லாதபடி, கலந்து - ஸம்ச்லேஷித்து, அல்ப - இவனிட்ட அல்பபதார்த்தங்களாலே, ஸந்துஷ்டனாய் - ஸந்தோஷவிசேஷயுக்தனாய்,

மின் முற்றவும்) என்று த்யாஜ்யஸ்வரூபத்தையும் (க)“மின்னின்நிலையில மன்னுயிராக்கைகள்” என்று அதினுடைய அல்பாஸ்திரத்வாதிதோஷத்தையும் “நீர்நுமதென்றிவைவேர்முதல்மாய்த்து” என்று, அதினுடைய பரித்யாகக்ரமத்தையும் “வீடுடையான்” என்று உபாதேயமான பகவத்ஸ்வரூபத்தையும், “எல்லையிலந்நலம்” என்று, அவ்வஸ்துவினுடைய குணத்தையும்,“வீடுசெய்மினே”“இறைசேர்மின்”“இறைபற்று”“திண்கழல்சேர்”. (அ)என்று, அவ்விஷயத்திலாத்மாவைஸமர்ப்பிக்கும் க்ரமத்தையும், “வண்புகழ்நாரணன்” என்று,அந்தஸமர்ப்பணரூபபஜநத்துக்கு ஆலம்பனமான திருமந்த்ரத்தோடே உபதேசித்து, (எளிதாகவவதரித்து)ஆச்ரயிப்பார் அதீந்த்ரியனென்றறியாதபடி (கூ)“பலபிறப்பாயொளி வருமியல்வினன்” என்று, ராமக்ருஷ்ணாத்யவதார முகத்தாலே, அவர்களுக்கு ஸுலபனாய் பிழைகளைஸஹித்து, ஆச்ரயணதசையில் ஸுலபனாய், அபராதங்கண்டவாறே கைவிடாதே (க0) “என்பிழைத்தாள் திருவடியின்தகவினுக்கு” என்னும்படி,அபராதஸஹனாய் (புரையறக்கலந்து,) அபராதங்கண்டு, தானிகழாதவளவன்றிக்கே அயோக்யதாநுஸந்தாநத்தாலேதாங்களேயகல்வாரையும், (கக) “திசைகளெல்லாம் திருவடியால் தாயோன்தானேரொருவனே”என்று, தன்குணத்தைக்காட்டியணுகப்பண்ணி அவர்களோடேபுரையறக்கலக்கும்சீலவானாய் (அல்பஸந்துஷ்டனாய்) ஆச்ரிதரோடொருநீராகக் கலக்குமேயாகிலுமவனுக்கும்படிபச்சையிடப்போகாமையாலே, ஆச்ரயணமரிதென்னாதபடி இவனிட்டது கொண்டுத்ருப்தனாகவேண்டாதபடி பரிபூர்ணனாகையாலே “புரிவதுவும்புகைபூவே” என்று,இவன்பக்கல்பெற்றதுகொண்டு ஸந்தோஷிக்கும்

(க-மு-அ-ல்) தி-வா. க-ல் + உ-உ + உ-௩ + ௬-க + உ-௯ + உ-க+உ-௩+ உ-டு + உ-க0 + (கூ) ௩. உ. (க0) சு. எ. (கக) ருு. ௩.

மூ. அம்ருதமேயௌஷதமாக்கி நீர்ப்புரையத்தன்னை நியமித்து போகத்தை ஸாத்மிப்பித்து பக்திகணனைகளுக்கு ஒக்க வருமவனுடைய ஸேவைக்கு எளிமையு மினிமையுமுண்டு

அம்ருதமே - தூயவமுதான பகவத்விஷயத்தையே, ஔஷதமாக்கி - மாயப்பிறவிமயர்வறுக்கைக்கு ஔஷதமாம்படிபண்ணி, நீர்புரைய - நீரை விரஹாலேமேட்டிலே யேற்றுமாப்போலே, தன்னை - அதிஸ்வதந்த்ரனைதன்னை, நியமித்து - இவர்கள் செவ்வைக்கேடும் செவ்வையாம்படியடக்கி, போகத்தை - தன்னோடுண்டான ஆழ்வாருடைய அநுபவத்தை, ஸாத்மிப்பித்து - ஸாத்மிக்க ஸாத்மிக்க உண்டாக்கி, பக்தி - பரமபக்தி, கணனைகளுக்கு - எண்ணுகை (இவைகளுக்கு) ஒக்க - ஸமமாக, வருமவனுடைய - வந்து முகங்காட்டுமவனுடைய, ஸேவைக்கு - பஜனத்துக்கு, எளிமையும் - ஸுலபத்வமும், இனிமையும் - ரஸமாயிருக்குகையும், உண்டு - உள்ளது,

ஸ்வாராதனுய் (அம்ருதமே ஔஷதமாக்கி) நேரில்லையாகிலும், உள்ளது தேவையாயிருக்குமோ வென்னுதபடி, அம்ருதத்தையே ஔஷதமாக்குமாப்போலே, "தூயவமுதைப்பருகிப்பருகியென் மாயப்பிறவிமயர்வறுத்தேன்" என்று, நிரதிஶயபோக்யனை தன்னுடைய ஆஶ்ரயணமாகையாலே மிகவுமினிதாயிருக்கிறவற்றையே ஸம்ஸாரவ்யாதிபேஷஜ மாக்கி (நீர்புரையத்தன்னை நியமித்து) இனிதாயிருக்குமாகிலுமவன்நினைவறிந்து பரிமாறுகையறிதென்னுதபடி இவர்களைத் தன்நினைவிலே பரிமாறுவித்துக்கொள்ளப்பாராதே (க) "நீர்புரைவண்ணன்" என்று மேட்டிலே, நீரைவிரஹாலே யேற்றுமாப்போலே இவர்கள் செவ்வைக்கேடும் செவ்வையாம்படி, தன்னைச்செவ்வியனுகநியமித்து (போகத்தை ஸாத்மிப்பிற்று) இப்படியானுலும் குளப்படியிலே கடலைமடித்தாப்போலே அஸாத்யமாகப்பரிமாறுமோ வென்னுதபடி, (உ) "என்னுடைச்சூழலுளான்" என்றுதுடங்கி "உச்சியுளானே" என்னும்படிஸாத்மிக்கத் தன்னையநுபவிப்பித்து, (பக்திகணனைகளுக் கொக்கவருமவனுடைய ஸேவைக்கு) இப்படியநுபவிக்கைக் கீடாக முகங்காட்டு மளவிலிவன் பக்கல் ப்ரேமாநுகுணமாகவோ செய்வதென்னுதபடி (௩) "கண்ணுள்ளே நிற்கும்காதன்மையால்தொழில் எண்ணிலும்வரும்" என்று, பரபத்திக்கும்பரிகணனைக்கு மொக்கவந்துமுகங்காட்டும் ஸ்வபாவனைவவனுடையபஜநத்துக்கு, (எளிமையுமினிமையுமுண்டு) எளிதாயினிமையற்றிருத்தல், இனிதாயருமையாயிருத்த லன்றிக்கே கீழ்ச்சொன்ன குணவிஶேஷங்களையுடையவனுடையவாஶ்ரயணமாகையாலே எளிதுமாயினிதுமாயிருக்கும். (ச) "பத்துடையடியவர்க்கெளியவன்" (ரு) "அமுதிலுமாற்றவினியன்" என்கிற, வவன்தன்னைப்போலேயாயிற்று ததாஶ்ரயணமும்,

(தி-வா-க-ல்) (க) அ - கO. (உ) கூ - க. (௩) கO - உ. (ச) ௩ - க. (ரு) சு - சு.

மூ. தொழுதாலரும்பயனுய தருமுத்யோகத்தே வினைகளும் மாளும் அவனுரைத்த மார்க்கத்தேநின்று இருபசைமல மறவுணர்வுகொண்டு நலம்செய்வதென்று

தொழுதால் - அவனைத்தொழுதால், அரும்பயனுய - பெறுதற்கரிய ப்ரயோஜநங்களையும், தரும் - கொடுக்கும், உத்யோகத்தே - பஜிக்கயத்நம்பண்ணும்போதே, வினைகளும் - பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தக பாபவிசேஷங்களும், மாளும்-ஸவாஸநமாகப்போம், அவனுரைத்த - (பிணக்கற வறுவகையென்றுதொடங்கி அவனுலே) அருளிச்செய்யப்பட்ட, மார்க்கத்தேநின்று - பக்திமார்க்கத்திலே நிஷ்டையுடையராய், இருபசை - (தேவதாந்தரங்கள்பக்கலுண்டான) ஸங்கமும், மலம் - (இவனே அவரோ ஆச்ரயணீயரென்கிற)ஸம்சயமும், அற-ஸவாஸநமாகப் போக்கி, உணர்வுகொண்டு - அவனுடைய உணர்வுகொண்டு, நலம்செய்வதென்று - நன்றெனநலம்செய்வதென்றுதொடங்கி அநந்யப்ரயோஜநமான பக்தியைப்பண்ணுங்களென்று,

ஏவம்பூதபஜநத்தால் பலஸித்தியிருக்கும்படி யென்னென்னில்? (தொழுதாலரும்பயனுயதரும்) (க) "அவனைத்தொழுதால் வழிநின்ற வல்வினைமாள்வித்தழிவின்றி யாக்கம்தரும்" (உ) "தருமவரும்பயனுய" என்று, அவனைபஜித்தால் ப்ராப்திப்ரதிபந்தகங்களையும் நிச்சேஷமாகப்போக்கி அழிவில்லாத பெருதற்கரிய ப்ரயோஜநங்களையுந்தரும். பஜித்தாலன்றோ தருவது, பஜநவிரோதிகளும் குவாலுண்டேயென்னில்? (உத்யோகத்தே வினைகளும்மாளும்) (௩) "நாளுநின்றடுநமபழமையங்கொடுவினை யுடனேமாளும்" என்று, நாள்தோறும் நின்றிவ்வாத்மாவை முடிக்கிற அநாதியாயதிக்ரூரமானகர்மங்கள் பஜநோபக்ரமத்திலே நசிக்கும். ஆனல், பஜநோபாயமேதென்னில்? (அவனுரைத்த மார்க்கத்தே நின்றிருபசைமலமற உணர்வுகொண்டு நலஞ்செய்வதென்று) (ச) "பிணக்கற" என்றுதுடங்கி, (ரு) "அம்பகவன்வணக்குடைத்தவநெறிவழிநின்று" என்று, வைதிகஸமயத்துக்கும், பாஹ்யஷட்ஸமயத்துக்கும்தன்னில் தானுண்டான பிணக்கறும்படி, வேதமார்க்கத்தை யதாநிரூபணம்பண்ணி யருளிச்செய்த நிரவதிக வாத்ஸல்யயுக்தனுய் ஜ்ஞாநாதிகுணபரிபூர்ணனுன க்ருஷ்ணன் திருத்தேர்த்தட்டிலே அர்ஜுநவ்யாஜேந ஸ்ரீகீதாமுகத்தாலே (சா) "భక్త్యాత్వనన్యయాశక్యః" "பக்த்யாத்வநந்யயாசக்ய:" என்று, (எ) "మన్మనా భవమద్భక్తో మద్యాజీమాం నమస్కురు। మామేవైష్యసియుక్త్వైవ మాత్మానంమత్పరాయణః" "மந்மநாபவமத்பக்தோ மத்யாஜீமாம்நமஸ்குரு। மாமேவைஷ்யஸியுக்த்வைவமாத்மாநம் மத்பராயண:" என்றுமருளிச்செய்த பக்திமார்க்கத்திலே நின்று, (அ) "நும்மிருபசையறுத்து" என்றும், (கூ) "மனனகமலமறக்கழுவி"

(க-ப-ல்) (க) சு - அ. (உ) ஷ - கூ. (௩) ௩ - அ. (ச) ௩ - ரு. (ரு) ஷ. (சா) ஸ்ரீ - கீ - கக. ருச. (எ) கூ - ௩ச. (அ) தி-வா. க. ௩. எ. (கூ) ஷ - அ.

மூ. தாம்மயர்வறமதிநலமருளி பஜநத்திலே சேர்க்கிறார் முதற்பத்தில்.

மூ—(உ) சோராதமூவாவேர்முதலா

தாம் மயர்வறமதிநலமருளி - ஸர்வேச்வரன் தமக்கு மயர்வறமதிநலமருளினாப்போலே ஸம்ஸாரிகளுக் கஜ்ஞாநத்தைப்போக்கி ஜ்ஞாநபக்திகளையுபதேசித்து, பஜநத்திலே பகவத் பக்தியிலே, சேர்க்கிறார்-மூட்டுகிறார், முதற்பத்தில் - ப்ரதமதசகத்தில்.

(அ) சோராத - சோராதவெப்பொருட்கு மாதிஎன்று சொல்லப்பட்ட, மூவா - மூவாத்தனிமுதலாய் என்றுசொல்லப்பட்ட, வேர்முதலாய் - வேர்முதலாய் வித்தாய்என்று சொல்லப்பட்ட வைகளாகக் கொண்டு,

என்றும், தேவதாந்தரங்கள் பக்கல் உங்களுக்குண்டான ஸம்சயத்தையறுத்து இவனே அவர்களோ ஆச்ரயணீயரென்கிறஸம்சயத்தையும் மநஸ்ஸிநின்றும், ஸவாஸநமாகப்போக்கி (க) "அவனுடையுணர்வுகொண்டு" என்று, தத்விஷயஜ்ஞாநத்தைக்கொண்டு (உ) "நன்றெனநலம் செய்வது" என்று, அநந்யப்ரயோஜந பக்தியைப் பண்ணுங்கோளென்று (தாம்மயர்வறமதிநலமருளிபஜநத்திலே சேர்க்கிறார்முதற்பத்தில்) அதாவது:— ஸர்வேச்வரன் தமக்கு மயர்வறமதிநல மருளினாப்போலே, ஸம்ஸாரிகளுக்குத் தம்முடைய க்ருபையாலே தத்வ ஹிதபுருஷார்த்தவிஷயமான வஜ்ஞாநத்தைப்போக்கி, ஜ்ஞாநபக்திகளை யுபதேசித்து பகவத் பஜநத்திலே மூட்டுகிறா ரென்கை. *

வ்யா. (உ) இரண்டாம்பத்தால் ஸர்வகாரணபூதனான ஸர்வேச்வரன் கீழில்பத்திலே தமக்கு அஜ்ஞாதஜ்ஞாபநம்பண்ண, அவனாலே தத்தஜ்ஞாநரானவிவர் அந்தஜ்ஞாநத்துக்கு பலமான மோக்ஷத்தை யப்போதேபெறவேணுமென்றாசைப்பட்டுப்பெருமையாலே அவஸந்நராக, இவருடைய அவஸாதமெல்லாம் தீரும்படி அவன்வந்து ஸம்ச்லேஷித்து அந்தஸம்ச்லேஷத்தால்வந்த ப்ரீதியையுடையனாய், அந்தப்ரீதி இவரொருவரளவில்பர்யவஸியாதே இவரோடு பரம்பரையா ஸம்பந்தமுடையாரளவும் வெள்ளமிட்டு அந்தப்ரீதியாலே பரமபுருஷார்த்தலக்ஷணமோக்ஷத்தை யிவர்க்கவன்கொடுக்கத்தேட, அந்தமோக்ஷத்தையவனுடைய சேஷித்வத்துக்கும் தம்முடைய சேஷத்வத்துக்கும் அநுகுணமாம்படி நிஷ்கர்ஷித்தவர் ஆச்ரயணீயனானவனுக்கு ஈழுக்தமான பரத்வத்தைநிலைபெறுத்துவனவான லக்ஷணங்களை வெளியிட்டு ததநுகுணமானவசந ப்ரத்யக்ஷங்களையும்தர்சிப்பித்து, ஆச்ரயிப்பார்க்கு ருசிபிறக்கைக்காக த்யாஜ்யமான ஸம்ஸாரத்தினுடைய துக்கமும் ப்ராப்யமான மோக்ஷத்தினுடைய வாநந்தமும் ஸம்ஸார நிவ்ருத்தி பூர்வக

*-ப. (க) க-௩-நு. (உ) ஷி.எ.

மூ. யுலகம்படைத்தவனென்கிற சிதசித்ரயத்ரிவிதகாரணமானவன் அறியாதனவறிவிக்கவுள்ளந்தேறி 'தூமனம்மருளிலென்னும் ஜ்ஞாநபலமான வொளிக்கொண்ட மோக்ஷந்தேடிவாட

உலகம்படைத்தவன் - பொருளென்றிவ்வுலகம்படைத்தவனென்று ஜகத்ஸ்ருஷ்டிபண்ணினவன், என்கிற - என்றுசொல்லப்பட்ட, சிதசித்ரய - மூன்றுவகைப்பட்ட சிதசித்துக்களுக்கும், த்ரிவித - மூன்றுவகைப்பட்ட, காரணமானவன் - நிமித்தோபாதாநஸஹகாரிகாரணங்களானவன், அறியாதன - அறியவரியவர்த்தங்களையெல்லாம், அறிவிக்க - அறியும்படிபண்ண, உள்ளம் - திருவுள்ளம், தேறி - அத்யவஸாயத்தோடேகூடி, தூமநம் - பரிசுத்தமான வந்தஃகரணத்தையுடையராய், மருளில் - அவன்குணவிஷயகமான வஜ்ஞாநகந்தமில்லாத, என்னும் - என்றுசொல்லப்பட்ட, ஜ்ஞாநபலமான - ஜ்ஞாநத்துக்குப்பலமான, ஒளிக்கொண்ட - நிரவதிகதேஜோரூபமான, மோக்ஷம் - மோக்ஷத்தை, தேடி - எப்போதோவென்றுதேடி, வாட - (வாடிவாடும்என்று) வாடிப்போக,

மோக்ஷப்ராப்திக்குறுப்பான ஸாதநத்தினுடைய ரஸமும் முன்னுகவிகிக்கிற ஸகுணப்ரும்ஹோபாஸநத்தை நிஷித்தாநுஷ்டாநங்களினுடைய த்யாகபூர்வகமாக க்ஷேத்ரவாஸாத்யங்கங்களோடே கூட்டுகிறாரென்கிறார். (சோராதமூவாவேர்முதலாயுலகம்படைத்தவனென்கிற சிதசித்ரயத்ருவித காரணமானவன்) (க) "சோராத வெப்பொருட்கு மாதியாஞ்சோதி" (உ) "மூவாத்தனிமுதலாய்" (௩) "எப்பொருட்கும் வேர்முதலாய்வித்தாய்" (ச) "பொருளென்றிவ் வுலகம்படைத்தவன்" என்று லீலாவிபூதியில் ஸங்கல்பவிசிஷ்ட வேஷத்தாலே நிமித்தமாயும், ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்ட வேஷத்தாலே உபாதாநமாய்ம், ஜ்ஞாநஶக்த்யாதிகுண விசிஷ்டவேஷத்தாலே ஸஹகாரியாயும், நித்யவிபூதியில்இச்சாவிசிஷ்ட வேஷத்தாலே நிமித்தமாயும், அப்ராக்ருதாசிஜ்ஜீவவிசிஷ்டவேஷத்தாலே உபாதாநமாயும், விநியோகோபயோகிஜ்ஞாநாதிவிசிஷ்ட வேஷத்தாலே ஸஹகாரியாயும், இப்படி பத்த முக்த நித்யரூபமான சித்ரயத்துக்கும், ப்ராக்ருதாப்ராக்ருதகாலரூபமான வசித்ரயத்துக்கும் த்ருவிதகாரணமும்தானேயானஸர்வேஶ்வரன் (அறியாதனவறிவிக்கவுள்ளம்தேறி) (௫) "அறியாதனவறிவித்த" என்று, இவர்க்கஜ்ஞாதமான தத்வஹித புருஷார்த்தங்களை விஶததமமாகவறிவிக்க, (௬) "அடியையடைந்துள்ளந்தேறி" என்று, அத்தாலே இவருமவனைக்கிட்டிநெஞ்சில்தெளிவையுடையராய் (தூமனம்மருளிலென்னும்ஜ்ஞாநபலமான ஒளிக்கொண்டமோக்ஷம்தேடிவாட) (எ) "தூமனத்தனனாய்" "மருளில் வண்குருகூர்வண்சடகோபன்" என்று, மோக்ஷைகஹேதுதயா

உ-ப. (க) க-கக. (உ) அ-௫. (௩) ஷ ௧௦. (ச) ஷ-௧௦-கக. (௫) ௩-உ. (௬) கூ-அ. (எ) எ-அ.

மூ. உலராமலாவிசேர்ந்து சிக்கெனப்புகுந்து ஸம்பந்திகளும் சேர்தல்மாறினரென்னவாழ்வித்து

உலராமல் - (உலர்ந்துலர்ந்துஎன்று) உலராமல், ஆவிசேர்ந்து - (அந்தா மத்தன்புசெய்து ஆழ்வாருடைய) ஆத்மாவோடேகலந்து, சிக்கென - த்ருடமாக, புகுந்து - ஆழ்வார்திருவுள்ளத்திலேப்ரவேசித்து, ஸம்ப ந்திகளும் - இவரோடு ஸம்பந்தமுடையாரும், சேர்தல் - நரகஸமீபகா மித்வத்தையும், மாறினரென்ன - தவிர்ந்தார்களென்னும்படி, வாழ் வித்து - எல்லாரும்வாழும்படிபண்ணி,

பரிசுத்தமானவந்தக்கரணத்தையுடையராய், அவனுடையகல்யாணகுண விஷயமான அஜ்ஞாநகந்தமில்லாதபடி, கீழ்ப்பத்தில்பிறந்த தம்முடைய ஜ்ஞாநத்துக்கு பலம் மோக்ஷமாகையாலே (க) "களிப்புங்கவர்வுமற்றுப் பிறப்புப்பிணி மூப்பிறப்பற்று ஒளிக்கொண்ட சோதியுமாய்" (உ) "அடி யார்கள் குழாங்களையுடன் கூடுவதென்றுகொலோ" என்று, ப்ராக்ருத விஷயலாபாலாபங்களால்வரும் கர்வக்லேசங்களும், ஷட்பாவவிகாரங்க ளும் போய் பக்த்தஸத்வமாகையாலே நிரவதிகதேஜோரூபமான விக் ரஹத்தையுடையோமாய், நித்யஸூரிகள் திரளிலே கூடப்பெறுவதெ ப்போதோவென்று அந்தமோக்ஷத்தைப்பெறுகையிலாசையாலே தேடி அப்போதே கிடையாமையாலே (௩) "வாடிவாடும்" என்று, ஆச்ரய த்தை யிழந்த தளிர்போலேவாட, (உலராமலாவிசேர்ந்து) (ச) "உள் ளுளாவியுலர்ந்துலர்ந்து" என்கிற, தாபமாறும்படி (ரு) "அந்தாமத் தன்புசெய்தென்னுவிசேரம்மானுக்கு" என்கிறபடியே, பரமபதத்தில் பண்ணும் வ்யாமோஹத்தை யிவர்பக்கலிலேசெய்து, கமர்பிளந்த தரை யிலே நீர்பாய்ச்சுவாரைப்போலே இவரோடே நிரவதிகஸம்ச்லேஷ த்தைப்பண்ணி (சிக்கெனப்புகுந்து) (சா) "சிறிதோரிடமும் புறப்ப டாத் தன்னுள்ளே யுலகுகளொக்கவேவிழுங்கி சிக்கெனப் புகுந்தான்" என்று, அத்யல்பமாயிருப்பதொருபதார்த்தமும் தன்பக்கல் நின்றும் பிறிகதிர்ப்பட்டு நோவுபடாதபடி தன்ஸங்கல்பஸஹஸ்ரைகதேசத்தி லே ஸர்வலோகங்களையுமொருக்காலேவைத்து இனிப்போகாதபடிபுகு ந்து (ஸம்பந்திகளும் சேர்தல் மாறின ரென்னவாழ்வித்து) (எ) "எமர் கீழ் மேலெழுபிறப்பும் விடியாவெந்நரகத்தென்றும்சேர்தல்மாறினர்" என்று, இவருடைய ஸம்பந்த ஸம்பந்திகளும் ஸம்ஸாரான்முக்தராம்படி பண்ணி அத்தாலே (அ) "எமர்கீழ்மேலெமரேழெழுபிறப்பும்மேவுவன், தமரானார்கள் மாசதிரிதுபெற்று நம்முடையவாழ்வு வாய்க்கின்றவா" என்று, என்னோடு பரம்பரையா ஸம்பந்தமுடையாரும் என்னோட் டை ஸம்பந்தமே ஹேதுவாக பகவதீயரானார்கள். நிர்ஹேதுகபகவத் க்ருபையாகிற பெருஞ்சதிரைப்பெற்று ஸ்ரீவைஷ்ணவஸந்தாநம் ஊற் றுமாறாமல் பெருகுகிறபடியே என்றிவர்தாமே ஆச்சர்யப்படும்படி

உ-ப. (க) ௩-க0. (உ) ஷை (௩) ச-க. (ச) ச-எ. (ரு) ரு-க. (சா) சா-உ. (எ) ஷை எ. (அ) எ-க.

மூ. உபகரிக்கிற நீந்துங்கடலிலெம்மாவீட்டையுபையாநுகுண மாக்கினவர் ஆஸ்ரயணீயனுக்கு பூர்வோக்த பரத்வத்தை ஸ்தாபிக்கிறஸகலபலப்ரதத்வ காரணத்வ ஶேஷஶாயித்வ ஶ்ரிய꞉ பதித்வஸௌலப்யாதிகளை திண்ணணைவதென்று வெளியிட்டு

உபகரிக்கிற - உபகாரம்பண்ணுகிற, நீந்தும் - நீஞ்சும்படியானதுக்கமில்லாததாய், கெடலில் - அநர்த்தகந்தமில்லாத, எம்மாவீட்டை - எவ்வகையாலும் விலக்ஷணமான பரமபதத்தை, உபயாநுகுணமாக்கினவ-பரதந்த்ரமான வாத்மஸ்வரூபத்துக்கு மீஶ்வரஸ்ரூபத்துக்குமநுகுணமாம்படி, நிஷ்கர்ஷித்தவர், ஆஶ்ரயணீயனுக்கு-ஆஶ்ரயணயோக்யனான வீஶ்வரனுக்கு, பூர்வோக்த - முன்னேசொல்லபட்ட, பரத்வத்தை-பரனானபடியை, ஸ்தாபிக்கிற - நிலைநிறுத்துகிற, ஸகலபல-எல்லாபலங்களையும், ப்ரதத்வ-தருகை, காரணத்வ-ஸகலஜகத்காரணனுயிருக்கை, சேஷ - திருவநந்தாழ்வான்மேலே, ஶாயித்வ - திருக்கண்வளர்ந்தருளுகை, ஶ்ரீய꞉பதித்வ-பெரியபிராட்டியாருக்கு வல்லபனுயிருக்கை, ஸௌலப்ய - ஆஶ்ரித ஸுலபனுயிருக்கை, (இவைகளை) ஆதிகளை - முதலாகவுடையவைகளை, திண்ணணைவதென்று - திண்ணன்வீடு அணைவதரவணைமேல் என்கிற, திருவாய்மொழிகளாலே, வெளியிட்டு - ப்ரகாசிப்பித்து,

இவரைவாழ்வித்து (உபகரிக்கிறநீந்தும் கடலிலெம்மாவீட்டையுபயாநுகுணமாக்கினவர்) இப்படி தம்முடைய ஸம்பந்திபரம்பரையளவும் வெள்ளமிடுகிற தன் ப்ரீதியாலே தமக்கவனுபகரிக்கத் தேடுகிற (க) "நீந்தும்துயரில்லாவீடு" (உ) "கெடலில்வீடு"(ங) "எம்மாவீடு" என்று துக்க கந்த ரஹிதமாய் அநர்த்தகந்தமில்லாததாய் எவ்வகையாலும் விலக்ஷணமான மோக்ஷத்தையெனக்கென்றுதரில் அந்தமோக்ஷம் அஹங்கார கர்ப்பமாகையாலே ஐஶ்வர்யாதிகளோபாதி ஸ்வரூபவிருத்தமாகையாலே அதினுடைய ப்ரஸங்கமுமெனக்கஸஹ்யம். ஆனபின்பு எனக்குமோக்ஷம்தரப்பார்த்ததாகில் (ச) "நின்செம்மாபாதபர்ப்புத்தலைசேர்த்தொல்லை" (ரு) "அம்மாவடியேன் வேண்டுவதீதே" என்று, சேஷியான உன்னுடைய அகவாய்சிவந்து புறவாய் ஶ்யாமமுமாய் பரமபூஜ்யமாய் பரமபோக்யமான திருவடிகளை ஶேஷபூதனான வென் தலையிலே கோக்குவாயும் படுகேண்ணியும் போலே சடக்கெனச்சேர்க்க வேணும். சேஷியான உன்பக்கல் ஶேஷபூதனான நான் அபேக்ஷித்துப் பெறுவதிதுவே? என்றும், (சு) "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்றும், உபயஸ்வரூபத்துக்குமநுகுணமாக நிஷ்கர்ஷித்தவர் (ஆஶ்ரயணீயனுக்கு பூர்வோக்தபரத்வத்தை ஸ்தாபிக்கிற) ஆஶ்ரயணீயனான தனக்கு முதற்பத்தில் சொல்லப்பட்ட ஸர்வஸ்மாத்பரத்வத்தை நிலைபெறுத்துவனவான (ஸகல பலப்ரதத்வ காரணத்வ ஶேஷஶாயித்வ ஶ்ரிய꞉பதித்வ ஸௌலப்யாதிகளை திண்ணணைவதென்று வெளியிட்டு)

௨-ப. (க) அ-௨. (௨) கூ-கக. (ங) கூ-க. (ச) ஷை (ரு) ஷை (சு) ஷை-ச.

மூ. கள்வாதீர்த்த னென்று

கள்வாதீர்த்தனென்று - கள்வாவெம்மையும் தீர்த்தனுலகளந்த என்கிற பாட்டுக்களாலே,

(௧) "வீடுமுதல் முழுதுமாய்" என்று, ஸகல பலப்ரதத்வம், (௨) "தேவுமெல்லாப்பொருளும் கருத்தில் வருத்தித்தமாயப்பிரான் ஆக்கினன் தெய்வவுலகுகள்" என்று, ஸர்வகாரணத்வம், (௩) "ஆழியம்பள்ளியாரே" என்று, லக்ஷணையாலே ஶேஷஶாயித்வம் (௪) "பூமகள்தன்னை வேறன்றிவிண்டொழத்தன்னுள்வைத்து" என்று, ஸ்ரீயঃபதித்வம்,(௫) "கண்ணன்கண்" (௬) "கோபாலகோளரியேறு" என்று, அவதாரஸௌலப்யம், ஆதிஶப்தத்தாலே (௭) "தகுங்கோலத்தாமரைக் கண்ணன்" என்று, புண்டரீகாக்ஷத்வம்,(௮) "ஏழுலகங்கொள்ளும் வள்ளல்வல்வயிற்றுப்பெருமான்" என்று, அகடிதகடநாஸாமர்த்யம், என்கிற விவற்றை "திண்ணன்வீட்டிலும்" (௯) "அணைவதரவணைமேல்" என்று, ஶேஷசாயித்வம், பூம்பாவையாகம்புணர்வது" என்று, ஸ்ரீயঃபதித்வம், (௧0) "இருவரவர்முதலும்தானே" என்று, காரணத்வம்,(௧௧) "இணைவனுமெப்பெருட்கும்" என்று, அவதாரப்ரயுக்தஸௌலப்யம், (௧௨) "வீடுமுதலாம்" என்று, ஸகலபலப்ரதத்வம், ஆதிஶப்தத்தாலே (௧௩) "பிறவிக்கடல் நீந்துவார்க்குப்புணைவன்" என்கிறமோக்ஷோபாயத்வம், "ஆனையிடர்கடிந்த" என்கிற, ஆபத்ஸகத்வம், (௧௪) "மூவுலகுங்காவலோன்" என்கிற, ஸர்வரக்ஷகத்வம், என்கிறவிவற்றை, (௧௫) "அணைவதரவணையிலும் ப்ரகாசிப்பித்து. அன்றிக்கே (௧௬) "வீடுமுதல் முழுதுமாய்" என்று, மோக்ஷப்ரப்ருத்யஶேஷபுருஷார்த்த ப்ரதனுயென்கையாலே ஸகலபலப்ரதத்வத்தையும், (௧௭) "மிகும்தேவுமெப்பொருளும்படைக்க" (௧௮) "கருத்தில்தேவுமெல்லாப்பொருளும் வருத்தித்த" "தன்னுந்தியுள்ளே வாய்த்ததிசைமுகனிந்திரன் வானவராக்கினன்" என்று, காரணத்வத்தையும், திண்ணன் வீட்டிலும் 'அணைவதரவணைமேல்' என்றும், "பூம்பாவையாகம் புணர்வது" என்றும், "இணைவனுமெப்பொருட்கும்" என்றும், அடைவே ஶேஷஶாயித்வ, ஸ்ரீயঃபதித்வ, ஸௌலப்யங்களையும், ஆதிஶப்தத்தாலே, "வீடுமுதலாம்" என்று, மோக்ஷப்ரதத்வத்தையும், நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர்" (௧௯) "பலமுந்து சீரில்படிமின்" என்று, முமுக்ஷூபாஸ்யத்வத்தையும், "அணைவதரவணையிலும்" வெளியிட்டென்னவுமாம். இந்தயோஜனையே இதின் பட்டோலையான க்ரந்தத்திலிவரருளிச்செய்ததுக்குச்சேருமது. முற்பட்டயோஜனையில் (௨0) "ஆழியம்பள்ளியாரே" என்று, ஶேஷஶாயித்வம், லக்ஷணையாலே கொள்ள,

௨-ப. (௧) ௨-௰. (௨) ௯-௮. (௩) ௯-௬. (௪) ௯-௩. (௫) ௨-௧. (௬) ௯-௨. (௭) ௯-௫. (௮) ௯-௭. (௯-மு-௧௩-ல்) ௮ - ௧. (௧௪) ௮-௫. (௧௫ - ௧௬) ௨-௧. (௧௭) ௨-௫. (௧௮) ௨-௮. (௧௯) ௮-௪. (௨0) ௨-௬.

மூ. வசந ப்ரத்யக்ஷங்களுங் காட்டிபுலனைந்தென்று

வசநப்ரத்யக்ஷங்களும் - வசநம் ப்ரத்யக்ஷம் இவைகளையும், காட்டி - எல்லாரும் காணும்படிபண்ணி, புலனைந்து - புலனைந்துமேயுமென்கிற பாட்டாலே,

வேண்டுகையும், "வீடுமுதலாம்" என்று, மோக்ஷத்துக்குஹேதுவாமென்கிறத்தை ப்ரகரணவிருத்தமாம்படி மோக்ஷாதிபுருஷார்த்த ப்ரதத்வமாகச்சொல்லுகையும், ஸகலபலப்ரதத்வமென்றுதுடங்கி இவரெண்ணின வடைவுக்குச்சேர இரண்டு திருவாய்மொழியிலும் சொல்லப்போகாமையுமாகிற அஸ்வாரஸ்யங்களுமுண்டு. (கள்வாதீர்த்தனென்று வசநப்ரத்யக்ஷங்களுங்காட்டி) (க) "கள்வா" என்கிறபாட்டிலே, அவதரித்து உன்னுடையபரத்வம் தெரியாதபடிநின்றாயேயாகிலும், எங்களுக்குக்காரண பூதனானசேஷி நீயே என்று தேவதாந்தரங்களில் தலைவரான ப்ரம்ஹருத்ராதிகளே, தங்களுக்குக்காக்ஷிகொடுக்கைக்குப் பெரியதிருவடியை மேற்கொண்டு புறப்பட்டால் அவனுடைய திருவடிகளிலேவிழுந்து கூப்பிடாநிற்பர்களென்று, அவனே ஸர்வஸ்மாத்பரனென்னு மிவ்வர்த்தத்துக்கு தேவதாந்தரங்கள் வசநத்தையும் (உ) "தீர்த்தனுலகளந்த" என்கிறபாட்டிலே, ஓரஸ்த்ரலாபத்துக்காக புஷ்பாதிகளுங்கொண்டு ருத்ரஸமாராதநம் பண்ணப்புகுகிறவர்ஜுனனைப் பாத்து அந்த புஷ்பங்களை நங்காலிலே பொகடு, என்றுக்ருஷ்ணனருளிச்செய்ய, அவனும் தீர்த்த பூதனானவவனுடைய திருவுலகளந்தருளின திருவடிகளிலே அப்பூவைப்பறிமாற (௩) "పార్థోవిజేతామధుసూదనస్య పాదారవిన్దార్పితచిత్రపుష్పం । దదర్శగంగాధరమౌళిమధ్యే భూయవివీరః కృతనిశ్చయార్థః" "பார்த்தோ விஜேதாமதுஸூதநஸ்ய பாதாரவிந்தார்ப்பிதசித்ரபுஷ்பம் ததர்ஶகங்காதரமௌளிமத்யேபூவவீரஃக்ருத நிஶ்சிதார்த்தஃ" என்கிறபடியே, தான்திருவடிகளில்சாத்தினபுஷ்பங்களோடு ஸஜாதீயங்களானவையன்றிக்கே அவைதன்னையேபாடே பக்கே யன்றிக்கே ருத்ரன்தலைமேலே ஆப்தவாக்யத்தாலன்றிக்கே தானேப்ரத்யக்ஷித்து (ச) "సతుపార్థోమహామనాః" "ஸதுபார்த்தோ மஹாமநாஃ" என்கிறபடியே, பேரளவுடையனானவவன் நிர்ணயித்தபரத்வம் மந்தமதிகளாலே இன்றாராயும்படியாயிருந்ததோ? என்று, ப்ரத்யக்ஷங்களையுங்காட்டி, (புலனைந்தென்று) ஸம்ஸாரமோக்ஷ ஸாதநதுக்காந்தரஸம் முன்னாகவிதிக்கிற அந்தர்க்கதகுணோபாஸநத்தை (ரு) "புலனைந்து" என்கிற, பாட்டிலே ஆஶ்ரயணத்திலிழிகிறவர்களுக்குத்யாஜ்யத்திலே ஜிஹாஸையும் ப்ராப்யத்திற்ப்ராவண்யமும், ஸாதநத்தில்ருசியும் விளையும்படி (௬) "புலனைந்துமேயும்பொறியைந்துநீங்கி" என்று, பரிச்சிந்நவஸ்துக்ராஹகமான இந்த்ரியவஶ்யதை தவிர்ந்தென்கையாலே அல்பாஸ்திரத்

உ-ப. (க) உ-கo. (உ) அ-௬. (௩) (ச) ஸ்ரீ-கீ. க. சரு. (ரு) தி - வா. உ. அ. ச. (௬) ஷை.

மூ. ஸம்ஸாரமோக்ஷ ஸாதநதுக்காநந்தரஸம்முன்னாக விதிக்கிற அந்தர்க்கதகுணோபாஸநத்தை மதித்துப்பெருக்கி மூழ்கியழுந்திக் கீழ்மைவலம்சூதும் செய்து இளமை கெடாமல்

ஸம்ஸாரமோக்ஷ-ஸம்ஸாரம்மோக்ஷம் (இவைகளுக்கும்), ஸாதந - உபாயாநுஷ்டாநத்தினுடையவும், துக்காநந்த-துக்கம் ஆநந்தம், ரஸம் - ரஸவிசேஷம், (இவைகளை) முன்னாக - முதலாக, விதிக்கிற - விதிக்கிற, அந்தர்க்கதகுண - ஈச்வரனுக்குள்ளேயுண்டான கல்யாணகுணங்களுடைய, உபாஸநத்தை - தைலதாராவதவிச்சிந்நஸ்ம்ருதிஸந்தாநத்தை, மதித்து - (சதிரிளமடவார் தாழ்ச்சியை) மதித்து, பெருக்கி - பெருகும்படிபண்ணி, மூழ்கி - வல்வினையிலேமுழுகி, அழுந்து - நரகிலேயழுந்தி, கீழ்மை - கீழ்மையையும், வலம் - பலத்தையும், சூதும்-சூதையும், செய்து - பண்ணி, இளமைகெடாமல் - கிளரொளியிளமை கெடுவதன் முன்னம்,

வாதி தோஷதுஷ்டமான ஶப்தாதி போகங்களையநுபவித்திருக்கும் ஸம்ஸாரத்தினுடையதுக்கமும் "நலமந்தமில்லதோர் நாடுடிகுவீர்" என்று நன்மைகளுக்குமுடிவில்லாத திருநாட்டிலே புகுவீரென்கையாலே மோக்ஷத்தினுடைய வாநந்தமும், "பலமுந்துசீரில்படிமின்" என்று, (க) "సుసుఖం కర్తుం" "ஸுஸுகம் கர்த்தும்" என்கிறபடியே, ஸ்மர்த்தவ்யவிஷயஸ்ஸாரஸ்யத்தாலே பலதசையில்போலே ஸாதநதசையிலும் இனித்தாகவிருக்கையாலே பலம் முற்பட்டிருக்கிற கல்யாணகுணங்களில் ப்ரவணராங்கோளென்கையாலே, ஸாதநத்தினுடையரஸம் முன்னாக ஸம்ஸாரநிவ்ருத்திபூர்வகமான மோக்ஷப்ராப்தி வேண்டியிருப்பார் அஸுரவர்க்கத்தைத் தடுமாறி முடிந்துபோம்படி செற்றவனாகையாலே ப்ரபலப்ரதிபந்தகங்களை அநாயாஸேநபோக்கவல்லவனுடைய குணங்களிலே ப்ரவணராகுங்கோளென்று விதிக்கிற (உ) "తస్మిన్యదన్తస్తదుపాసితవ్యం" "தஸ்மிந்யதந்தஸ் ததுபாஸிதவ்யம்" என்று, ப்ரம்ஹஸ்வரூபாந்தர்க்கதமான அபஹதபாப்மத்வாதி குணோபாஸநத்தை (மதித்துப்பெருக்கி மூழ்கியழுந்திக்கீழ்மை வலம் சூதும்சதிரிளமைகெடாமல்) (௩)"சதிரிளமடைவார் தாழ்சியைமதித்து 'திறமுடைவலத்தால்' தீவினைபெருக்கி', வல்வினைமூழ்கி 'நரகழுந்தி' 'கீழ்மைசெய்து' 'வலங்கழித்து' சூதென்று "களவும் சூதும்செய்து,(ச)கிளரொளி யிளமைக் கெடுவதன்முன்னம்" என்று, உபாஸநவிரோதியான இதர விஷயப்ராவண்யத்தைப்பண்ணி அத்தாலே பாபங்களைக்கூடபூரித்து அவற்றிலே மறுநனைய மூழ்கித்தறைப்பட்டு தண்மையைச்செய்து பலத்தைப்பாழேபோக்கி, பஶ்யதோ

(க) (உ) தைத்தரீயே - நாராயணே. (௩) தி - வா. உ. க0. உ. (ச) ௪0. க. க.

மூ. செய்யும் க்ஷேத்ரவாஸ ஸங்கீர்த்தநாஞ் ஜலிப்ரதக்ஷிணகதி சிந்தநாத்யங்க யுக்தமாக்குகிறூர் இரண்டாம் பத்தில்:—

மூ—(௩) முழுதுமாய்

செய்யும் - பால்யத்திலேகர்த்தவ்யமான, க்ஷேத்ரவாஸ - திவ்யதேஶவாஸம், ஸங்கீர்த்தந - திருநாமஸங்கீர்த்தநம், அஞ்சலி - கைகூப்புகை, ப்ரதக்ஷிண - ப்ரதக்ஷிணம்பண்ணுகை, கதிசிந்த - அர்ச்சிராதிமார்க்ககமநசிந்தை, ஆதி - இவைமுதலான, அங்க - அங்கங்களோடே, யுக்தமாக்குகுறூர்-கூடினதாம்படிபண்ணுகிறூர், இரண்டாம்பத்தில் - த்விதியதஶகத்தில்.

(அ) முழுதுமாய் - எல்லாபதார்த்தங்களும் தானேயாய்,

ஹரனுய், க்ருத்ரிமனுய் பால்யத்தைப்பாழேபோக்காதே (செய்யும் க்ஷேத்ரவாஸ ஸங்கீர்த்தநாஞ்ஜலிப்ரதக்ஷிண கதிசிந்தநாத்யங்கயுக்தமாக்குகிறூரிரண்டாம்பத்தில்) அதாவது :— (க) "బాల్యఏవచరేద్ధర్మమ్" "பால்யயேவசரேத்தர்மம்" என்றும், (உ) "తస్మాత్బాల్యేవివేకాత్మా యతేతశ్రేయసే సదా" "தஸ்மாத் பால்யேவிவேதகாத்மாயதேதஶ்ரேயஸேஸதா" என்றும் சொல்லுகிறபடியே - பால்யத்திலே கர்த்தவ்யமான "மாலிருஞ்சோலை சார்வது சதிரே" "போதவழ்மலையே புகுவதுபொருளே" என்கிற க்ஷேத்ரவாஸம், "பதியதுவேத்தி" என்கிற ஸங்கீர்தநம், "தொழக்கருதுவதே" என்கிற அஞ்சலி, "வலஞ்செய்துநாளும் மருவுதல்வழக்கே" என்கிற ப்ரதக்ஷிணம், "நெறிபடவதுவே நினைவதுநலமே" என்கிற கதிசிந்தனையாகிற விவைமுதலான உபாஸநாங்கத்தோடே சேர்க்கிறூர் இரண்டாம்பத்தி லென்கை. *

வ்யா. (௩) மூன்றும்பத்தால், (௩) "తత్సృష్ట్వాతదేవానుప్రావిశత్" "தத்ஸ்ருஷ்டவா ததேவாநுப்ராவிஶத்" என்கிறபடியே, கார்யபூதசேதநாசேதநங்களையடைய வ்யாபித்து தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனுயிருக்கையாலே ஸர்வவ்யாபகனுன ஸர்வேஶ்வரன், கீழில்பத்திலிவர் உபயாநுகுணமாக நிஷ்கர்ஷித்தமோக்ஷத்துக்குபலமான ஸ்வவிக்ரஹாநுபவத்தையிவருக்குப்பண்ணிவிக்க,இவருமநுபவித்துதரித்து அவ்வநுபவஜநிதப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸர்வவிதகைங்கர்யங்களும் செய்யவேண்டும்படியான அபிநிவேஶத்தையுடையராய், தம்மபிநிவேஶாநுகுணமாக வவன்காட்டிக் கொடுத்தவவனுடைய ஸர்வாத்மபாவத்தைப் பேசி அத்தால்வந்த ப்ரீதியினுடைய களிப்பையுடையராய் அந்தப்ரீதியவனளவில்பர்யவஸியாதே பாகவதஶேஷத்வத்தினெல்லையளவும் சென்று அந்த பாகவதர்களுக்கு நிருபகமான பகவத்வைலக்ஷண்யாநு ஸந்தாநத்தாலே ஒன்றின் வ்ருத்தியை யொன்றுசைப்படும்படி சேதநஸமாதியையடைந்த கரணக்ராமமும் தாமும்தனித்தனியவநுபவிக்கவேண்டும் பெருவிடாயையுடையராய், இதரஸ்தோத்ரத்துக்கநர்ஹகரணராய்,

(க), (உ) வி - பு - க. எ. எ௫. (௩) தை - உ. ஆ - கூ. ௩.

௩. யெங்கணு மொழிவற அருவாகிநின்று தோய்விலனும் ஸர்வ்வ்யாபகன் தீர்ந்த வடியார்களைத் தாளிணைக் கீழ்க்கொள்ளும் தன்படிக்கும்

எங்கணும்-எல்லாவிடங்களிலும், ஒழிவற-விச்சேதமில்லாமல், அருவாகிநின்று - அந்தர்யாமிதயாநின்று, தோய்விலனும் - இவற்றோடு ஸ்பர்ஶமில்லாதவனான, ஸர்வவ்யாபகன் - ஸகலவஸ்துக்களையும் வ்யாபித்திருக்குமவன், தீர்ந்த-தனக்கேயநந்யார்ஹரான, அடியார்களை - ஆஶ்ரிதரை, தாளிணைக்கீழ் - சரணயுகளத்தின்கீழே, கொள்ளும் - ஸ்வீகரிக்கிற, தன்படிக்கும் - தன்னுடைய் ஸ்வபாவத்துக்கும்,

அவ்வளவன்றிக்கே பகவத்ஸ்தோத்ரத்துக்கர்ஹகரணருமாய், பகவதநுபவத்துக்கு தமக்கொரு ப்ரதிஹதிதுடக்கமானவையுமற்று நிரதிஶயாநந்தயுக்தரானவர், புண்டரீகாக்ஷனாய்ஸுஶீலஸேவ்யனானவனை நம்மாலாஶ்ரயிக்கப்போமோவென்று ஸம்ஸாரிகளஞ்சிக்கைவாங்காமல் மேல்விழுந்தாஶ்ரயிக்கும்படி கீழிரண்டுபத்தாலு முபதேசித்த அவதாரஸௌலப்யம் பரத்வஸ்தாநீயமாம்படி அர்ச்சாவதார ஸௌலப்யத்தையுபதேசித்து அர்ச்சிராதிகதியாலே பரமபதத்தைப்ராபிக்குமவனையொழிய இதரஸ்தோத்ரத்திலே தாழவிழுகைநிஷ்ப்ரயோஜநம், ஆனபின்புநீங்கள், ஸகலபலப்ரதநுமாய் ஸாம்யாபத்திப்ரதநுமானவவன் விஷயத்திலே வாசிகமானவடிமையைச்செய்யுங்கோளென்று நிஹீநவ்ருத்தியான இதரஸேவையை நிவர்த்திப்பித்து தம்முடைய வ்ருத்தியான வாசிககைங்கர்யத்திலே மூட்டுகிறாரென்கிறார். (முழுதுமாயெங்கணுமொழிவற வருவாகிநின்று தோய்விலனும்ஸர்வவ்யாபகன்) (க) "முழுதுமாய் முழுதியன்றாய்" (௨) "ஏழ்ச்சிக்கேடின்றியெங்கணும் நிறைந்தவெந்தாய்" "எஞ்யான்று மெங்குமொழிவற நிறைந்துநின்ற" (௩) "அளவுடை யைம்புலன்களறியாவகையாலருவாகிநிற்கும்" (௪) "யாவையும் யாவரும் தானாயவரவர் சமயம்தோறும் தோய்விலன்" என்று, தேஶகால வஸ்துக்களால் பரிச்சேதிக்கவொண்ணாதபடி கார்யபூத ஸகலசேதநாசேதநங்களையும் வ்யாபித்து, (ரு) "𑌅𑌨𑌶𑍍𑌨𑌨𑍍𑌨𑌨𑍍𑌯𑍋 𑌅𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿" "அநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி" என்கிறபடியே, தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கையாலே, வ்யாபகனான ஸர்வேஶ்வரன் (தீர்ந்தவடியார்களைத் தாளிணைக்கீழ்க்கொள்ளுந் தன்படிக்கும்) (௬) "தீர்ந்தவடியவர்தம்மை" என்று, ப்ராப்யப்ராபகங்களிரண்டும் தானேயாக வத்யவஸித்தவாஶ்ரிதரை (௭) "சன்மசன்மாந்தரங்காத்தடியார்களைக்கொண்டுபோய்த் தன்மைபெறுத்தித்தன் தாளிணைக்கீழ்கொள்ளுமப்பன்" என்று, ஜன்மபரம்பரைகளில் புகாதபடி ரக்ஷித்து, ஆரப்தஶரீராவஸாநத்திலே அர்ச்சிராதிமார்க்கத்தாலே

திவா. ௩-ப. (க) க-அ. (௨) ௨-௪. (௩) ௧0-௧0. (௪) ௪-௧0. (ரு) ருத்வேதே. (௬) ரு-௧௧. (௭) ௭-௭.

மூ. நீதந்தமாமாயப்புணர்வினைப்பிறப்பழுந்தியலமருகின்றேன் வேரறவரிந்தெந்நாளெங்குவந்து தலைப்பெய்வனென்று கழித்துப்புகுந்தும் தங்காதலுக்கும்

நீதந்த - நீயேஸ்வேச்சையாகக்கொடுத்த, மாமாய - ஆஶ்சர்யகரமான, புணர் - கட்டையுடைய, வினை-கர்மநிபந்தநமான, பிறப்பு - ஜந்ம (ஸாகரத்திலே) அழுந்தி - முழுகிமேலேகிளம்பாமல், அலமருகின்றேன் - அலமாப்புப்படாநின்றேன், வேரற-பக்கவேரோடேயறும்படி, அரிந்து- சேதித்து, எந்நாள் - எந்தநாளிலே, எங்கு - எவ்விடத்திலே, வந்து - (ஸமீபத்தில்) வந்து, தலைப்பெய்வனென்று - கிட்டக்கடவேனென்று, கழித்து - காயுங்கழித்து, புகும் - சேரவேண்டிய, தங்காதலுக்கும் - ஶேஷபூதரான தம்முடையவாசைக்கும்,

தேஶவிஶேஷத்திலேகொடுபோய், ஸ்வஸ்வரூபப்ராப்தியைப் பண்ணிக்கொடுத்து “பாதோபதாநத்தோபாதியாக தன்திருவடிகளின் கீழேயிட்டுக்கொள்ளும் ஶேஷியான தன்னுடைய ஔதார்யத்துக்கும் (நீதந்தமாமாயப்புணர்வினைப் பிறப்பழுந்தியலமருகின்றேன் வேரறவரிந்தென்னாளெங்குவந்து தலைப்பெய்வனென்று கழித்துபுகும் தம்காதலுக்கும்) (க) “அந்நாள் நீ தந்தவாக்கையின்வழியுழல்வேன்” பன்மாமாயப் பல்பிறவியில்படுகின்றயான்” “பொல்லாவாக்கையின் புணர்வினை” “வினையியல்பிறப்பழுந்தி” (ச) “கொடுவினைதூற்றுள்நின்றுபாவியேன்பலகாலும் வழிதிகைத்தலமருகின்றேன்” என்று, ஸ்ருஷ்டிகாலத்திலே உன்னைப் பெருகைக்குடலாக நீ தந்த ஶரீரத்தைக்கொண்டுன்னைப் பெறப்பாராதே நானதின்வழியேபோய் அநர்த்தத்தைச் சூழ்த்துக்கொண்டு குணத்ரயபேதத்தாலே பலவகைப்பட்டு துரத்யயையான ப்ரக்ருதிகார்யமான தேவாதி தேஹங்களிலே அவகாஹித்து ஹேயமான ஶரீத்துக்கடியாய் ஒன்றோடொன்று பிணைந்திருக்கிற கர்ம்மடியாக மீண்டும் பாபத்திலே கொடுபோய் மூட்டக்கடவதான ஜந்மபரம்பரைகளிலேயழுந்தி, என்னாலடியறுக்கவும் அடிகாணவுமொண்ணாதே புகுரவழிதெரியுமதொழிய புறப்பட வழிதெரியாத பாபமாகிற மிடைந்தவிந்த தூற்றிலே யகப்பட்டுநின்றுன்னை ப்ராபிக்கைக்கீடான வழிகாணாதே கூப்பிட்டலமாவாநின்றேன் (ரு) “வினைகளை வேரறப்பாய்ந்து” (சு) “தொன்மாவல்வினைத்துடர்களைமுதலறிந்து” என்று, அநாதியாய் அபரிச்சேத்யமாய் ஸ்வயத்நநிவர்த்யமல்லாதபடி அதிப்ரபலமான பாபங்களினுடையவநுபந்தங்களை மறுகிளைவாராமல் வேறற்றுப்போம்படி ஊசிவேரோடேயரிந்துபொகட்டு (எ) “எந்நாள் யானுன்னையினிவந்து கூடுவன்” (அ) “எங்குவந்தணுகிற்பன்” (கூ) “எங்கினித்தலைப்பெய்வன்” என்று, நானுன்னைக்கிட்டுவதொருநாளறுதியிட்டுத்

திவா. ௩-ப. (க - மு - ச - ல்) உ-க+உ-உ+உ-௩+உ-எ+உ-௬+ (ரு) உ - க, (சு) உ-உ. (எ) உ-க. (அ) உ-ரு. (கூ) உ-கூ.

மூ- ஸத்ருபமாகக்கண்டுகொள்ளென்னும் ஊனமில்மோக்ஷபலமான முடிச்சோதியிலநுபவத்தாலே நித்யவஸ்து நீடுபெற்று அவச்சேதமற்றவடிமைசெய்யவேண்டும்படி

ஸத்ருபமாக - தகுந்திருக்கும்படி, கண்டுகொள்ளென்னும் - கண்டுகொள்ளென்றுகாட்டிக்கொடுக்கிற, ஊனமில்-புநராவ்ருத்தியாகிற குறைத்தலில்லாத, மோக்ஷபலமான - மோக்ஷத்துக்குபலமான, முடிச்சோதியில் - முடிச்சோதியென்கிற திருவாய்மொழியில் சொல்லுகிற, அநுபவத்தாலே - ஆபாதசூடம்பண்ணின வநுபவத்தாலே, நித்யவஸ்து - நித்யமானவாத்மா, நீடுபெற்று - ஸத்தையைப்ராபித்து, அவச்சேதமற்ற - பரிச்சேதமின்றிக்கேயிருக்கிற, அடிமைசெய்ய - தாஸ்யஸூசகமான கைங்கர்யத்தைப்பண்ண, வேண்டும்படி - ஆசைப்பட்டபடியே,

தரவேணும். நானுன்னையெங்குவந்துகிட்டக்கடவேன். இனி கிட்டுகையென்றொரு பொருளுண்டோ? என்று, ஶரீரஸம்பந்தத்துக்கு நொந்து அதிலுண்டானவருசியோடே (க) "காயங்கழித்தவன் தாளிணைக்கீழ்புகுங்காதலன்" என்று, பகவத்குணநுபவத்தோடே காலக்ஷேபத்தைப்பண்ணி ஶரீரத்தைவிட்டவன் திருவடிகளின்கீழே புகவேணுமென்னும்படியான ஶேஷபூதரான தம்முடைய வாசைக்கும், (ஸத்ருபமாகக்கண்டுகொள்ளென்னும்) இப்படியானவிவர்படிக்கும்தகுதியாக (உ) "வானவர்நாட்டையும் நீ கண்டுகொள்" என்று, ஈஶ்வரன் காட்டிக்கொடுக்கிற (ஊனமில்மோக்ஷபலமான முடிச்சோதியிலநுபவத்தாலே நித்யவஸ்து நீடுபெற்று) (௩) "ஊனமில்மோக்கமென்கோ" என்று, ப்ரகாரமான ஆத்மாநுபவமாத்ரத்திலன்றிக்கே ப்ரகாரியளவுஞ் செல்லவநுபவிக்கையாலே குறைவில்லாததாய், ஸ்வரூபாநுரூபமாகக்கீழ்ல் பத்திலறுதியிட்டபரமபுருஷார்த்தலக்ஷணமோக்ஷத்துக்கு பலம், பகவதநுபவகைங்கர்யங்களாகையாலே (ச) "முடிச்சோதி" என்கிற திருவாய்மொழியிலே, அவன்வடிவழகையும் ஆபரணச்சேர்த்தியையுமநுபவித்து அவைபரிச்சேதித்தநுபவிக்கவொண்ணாமையாலே, இது கரணஸங்கோசநிபந்தநமென்று நினைத்து, இவர்படுகிற க்லேஶத்தை விஷயவைலக்ஷண்ய நிபந்தநமென்றறிவித்து, ஈஶ்வரன் நிவ்ருத்தமாக்க, அவ்வநுபவத்தாலே, (ரு) "பெற்றதுநீடுயிரே" என்று, நித்யவஸ்துஸத்தைபெற்று (அவச்சேதமற்ற வடிமைசெய்ய வேண்டும்படி) ஸத்தாகார்யமும்பலிக்கவேண்டுகையாலே, (சா) "ஒழிவில்காலமெல்லாமுடனாய் மன்னிவழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்" என்று, தேஶகாலாவஸ்தாப்ரகாரங்களையிட்டவச்சேதியாதபடிஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும், ஸர்வவிதகைங்கர்யங்களும் செய்யு

தி - வா - ௩ - ப. (க) ௯ - அ. (உ) ௯ - ௯. (௩) ச-எ. (ச) ௩ - க. (ரு) உ - ௧௦. (சா) ௩ - க.

மூ. ஸர்வாத்மபாவத்தைப்புகழ்ந்து சொல்லிப்பாடி யேத்திப் பிதற்றியெழுந்தும் பறந்தும் துள்ளிக்குனித்துத்தடுகுட்டக்கும்பிடுநட்டமிட்டுச் சிரிக்கக்குழைந்துநையும் ப்ரீதியுகளத்தம் மடியாரென்ன வுடன் கூடும்ஸாத்யம்வளர

ஸர்வாத்மபாவத்தை - அவன்காட்டிக்கொடுத்த ஸர்வாந்தராத்மத்வத்தை, புகழ்ந்து - ஸ்துதித்து, சொல்லி - எம்மானைச்சொல்லி, பாடி - பண்கள்தலைக்கொள்ளப்பாடி, ஏத்தி - (முனிவின்றி) யேத்தி, பிதற்றி - (பேர்பலசொல்லிப்) பிதற்றி, எழுந்தும் - கிளம்பியும், பறந்தும்-ஆகாசத்திலே ஸஞ்சரித்தும், துள்ளி - அடிக்கடிகிளம்பி, குனித்து - ஸ்தோத்ரநமஸ்காராதிகளைப்பண்ணி, தடுகுட்ட - தலைகீழாக, கும்பிடு - கும்பிட்டு, நட்டமிட்டு - நட்டமாகநின்று, சிரிக்க - உலோகர்சிரிக்க, குழைந்து - உள்ளங்குழைந்து, நையும் - சிதிலமாம்படியான, ப்ரீதி - ப்ரீதியானது, உகள - கரைபுரள, தம்மடியாரென்ன - அவனுடைய ஸம்பந்த ஸம்பந்திகளே யெமக்குஸ்வாமிகளென்னும்படி, உடன்கூடும் - உடன்கூடுவதென்னுகொலோவென்று ப்ரார்த்திக்க வேண்டியதான, ஸாத்யம் - பலம், வளர - அவனையடியாரோடேகூடி யநுபவிக்கவாசைப்படுகையொழிய அவனடியாரோடேயடியாரையே அநுபவிக்கவேணுமென்னும்படிவளர,

வேண்டும்படியானஅபிநிவேஶத்தாலே(ஸர்வாத்மபாவத்தைப்புகழ்ந்து) தம்முடையபாரிப்புக்கீடாகத் தம்மையடிமைகொள்ளும்படிகோலி, அவன்காட்டிக்கொடுத்த ஸர்வாத்மபாவத்தை (க) "புகழுநல்லொருவனிலே" பூதங்கள் பௌதிகங்கள் உஜ்வலமான மாணிக்யாதிகள் ரஸவத்பதார்த்தங்கள் , காநாதிஶப்தராசிகள் மோக்ஷாதிபுருஷார்த்தங்கள் ஜகத்ப்ரதாநரான ப்ரும்ஹருத்ராதிகள் இவற்றுக்கடையகாரணமானப்ரக்ருதிபுருஷர்கள், இவற்றையடைய விபூதியாகவுடையனாய், இவற்றிலேஅந்தராத்மதயாவ்யாபித்து தத்ஸ்ப்ருஷ்டதோஷைரஸம் ஸ்ப்ருஷ்டனாயிருக்கிறபடியைப்பேசி, அவ்வநுபவத்தாலே ப்ரீதராய் (சொல்லிப்பாடியேற்றிப்பிதற்றி எழுந்தும்பறந்தும் துள்ளிக்குனித்துத்தடுகுட்டக்கும்பிடு நட்டமிட்டுச் சிரிக்கக்குழைந்து நையும்ப்ரீதியுகள) (உ) "எம்மானைச் சொல்லிப்பாடி" "பண்கள் தலைக்கொள்ளப்பாடி" 'முனிவின்றியேத்தி, 'பேர்பலசொல்லிப்பிதற்றி' "எழுந்தும் பறந்தும் துள்ளாதார்" "ஏத்திக்குனிப்பார்" 'தடுகுட்டமாய்' 'கும்பிடுநட்டமிட்டாடி' 'உலோகர் சிரிக்கநின்றாடி' (கூ) 'நெஞ்சம்குழைந்து நையாதே'என்று வாசிககாயிகமாநஸவ்யாபாரங்களாலே களிக்கும்படியந்த ப்ரீதிதலைமண்டை யிட்டுச் செல்ல (தம்மடியாரென்ன உடன்கூடும் ஸாத்யம் வளர) இப்படியுண்டான ப்ரீதியவனளவில் பர்யவஸியாதே (கO) "தம்மடியாரடியார் தமக்

திவா-௩-ப. (க) ௪-க. (உ - மூ - கூ - ல்) ரு-க+ரு-உ+ரு-அ+ரு-க+ரு-கூ+ரு-௩+ரு-௩+ரு-௪+ரு-அ+ரு-எ+ (கO) எ-கO.

மூ. பைகொள்பாம்புபோலே இந்த்ரிய வ்ருத்திநியமமறப்பாட வந்த கவியன்றிக்கே படைத்தான் ஶ்லோகக்ருத்தாய்க் குறைமுட்டுப்பரிவிடர்துயர்

பைகொள்பாம்புபோலே - படத்தையுடைய திருவநந்தாழ்வானைப்போலே, இந்த்ரிய - இந்த்ரியங்களுடைய, வ்ருத்தி - வ்யாபாரத்தினுடைய, நியமமற - நியமமில்லாதபடி, பாடவந்த - மானிடம்பாடவந்த, கவியன்றிக்கே - கவியன்றியிலே, படைத்தான் - யோசித்து யோசித்துலோகங்களை ஸ்ருட்டித்தவனுடைய, ஶ்லோகக்ருத்தாய் - (நானேஶ்லோகக்ருத்தாகிறேனென்றாப்போலே) ஸ்தோத்ர க்ருத்தாய், குறை-(ஒருதேஶவிஶேஷத்தேறப்போயநுபவிக்கப் பெண்ணிலேனென்கிற) குறை, முட்டு - (இவ்வநுபவத்துக்குவரும்) ப்ரதிஹதி, பரிவு - அவனை விஷயீகரித்தபின்பு என்மனதில் விஷயாந்தரஸங்கம், இடர் - அவனைப்பற்றினவெனக்கொருதுக்கம், துயர் - மீட்சியாலே வரப்பட்டதுக்கம்,

கடியாரடியார் தம்மடியாரடியோங்களே'' என்று, ததீய ஶேஷத்வத்தினெல்லையிலே நிற்கிறவர்கள் நமக்குத்தேஶ்யரென்னும்படி (க) "அடியார்கள் குழாங்களையுடன் கூடுவதென்றுகொலோ'' என்று, கீழில்பத்தில் ப்ரார்த்தித்தஸாத்யம் அவர்களோடே கூடியவனை யனுபவிக்குமளவன்றிக்கே அவனடியாருடைய ஶேஷத்வத்தினெல்லை யளவுஞ் செல்லவளர, (பைகொள்பாம்புபோலே இந்த்ரியவ்ருத்திநியமமற) "பைகொள்பாம்பேறியுறைபரனே'' என்று, அவனுடையஸர்வாதிகத்வப்ரகாஶகமான படுக்கையாயிருக்கும் திருவநந்தாழ்வான், (உ) "चक्षुःश्रवाः'' "சக்ஷுஶ்ரவா:'' என்கிறபடியே, ஒருகரணத்தாலே கரணாந்தரவ்ருத்தியையுங்கொள்ளுமாப்போலே (௩) "நெஞ்சமேநீணகராக விருந்தவென் தஞ்சனே'' "வாசகமேயேத்தவருள்செய்யும் வானவர்தம்நாயகனே'' "கைகளாரத்தொழுது தொழுதுன்னை'' (௪) "கண்களால் காணவருங்கொல்'' இத்யாதிகளாலே, வாக்பாணி சக்ஷுஶ்ரோத்ரங்களான இந்த்ரியங்கள், மநோவாக்பாணி சக்ஷுர்வ்ருத்திகளை ஆசைப்படும்படியாகையாலே இந்த்ரியவ்ருத்தி நியமமின்றிக்கே யவனையநுபவிக்க வேண்டும்படியான பெருவிடாயையுடையராய் (பாடவந்தகவியன்றிக்கேபடைத்தான் ஶ்லோகக்ருத்தாய்) (எ) "வாய்கொண்டு மானிடம் பாடவந்தகவியேனல்லேன்'' என்று, இதரஸ்தோத்ரத்துக்கநர்ஹகரணராய் (அ) "ஒன்றியொன்றி உலகம்படைத்தான் கவியாயினேற்கு'' என்று, ஜகத்ஸ்ருஷ்டிமுகத்தாலே தம்முடைய உஜ்ஜீவநத்துக்குக்ருஷிபண்ணின ஸர்வேஶ்வரன் விஷயத்திலே (௯) "अहमन्नमहमन्नम् अहं श्लोककृदहं श्लोककृत्'' "அஹக்குஶ்லோகக்ருதஹக்குஶ்லோகக்ருத்'' என்கிற, உபநிஷத்தின்படியே கவிபாடுமவருமாய் (குறைமுட்டுப்பரிவிடர்

(க) தி-வா-௮-௩-௧0. (உ) (௩ - மு - ௬ - ல்.) தி - வா-௩-அ-உ+அ-௩+அ-௪+அ-ரு + (எ) ௬ - ௯. (அ) ௬-௧0. (௯) தை-உ-ப்ரு-௧0-ரு.

மூ. துன்பமல்லல்துக்கந்தளர்வு கேடுகளின்றி அம்ருதாநந்தமக்நரானவர் செய்யதாமரைக்கண்ணன் அமரர்குலமுதலெ ன்றஞ்சாதபடி

துன்பம் - (தேஶவிஶேஷத்திலே போகப்பெற்றிலேனென்கிற) துக்கம், அல்லல் - (லீலாவிபூத்யந்தர்ப்பாவஜநித) துக்கம், துக்கம் - (ஆஶ்சர்யஶக்தியுக்தனைப்பற்றின வெனக்கொரு) துக்கம், தளர்வு-(அகடிதகடநாஸமர்த்தனானவனைப்பற்றின வெனக்கொரு) துக்கம், கேடுகள் - (விமுகரானதசையிலும் ரக்ஷிக்குமவனைப்பற்றின வெனக்கொரு) கேடு (இவைகள்) இன்றி - இல்லாமல், அம்ருதாநந்த மக்நரானவர் - முக்தருடைய வாநந்தஸமுத்ரத்திலே முழுகினவராய், செய்யதாமரைக்கண்ணன் - சிவந்ததாமரைபோன்ற திருக்கண்களையுடையவன், அமரர் - நித்யஸூரிகளுடைய, குலம் - திரளுக்கு, முதல் - நிர்வாஹகனாயிருக்குமவன், என்றஞ்சாதபடி - என்றுபயப்படாதபடி,

துயர் துன்பமல்லல் துக்கம்தளர்வுகேடுகளின்றிஅம்ருதாநந்தமக்நரானவர்)தேஶவிஶேஷத்திலேபோய் யநுபவிக்கப்பெற்றிலேனென்கிறகுறைவில்லை. இவ்வநுபவத்துக்கெனக் கொரு ப்ரதிஹதியில்லை. அவன்விஷயத்திலேயானபின்பு ஏகதேஶமும் என்மநதில் துக்கமில்லை. வகுத்தஶேஷியென்று பற்றுகையாலே எனக்கொரு துக்கமில்லை. ருசிமுன்னாக தேஶவிஶேஷப்ராப்திபண்ணுகிற வெனக்கு வைதிக புத்ரர்களைப்போலே மீளில்செய்வதென்னென்கிற துக்கமில்லை. இங்கேயவன் குணங்களை நெருங்கபுஜித்த வெனக்கு பூர்ணாநுபவம் பண்ணலாம் தேஶத்திலேபோகப் பெற்றிலேனென்கிற துக்கமில்லை. இதவனுக்குலீலாவிபூதியென்னிருந்தவெனக்கினி லீலாவிபூத்யந்வயமாகிற துக்கமில்லை. ஸ்வஸங்கல்பத்தாலே ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ண வல்லவாஶ்சர்ய ஶக்தியுக்தனானவனைப்பற்றின வெனக்கொருதுக்கமில்லை. அகடிதகடநாஸமர்த்தனானவனைப்பற்றின வெனக்கொரு தளர்த்தியில்லை. விமுகதசையில் வ்யாப்தியாலும், அபிமுகதசையில் அவதாரத்தாலும் ரக்ஷிக்குமவனைப் பற்றினவனைப்பற்றின வெனக்கொரு கேடில்லை. என்றிப்படி (க) "சன்மம்பலவில்" பத்துப்பாட்டாலுமடைவே தாமேபேசும்படி நிரஸ்தஸமஸ்தக்லேசராய் அம்ருதரான முக்தர் பகவதநுபவத்தாலே, ஆநந்திக்குமாப்போலே, அவ்வாநந்தஸாகரமக்நரானவர் (செய்யதாமரைக் கண்ணனமரர்குல முதலென் றெஞ்சாதபடி) (௨) "செய்யதாமரைக்கண்ணனாய்" என்றுதுடங்கி (௩) "எஞ்சலிலமரர் குலமுதல்மூவர் தம்முள்ளுமாதியை யெஞ்சினீருகலத் துள்ளீர்கள்" என்று, புண்டரீகாக்ஷத்வாதிபரத்வ சிஹ்நங்களையுடையனானவன் ஜ்ஞாநஸங்கோசரஹிதரான நித்யஸூரிகள் திரளுக்கு நிர்வாஹகனன்றே, ஸம்ஸாரிகளானநம்மாலவனை ஆஶ்ரயிக்கப்போமோ,வென்றஞ்சாதபடி

(க) தி-வா-௩-௧0. (௨) ௬-௧. (௩) ௬-௩.

ரூ. எளிவருமிணைவனு மென்றவைபரத்வமாம்படி யவனுகும் ஸௌலப்யகாஷ்டையைக்காட்டிவழியைத் தருமவன்நிற்க இழியக்கருதுவதென்னுவது

எளிவரும் - எளிவருமியல்வினன், இணைவனும் - இணைவனுமெப்பொருட்கும், என்றவை - என்கிறபாட்டுக்களிலே சொல்லப்பட்டவவதாரஸௌலப்யம், பரத்வமாம்படி - பரத்வஸ்தாநீயமாம்படி, அவனுகும் ஸௌலப்யகாஷ்ட்டையை-(நெஞ்சினுல்நினைப்பான் எவனவனுகும் நீள்கடல்வண்ணனென்கிறபாட்டில் சொல்லுகிறபடியே) ஸௌலப்யத்தினுடைய சரமாவதியை, காட்டி - இவர்காணும்படிபண்ணி, வழியைத் தருமவன் - போம்வழியானவர்ச்சிராதிமார்க்கத்தைக் கொடுக்குமவன், நிற்க - அவஸரப்ரதீக்ஷனுயிருக்க, இழியக்கருதுவது - முன்புநின்றநிலையிலும் தாழவிழியநினைக்கையாலே, என்னுவது - என்னப்ரயோஜநமுண்டாம்,

(எளிவருமிணைவனு மென்றவை பரத்வமாம்படி) (க) "எளிவருமியல்வினன்" "இணைவனுமெப்பொருட்கும்" என்று "பத்துடையடியவரியிலும், அணைவதரவணையிலும், வெளியிட்டவவதார ஸௌலப்யம் பரத்வஸ்தாநீயமாம்படி, அவனுகும் ஸௌலப்யகாஷ்டையைக்காட்டி" (உ) "நெஞ்சினுல்நினைப்பானெவனவனுகும் நீழ்கடல்வண்ணனே" என்று, மநஸ்ஸாலேயாதொன்றைதிருமேனியாகக்கோலினிகோள்அபரிச்சேத்ய மஹிமனுன ஸர்வேஶ்வரன் அதையே தனக்கஸாதாரண விக்ரஹமாக விரும்புமென்று (ங) "యే యథా మాం ప్రపద్యన్తే తాంస్తథైవ భజామ్యహమ్" "అర్చ్యస్సర్వసహిష్ణు రర్చకపరాధీనాఖిలాత్మస్థితిః" "யேயதாமாம்ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம்" அர்ச்யஸ்ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சகபாராதீநாகிலாத்மஸ்திதிஃ" என்கிற அர்ச்சாவதாரமாகிறஸௌலப்ய காஷ்டையைக்காட்டி (வழியைத்தருமவந்நிற்க விழியக்கருதுவ தென்னுவது) (ச) "ஒழிவொன்றில்லாத" என்றுதுடங்கி (ரு) "இழியக்கருதியோர் மானிடம் பாடலென்னுவதே" என்று யாவதாத்மபாவிபகவதநுபவத்தோடே வர்த்திக்கிறதேசத்தையும், அவ்வநுபவந்தானெரு சிராங்கை யென்னும்படியான அர்ச்சிராதி மார்க்கத்தையும்தருகிறவன் தன்னை யொருசொல் சொல்வாராரோ வென்று அவஸரப்ரதீக்ஷனுய் நிற்க, அவனை விட்டு புறம்பே கவிபாடுகைக்கு விஷயம்தேடிப்போய் ஒருசொல்லுக்குப்பாத்தம்போராத க்ஷுத்ரமனுஷ்யனைக்கவிபாடி முன்புநின்றநிலையிலுங்காட்டில் தாழவிழிய நினைக்கிறவித்தாலென்ன ப்ரயோஜன முண்டு

(க) க - ங - உ. (உ) ங - சு - கூ. (ங) ஸ்ரீ - ே - கங. (ச) ஸ்ரீரங்க - ம். (ரு) தி-வா-ங-கூ-ங.

ரூ. வேண்டிற்றெல்லாம்தரும் தன்னுகவேகொள்ளும் கவிசொல்லவம்மினென்று முக்தைச்வர்யத்தைமுன்னிட்டு ச்வவ்ருத்தியை மாற்றிஸ்வவ்ருத்தியிலே மூட்டுகிறார் மூன்றும்பத்தில்.

வேண்டிற்றெல்லாம் - ஸர்வாபேக்ஷிதங்களையும், தரும் - கொடுக்கஸமர்த்தனாய், தன்னுகவேகொள்ளும் - பரமஸாம்யாபத்தியைக் கொடுக்குமவன், கவிசொல்லவம்மின் - இவன்விஷயமாக ஸ்தோத்ரம்பண்ணவாருங்கள், என்று முக்தைச்வர்யத்தைமுன்னிட்டு - இப்புடைகளாலே முக்தருடைய வைச்வர்யத்தை முன்னுகக்காட்டி, ச்வவ்ருத்தியைமாற்றி - இதரவிஷயஸ்தோத்ரமாகிறநீசவ்ருத்தியை நிவர்த்திப்பித்து, ஸ்வவ்ருத்தியிலே மூட்டுகிறார் - ஸ்வரூபாநுரூபமானவ்ருத்தியிலே மூளும்படிபண்ணுகிறார், மூன்றும்பத்தில் - த்ருதீயஶதகத்தில்.

அத்தால் ஸ்வரூபம்பெற்றிலிகோள், அபிமதம்பெற்றிலிகோள். (வேண்டிற்றெல்லாம்தரும்) (க) “సకలఫలప్రదో హి విష్ణుః” “ ஸகலபலப்ரதோஹி விஷ்ணு:” என்கிறபடியே ஸர்வாபேக்ஷிதங்களையும் தரும் (தன்னுகவே கொள்ளும்) (உ) “పరమం సామ్యముపైతి” “ பரமம்ஸாம்யமுபைதி” என்கிறபடியே தன்னேடுஸாம்யாபத்தியைக்கொடுக்கும். (கவிசொல்லவம்மின்) என்று, இதுக்குநீங்கள்செய்யவேண்டுவதொன்றுமில்லை. இதரஸ்தோத்ரங்களைப் பண்ணி உங்கள்கரணங்களை பாழ்போக்காதே வாய்படைத்த ப்ரயோஜனம் பெறும்படி இவ்விஷயத்தில் கவிசொல்ல வாருங்கோளென்று (முக்தைச்வர்யத்தை முன்னிட்டு) (௩) “வழியைத் தரும் நங்கள்வானவ ரீசன்நிற்க” என்றும் (ச) “தன்னுகவேகொண்டு” என்றும்சொல்லுகையாலே இவ்விஷயத்தைக்கவிபாடினல் ஸித்திப்பது பகவதநுபவபரமஸாம்யாபத்யாதிகளென்றுமுக்தைச்வர்யமான பேற்றை முன்னிட்டு (ச்வவ்ருத்தியைமாற்றி ஸ்வவ்ருத்தியிலே மூட்டுகிறார் மூன்றும்பத்தில்) அதாவது:— இப்படி தம்முடைய உபதேசத்தாலே (ரு) “సేవాశ్వవృత్తిరాఖ్యాతా” (சு) “ఛాయావా సత్వమనుగచ్ఛేత్” (எ) “సాకిమర్థం న సేవ్యతే” “ஸேவாச்வவ்ருத்திராக்யாதா:” சாயாவாஸத்வமநுகச்சேத் “ஸாகிமர்த்தம்நஸேவ்யதே” என்று, இவ்விஷயத்தை ஸேவிப்பானென்றும், எத்தைப்பற்ற விவ்விஷயம் ஸேவிக்கப்பெருதொழிகிறதென்றும்விதிக்கும்படி ப்ராப்தமானவிவ்விஷயத்திலே (அ) “புகழுநல்லொருவனில்படியே,” தம்முடைய வாசிகவ்ருத்தியிலே மூட்டுகிறார் மூன்றும்பத்திலென்கை *

(க) (உ) (௩) தி - வா - ௩ - க - ௩. (ச) க - ச. (ரு) (சு) (எ) (அ) தி-வா-௩ - ச - க.

மூ—(ச) ஈசனேயீசன்

(அ) ஈசனே - மறுகலிலீசனே, ஈசன் - ஈசன்ஞாலமுண்டு மிழ்ந்த,

வ்யா. (ச) நாலாம்பத்தால் கீழ்ச்சொன்னவ்யாப்தி ஆகாஶவ்யாப்திபோலன்றிக்கே நிறம்பெறும்படி (க) " అన్తః ప్రవిష్టశ్శాస్తా జనానాం" (உ) "ఆత్మానమన్తరో యమయతి" (௩) శాస్తావిష్ణురశేషస్యజగతశ్శాస్తాచరాచరస్యైకః" " அந்தஃ ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தாஜநாநாம் " " யஆத்மாநமந்தரோயமயதி, ஶாஸ்தாவிஷ்ணுரஶேஷஸ்யஜகதஶ்ஶாஸ்தா சராசரஸ்யைகஃ" இத்யாதிகளில் சொல்லுகிறபடியே, ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்த வஸ்துக்களின் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் ஸ்வாதீநமாம்படி நியமித்துக்கொண்டு போருகையாலே ஸர்வ நியந்தாவாயிருக்கிறவன் ' ஒழிவில்காலத்தில் கைங்கர்யாபி நிவேஶம்போலே தேஶகாலவிப்ரக்ருஷ்டமான அபதாநங்களைதத்தத்தேஶகாலவிசிஷ்டமாகவநுபவிக்கவேணுமென்று அதிசாபலம் பண்ணினவிவர்க்கு காலோபாதியைக்கழித்து ஸமகாலமாக்கி யநுபவிப்பித்திவருடைய விழவைத்தீர்த்திவருடைய கரணத்ரயவ்யாபாரத்தையும் போக்யமாகக்கொள்ள, அந்தப்ரணயித்வத்திலே தோற்று விரகதசையில்ஸத்ருஶபதார்த்தங்களையும் ஸம்பந்தி பதார்த்தங்களையுமவனுகக்கருதும்படிபித்தேறிதேஶவிஶேஷத்தில் அநுபவத்தையாசைப்பட்டுக்கூப்பிட? அவ்விழவும் தீரும்படி (ச) "వైకుణ్ఠేతుపరేలోకే" "வைகுண்டேதுபரேலோகே" இத்யாதிப்படியே, தேஶவிஶேஷத்திலே பெரியபிராட்டியாரும் தானுமே போக்தாக்களாயிருக்கிற விருப்பைக்கிட்டி யநுபவித்தாப்போலே ப்ரத்யக்ஷமாம்படி யநுபவிப்பிக்கயநுபவித்து, இப்படி முக்தபோகத்தை மாநஸமாக ப்ராபித்து அதுக்கு பலமான தேவதாந்தராதிகளில் வைராக்யத்தையுடையரானவிவர், ஐஶ்வர்ய கைவல்யங்களின் அல்பாஸ்திரத்வ ஸாவதிகத்வாதி தோஷங்களையும், நிந்த்யபதார்த்தங்களாலே க்ஷுத்ரதேவதாபஜநம்பண்ணுமதின் நிஹீனதையையும், ப்ரஶம்ஸாபரவாக்யங்களாலே சொல்லப்பட்டு பகவத்விபூதிபூதராயிருக்கசெய்தே அவனோடேவிகல்பிக்கலாம்படி அவன்கொடுத்த ஐஶ்வர்யத்தையுடையராயிருக்கிற ப்ரும்ஹருத்ராதிகளுடைய அஜ்ஞாநாதிகளையும் பாஹ்யகுத்ருஷ்டிமதங்களின் தமோநிக்ருஷ்டதைகளையும் வெளியிட்டு தேவதாந்தரங்களையாஶ்ரயித்து தத்பலமும் கைகண்டீர்கள். ஜகந்நிகரணாதி திவ்யசேஷ்டிதங்களாலே, ஸர்வேஶ்வரனேரக்ஷகன் அல்லாதாரடைய தத்ரக்ஷ்யபூதரென்னு மர்த்தத்தை ஶாஸ்த்ரமுகத்தாலே கண்டுவைத்தும் தேறமாட்டுகிரிலிகோள். இப்படி நீங்கள் தேறாமைக்கடி அவனிட்டவழக்கான ப்ரக்ருதிஸம்பந்தம், தத்விமோசநோபாயமு மவன் திருவடிகளிலாஶ்ரயண மென்றறிந்து ததாஶ்ரயணத்தைத்பண்ணி இத்தைத்தப்பப் பாருங்கோள், அவன்திருவடிகளிலே கைங்கர்யமே யுங்களு

(க) (உ) (௩) (ச) ஸ்ரீபாஞ்சராத்ரம்.

மூ. ஈசன்பாலென்ன ஏர்கொள் வானத்துமாயே யென்கிற வ்யாப்திநிறம்பெறத் தனிக்கோல்செலுத்தும் ஸர்வநியந்தா ஒழிவில்காலத்துக்குச்சேர பூர்வபோகங்களை யோதுமாலெய்தினசாபலத்துக்குச் சேர ஸமகாலமாக்கி

ஈசன்பால் - ஈசன்பாலோ ரவம்பறைதல், என்ன - இப்படி நியந்த்ரு வாசகசப்தங்களாலே சொல்லும்படி, ஏர்கொள் - ஏர்கொளேழுலகமும், வானத்தும்-வானத்துள்ளும்பரும், ஆயே-ஆயேயிவ்வுலகத்து, என்கிற - என்கிறபாட்டுக்களில் ப்ரதிபாத்யமான, வ்யாப்தி - அந்தர்பஹிஶ்சவ்யாபித்திருக்கை, நிறம்பெற - மிகப்ரகாசிக்கும்படி, தனி - அத்விதீயமான, கோல் - தன்னுடைய திவ்யாஜ்ஞையை, செலுத்தும் - செல்லும்படிபண்ணும், ஸர்வநியந்தா - ஸர்வநியந்தாவான ஸர்வேஶ்வரன், ஒழிவில்காலத்துக்கு - ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் கைங்கர்யம் பண்ணவேணுமென் றாசைப்பட்டதற்கு, சேர - அநுரூபமாம்படி, பூர்வபோகங்களை - பூர்வகாலத்திலுண்டான வநுபவங்களை, ஓதும்-வாய்புலத்தும்படியான, மாலெய்தின - ப்ராந்தியை அடைந்த, சாபலத்துக்கு - அபிநிவேஶாதிஶயத்திற்கு, சேர-அநுரூபமாக, ஸமகாலமாக்கி-(காலத்தினுடைய பேதவ்யவஹார ஹேதுவான உபாதிகளைக்கழித்து) ஏககாலமாக்கி,

க்குசீரிய புருஷார்த்தமென்று ப்ரயோஜநாந்தர தேவதாந்தர விரக்தி முன்னாக பரதேவதையும் பரமப்ரயோஜநமுமவனே, அவன்விஷயத்தில் கைங்கர்யமுமேயென்றுபதேசித்து பகவதாஶ்ரயணத்தை ருசிப்பிக்கிறாரென்கிறார் (ஈஶனையீஶனீஶன்பாலென்ன வேர்கொள்வானத்துமாயே என்கிற வ்யாப்திநிறம்பெறத்தனிக்கோல் செலுத்தும் ஸர்வநியந்தா) (க) "மறுகலிலீசனை" "ஈசன்ஞாலமுண்டுமிழ்ந்த" (௩) ஈசன்பாலோரவம்பறைதல்" என்று, நியந்த்ருவாசகசப்தத்தாலே சொல்லும்படி, (ச) "ஏர் கொளேழுலகமும் துன்னிமுற்றுமாகிநின்ற சோதிஞானமூர்த்தியாய்" "வானத்தும் வானத்துள்ளும்பரும் மண்ணுள்ளும் மண்ணின்கீழ்தானத்துமெண்டிசையும்தவிராதுநின்றான்"(ரு)"ஆயேயிவ்வுலகத்து நிற்பனவுந் திரிவனவும்நீயே" என்கிற, கீழில்பத்தில், ஸர்வவிஷயமாகச் சொன்ன வ்யாப்தி ஆகாஶவ்யாப்திபோலாகாமே நிறம்பெறும்படியாக (எ) "வீற்றிருந்தேழுலகம் தனிக்கோல் செல்ல" என்கிறபடியே, உபயவிபூதியும் தந்நியமநத்திலேயாம்படி தன்னாஜ்ஞையை நடத்துகிற ஸர்வநியந்தாவான ஸர்வேஶ்வரன் (ஒழிவில்காலத்துக்குச்சேர பூர்வபோகங்களை யோதுமாலெய்தின சாபலத்துக்குச்சேர ஸமகாலமாக்கி) (அ). "ஒழிவில்காலமெல்லாமுடனாய் மன்னி" என்று, அடிமைசெய்யப்பாரிக்கிறவளவில் ஸர்வதேஶ ஸர்வாவஸ்தைகளோபாதி ஸர்வகாலத்திலும் வேணுமென்று

திவா-ச-ப. (க-மு ௩-ல்) க-க0 + ௩ - உ + க0 - ச + (ச-மு-ரு-ல்) ௩ - அ + ௫-க + க-எ + (எ) ௫ - க. (அ) ௩-௩-க.

ரூ. போதால் வணங்காமை தீர்த்தப்ரண யித்வத்திலே காதல் மையலேறிய பித்தாய்

போதால்வணங்காமை - பூவைவீயாநீர்தூவி போதால்வணங்கேனேலு மித்யாதிப்படியே அவ்வோ காலங்களில் புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு அடிமைசெய்யப் பெறாத விழவை, தீர்த்த - போம்படிபண்ணின, ப்ரணயித்வத்திலே - அவனுடைய வபிமானவிசேஷத்திலே, காதல் - ப்ரணயித்வத்தாலே, மையல் - அறிவுகேட்டாலே, ஏறிய - அபிவ்ருத்தமாகா நின்றுள்ள, பித்தாய்-அதஸ்மிந்தத்புத்திபண்ணும்படி ப்ராந்தியுண்டாய்,

கீழ்க்கழிந்தகாலத்தி லடிமையையு மாசைப்பட்டதுக்குச் சேரும்படி (க) "பாலனாயேழுலகுண்டு" என்றுதுடங்கி,தேஶகாலவிப்ரக்ருஷ்டங்களானவவனுடைய அபதாநங்களை தத்தத்தேஶகால விசிஷ்டமாக அநுபவிக்கையிலபிநிவேஶத்தாலே, (உ) "ஆதியங்காலத்தகலிடங்கீண்டவர் பாதங்கள் மேலணிபைம்பொற்றுழாயென்றேயோதுமாலெய்தினள்" என்று, பூர்வகாலீநபோகங்களையே வாய்புலற்றும்படி, ப்ராந்தியையடைந்த சாபலத்துக்கநுரூபமாக காலத்தினுடைய பேதவ்யவஹாரத்துக்குடலான உபாதியைக் கழித்தொருபோகியாக்குகையாலே ஸமகாலமாக்கியநுபவிப்பித்து (போதால் வணங்காமைதீர்த்த ப்ரணயித்வத்திலே காதல்மையலேறியபித்தாய்) (௩) "பூவைவீயாநீர்தூவிப்போதால் வணங்கேனேலு நின்பூவைவீயாமேனிக்குப் பூசும்சாந்தென் நெஞ்சமே" என்றுதுடங்கி, (௪) "ஏகமூர்த்திக்கே பூத்தண்மாலை கொண்டுன்னைப் போதால்வணங்கேனேலும்நிந்பூத்தண்மாலைநெடுமுடிக்குப்புனையும்கண்ணியெனதுயிரே" என்று, விரோதிநிரஸநம்பண்ணுகிற அவ்வவகாலங்களிலேயுதவி புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு சிசிரோபசாரம் பண்ணப்பெற்றிலேனாகிலும், விலக்ஷணவிக்ரஹயுக்தனாய் ஸர்வேஶ்வரனாயிருக்கிறவனென்னுடைய கரணத்ரயவ்யாபாராதிகளையே தனக்கு போக்யவஸ்துக்களெல்லாமாகக்கொள்வதே ! என்றிவர்தாமே யீடுபடும்படிபண்ணி அவ்வோகாலங்களில்தனக்குதவி அடிமைசெய்யப்பெறாத விழவையவன்தீர்த்த ப்ரணயித்வகுணத்திலே (ரு) "காதல்மையலேறினேன்" என்கிறபடியே, ப்ரேமம்மேலிட்டறிவு கலங்கினவாறே வெள்ளக்கேடாகவொண்ணாதென்று அவனல்பம் பேரநிற்க, அவனோடு ஸத்ருஶபதார்த்தங்களையும் ஸம்பந்திபதார்த்தங்களையுமவனாகவேகருதி, பேசும்படியாக * பேய்ச்சிமுலைசுவைத்தார்க் கென்பெண்கொடியேறிய

திவா-ச-ப. (க) உ-க. (உ) உ-சு. (௩) ௩-க. (௪) ௩-௪. (ரு) ௩-ரு.

மூ. தேஶதூரத்துக்குக் கூவியுங் கொள்ளாயென்றது தீரக்கண்ட சதிரையுமொரு நிலமாகக்காட்ட வீவிலின்பங்கூட்டினையென்று முக்தபோகமானஸப்ராப்திபலமான தேவதாந்தராத்மாத்மீய லோகயாத்ரைஶ்வர்யாக்ஷரங்களில்

தேசதூரத்துக்கு - தமக்கு ப்ராப்யமானதேசம்தூரமாய் யிருக்கையைப் பற்ற, கூவியுங்கொள்ளாயென்றது - என்னையும் அருளப்பாடிடாய் என்று கூப்பிட்டவிழவு, தீர - போம்படி, கண்டசதிரையும் - அவ்விபூதியிலவனும் அவளுமானசேர்த்தியைக்காட்டகண்ட சதிரையும், ஒரு நிலமாக - காலோபாதிகளைக் கழித்தாப்போலே தேசோபாதியையும் கழித்து இவ்விடத்தையே பரமபதமாக்கி, காட்ட-இவனைக்காணும்படி பண்ண, வீவில் - விச்சேதமில்லாத, இன்பம் - ஆனந்தத்தை, கூட்டினையென்று - சேர்த்துக்கொண்டா யென்று, முக்த - முக்தருடைய போக - போகத்தினுடைய, மானஸ - மனதிலுண்டான, ப்ராப்தி - உண்டானதற்கு, பலமான - பலமாயிருந்துள்ள, தேவதாந்தர-வேறுதேவதை, ஆத்ம - தம்முடையவாத்மா, ஆத்மீய - தம்முடையது, லோக - லோகங்களின், யாத்ரா - நடத்தை, ஐஶ்வர்ய - ஐஹலௌகிக பாரலௌகிகங்களான ஐஶ்வர்யங்கள் - அக்ஷரங்களில்-கைவல்யம் (இவைகளில்),

பித்தே" என்னும்படிபித்தேறி, (தேஶதூரத்துக்குக் கூவியுங்கொள்ளாயே யென்றது தீரக்கண்ட சதிரையுமொரு நிலமாகக்காட்ட) தேஶவிஶேஷத்தி லநுபவத்தையாசைபட்டு தேஶதூரத்தைப்பற்ற (க) "கோலமேனிகாணவாராய் கூவியுங்கொள்ளாயே" என்று, உன்வடிவழகை நீவந்தநுபவித்தருளுதல் என்னையங்கேயருளப்பாடிடுதல் செய்கிறிலையென்று,கூப்பிட்டவிழவும்தீர(உ) "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்கண்ட சதிர்கண்டு" என்று, நித்யவிபூதியிலே, பெரியபிராட்டியாரும் நீயுமே போக்தாக்களாய் அவ்விபூதியிலுள்ளாருடைய போகோபகரண கோடியாம்படி கண்டுவைத்த நேர்பாட்டை நான் கண்டேனென்னும்படி கீழ்காலோபாதியைக்கழித்து ஸமகாலமாக்கினாப்போலே, அவ்விபூதியிலநுபவத்தையும் இங்கேயிருந்தே யநுபவிக்கலாம்படி யொருபோகியாக ப்ரகாசிப்பிக்க, (வீவிலின்பம் கூட்டினையென்றுமுக்தபோக மாநஸ ப்ராப்திபலமான) (ங) "வீவிலின்பம் மிகவெல்லைநிகழ்ந்தனன்மேவியே" "கூட்டரிய திருவடிக்கள் கூட்டினைநான்கண்டேனே" என்று, அவனைக்கிட்டி நிரதிஶயாநந்தியாகப் பெற்றேன் யாவர்சிலர்க்கும் தந்தாமால் சேர்த்துக்கொள்ளவரிய திருவடிகளை நான்சேரும்படி என்னைச்சேர்த்துக்கொண்டாய், நானனுபவிக்கப்பெற்றேனென்றவது மாநஸாநுபவமாகையாலே இப்படிமுக்தருடைய போகமான அவ்வநுபவத்தில் மாநஸமாகவுண்டான ப்ராப்திக்குப்பலமான (தேவதாந்தராத்மாத்மீய லோகயாத்ரைஶ்வர்யாக்ஷ

திருவா-ஈ-ப. (க) எ-க. (உ) கூ-க0. (ங) ரு-ங.

மூ. வைராக்யம் உன்னித்துயிருடம்பினுல் கொடுவுலகம் வேட்கையெல்லாமொழிந்தேனென்ன வுடையரானவர் ஒரு நாயகமென்று ராஜ்யஸ்வர்க்காத் மாநுபவ அல்பாஸ்திரத்வ ஸாவதிகத்வாதிகளையும்

வைராக்யம் - ஆசையின்மையை, உன்னித்து - தேவதாந்தரத்தை தந்நெஞ்சாலே மதித்துத் தொழாள் என்றும், உயிர் - ஆத்மாவாலே அபேக்ஷை யுடையோமல்லோ மென்றும், உடம்பினுல் - உடம்பினுலோ ரபேக்ஷையுடையோ மல்லோமென்றும், கொடுவுலகம் - கொமையான உலகத்தைக்கண்டால் காணவஸமர்த்தனுகிறே னென்றும், வேட்கையெல்லாம் - இதர புருஷார்த்தங்களில் அபிநிவேசத்தையெல்லாம்போக்கி என்றும், ஒழிந்தேன்-பஞ்சேந்த்ரியங்களால் அநுபாவ்யமான இன்பத்தை ஒழிந்தேன்என்றும், என்ன-என்றுதாமே பேசும்படி, உடையரானவர் - உடையரானவாழ்வார், ஒருநாயகமென்று - ஒருநாயகமாஎன்று துடங்கி, ராஜ்ய - ராஜ்யைஶ்வர்யம், ஸ்வர்க்க-ஸ்வர்க்காநுபவம், ஆத்மாநுபவ-ஆத்மாநுபவமென்கிற கைவல்யாநுபவம் இவைகளுடைய, அல்ப-அற்பமாயிருக்கை, அஸ்திரத்வ - அஸ்திரமாயிருக்கை, ஸாவதிகத்வ - முடியோடேகூடினமை,ஆதிகளையும்-இவைமுதலானவைகளையும்,

ரங்களில் வைராக்யம் உன்னித்துயிரிடம்பினுல்கொடுவுலகம் வெட்கையெல்லா மொழிந்தேனென்னவுடையரானவர்) (க) "உன்னித்து மற்றொருதெய்வம் தொழாள்" என்று, தந்நெஞ்சாலே மதித்து, வேறொருதெய்வத்தைத் தொழுதறியா ளென்னும்படி தேவதாந்தரங்களில் வைராக்யத்தையும் "உயிரினுல் குறைவிலமே" (உ)"உடம்பினுல் குறைவிலமே" என்னும்படி ஆத்மாத்மீயங்களில் வைராக்யத்தையும்" கொடுவுலகம் காட்டேலே" என்னும்படி, லோகயாத்ரையில் வைராக்யத்தையும், (௩) "வேட்கையெல்லாம் விடுத்து" என்று, ஸமுதாயேனவும், "ஐங்கருவிகண்டவின்ப மொழிந்தேன் சிற்றின்பமொழிந்தேன்" என்று, ப்ருதக்த்வேநவுஞ்சொல்லும்படி ஐஶ்வர்யத்திலுமக்ஷரஶப்தவாச்யமான ஆத்மாநுபவரூபகைவல்யத்திலுமுண்டான வைராக்யத்தையுமுடையரானவிவர் (ஒருநாயகமென்று ராஜ்யஸ்வர்காத்மாநுபவால்பாஸ்திரத்வ ஸாவதிகத்வாதிகளையும்) (ச) "ஒருநாயகமாயோட உலகுடனுண்டவர்" பெருநாடுகாண விம்மையிலே பிச்சைதான்கொள்வர்" என்றுதுடங்கி, (ரு) 'రాజ్యంనామమహావ్యాధిర చికిత్స్య వినాశనః భ్రాతరంవాసుతంవాపిత్య జన్తిఖలుభూమిపాః" "ராஜ்யம் நாமமஹாவ்யாதி ரசிகித்ஸோவிநாஶந: । ப்ராதரம்வாஸுதம்வாபித்யஜந்திகலுபூமிபா:" என்கிற ராஜ்யைஶ்வர்யத்தின் அல்பத்வத்தையும், "குடிமன்னுமின்சுவர்க்க மெய்தியும் மீள்வர்கள்" என்று, (சு) "తేతంభుక్త్వా స్వర్గలోకం విశాలం క్షీణే పుణ్యే మర్త్యలోకం,

திருவாய்மொழி - ச - ப. (க) சு - க0. + (உ) அ - ௯. (௩) ௯ - ௯. (ச) க-க. (ரு) (சு) ஸ்ரீ-கீ. ௯. உக.

மூ. ஆடுங்கள்ளிறைச்சிகளும் செஞ்சோருகிற நிந்த்யங்களாலே இளந்தெய்வத்துக்கு இழைத்தாடும் நிஹீனதையையும் பேசநின்ற தேவதாஜ்ஞாநாஶக்தி ஸாபேக்ஷத்வாதிகளையும்

ஆடும் - ஆட்டுமாம்ஸம், கள்ளிறைச்சி-கள்ளு, மற்றமாம்ஸங்கள், கறும்-கறுத்ததாயும், செம் - சிவந்ததாயுமிருக்கிற, சோருகிற - சோருயிருக்கிற, நிந்த்யங்களாலே - தூஷிக்கத்தக்க த்ரவ்யங்களாலே, இளந்தெய்வத்துக்கு - தேவதாந்தரத்துக்கு, இழைத்து - பலியிட்டு, ஆடும்நிஹீனதையையும் - ஆடுகிறது மிகக் குறைவென்கிறத்தையும், பேசநின்ற-வேதாந்தங்களிலே ப்ரத்யேகபேசப்பட்ட, தேவதா - ப்ரும்ஹா முதலிய அந்யதேவதைகளுடைய, அஜ்ஞாந - தனக்கும் பிறர்க்கும் உண்டான கேடு அறிகைக்குடலான ஜ்ஞானமின்மை, அசக்தி - தனக்கும் பிறர்க்குமுண்டான தீங்கை யொழிப்பதற்கீடான சக்தியில்லாமை, ஸாபேக்ஷத்வாதிகளையும் - ஆபத்காலம்வந்தவாறே அவனைப்பார்த்திருக்கை (இவைமுதலானவைகளையும்)

క్షీణే'' "தேதம்புக்தவாஸ்வர்க்கலோகம் விஶாலம்க்ஷீணேபுண்யே மர்த்யலோகம்விஶந்தி" என்கிற, ஸ்வர்க்காநுபவத்தினுடைய அஸ்திரத்வத்தையும், "இறுகலிறப்பு" என்று, அத்மாநுபவத்தினுடைய ஸாவதிகத்வத்தையும் ஆதிஶப்தத்தாலே துக்கமிஶ்ரத்வ துஸ்ஸாதத்வ நிஸ்ஸாரத்வங்களைச் சொல்லுகிறது (ஆடுங்கள்ளிறைச்சி கறுஞ்செஞ்சோருகிற நிந்த்யங்களாலே இளந்தெய்வத்துக் கிழைத்தாடும் நிஹீநதையையும்) (க) "ద్రవ్యంని త్యసురాదిదైవతమతిక్షుద్రంచబాహ్యాగమోద్దృష్టిర్దేవలకాశ్చదేశికజనాధిక్కృతికేషాంక్రమః" "த்ரவ்யம் நிந்த்யஸுராதிதைவதமதிக்ஷுத்ரஞ்சபாஹ்யாகமோத்ருஷ்டிர்தேவலகாஶ்சதே சிகஜநாதிக்திர்திகேஷாம் க்ரமம்" என்கிறபடியே, (உ) "அங்கோராடும்கள்ளும்" (௩) "கருஞ்சோறும் மற்றைச்செஞ்சோறும்" என்கிற ஸுரா மாம்ஸாதி நிந்த்யபதார்த்தங்களைக்கொண்டு (ச) "நீரணங்காடுமிளந்தெய்வம்" என்கிற, க்ஷுத்ரதேவதைகளுக்கு (ரு) "களனிழைத்து" என்றவ்வோ தேவதைகள்ஸந்நிதிபண்ணும் ஸ்தலங்களிலே பலியிட்டு, (சு) "நீரணங்காடுதல் கீழ்மை" என்று, தைவாவிஷ்டராயாடுமதின்தண்மையையும் (பேசநின்ற தேவதாஜ்ஞாநாஶக்திஸாபேக்ஷத்வாதிகளையும்) (எ) "తతఃక్రోధపరీతేన సంరక్తనయనేనచ। వామాంగుష్ఠనఖాగ్రేణఛిన్నంతస్యశిరోమయా" "ததஃ க்ரோதபரிதேநஸம்ரக்தநயநேநச । வாமாங்குஷ்ட நகாக்ரேண சிந்நம் தஸ்யசிரோமயா" என்றும், (அ) "యస్మాదనపరాధస్యశిరశ్ఛిన్నంత్వయామమ। తస్మాచ్ఛాపసమాయుక్తః కపాలీత్వంభవిష్యసి" "யஸ்மாதநபராதஸ்ய சிரஶ்சிந்நம்த்வயாமம। தஸ்மாச்சாபஸமாயுக்தஃ கபாலீத்வம்பவிஷ்யஸி" என்றும், (கூ) "తత్రనారాయణశ్శ్రీమాన్మయాభిక్షాంప్రయాచితః" "விஷ்ணுப்ரஸாத,

திருவாசப. (க) (உ) கூஎ. (௩) கூசு. (ச) கூஉ. (ரு) கூ - ச. (சு) கூ - அ. (எ) மதர்த்வே (அ) (கூ)

௬. இலிங்கத்து விளம்பும் பாஹ்யகுத்ருஷ்டி மததமோ நிஷ்டதையயுஞ்சொல்லி

இலிங்கத்து - இலிங்கித்திட்ட புராணத்தீரும் என்கிற பாட்டு, விளம்பும் - விளம்புமாறுசமயமும் என்கிறபாட்டு இவைகளிலே சொல்லப்பட்ட, பாஹ்ய - வேதபாஹ்யமாயும் உக்திமாத்ரஸாரமாயும், குத்ருஷ்டி - நிந்திக்கத்தக்க ஜ்ஞாநமுடையவர்தாயுமிருக்கிற, மத - மதங்களின், தமோநிஷ்டதையையும் - தமோநிஷ்டரானவராலே ப்ரவர்த்திப்பிக்கப்பட்ட மயையும், சொல்லி - ப்ரதிபாதித்து,

[Grantha text] "தத்ரநாராயண ஸ்ரீமாந்மயாபிக்ஷாம்ப்ரயாசித:। விஷ்ணுப்ரஸாதாத்ஸுஶ்ரோணிகபாலம் தத்ஸஹஸ்ரதா । ஸ்புடிதம்பஹுதாயாதம்ஸ்வப்நலப்ததநம்யதா" என்றுஞ்சொல்லுகிறபடியே, ப்ரம்ஹா ருத்ரனாலே தலையறுப்புண்டு ஶோச்யனாய் ருத்ரனை ஶபிக்க, ருத்ரன் குருசிரச்சேதநத்தாலே பாதகியாய் ப்ரும்ஹஶாபம் தன்னால் போக்கக்கொள்ளப் போகாமையாலே ஸ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனையர்த்திக்க, அவனந்தஶாபத்தைப் போக்கினனுகையாலே, (க) "பேசநின்ற சிவனுக்கும் பிரமந்தனக்கும் பிறர்க்கும் நாயகனவனே கபாலநன்மோக்கத்துக்கண்டு கொள்மின்" என்று, வேதத்தில் ப்ரஶம்ஸாபரமான வாக்யங்களாலும் ராஜஸதாமஸ புராணங்களாலும் பரத்வேநபேசலாம்படி, முட்டுப்பொறுத்துநின்ற ப்ரும்ஹருத்ராதிகளாகிற தேவதைகளுடைய வந்யோந்யம் தங்களுக்குவருகிற க்லேஶமறியாமையும் வந்தக்லேஶம் தாங்கள்தவிர்த்துக் கொள்ளமாட்டாமையும் அத்தைத் தவிர்த்துக் கொடுக்கைக்கு வீஶ்வரன் வேண்டுகையுமாகிற அஜ்ஞாநாஶக்திஸாபேக்ஷத்வங்களையும் ஆதிஶப்தத்தாலே கர்மவஶ்யதையையும், (இலிங்கத்துவிளம்பும் பாஹ்யகுத்ருஷ்டிமததமோ நிஷ்டதையையுஞ்சொல்லி) (உ) "இலிங்கித்திட்ட" (௩) "விளம்புமாறு சமயமும்" என்கிறபாட்டுக்களில் சொல்லுகிற பாஹ்யகுத்ருஷ்டிமதங்களான (ச) "[Grantha text]" "யன்மயஞ்சஜகத்ஸர்வம்" என்று, பொதுவிலே ப்ரஸ்நம்பண்ண (ரு) "[Grantha text]" "விஷ்ணோஸ்ஸகாஶாதுத்பூதம்" என்றுசொல்லி விழுக்காட்டாலே உத்தரமாகையன்றிக்கே, எருமையை யானையாகக்கவிபாடித்தரவேணுமென்பாரைப்போலே, லிங்கமென்றொரு வ்யக்தியைநிர்த்தேசித்து இதுக்குத்கர்ஷம் சொல்லித்தரவேணுமென்று கேட்கிறவனும், தமோபிபூதனய் கேழ்க்கச்சொல்லுகிறவனும் தமோபிபுதனய்ச்சொல்ல, இப்படி ப்ரவ்ருத்தமான லைங்கபுராணாதிகளான குத்ருஷ்டிஸ்ம்ருதிகளும் சிலவற்றைச்சொல்லாநின்றால், தாங்களும் சில தர்க்கங்களைச் சொல்லாநிற்கு மத்தனைபோக்கி ப்ரமா,

(க) தி - வா. ச. ௪௦. ச. (உ) ௪௦. ரு. (௩) ௪௦. ௧. (ச) வி - பு - ௧. ௧. ச. ஷ - ௧. ௧௩௦.

மூ. ஓடிக்கண்டீர்கண்டுந்தெளியகில்லீர் அறிந்தோமினாட்செய்வதே யுறுவதாவதென்று

ஓடி - ஓடிஓடி பலபிறப்பும்பிறந்து, கண்டீர்-பல்படி கால்வழி ஏறிக்கண்டீர், கண்டுந் தெளியகில்லீர் - கரந்துமிழ்ந்து கடந்திடந்தது கண்டும்தெளியகில்லீர், அறிந்தோமின்-அதறிந்தறிந்தோமின், ஆட்செய்வதே-அவனுக்கடிமைப்படுவதே, உறுவதாவது - இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபாநு ரூபமானது, என்று - ஏவம் ப்ரகாரேண,

ஞநுகூல தர்க்கமல்லாமையாலே கேவல முக்திஸாரமேயாயிருக்கிற பாஹ்யஸமயங்கள் ஆறுமென்ற க்ஷபணக பௌத்தாதிகளுடைய ஸ்ம்ருதிகளுமாகையாலே (க) "యా వేదబాహ్యాస్స్మృతయో యాశ్చ కాశ్చ కుదృష్టయః తాస్సర్వా నిష్ఫలాః ప్రేత్య తమోనిష్ఠా హి తాస్స్మృతాః" "யாவேதபாஹ்யாஸ்ம்ருதயோ யாஶ்சகாஶ்சகுத்ருஷ்டய꞉। தாஸ்ஸர்வா நிஷ்பலா꞉ ப்ரேத்யதமோநிஷ்டாஹீதாஸ்ம்ருதா꞉" என்கிறபடியே, அவற்றினுடைய தமோநிஷ்டதைகளையுஞ்சொல்லி (ஓடிக்கண்டீர்) (உ) "ஓடியோடி" என்று, துடங்கி (ங) "வழியேறிக்கண்டீர்" என்று, (ச) "గతాగతం కామకామా లభన్తే" "கதாகதம் காமகாமாலபந்தே" என்கிறபடியே ஸ்வர்க்க நரகங்களிலேபோவது கர்ப்பத்தேறவருவதாய்க் கொண்டு அநேக ஜந்மங்களில் பிறந்து தேவதாந்தரங்களை த்ருவிதகரணங்களாலும் பலபர்யாயம்ததாஶ்ரயணத்தைச்சொல்லுகிற ஶாஸ்த்ரமார்க்கத்தாலே ஆஶ்ரயித்து அவ்வாஶ்ரயணபலமும்கண்டு கோளீ (கண்டும் தெளியகில்லீர்) இவனுடைய ஜகந்நிகரணாதி திவ்யசேஷ்டிதங்களை ஶாஸ்த்ரத்வாராப்ரத்யக்ஷித்தும், இவனே ஆஶ்ரயணீயனென்று தெளியமாட்டுகிறிலிகோள் (அறிந்தோமின்) உங்களை யிங்ஙனேவைத்தது ஸதஸத்கர்மகாரிகளானஜந்துக்கள் அவ்வோ கர்மாநுகுணபலங்களை அநுபவிக்கக்கடவதான ஶாஸ்த்ரமர்யாதையழியுமென்று அதுதான் (ரு) "మమ మాయా దురత్యయా" "மமமாயாதுரத்யயா" என்கிற ப்ரக்ருதியை யிட்டு அவன்மயக்கிவைத்தபடிகாணுங்கோள். ஆனபின்பதவன்மாயையென்றறிந்து (சு) "మామేవ యే ప్రపద్యన్తే మాయామేతాం తరన్తి తే" "மாமேவ யேப்ரபத்யந்தே மாயாமேதாந்தரந்திதே" என்கையாலே, மாயாதரணோபாயமும், அவன் திருவடிகளைப்பற்றுகையென்றறிந்து அவனையாஶ்ரயித்து இம்மாயையைத் தப்பப்பாருங்கோள் (ஆட்செய்வதே யுறுவதாவதென்று) "நீள்குடக்கூத்தநுக்காட் செய்வதே உறுவதாவது" என்கையாலே, நரதிஶயபோக்யமான சேஷ்டிதத்தை யுடையவனுக்கடிமைசெய்கையே இவ்வாத்மாவுக்குச் சீரியதும்ஸுகமுமென்றிப்படி

(க) ஸ்ரீரம் - உ. (உ) தி - வா. ச. ௧0. எ. (ங) ஷை. (ச) ஸ்ரீ. கீ. கூ. உக. (ரு) ஸ்ரீ - க. (சு) ஷை.

மூ. விரக்தி பூர்வகமாக வாஶ்ரயணத்தை ருசிப்பிக்கிறார் நாலாம்பத்தில்.

மூ—(ரு) ஆவாவென்றுதானே தன்னடியார்க்குச்செய்யும் தொல்லருளென்று பரத்வாதிகளையுடையவ னெவ்விடத்தானென்னும் பாவியர்க்கு மிருகரையும்

---

விரக்திபூர்வகமாக - ப்ரயோஜனாந்தரம் தேவதாந்தரம் பாஹ்யகுத்ருஷ்டி மதங்கள் (இவைகளில்) வைராக்யத்தை முன்னிட்டு, ஆஶ்ரயணத்தை - பகவதாஶ்ரயணத்தை, ருசிப்பிக்கிறார் - சேதநர்க்கு ருசிவிஷயமாம்படி பண்ணுகிறார், நாலாம் பத்தில் - நாலாவது சதகத்தில்.

(அ) ஆவாவென்று - ஐயோ! ஐயோ! என்றிரங்கி, தானே - (நிரங்குஶஸ்வதந்த்ரனை) தானே, தன்னடியார்க்கு - தனக்கநந்யார்ஹஶேஷபூதரானர்க்கு, செய்யும் - பண்ணுமதான, தொல்லருளென்று - ஸ்வாபாவிகக்ருபையென்று, பரத்வாதிகளையுடையவன் - ப்ரத்வாதிகல்யாணகுணங்களையுடையவன், எவ்விடத்தானென்னும் - அவனெவ்விடத்தான் யானுரென்று கூப்பிடும்படியான, பாவியர்க்கும் - எத்தனையேனும்பாபிஷ்டரானவர்க்கும், இருகரையும் - இரண்டுகரைகளையும்,

---

உபதேசித்து (விரக்தி பூர்வகமாக ஆஶ்ரயணத்தை ருசிப்பிக்கிறார் நாலாம்பத்தில்) அதாவது:— ப்ரயோஜநாந்தர தேவதாந்தாரபாஹ்ய குத்ருஷ்டிமதங்களில்விரக்திபூர்வகமாக ஜகத்காரணத்வாதிகளான ப்ரமாணேபபத்திகளாலே பகவத்ஸமாஶ்ரயணத்தை ஸம்ஸாரிகளுக்கு ருசிப்பிக்கிறாரென்கை. *

வ்யா. (ரு) அஞ்சாம்பத்தால் கீழ்ச்சொன்ன பரத்வாதிகளால் வந்ததன்னுடைய உத்கர்ஷத்தையும் தந்தாமுடைய நிகர்ஷத்தையுமநுஸந்தித்து அகல்வானளவிலும் மேல்விழுந்து விஷயீகரிக்கும்படி பரமகாருணிகனை ஸர்வேஶ்வரன், கீழிவர்க்குப்பிறப்பித்த விரக்திக்குபலமான ஸ்வவிஷய பக்தியையும் பரம்பரையா அபிவ்ருத்தமாக்க, அந்தபக்தியையும் பாகவதஸமாகமத்தையுமுடையரானவிவர், தாம் திருத்தத்திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களையும் திருத்தினதம்மையும் காண்கைக்குவந்த நித்யஸூரிகளையும் ஶ்வேதத்வீப வாஸிகளான ஸித்தரையும்கண்டு மங்களாஶாஸநம்பண்ணி, திருந்தாதவஸுர ராக்ஷஸப்ரக்ருதிகளையும் பகவத்பாகவதவைபவத்தையுமுபதேசித்துத்திருத்தி பாகவத ஸமாஜதர்ஶநமினிதாம்படியான ஜ்ஞாநம்பிறந்தார்க்குப்ராப்யத்வரைக்கடியான பக்தியையுமுபதேசித்துத் தலைக்கட்டுகிறாரென்கிறார் (ஆவாவென்று தானேதன்னடியார்க்குச்செய்யும் தொல்லருளென்று பரத்வாதிகளையுடையவ னெவ்விடத்தானென்னும் பாவியர்க்குமிருகரையும்

மூ. அழிக்கும் க்ருபாப்ரவாஹ முடையவன் பொய்க்கூத்து வஞ்ஜக்களவு தவிர

அழிக்கும் - அதிக்ரமித்துச்செல்லுகிற, க்ருபா - க்ருபையுடைய, ப்ரவாஹமுடையவன் - ப்ரவாஹத்தையுடையஸர்வேச்வரன், பொய் - பொய்யேகைமைசொல்லியென்னும் பொய்யும், கூத்து - (என்றென்றேசிலகூத்துச்செல்ல என்கிற) கூத்தும், வஞ்சம் - (உன்னையும் வஞ்சிக்குமென்கிற) வஞ்சநமும், களவு - (கள்ளமநந்தவிர்ந்தேயென்கிற) களவும், தவிர - எல்லாம்விட்டுப்போம்படி,

அழிக்கும் க்ருபாப்ரவாஹமுடையவன்) (க) "ஆவாவென்றருள்செய்து" என்று, ஐயோ ஐயோவென்று இவன்பக்கலிலே க்ருபையைப்பண்ணியென்றும் (உ) "தானேயின்னருள் செய்து" என்று, நானர்த்தியா திருக்கதானேதன்பேறுகக்ருபையைப் பண்ணியென்றும், (௩) "கலியுகமொன்றுமின்றிக்கே தன்னடியார்க்கருள்செய்யும்" என்று, தன்பக்கலிலே ந்யஸ்தபரரானவர்களுக்கு கலிதோஷங்களொன்றும் வாராதபடியாக க்ருபைபண்ணுமென்றும், (௪) "பெருமானது தொல்லருளே" என்று, ஸர்வேச்வரனுடைய ஸ்வாபாவிக க்ருபையென்றுஞ் சொல்லுகிறபடியே (௫) அம்மானாழிப்பிரானவனெவ்விடத்தான் யானாரெம்மாபாவியர்க்கும்விதிவாய்க்கின்றுவாய்க்கும்கண்டீர்" என்று, கையும் திருவாழியுமான வழகை நித்யஸூரிகளுக்குக் காக்ஷிகொடுத்துக்கொண்டு, அங்குள்ளாருடனே பரிமாறியிருக்கிற ஸர்வேச்வரனானவ னெவ்வளவிலே, நித்ய ஸம்ஸாரிகளுக்குமிவ்வருகான நானெவ்வளவிலே, என்று, கீழ்ச்சொன்ன தன்னுடையபரத்வ காரணத்வ வ்யாபகத்வ நியந்த்ருத்வாதிகளால்வந்த வுத்கர்ஷத்தையும், தங்களுடைய நிகர்ஷத்தையும் அநுஸந்தித்தகலும்படி எத்தனையேனும் மஹாபாபிகளளவிலும் கர்மாநுகுண நிர்வாஹத்துக்குடலான தந்நிரங்குசஸ்வாதந்த்ரயமாகிற கரையும், தன்னநுக்ரஹம் தங்கள்பக்கலிலே வராதபடி அபராதங்களையே பண்ணுமிவர்கள் ஔபாதிகஸ்வாதந்த்ரயமுமாகிற கரையு மழியப்பெருகாநிற்குமதான க்ருபாப்ரவாஹத்தையுடையஸர்வேச்வரன் (பொய்க்கூத்து வஞ்சக்களவு தவிர) (௬) "பொய்யே கைம்மைசொல்லி" (௭) "என்றென்றே சிலகூத்துச்சொல்ல" (௮) "உன்னையும் வஞ்சிக்கும் கள்ளமனந்தவிர்ந்தே" என்று, மெய்கலவாதவெறும்பொய்யைச்சொல்லி ப்ரேமபரவசரைப் போலே பாவித்து ஹ்ருதயம் ப்ராக்ருத விஷயப்ரவணமாயிருக்க, அநந்யப்ரயோஜநரைப்போலே, அவனௌதார்யத்தையும் வடிவழகையும் ஸஹ்ருதயமாகச்சொல்லுகிறாரென்று தோன்றும்படி பலகாலும் சொல்லாநின்றுகொண்டு ஸர்வஜ்ஞனை

(க) தி-வா. ௫. க. கூ. (உ) ஷை. க௦. (௩) ஷை. ௫. உ. கக. (௪) ஷை. ௫. கூ. கூ. (௫) ஷை. ௫. க. ௭. (௬) ஷை. ௫. க. க. (௭) ஷை. ௫. க. உ. (௮) ஷை. ௫. க. ௩.

மூ. முற்றவும் தானுயுன்னைவிட் டென்னப்பண்ணின விரக்தி
பல பரமாத்மராகம் பேரமர்பின்னின்று கழியமிக்கு யா
னேயென்ன வாய்ந்தாற்றகில்லாது நீராய்மெலியவூடுபுக்கு
வளர

முற்றவும் - எல்லாப்பதார்த்தங்களும், தானுய் - தானேயாய், உன்னை விட்டு - (நான்விட்டவன்றும் விடாத) உன்னையொழிய (எத்தைக்கொள்ளுவன்) என்னப்பண்ணின - என்றிவர்தம்வாயாலே பேசும்படி) பண்ணின, விரக்தி - வைராக்யத்துக்கு, பல - பலமான, பரமாத்ம - பகவத்விஷயத்தில், ராகம் - ராகம், பேரமர் - அபரிச்சேத்யமாய்ப்பொருந்தின, பின்னின்று - பிடரிபிடித்து நின்று (நெஞ்சைமுடிக்கும்படியான காதல்) கழியமிக்கு-மிகவும்கைகழிந்து, யானேயென்ன - (கடல்ஞாலம் செய்தேனும்) யானேயென்னும்படி, வாய்ந்து - அநுகாரமுகத்தாலே கிட்டி, ஆற்றகில்லாது - (உன்னைவிட்டொன்றும்) ஆற்றகிற்கின்றிலேனென்றொருக்ஷணமும்பிரிந்து தரிக்கக்ஷமரன்றிக்கே, நீராய்மெலிய - (நீராயுருகுமென்னுவியென்கிறபடியே) ஜலம்போலே த்ரவத்ரவ்யமாய் (நோவுபட) ஊடுபுக்கு - ஊடுபுக்கெனதாவியை யென்கிறபடியே பகவத்குணங்கள் மர்மத்திலே புகுந்து ஆத்மாவைத்ரவத்ரவ்யமாக்கும்படி, வளர - அபிவ்ருத்தமாக,

வுன்னையும் பகட்டும் க்ருத்ரிமயுக்தமான மனஸ்ஸையுடையரான விவர், அவற்றைத்தவரும்படி (முற்றவும்தானு யுன்னைவிட் டென்னப்பண்ணிணவிரக்திபலபரமாத்மராகம்) (க) "என்னை முற்றவும்தானுனன்" என்றிவர்க்கு ஸர்வவிதபோக்யமும், தானுய் (உ) "இனியுன்னைவிட்டென்கொள்வனே" என்று, நான் விட்டவன்றும் விடமாட்டாத உன்னையொழியதுராராதரூபமாய் வருந்தியார்ாதித்தாலும் கிடைப்பதொன்றில்லாத விஷயங்களைப்பற்றவோவென்றிவர் தாமேபேசும்படி பண்ணின (௩) "கண்டசதிர் கண்டொழிந்தேன்" என்கிறபடியே, அவன் போக்யதையாலே, அந்யவிஷயங்களையடைய உபேக்ஷிக்கும்படி கீழில்பத்தில் பிறந்தவிரக்திக்குபலமான (௪) "ఇశ మాత్మనియోరక్తః" "பரமாத்மநியோரக்தः" என்கிற பரமாத்மவிஷயத்தில் ராகமானது (பேரமர்பின்னின்று கழியமிக்குயானே யென்னவாய்ந்தாத்தகில்லாது நீராய்மெலிய ஊடுபுக்குவளர) (௫) "பேரமர்காதல்" என்று, அபரிச்சேத்யமாய்ப் பொருந்தி (௬) "பின்நின்றகாதல்நோய் நெஞ்சம்பெரிதடும்" என்று, பிடரி பிடித்துநின்று நெஞ்சை முடிக்கும்படியாய் (௭) "கழியமிக்கதோர்காதல்" என்று, பார்ஶ்வஸ்தரும்பேசும்படி மிகவும் கைகழிந்து (௮) "கடல்ஞாலம்செய்தேனும்யானே" என்றுதுடங்கி, (௯) "வாய்ந்தவழுதிவளநாடன்",

(க) தி-வா. ௫. க. க௦. (உ) ஷ-௩. (௩) ஷ. ௪. ௯. க௦. (௪) (௫) ஷ-௫. ௩. ௪. (௬) ஷ. ௫. ௪. ௬. (௭) ஷ. ௫. ௫. க௦. (௮) ஷ. ௫. ௬. க. (௯) ஷ. கக.

மூ. விஷவ்ருக்ஷபலங்கள் கைகூடினவரடிமைபுக்காரையுமாட்செய்வாரையும்காண லோகத்வீபாந்தரங்களில் நின்றும் போந்த தேவர்குழாங்களைக்கண்டு கூப்பிட்டு

விஷவ்ருக்ஷ - (ஸம்ஸாரமாகிற) விஷவ்ருக்ஷத்தின், பலங்கள் - கேஶவ பக்திபாகவதஸமாகமம் (இவை,) கைகூடினவர்-கைபுகுந்தவர், அடிமை புக்காரையும் - அடிமையிலே புகுந்தவரையும், ஆட்செய்வாரையும் - ஆட்செய்தாழிப்பிரானைச் சேர்ந்தவரையும், காண - காண்கைக்கு, லோகாந்தர - (வைகுந்தன்பூதங்களென்கிறபடியே) லோகாந்தரமான ஸ்ரீவைகுண்டம், த்வீபாந்தரங்களில் நின்றும் - (தடங்கடல்பள்ளிப்பெருமானென்று) த்வீபாந்தரமான ஶ்வேதத்வீபம் (இவைகளிநின்றும்) போந்த - வந்திருக்கிற, தேவர்குழாங்களை - நித்யஸூரிகளின் ஸமூஹங்களை, கண்டு - ஸாக்ஷாத்கரித்து, காப்பிட்டு-மங்களாஶாஸநம்பண்ணி,

என்று, அவனுடைய ஜகத்காரணத்வாத்யத்புதகர்மங்களை நானேசெய்தேனென்று அநுகாரமுகத்தாலே விஷயத்தைக்கிட்டிப்பேசும்படியாய் (க) "உன்னைவிட்டொன்று மாற்றகிற்கின்றிலேன்" என்று, அவனையொழிய ஒருக்ஷணமும் தரித்திருக்கமாட்டாதபடியாய் (உ) "ஆராவமுதே அடியேனுடலம் நின்பாலன்பாயே நீராய்" என்று, விஷயபோக்யதாதிஶயத்தால் வந்த ப்ராவண்யத்தாலே ஞ்ஜாநாஶ்ரயமான வாத்மாவாதல், ஜ்ஞாநப்ரஸரணத்வாரமான மநஸ்ஸாதலன்றிக்கே ஆத்மாவுக்காயதநமான ஶரீரமும் சிதிலமாம்படியாய் (௩) "வைகலும் வினையேன்மெலிய" என்று, அந்தஶைதில்யந்தான் காதாசித்கமன்றிக்கே ஸர்வகாலமும் மெலியும்படியாய் (௪) "நிறந்தநூடுபுக்கெனதாவியை நின்று நின்றுருக்கியுண்கின்ற" என்று, பகவத்குணங்கள் மர்மத்திலேபுகுந்து ஆத்மாவை இடைவிடாமல் த்ரவத்ரவ்யமாக்கும்ப்டி அபிவ்ருத்தமாக (விஷவ்ருக்ஷபலங்கள் கைகூடினவர்) இப்படி பகவத்ப்ரேமம் வளருகையாலும் பாகவதர்களோடேகூடப் பெறுகையாலும் (௫) "సంసారవిషవృక్షస్య ద్వేఫలేహ్యమృతోపమే । కదాచిత్కేశవేభక్తి స్తద్భక్తై * ర్వాసమాగమః" "ஸம்ஸாரவிஷவ்ருக்ஷஸ்யத்வேபலேஹ்ம்ருதோபமே। கதாசித்கேஶவேபக்தி ஸ்தத்பக்தைர்வாஸமாகமஃ" என்று, ஸம்ஸாரமாகிற விஷவ்ருக்ஷத்தில் அம்ருதோபம பலங்களாகச் சொல்லப்பட்ட பகவத்பக்தியும் பாகவதஸமாகமுமாகிறபலத்வயமும்கைபுகுந்தவிவர் (அடிமைபுக்காரையுமாட்செய்வாரையுங்காண லோகத்வீபாந்தரங்களிநின்றும் போந்த தேவர்குழாங்களைக்கண்டுகொப்பிட்டு)

* "தத்பக்தைர்வாஸமாகம:" என்கிறவிடத்தில், வா, என்றத்தை, அவதாரணத்திலேயாக்கி; தத்பக்தைரேவஸமாகம:, என்றாய், ததீயரான பாகவதர்களே உத்தேஶ்யரென்று எம்பெருமானார். ஆனால், ஸர்வேஶ்வரன் உத்தேஶ்ய னல்லனோவெனில்? ப்ராப்யத்தில் ப்ரதமாவதி பகவச்சேஷத்வத்தளவிலேநிற்கை, சரமாவதி பாகவதரளவிலே வருகை.

(க) திருவா. ரு. எ. க. (உ) ஷை. அ. க. (௩) ஷை. கூ. க. (௪) ஷை. கo. க. (௫)

௱. ப்ரஹ்லாதவிபீஷணர் சொற்கேளாதவரக்கரசுரர்போல்வா ரைத்தடவிப்பிடித்து

ப்ரஹ்லாத - ப்ரஹ்லாதாழ்வான், விபீஷணர் - விபீஷணுழ்வான், (இவர்களுடைய) சொற்கேளாத - உபதேஶம்கேட்டுத்திருந்தாத, அரக்கரசுரர்போல்வாரை - அரக்கனுனராவணன் அசுரனுனஹிரண்யன், (இவர்கள் போல்வாரை) தடவிப்பிடித்து - தேடிப்பிடித்து,

(க) "ஒன்றுந்தேவிலே" (உ) "மற்றைத்தெய்வம்நாடுதிர்" (௩) "பாடியாடிப் பரவிச்சென்மிங்கள்" (ச) "தெய்வம்மற்றில்லை" (ரு) "நாயகனவனே" (சு) "ஒன்றும்பொய்யில்லைபோற்றுமினே" (எ) "அறிந்தோடுமின்" (அ) "ஆதிமூர்த்திக்கடிமைபுகுவதுவே" (௯) "மற்றைத்தெய்வம் விளம்புதிர்" (௧௦) "உளங்கொள் ஞானத்துவைம்மின்" (கக) "ஆட்செய்வதே" (கஉ) "உறுவதாவது" என்று, தேவதாந்தராபரத்வபூர்வகமாக பகவத்பரத்வத்தையும், பகவதாஶ்ரயணப்ரகாரத்தையும், பகவத்கைங்கர்யமே பரமபுருஷார்த்தமென்னுமத்தையும், தெளிய உபதேசிக்கக்கேட்டுத் திருந்தியடிமைபுக்க ஸ்ரீவைஷ்ணவர்களையும் (க௩) "ஆட்சைதாழிப்பிரானைச் சேர்ந்தவன்" என்றிப்படி, திருத்துகையாலே அடிமைசெய்தாரான தம்மையும் காண்கைக்கு (கச) "வைகுந்தன் பூதங்களேயாய்" (கரு) "தடங்கடல்பள்ளிப் பெருமான்தன்னுடைப் பூதங்களேயாய்" (கசு) "தேவர்கள்தாமும்புகுந்து" என்னும்படி, லோகாந்தரமான ஸ்ரீவைகுண்டத்தி லுள்ளாராயும் த்வீபாந்தரமான ஶ்வேதத்வீபத்தி லுள்ளாராயும், (கஎ) "நேமிப்பிரான் தமர்போந்தார்" என்கிறபடியே, வந்தநித்யஸூரிகளும் முக்தப்ராயருமான தேவர்களுடைய திரள்களை (கஅ) "கண்டோம் கண்டோம்" என்று, கண்ணுக்கினியதாயிருக்கையாலேகண்டோமென்று பலகாலும் சொல்லும்படிகண்டு(க௯) "பொலிக பொலிக" என்று, அத்திரளபிவ்ருத்தமாயிடுகவென்று, மங்கலாஶாஸநம்பண்ணி (ப்ரஹ்லாதவிபீஷணர் சொல்கேளாதவரக்கரசுரர் போல்வாரைத் தடவிப்பிடித்து) (௨௦) "த்வய்யஸ்தி மய்யஸ்தி ச" "த்வய்யஸ்தி மய்யஸ்திச" என்று, ப்ரஹ்லாதன் உபதேசிக்கக் கேட்டும் திருந்தாதவஸுரனுன ஹிரண்யனையும், (௨க) "பாதீயதாம் தாஶரதாயமைதிலீ" "பாதீயதாம் தாஶரதாயமைதிலீ" என்று ஸ்ரீவிபீஷணுழ்வானுபதேசிக்கக்கேட்டும் திருத்தாத ராக்ஷஸனுன ராவணனைபோலேயும், கீழ் தாமு முபதேசித்ததில் திருந்தாமற்கிடந்த ராக்ஷஸப்ரக்ருதிகளும் ஆஸுரப்ரக் ருதிகளுமாயுள்ளாரை (௨௨) "அரக்கரசுரர்

(க) தி-வா. ச. க௦. க. (உ) ஷி. க௦. க. (௩) ஷி. க௦. உ. (ச) ஷி. க௦. ௩. (ரு) ஷி. க௦. ச. (சு) ஷி. க௦. ரு. (எ) ஷி. க௦. சு. (அ) ஷி. க௦. எ. (௯) ஷி. க௦. அ. (க௦) ஷி. க௦. ௯. (கக) ஷி. க௦. க௦. (கஉ) ஷி. (க௩) ஷி. க௦. கக. (கச) ஷி. ரு. உ. ரு. (கரு) ஷி. ச. (கசு) ஷி. ௩. (கஎ) ஷி. சு. (கஅ) ஷி. உ (க௯) ஷி. க. (௨௦) வி-பு. (௨க) ஸ்ரீ-ரா-யு. கசு. ௩௩. (௨௨) ஷி. ரு.

மூ. தேஶகாலதோஷம்போக வெங்குமிடங்கொண்டவர்களை மேவித்தொழுது ஜ்ஜீவியுங்கோள் நீங்கள் நிறுத்துகிறவர்களை தேவதைகளாக நிறுத்தினவனை

தேஶ - தேஶம், கால - காலம், (இவைகளுடைய) தோஷம் - தோஷம், போக - நிவ்ருத்தமாம்படி, எங்கும் - எவ்விடத்திலும், இடங்கொண்டவர்களை - ஸர்வதோதிக்கமாக வ்யாப்தமாயிருக்கிறவர்களை, மேவி - ஆதரித்து, தொழுது - அஞ்சலிபந்தம்பண்ணி, உஜ்ஜீவியுங்கோள் - நல்லகதியையடையுங்கள், நீங்கள் - உங்களாலே, நிறுத்துகிறவர்களை - தேவதையாக ஸ்தாபிக்கப்பட்டவர்களை, தேவதைகளாக - அவர்களும் சிலர்க்கு தேவதைகளாகும்படி, நிறுத்தினவனை - ப்ரதிஷ்டிப்பித்த (ஸர்வேஶ்வரனை)

பிறந்தீருள்ளீரேல்" என்று, தேடிப்பிடித்து, (தேஶகாலதோஷம்போக வெங்குமிடங் கொண்டவர்களை மேவித்தொழுது ஜ்ஜீவியுங்கோள்) (க) "கொன்றுயிருண்ணும் விசாதிபகைபசி தீயனவெல்லாம் நின்றிவ்வுலகில் கடிவான் நேமிப்பிரான் தமர்போந்தார்" (உ) "திரியுங்கலியுகம் நீங்கித் தேவர்கள் தாமும்புகுந்து" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஶரீரத்தைமுடித்து ப்ராணபஹாரம் பண்ணக்கடவதான வ்யாதி, அப்படி செய்யும் பகை, பசிமுதலான தேஶதோஷமும், (௩) "ভবিষ্যতি তরোত্তরম்" "பவிஷ்யத்ய தரோத்தரம்" என்கிறபடியே, பதார்த்த ஸ்வபாவங்கள் வேறுபடும்படியானகலிப்ரயுக்தமான காலதோஷமும், தங்கள்ஸஞ்சாரத்தாலேபோம்படி (ச) "இரியப்புகுந்திசைபாடிவெங்குமிடங்கொண்டன" என்கிறபடியே, பகவதநுபவஹர்ஷப்ரகர்ஷத்தாலே பெரியவாரவாரத்தோடே புகுந்து ப்ரதிகூலர்க் கிடமில்லாதபடி ஸர்வப்ரதேஶத்திலும் பரம்பினவர்களை (ரு) "மேவித்தொழுதுய்மினீர்கள்" என்று, நீங்களநந்யப்ர யோஜநராய்க் கொண்டாஶ்ரயித்து ஜ்ஜீவியுங்கோள். அவ்வளவும் போகமாட்டாதே தேவதாந்தரப்ராவண்யத்தாலே பகவத்வைபவமறிகைக்கீடான வளவிலிகளாகில் (நீங்கள் நிறுத்துகிறவர்களை தேவதைகளாக நிறுத்தினவனை) (சு) "நிறுத்திநும்முள்ளத்துக்கொள்ளும் தெய்வங்கள்" என்று, அவைதனக்கு ஸ்வதஃ உத்கர்ஷமில்லாமையாலே வசநாபாஸங்களாலும், யுக்த்யாபாஸங்களாலும், நீங்கள் சேமம்சாற்றி நிறுத்தி புறம்பேசிலரறியில் அபஹஸிப்பர்க ளென்றுங்கள் நெஞ்சுக்குள்ளே நீங்களறிந்ததாக உபாஸிக்கும் தேவதைகளை (எ) "நிறுத்தினான் தெய்வங்களாகவத் தெய்வநாயகந்தானே" என்று, ராஜாவானவன் ஊர்தோறும் கூறுசெய்வார்களை நிறுத்துமாப்போலே, உங்களுக்காஶ்ரயணீயராக நிறுத்தின

(க) தி-வா. ரு. உ. சு. (உ) ஷி. ௩. (௩) (ச) ஷி. ௩. (ரு) ஷி. கூ. (சு)ஷி. ஏ. (எ) ஷி. அ.

மூ. மேவிப்பரம்புமவரோடொக்கத்தொழில் யுகதோஷமில்லை யாமென்று விஷ்ணுபக்திபரராக்கி கண்ணுக்கினியன காட்டலாம்படியானார் கண்ணிலேநோக்கிக்காணும் பக்திஷித்தாஞ்சநத்தை யிடுகிறாரஞ்ஜாம்பத்தில்.

மேவி - மேவித்தொழுது, பரம்புமவரோடோக்க - விபூதி விஸ்தாரமுடைய ப்ரும்ஹருத்ராதிகளோடொக்க, தொழில் - தொழிகிற்றிராகில், யுகதோஷம் - கலியுகதோஷம், இல்லையாமென்று - இல்லாமல்விடுமென் றுபதேசித்து, விஷ்ணுபக்தி - விஷ்ணு விஷயகமான பஜநத்திலே, பரராக்கி-ஆஸக்தியுடைய ராம்படிபண்ணி, கண்ணுக்கு-கண்களுக்கு, இனியன - இனியதாயிருக்குமவற்றை, காட்டலாம்படி-காணும்படிபண்ணலாம்படி, ஆனார் - விஷயபூதரானாருடைய, கண்ணிலே - நெஞ்சென்னு முட்கண்ணிலே, நோக்கிக்காணும் - நோக்கிக்காணலாம் படியான, * பக்தி - பகவத்பக்தியாகிற, ஷித்தாஞ்ஜநத்தை - ஷித்தாஞ்ஜநமென்றுசொல்லப்பட்ட கண்ணுக்கிடும்மையை, இடுகிறார் - எழுதுகிறார், அஞ்சாம்பத்தில் - ஐந்தாவதான ஶதகத்தில்.

ஸர்வேஶ்வரனை (மேவிப்பரம்புமவரோடொக்கத்தொழில் யுகதோஷமில்லையாமென்று) (க) "நக்கபிரானோடயனுமிந்திரனும் முதலாகத்தொக்கவமரர்குழாங்கள்" (உ) "கண்ணன் திருமூர்த்தியை மேவிமிக்க வுலகுகள்தோறும் எங்கும்பரந்தன ஒக்கத்தொழ கிற்றிராகில்கலியுக மொன்றுமில்லை" என்று, ருத்ரனோடே ப்ரும்ஹாவுமிந்திரனும் முதலாகத் திரண்ட தேவதாஸமூஹங்கள், க்ருஷ்ணனுடைய அஸாதாரண விக்ரஹத்தை ஸமாஶ்ரயமாகப் பற்றிஸிஸ்த்ருதமான லோகங்களெங்குமொக்கப்பரந்து விபூதிவிஸ்தாரத்தை யுடையரானார்கள். அவர்களைப்போலே நீங்களுமவனை ஆஶ்ரயிக்கப்பெறில் விபரீதப்ரவ்ருத்தகமான கலியுகதோஷமுங்களுக்குத் தட்டாதென்றுபதேசித்து (விஷ்ணுபக்திபரராக்கி) (௩) "విష్ణుభక్తిపరో దేవః" "விஷ்ணுபக்திபரோதேவః" என்கிறபடியே (௪) "அரக்கரசுரர்" என்னுமது போய்தேவஶப்தவாச்யராம்படி பகவத்பக்திபரராகத்திருத்தி (கண்ணுக்கினியன காட்டலாம்படியானார், கண்ணில் நோக்கிக்காணும் பக்திஷித்தாஞ்சநத்தையிடுகிறாரஞ்சாம்பத்தில்) அதாவது:—திருந்தாதாரைத் திருத்தினவளவன்றிக்கே முன்பேதிருந்தி (௫) "கண்ணுக்கினியன கண்டோம் தொண்டீரெல்லீரும் வாரீர்" என்னும்படி, பாகவதஸமாஜதர்ஶநமினிதாம்படி அவ்விஷயத்தில் சாபலமுடையராய், உபாயாத்வஸாயதசையிலே நின்று, ப்ராப்யதசையிலேநிற்கிறதம்மைப்பொடியும்படியானவர்களுடைய உபாயாத்வஸாயஜ்ஞாநத்தின்மேலே (௬) "என்னெஞ்சினால் நோக்கிக்காணீர்,"

* பக்தியை ஷித்தாஞ்ஜநமாக ஸ்ரீ குணரத்ந கோஶத்தில் பட்டருளிச்செய்தபடியா லிவரு மப்படி யருளிச்செய்தது.

(க) தி-வா. ௫. ௨. ௧௦. (உ) ஷை. (௩) (௪) ஷை. ௫. (௫) ஷை. ௨. (௬) ஷை ௫௨.

மூ—(சு) என்னையும்யாவர்க்கும் சுரர்க்காயடியீர்வாழ்மி னென்று கருணையாலே ஸர்வலோக

(அ) என்னையும் - என்னையுமுளனென் மின்களென்றும், யாவர்க்கும் - வரங்கொள்பாதமல்லாலில்லை யாவர்க்கும்வன்ஶரணென்றும், சுரர்க்காய் - வன்ஶரண்சுரர்க்கா யென்றும், அடியார்வாழ்மின் - அடிமைப்பட்டவர்களே யடிக்கீழமர்ந்து புகுந்துவாழுங் கோள் (என்றும்) என்று, இப்ரகாரத்தாலே, கருணையாலே - (நிர்ஹேதுகமான தம்முடைய) க்ருபையாலே, ஸர்வலோக - ஸர்வலோக ஶரண்யாயஎன்று ஸமஸ்த லோகங்களுக்கும் புகலிடமென்று விபீஷணாழ்வா னருளிச்செய்ததென்ன,

என்னைமுனியாதே" என்றும், (க) "[Sanskrit in Telugu/Grantha script]" "மநஷிவிலஸதாக்ஷ்ணசபக்திஸித்தாஞ்ஜநேந" என்கிறபடியே, ஸித்தாஞ்சநம்போலே காணக்கூடாதவர்த்தத்தை ப்ரகாசிப்பிப்பதாய் ப்ராப்யவை லக்ஷண்யத்தை விஷயீகரித்த பக்தியை உபதேஶமுகேந உண்டாக்குகிறுர் அஞ்சர்ம்பத்திலென்கை. *

வ்யா. (சு) ஆறும்பத்தால் தன்னுடையபரம க்ருபையாலே ஸர்வரும் வந்தாஶ்ரயிக்கும்படி யிருக்கிற ஸர்வஶரண்யனை ஸர்வேஶ்வரன், பக்திபாரவஶ்யத்தாலே அநந்யகதிகளான தமக்குத் தன் திருவடிகளையே நிரபேக்ஷோபாயமாகக்காட்டிக்கொடுக்க, அவ்வுபாயத்திலே விச்சேத மில்லாதபடி நடக்கிற வ்யவஸாயத்தை யுடையராய் தம்முடைய வ்யவஸாயத்தை கடகமுகத்தாலே அவனுக்கறிவித்து வரவு தாழ்க்கையாலே தமக்கு விளைந்த ப்ரணயரோஷத்தையவன் பரிஹரிக்கவவன்ஸாமார்த்யத்தை யநுஸந்தித்து குணாநுபவத்துக்குப்பண்ணின ப்ரபத்தியும் பலித்தவாறே, ப்ராப்திக்குப்ரவ்ருத்தி பண்ணுவதாக்ககோலி ஸித்தோபாய வரணம் இதரபரித்யாக பூர்வகமாகையாலே பௌராணிக வசந ப்ரக்ரியையாலே உபாயவிரோதிகளான த்யாஜ்யாம்ஶங்களை ஸவாஸநமாக தத்ப்ரஸங்கமு மஸஹ்யமாம்படி விட்டு விட்டவையெல்லாம் தமக்குப் பற்றுகிற விஷயமேயாக நினைத்து பரமார்த்தியோடே தமக்குபாயமாக நினைத்திருக்கும் திருவுலகளந்தருளின ஸர்வஸுலபமான திருவடிகளை நித்யஸூரிகளும் வந்தநுபவிக்கும்படி நிற்கிற திருமலையிலே கண்டு பூர்வவாக்ய ப்ரக்ரியையாலே ஶரணம் புக்கவன் பத்துடையடியவரிலேதுடங்கி 'யஞ்சாம்பத்தளவாக வுபதேசித்தபக்த்யுபாயத்தின் துஷ்கரத்வாதி தோஷாநுஸந்தாநத்தாலே ஶோகம்ஜநிக்கும்படியான பாகம்பிறந்தவர்கட்கு தம்முடைய ப்ரபத்தி நிஷ்டையை ஸர்வர்க்கும் ப்ரகாசிப்பிக்கிறுரென்கிறுர். (என்னையும் யாவர்க்கும் சுரர்க்காயடியீர் வாழ்மினென்று கருணையாலே ஸர்வலோக

(க) ஸ்ரீகுணம்-கக,

மூ. பூதேப்ய: என்றவை கடலோசையும் கழுத்துக்குமேலு மாகாமல் உபாயத்வம் கல்வெட்டாக்குகிற ஶரண்யன்

பூதேப்ய: - ஸமஸ்தப் ராணிகளுக்கும் பயமில்லாமையைக் கொடுக்கிறேனென்று தாமருளிச்செய்த தென்ன, என்றவை - என்கிற விவை, கடலோசையும் - கடலோசைபோலவும், கழுத்துக்கு மேலும் - மனஸ்ஸோடே சொல்லப்பட்ட தல்லாததும், ஆஹாமல் - ஆஹாதிருக்கும்படி, உபாயத்வம் - பலத்தோடவ்ய பிசாரேண சேர்ப்பிக்கையாவது, கல்வெட்டாக்குகிற - சிலாலிகிதமாம்படி பண்ணுகிற, ஶரண்யன் - (அநாலோசித விஶேஷாஶேஷலோக) ஶரண்யனு னஸர்வேஶ்வரன்,

பூதேப்ய:" என்றவை கடலோசையும் கழுத்துக்கு மேலுமாகாமலுபாயத்வம் கல்வெட்டாக்குகிற ஶரண்யன்) (௧) "ஏறுசேவகனுர்க்கென்னையுமுளளென்மின்களே" என்று, ஆர்த்தரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்கிறவனுக்கு ரக்ஷ்யவர்க்கத்திலே நானுமொருத்தி யுளளென்று சொல்லுங்கொளென்றும், (௨) "திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் வரங்கொள்பாதமல்லாலில்லையாவர்க்கும் வன்சரணே" என்று திருவிண்ணகரிலே நின்றருளினவன் திருவடிகளல்லது ஸர்வர்க்கும் வலியபுகலில்லையெனறும், (௩) "வன்சரண்சுரர்க்காய்" என்று, தேவர்களுக்கு வலியரக்ஷகனுயென்றும், (௪) "அடிக்கீழமர்ந்து புகுந்தடியீர்வாழ்மினென்றருள்கொடுக்கும்" என்று, நமக்கு ஶேஷபூதராயுள்ளாரெல்லாரும் நம்மடிகளின்கீழே அநந்யப்ரயோஜநராய்புகுந்துஜ்ஜீவியுங்கோளென்று தன்னருளைப் பண்ணுநிற்குமென்றுஞ் சொல்லுகிறபடியே, தன்னுடையக்ருபையாலே (௫) "సర్వలోకశరణ్యాయ రాఘవాయమహాత్మనే। నివేదయతమాంక్షిప్రం విభీషణముపస్థితమ్" "ஸர்வலோக ஶரண்யாயராகவாய மஹாத்மநே। நிவேதயதமாம்க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம்" என்று, வந்து ஶரணுகதனுன ஸ்ரீவிபீஷணுழ்வான் ஸர்வலோகஶரண்யனென்ற உக்தி। ஸமுத்ரகோஷம்போலே நிரர்த்தகமாகாதபடியாகவும், (௬) "సకృదేవప్రపన్నాయ తవాస్మీతిచయాచతే। అభయంసర్వభూతేభ్యో దదామ్యేతద్వ్రతమ్మమ" "ஸக்ருதேவப்ரபந்நாய தவாஸ்மீதிசயாசதே। அபயம் ஸர்வபூதேப்யோததாம்யேதத்வ்ருதம்மம" என்று ஶரணுகதரக்ஷணத்திலே தீக்ஷிதனுய் ஶரண்யனுனதான்சொன்ன உக்திகண்டாதுபரியாகாதபடியாகவும், (௭) "வானவர்கோனுெடும் நமன்றெழும் திருவேங்கடம்" என்றும், (௮) "எழுவார்விடைகொள்வாரீன்றுழாயானை வழுவாவகைநினைந்து வைகல்தொழுவார் வினைச்சுடரை நைந்துவைக்கும் வேங்கடம்" என்றும், (௯) "போதறிந்துவாநரங்கள்" (௧௦) "கண்டுவணங்குங்களிறு" என்றும், நித்யஸூரிகள் நித்ய

(௧) தி - வா ௬,- ௧. ௧௦. (௨) ஷை ௩ - ௭. (௩) ஷை ௮. (௪) ஷை ௧௦-௧௧. (௫) ஸ்ரீ-ரா-யு - ௧௭ - ௧௪. (௬) ஷை ௧௮-௩௩. (௭) தி-வா, ௩-௩-௭. (௮) தி-அ-௧ - ௨௬. (௯) ஷை ௨ - ௭௨. (௧௦) ஷை ௩ - ௭௦.

மூ. அஜ்ஞாநாஶக்தி யாதாத்ம்யஜ்ஞாநங்களளவாலன்றிக்கே யங்குற்றேனென்னுன் புணராயென்னும்படி மெய்யமர்

அஜ்ஞாந - (ஒன்றையிதமித்த மென்றுள்ளபடி அறிகைக்கீடான) ஜ்ஞானமில்லாமை, அஶக்தி - (அப்படியறிந்து அறிவுக்கீடாகவநுஷ்டிக்கைக்கீடான) ஶக்தியில்லாமை, யாதாத்ம்ய - (ஸ்வரூபத்தினுடைய) உண்மையாகிற (அநந்யார்ஹஶேஷத்வரூபததீயஶேஷத்வத்தினுடைய, ஜ்ஞாநங்களளவாலன்றிக்கே - ஜ்ஞாநம் (இவைகளினளவா லன்றிக்கே) அங்குற்றேன் - அங்குற்றேனல்லேனென்றும், எங்நான் - எங்நான்செய்கேனென்றும், புணராய் - புணராநின்ற மரமேழென்றும், என்னும்படி - இப்படிதம்வாயாலே பேசும்படி, மெய்யமர் - திருமேனியோடணைந்தாலல்லது தீரக்கடவதல்லாத பூர்ணமான,

ஸம்ஸாரிகள், ப்ரயோஜநாந்தரபரர், அநந்யப்ரயோஜநர், மநுஷ்யர் திர்யக்குகளென்கிறவாசியற ஆஶ்ரயிக்கலாம்படி ஸர்வஸமாஶ்ரயணீயனாய் நிற்கையாலே, தன்னுடைய உபாயத்வம் சிலாலிகிதமாம்படி திருமலையிலேயெழுந்தருளிநிற்கிற அநாலோசிதவிஶேஷாஶேஷலோகஶரண்யனான ஸர்வேஶ்வரன் (அஜ்ஞாநாஶக்தியாதாத்ம்யஜ்ஞாநங்களளவாலன்றிக்கே அங்குற்றேனென்னுன் புணராயென்னும்படி மெய்யமர்பக்திபூமாபலமாகவும் அநந்யகதித்வமுடையதமக்கு) (க) "అవిద్యాతో దేవే పరిభృఢతయా వా విదితయా స్వభక్తేర్భూమ్నా వా జగతి గతిమన్యామవిదుష్టాం గతిర్గమ్యశ్చాసౌ హరిరితి జితంత్వాహ్వయమనోరహస్యం వ్యాజహ్రే సఖలు భగవాఞ్ఛౌనక మునిః" "அவித்யாதோதேவேபரிப்ருடதயாவா விதிதயாஸ்வபக்தேர்பூம்நாவாஜகதி கதிமந்யாமவிதுஷாம் । கதிர்கம்யஶ்சாஸௌஹரிரிதிஜிதந்தாஹ்வயமநோரஹஸ்யம் வ்யாஜஹ்ரேஸகலுபகவாந் ஶௌநகமுநி:" ॥ என்கிறபடியே, உபாயாந்தரங்களையறியவும் அநுஷ்டிக்கவுமீடான ஜ்ஞாநஶக்திகளில்லாமையாலேயாதல், பகவதேகபரதந்த்ரமான ஸ்வரூபத்துக்கு தததேகோபாயத்வமொழிய தத்வ்யதிரிக்தோபாயாந்வயமாகாதென்று, (உ) "உன்னாலல்லால் யாவராலுமொன்றுங்குறைவேண்டேன்" என்னும்படியான ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநத்தாலேயாதல், அநந்யகதிகளாமளவன்றிக்கே (௩) "அங்குத்தேனல்லேனிங்குத்தேனல்லேனுன்னைக்காணுமவாவில்வீழ்ந்து நானெங்குத்தேனுமல்லேன்" (௪) "எங்நான்செய்கேன்" (௫) "பூவார்கழல்களருவினையேன் பொருந்துமாறு புணராய்" என்று, ஸாதநமநுஷ்டித்து முக்தப்ராயனாயிருக்கிறேனல்லேன். ஸாதநாநுஷ்டாநம்பண்ணுமவர்களிலே யொருவனாயிருக்கிறேனல்லேன். மேலும், ஸாதநாநுஷ்டாநம்பண்ணவொண்ணுதபடி உன்

(க) (உ) தி - வா - ௫ - அ - ௩. (௩) ஷை ௫ - எ - உ. (௪) ஷை ௫ - அ - ௩. (௫) ஷை ௬ - ௧௦ - ௬.

ரூ. பக்திபூமாபலமாகவும் அநந்யகதித்வமுடைய தமக்குப் பாதமேஶ ரணுக்கவவையேசேமங்கொண்டு ஏகசிந்தய ராய் திர்யக்குக்களையிட்டு ஸ்வாபிப்ராயத்தை நிவேதித்து

* பக்தி பூமா - பக்தியினதிஶயத்தினுடைய, பலமாகவும் - உத்தேஶ்ய மாகவும், அநந்யகதித்வமுடைய - கத்யந்தரராஹித்யத்தையுடையரான, தமக்கு - தமக்கு, பாதமேஶரணுக்க - தம்திருவடிகளையே உபாயமாகக் கொடுக்க, அவையே - அத்திருவடிகளையே, சேமங்கொண்டு - க்ஷேம மாகக்கொண்டு, ஏகசிந்தையராய் - (ஸர்வகாலத்திலும்) தததேகசித்த ராய், திர்யக்குகளையிட்டு-நாரை துடக்கமான திர்யக்குக்களாலே, ஸ்வ - தம்முடைய, அபிப்ராயத்தை-திருவுள்ளத்தை, நிவேதித்து-அறிவித்து,

ஸௌந்தர்யாதிகளிலே ஈடுபட்டுன்னைக் காணவேணுமென்னுமாசையா லே பலஹீனனுய்த்தளர்ந்து இனிஉபாயாநுஷ்டாநக்ஷமனல்லேன், உன் திருவடிகளைப் பெறுகைக்கென்னுல் செய்யலாவதொன்றில்லை. எனக்கும் செயலுக்குமென்னசேற்றியுண்டு. முன்பு, பரிக்லப்தமான உபாயங்க ளொன்றுமென்பக்கலில்லை. நிரதிஶய போக்யமானவுன்திருவடிகளை நான்கிட்டும்வழிகல்பிக்கவேணுமென்று சொல்லும்படி (க) "மைய மர்காதல்" என்று, அவன்ஸ்வரூபத்தையநுஸந்தித்தால் குணஜ்ஞா நத்தாலேயாதல் தரிக்கவொண்ணுதபடியாய் திருமேனியிலே அணைய வேண்டும்படியான காதலென்னும்படி கீழில்பத்தில், தமக்குப்பிறந்த பக்திபூமாவுண்டு பாரவஶ்யஜநகமான பக்த்யதிஶயம், அதினுடைய பலமாகவும், உபாயாந்தரத்துக்காளன்றிக்கே (உ) "களைகண்மற்றி லேன்" என்னும்படி, அநந்யகதித்வமுடையரான தமக்கு (பாதமே ஶரணுக்கவவையே சேமங்கொண்டேக சிந்தையராய்) (௩) "ஆறெ னக்குநின்பாதமேஶரணுகத்தந்தொழிந்தாய்" என்னும்படி, தன்திரு வடிகளையே ஸஹாயாந்தர நிரபேக்ஷஸாதநமாகக் காட்டிக்கொடுக்க, (ச) "கழல்களவையே ஶரணுகக்கொண்ட" என்றும், (ரு) "அடி மேல்சேமங்கொள் தென்குருகூர்ச்சடகோபன்" என்றும், (சு) "நாக ணைமிசைநம்பிரான் சரணேசரண்ணமக்கு நாடோறுமேகசிந்தையனுய்" என்றுஞ்சொல்லுகிறபடியே, விரோதிநிரஸநசீலனுனவவன்திருவடிகளை யே நிரபேக்ஷோபாயமாகக்கொண்டேகரூபமான வ்யவஸாயத்தை யுடையராய் (திர்யக்குக்களை யிட்டுஸ்வாபிப்ராயத்தை நிவேதித்து) (எ) "வைகல்பூங்கழிவாய்வந்துமேயுங்குருகினங்காள் கனிவாய்ப் "பெருமானைக்கண்டு வினையாட்டியேன் காதன்மை" "கைகள்கூப் பிச்சொல்லீர்" என்றுதுடங்கி, (அ) "ஏறுசேவகனுர்க்கென்னையு முளளென்மின்கள்" என்னுமதளவாகப்பெற்றன்றித்தறியாதவதிமாத்ர ப்ராவண்ய முண்டாயிருக்கவும், ஸ்வரக்ஷணேஸ்வாந்வயத்தை ஸகி யாத ஸ்வரூபபாரதந்த்ர்யத்தாலே தததேகரக்ஷ்யத்வவ்யவஸாயஸஹி தராயிருக்கிற தம்முடைய கருத்தை (கூ) "𑌉𑌪𑌾𑌯𑌮𑍇𑌵𑌪𑌕𑍍𑌷𑌾𑌪𑍍𑌯𑌾𑌮𑍍" "உபாய்யாமேவபக்ஷாப்யாம்" என்கிறபடியே, ஜ்ஞாநாநுஷ்டாநரூபபக்ஷ

(க) தி-வா. சு - அ - உ. (உ) ஷை ரு-அ-அ. (௩) ஷை எ-க0. (ச) ஷை ரு-அ- கக. (ரு) ஷை கூ-கக. (சு) ஷை க0-கக. (எ) ஷை சு - க-க. (அ) ஷை சு-க-க. (கூ)

* ஸமாஸத்தில், பக்திபூமபலம், என்னவேண்டும், பூமாபலமென்கிறவிது, பா டஸ்கலநத்தாலே வந்ததா மித்தனை.

மூ. விளம்பரோஷ முபாயத்தாலேயழிய உருகாமல் வரித்ததும் நண்ணி வணங்கப் பலித்தவாறே ஸப்ரகாரமாக ஸக்ருத்கரணீயமென்று

விளம்ப - விளம்பத்தாலே யுண்டான, ரோஷம் - ரோஷம், உபாயத்தாலே - (அவனுடைய விக்ரஹவைலக்ஷண்யமாகிற) உபாயத்தாலே, அழிய - அழிந்துபோக, உருகாமல் - உருகாமலிருந்து (அநுபவிக்கவேணுமென்று), வரித்ததும் - (அவனையே உபாயமாக) வரித்ததுவும், நண்ணி - கிட்டி, வணங்க - அநுபவிக்க, பலித்தவாறே - பலபர்யந்தமானவாறே, ஸப்ரகாரமாக - ப்ரகாரத்தோடேகூடினதாம்படி, ஸக்ருத் - ஒருக்கால், கரணீயமென்று - பண்ணவேணுமென்றுபார்த்து,

த்வயயோகத்தாலே ப்ராப்யமான பகவத்விஷயத்தை சீக்ரமாகப்ராபிக்கைக்கீடான யோக்யதையுடையரான கடகரையிட்டறிவித்து (விளம்ப ரோஷமுபாயத்தாலேயழிய) இப்படியறிவித்தவளவிலும், அவன்வரவு தாழ்கையாலுண்டான ப்ரணயரோஷத்தாலே வந்துமேல்விழுந்தவளவிலும் (க) "போகுநம்பி" (உ) "கழகமேறேல் நம்பி" என்றுபேக்ஷித்து, அவன்முகம்பாராமலிருப்போமென்று சிற்றிலிழைப்பது, சிறுசோறடுவதாக அதுதன்னுடைய போகவிரோதியாகையாலே (௩) "அழித்தாயுன்திருவடியால்" என்கிறபடியே, அவனந்தவநாதராங்யபரதைகளைதனக்கும்சரமோபாயமான திருவடிகளாலே உபலக்ஷிதமான விக்ரஹத்தினுடையவைலக்ஷண்யத்தாலேகுலைக்க, அவனோடேபொருந்தி (உருகாமல்வரித்ததும் நண்ணி வணங்கபலித்தவாறே) பிறந்தவாற்றிலே யவதாராநுபவம்பெறுதவிழவாலே தத்குணசேஷ்டிதங்களை யநுஸந்தித்தாகிலும் தரிப்போமென்றிழிந்தவளவில் (௪) "நிறந்தனூடுபுக்கெனதாவியை நின்று நின்றுருக்கியுண்கின்ற" (௫) "பையவேநிலையும் வந்தெந்நெஞ்சையுருக்குங்கள்" (௬) "உள்ளமுள்குடைந்தென்னுயிரையுருக்கியுண்ணும்" (௭) "ஊடுபுக்கெனதாவியை யுருக்கியுண்டிடுகின்ற" என்னும்படி, அவைமிகவும் சைதில்யஹேதுவாகையாலே தரித்துநின்றநுபவிக்கவல்லேனும்படிபண்ணியருளவேணுமென்று அவனையுபாயமாகவரித்ததும், (௮) "குரவையாய்ச்சியரிலே" (௯) "என்னகுறைவெனக்கே" என்றுதுடங்கி, (௧0) "நண்ணிநான் வணங்கப்பெற்றேனெனக்கார்பிறர்நாயகர்" என்று, ப்ரீதிபூர்வகமாக அவதாரகுணசேஷ்டிதங்களை ஸர்வகாலமும் முறையிலேகிட்டி யநுபவிக்கப் பெற்றவெனக்கு ஆர்தாங்நியாமகரென்று கர்விக்கும்படி பலித்தவாறே (ஸப்ரகாரமாக ஸக்ருத்கரணீயமென்று) இதரோபாயத்யாக பூர்வகத்வமாகிற ப்ரகாரத்தோடே ஸித்தோபாயவரணம் (௧௧) "ஸக்ருதேவ" "ஸக்ருதேவ" என்கி

(க) தி - வா. ௬ - உ - உ. (உ) ஷை ௬. (௩) ஷை ௯. (௪) ஷை ௫ - ௧0 - க. (௫) ஷை ௩. (௬) ஷை ௧0-௪. (௭) ஷை - க. (௮) ஷை ௭ - ௫ - க. (௯) ஷை. (௧0) ஷை ௧0. (௧௧) ஸ்ரீ - ரா. யு ௧௮-௩௩.

மூ. புராணபௌராணிகர் த்யாஜ்யாம்ஶமாக்கின சிதசித்ப்ரா ப்ய ப்ராபகாபாஸங்களைக்

புராண - பவிஷ்யத்புராணவசநம், பௌராணிகர் - புராணவித்தமரான பாஷ்யகாரர், (இவர்களாலே) த்யாஜ்யாம்ஶமாக்கின - விடத்தக்கதாகப்பண்ணப்பட்ட, சித் - சித்வஸ்துக்களாயும், அசித் - அசித்வஸ்துக்களாயுமுள்ள, ப்ராப்யப்ராபகாபாஸங்களை-தாரபுத்ராதிரூபமான ஆபாஸ ப்ராப்யங்களையும்,

கிறபடியே, ப்ராப்திக்காகவு மொருக்கால் பண்ணவேணுமென்று பார்த்து (புராண பௌராணிகர்த்யாஜ்யாம்ஶமாக்கினசிதசித்ப்ராப்யப்ராபகாபாஸங்களை) (க) "పితరంమాతరన్దారాన్ పుత్రాన్బన్ధూన్సఖీన్గురూన్।రత్నానిధనధాన్యాని క్షేత్రాణిచగృహాణిచ। సర్వధర్మాంశ్చసన్త్యజ్య సర్వకామాంశ్చసాక్షరాన్। లోకవిక్రాన్తచరణౌశరణంతేవ్రజంవిభో" "பிதரம்மாதரம் தாராங்புத்ராங் பந்தூங்ஸகீங்குரூங் । ரத்நாநிதநதாந்யாநிக்ஷேத்ராணிசக்ருஹாணிச । ஸர்வதர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஶ்ச ஸாக்ஷராங் । லோகவிக்ராந்த சரணௌசரணந்தேவ்ரஜம் விபோ" என்கிற வசநம், (உ) "ఆగ్నేయమష్టమఞ్చైవ భవిష్యన్నవమంస్మృతమ్" "ஆக்நேயமஷ்டமஞ்சைவபவிஷ்யந்நவமம் ஸ்ம்ருதம்" என்கிறபடியே, அஷ்டாதஶபுராணத்திலும்வைத்துக்கொண்டு ஒன்பதாம்புராணமாகச் சொல்லப்பட்ட பவிஷ்யத்புராணஸித்தமாகையாலும், புராணவித்தமராகையாலே பௌராணிகரான பாஷ்யகாரர் கத்யத்திலே இவ்வசந ப்ரக்ரியையாலே த்யாஜ்யங்களினுடைய த்யாகபூர்வகமான ஶரணவரணத்தைப் பண்ணுகையாலும், (புராண பௌராணிகர் த்யாஜ்யாம்ஶமாக்கின) என்கிறது. இங்கனன்றிக்கே, இவ்வர்த்தம் புராணஸித்தமாகையாலும் அதுதான் புராதந புருஷாநுஷ்டாநரூபமாகச் சொல்லப்படுகையாலும் இவை யிரண்டையும்பற்ற (புராணபௌராணிகர் த்யாஜ்யாம்ஶமாக்கின) என்றருளிச்செய்தாராகவுமாம். ஆகவிப்படி புராணமும், பௌராணிகரும் பிதரம் மாதரம் என்றுதுடங்கி "ஸாக்ஷராங்" என்னு மதளவாக "ஸந்த்யஜ்ய" என்கிற விதுக்குகர்மீபவிக்கையாலே வக்ஷ்யமாண ஸித்தோபாயவரணத்துக்கு அங்கமாகத்யஜிக்கப்படுமெம்ஶமாக்கின சித்வஸ்துக்களுமசித்வஸ்துக்களுமாயுள்ளப்ராப்யாபாஸங்களையும் ப்ராபகாபாஸங்களையும், இதில் "ஸர்வ தர்மாம்ஶ்ச" என்கிறவிதுக்கு, கீழுபாயாந்தரஸஹகாரியுமாய் ஸ்வ ப்ரயோஜநமாகையாலே உபேயமுமாய், இரண்டுக்கும் பொதுவாயிருந்துள்ளவற்றைச் சொல்லுகிறது. எங்ஙனேயென்னில் (ங) "మాతృదేవోభవ। పితృదేవోభవ" "மாத்ருதேவோபவ । பித்ருதேவோபவ" என்றுகொண்டு ஈஶ்வரனுபாதி மாதாபித்ரநுவர்த்தநத்தையும் உபாஸநாங்கமாகஶாஸ்த்ரம் விதிக்கையாலே, மாதாபிதாக்களுபாயாந்தர ஸஹகாரிகளுமாய்

(க) ஶரணாகதிகத்யம். (உ) (ங) தை - உ - சி.

மூ. கைவலிந்து

கைவலிந்து - கைவிட்டு,

அவ்வளவன்றியே இவர்களுடைய வியோகமஸஹ்யமா யிருக்கையா லே ஸ்வயம்ப்ரயோஜநமுமாயிருப்பர்கள். ஸ்திரீயும், ஸஹதர்மசாரிணி யாயிருக்கையாலே உபாயாந்தரஸஹகாரியுமாய் அபிமதையுமாகையா லேஉபேயபூதையுமாயிருக்கும்புத்ரனும், "புந்நாம்நோநரகாத்ராயதயிதி புத்ரஃ" என்கிறபடியே, நரகதர்ஶநத்துக்கடியான பாபவிமோசந ஹேதுவாகிற முகத்தாலே உபாயாந்தரஸஹகாரியுமாய் தன்னுடைய வியோகமஸஹ்யமாம்படி யிருக்கையாலே யுபேயமுமாயிருக்கும். பந்து க்கள் இவன் குடிப்பழியாக வர்த்தியாதபடி நியமித்து நல்வழியே நடத் துமவர்களாகையாலே உபாயாந்ரஸஹகாரிகளுமாய்ப்பெருங்குடிப்பாட் டத்தே பிறந்தோமென்கிற செருக்காலே உபேயபூதருமாயிருப்பர்கள். தோழனும், இவனுக்குஹிதைஷியாய் ஹிதத்தையே ப்ரவர்த்திப்பிக்கை யாலே உபாயாந்தரஸஹகாரியுமாய் அபிமதனுமாயிருக்கையாலே உபே யமுமாயிருக்கும் குருக்களாகிறார். உபாயாந்தரங்களை யுபதேசித்துப் போருகையாலே, உபாயாந்தர ஸஹகாரிகளுமாய், உபகாரகராகையா லே, உபேயபூதருமா யிருப்பர்கள். ரத்நங்கள் உபாயாந்தரங்களுக் கும் இதிகர்த்தவ்யதயாஸஹகாரமுமாய் மேற்சொல்லுகிறவற்றை யழி யமாறி ஸ்வீகரிக்கப்படுமவையாகையாலே உபேயமுமாயிருக்கும். தந தாந்யங்களும், க்ஷேத்ரங்களும் அப்படியே; க்ருஹங்கள்வாஸஸ்தாந மாகிற முகத்தாலே உபாயாந்தர ஸஹகாரமுமாய் மாடமாளிகை யாக வெடுக்கும்படியான அபிமதத்வத்தாலே உபேயமுமாயிருக்கும். மேல், "ஸர்வதர்மாம்ஶ்ச, இத்யாதியாலே ஸாக்ஷாதுபாயாந்தரங்களை யும் உபேயாந்தரங்களையும் சொல்லுகிறது. அதில் 'ஸர்வதர்மாம்ஶ்ச' என்று கர்மயோகாத்யுபாயங்களைச் சொல்லுகிறது. 'ஸர்வகாமாம்ஶ்ச' என்று, ஐஹிகபாரலௌகிகைஶ்வர்ய விஶேஷங்களைச் சொல்லுகிறது. "ஸாக்ஷராந்" என்று, அக்ஷரஶப்தவாச்யமான கைவல்யத்தையும், அவ் வோபாதித்யாஜ்யமென்கிறது. ஆக, இப்படி, உபாயத்வேநவுமுபேயத் வேநவும் வ்யவஸ்திதங்களன்றிக்கே கீழ்ச்சொன்னபடியே, உபாயாந்தர ஸஹகாரித்வத்தாலும் அபிமதத்வாதிகளாலுமுண்டான ப்ராப்யப்ராபக பாவங்களையுடைய மாதாபித்ராதிகளும், ரத்நதநதாந்யாதிகளுமானவற் றை சிதசித்ப்ராப்யப்ராபகாபாஸங்களென்கிறது. அதவா "ஸர்வதர்மாம் ஶ்ச" இத்யாதிகள்தானும் பரமப்யப்ராபகங்களைப்பற்ற ஆபாஸங்களா கையாலே அவைதன்னையுங்கூட்டிக்கொண்டு சொல்லவுமாம். (கைவலி ந்து) இத்யாதிகளுக்கநுகுணமாகவொதுக்குகிறதிறேயுள்ளது. மேற்சொ ல்லுகிற வரணத்துக்கங்கமான த்யாகம், உபாயவிரோதிகளான ஸர்வத் தையும் விஷயமாகவுண்டத்தாகையாலே (கைவலிந்து) இத்யாதிகளால்

மூ. கைகழலக்கண்டு மெல்லாங்கிடக்க நினையாதகன்றும் ஆளீர் மேவீரூதீரென்று ததீயஶேஷமாக்கியும் புறத்திட்டுக் காட்டியென்று ப்ரஸங்கிக்கில் முடியும்படிவிட்டு

கைகழலக்கண்டும் - (ஶங்குகளானவை) கையைவிட்டுக் கழலக்கண்டு வைத்தும், எல்லாங்கிடக்க - இதெல்லாமிருக்கச்செய்தே, நினையாது - (எம்மை) நினையாமல், அகன்றும்-பிரிந்துபோயும், ஆளீர் - (தேஜோமயமான விபூதியையெல்லாம்) ஆளக்கடவீர், மேவீர்-(நித்யமாகப்பாலோடுகூடபுஜிக்கக்கடவீர், ஊதீர் - ஒளிமாமலரை பாநம்பண்ணக்கடவீர், என்று - இப்புடைகளாலே, ததீயஶேஷமாக்கியும் - பாகவதருக்குயதேச்சாவிநியோகமாம்படி பண்ணியும், புறத்திட்டு-என்னைபாஹ்யவிஷயங்களிலே யகப்படும்படிபண்ணி, காட்டி - பாஹ்யவிஷயங்களைக்காட்டி முடிப்பாயோ, என்று - இப்படி, ப்ரஸங்கிக்கில் - ப்ரஸங்கத்தில், முடியும்படிவிட்டு - முடியும்படி பீதராயவற்றைவிட்டு,

சொன்னவைத்யாஜ்யமான ஸர்வத்துக்கு முபலக்ஷணமிறே. அப்படியானுலிறே ஸர்வப்ரகாரமாகஸத்க்ருத்கரணீயமென்றதுக்குச்சேருவது. ஆக இப்படியிருந்துள்ள (சிதசித்பராப்ய ப்ராபகாபாஸங்களைக்கைவலிந்தும் கைகழலக்கண்டுமெல்லாங்கிடக்கநினையாதகன்றும்) (௧) "நம்மைக்கைவலிந்து" (௨) "இழந்ததுசங்கே" (௩) "ஈதெல்லாம்கிடக்க வினிப்போய்" (௪) "எம்மையொன்றும் நினைத்திலளே" (௫) "இன்றெனக்குதவாதகன்ற" என்று, சிதசித்வர்க்கமான விவற்றைக்கைவிட்டு, உறங்குவான்கைப்பண்டம்போலே, பகவத்ப்ரேமபாரவஶ்யத்தாலேதன்னடையேதன்கையில்நின்றும் நெகிழ்ந்துபோகக்கண்டும், (௬) "ஸர்வபோகாந்பரித்யஜ்ய" "ஸர்வபோகாங்பரித்யஜ்ய" என்கிறபடியே, இவற்றையொன்ருக நினையாமல் உபேக்ஷித்தகன்றுபோயும் (ஆளீர்மேவீரூதீரென்றுததீயஶேஷமாக்கியும்) இதில் ததீயருக்கு போக்யமாக ஸமர்ப்பிக்கத்தக்கவற்றை (௭) "பொன்னுலகாளீரோபுவனமுழுதாளீரோ" (௮) "நெய்யமரின்னடிசில் நிச்சல்பாலொடுமேவீரோ" (௯) "ஓடிவந்தென்குழல்மேலொளிமாமலரூதிரோ" என்று, தமக்குபாதேயமான பரமபதத்தோடொக்க கடகர்க்குபரிசிலாகஸமர்ப்பித்தும், (புறத்திட்டுக்காட்டி யென்று ப்ரஸங்கிக்கில் முடியும்படிவிட்டு) (௧௦) "என்னைபுறத்திட்டின்னும் கெடுப்பாயோ" என்றும் உனக்கசலாம்படி விஷயங்களிலென்னைத்தள்ளி இன்னம்கெடுக்கப்பார்க்கிருயோ வென்று (௧௧) "பல நீகாட்டிப்படுப்பாயோ" என்று, நாட்டார் காணும் விடில் பிழையோமென்கிற விஷயங்கள், தமக்குக்காணில், முடிவனென்னும்படி அத்யந்தாஸஹ்யமாயிருக்கையாலே விஷயங்களைக்காட்டி, என்னையும் முடிக்கப்பார்க்கிருயோவென்னுஞ்சொல்லுகையாலே அவற்றின் ப்ரஸங்கத்திலே, ஏங்கி மூச்சடங்கும்படிபீதராய் அவற்றைவிட்டு

(௧) தி - வா - ௬ - ௫ - ௭. (௨) ஷை ௬. ௧. (௩) ஷை ௭ - ௯. (௪) ஷை (௫) ஷை ௬. (௬) ஸ்ரீஶரணாகதிகத்யம். (௭) ஷை ௮ - ௧. (௮) ஷை ௨. (௯) ஷை ௩. (௧௦) ஷை ௯ - ௮. (௧௧) ஷை ௯.

மூ. தந்தைதாயுண்ணுஞ்சோறு மாநிதிபூவையாவையு மொன்றேயாக்கித் தளர்வேனே திரிவேனே குறுகாதோ முதல்வாவோ வென்னுமார்த்தி யோடே

தந்தை தாய் - தாயாகவும் தகப்பனாகவும், உண்ணுஞ்சோறு - தாரக போஷக போக்யங்களாகவும், மாநிதி - வைத்தமாநிதியாகவும், பூவை - (பூவை பைங்கிளிகளித்யாதிப்படியே ஸமஸ்த லீலோபகரணங்களாகவும், யாவையும் - கீழ்ச்சொன்னஸமஸ்தங்களும், ஒன்றேயாக்கி - ஸர்வஸ்மாத்பரனான வெம்பெருமானொருவனையேயாகப்பண்ணி, தளர்வேனே - இன்னமும் தளரக்கடவேனோ, திரிவேனே - (மெழுகுபோலே) திரியக்கடவேனோ, குறுகாதோ - (என்னையருளப்பாடிடுங்காலமின்னம்) அணித்தாகாதோ, முதல்வாவோ-(யமளார் ஜுநங்களிநடுவேபோன) ஜகத்காரணபூதனே! (உன் திருவடிகளையடையிவதென்றோ) என்னுமார்த்தியோடே-இப்புடையிலே சொல்லப்பட்ட விஷாதாதிஶயத்தோடே,

(தந்தைதாயுண்ணுஞ் சோறுமானிதி பூவையாவையுமொன்றேயாக்கி) (௧) "త్వమేవమాతాచపితాత్వమేవ త్వమేవబన్ధుశ్చగురు స్త్వమేవ।త్వమేవవిద్యాద్రవిణంత్వమేవత్వమేవసర్వంమమదేవదేవ" "த்வமேவமாதாசபிதா த்வமேவ த்வமேவபந்துஶ்சகுருஸ்த்வமேவ। த்வமேவவித்யாத்ரவிணம் த்வமேவவத்வமேவ ஸர்வம்மமதேவதேவ" என்கிறபடியே (௨) "தேவபிரானையேதந்தைதாயென்றடைந்த" என்றும், அயர்வறுமமரர்களதிபதியே மாதாபித்ராதிஸர்வவிதபந்துவென்றும் (௩) "உண்ணுஞ்சோறு பருகுநீர்தின்னும்வெத்திலையெல்லாங்கண்ணன்" என்று, தாரக போஷக போக்யங்களெல்லாம் ஸர்வ ஸுலபனான க்ருஷ்ணனே யென்றும், (௪) "வைத்தமாநிதியாம் மதுசூதனையே" என்று, ஆபத்ரக்ஷகமாகச்சேமித்துவைத்த அக்ஷயமான நிதியுமவனேயென்றும், (௫) "பூவைபைங்கிளிகள்பந்து தூதைபூம் புட்டில்கள்யாவையும் திருமால் திருநாமங்களே கூவியெழும்" என்று, லீலோபகரணங்களால் பிறக்கும் ரஸமெல்லாம் ஸ்ரீயஃபதியினுடைய திருநாமங்களைச்சொல்லவேயுண்டாகாநிற்குமென்றும், இப்படி கீழ்விட்டிவையெல்லாம்பற்றுகிற விஷயமொன்றுமேயாகநினைத்து (தளர்வேனே திரிவேனே குறுகாதோ முதல்வாவோவென்னுமார்த்தியோடே) (௬) "கோலத்திருமாமகளோடுன்னைக்கூடாதே சாலப்பலநாளடியேனின்னம் தளர்வேனோ" (௭) "தீயோடுடன்சேர்மெழுகாயுலகில் திரிவேனோ" (௮) "கூவிக்கொள்ளுங்காலமின்னம் குறுகாதோ" (௯) "புணரேய்நின்றமரமிரண்டிநடுவேபோன முதல்வாவோ" என்று, ஜகத்துக்கு ஸர்வப்ரகாரரக்ஷகனாய் (௧௦) "శ్రియాసార్థమ్" "ஶ்ரியாஸார்த்தம்" என்கிறபடியே," பெரியபிராட்டியாரோடேகூடியெழுந்தருளியிருக்கிற வுன்

(௧) கத்யம். (௨) தி-வா. ௬-௫-௧௧. (௩) ஷை ௭-௧. (௪) ஷை ௧௧. (௫) ஷை ௩. (௬) ஷை ௯-௩. (௭) ஷை ௯-௬. (௮) ஷை ௯. (௯) ஷை ௧௦-௫. (௧௦) சைவபுராணம்.

மூ. த்ருவிக்ரமனுய் குறள்கோலப் பிரானுயடியை மூன்றையிரந் தவன்கள்வன்கண்முகப்பேயகல் கொள்திசைவையம்விண் ணுந்தடவந்த தடந்தாமரைகளை

திருவிக்ரமனுய் - திருவிக்ரமனென்று மூன்றடியிரப்பாளனுய், குறள் கோலப்பிரானுய் - வாமந ப்ரும்ஹசாரி வேஷதாரியாய், அடியை மூன் றையிரந்த - மூன்றடிவேண்டுமென்றர்த்தித்த, வன்கள்வன் - தன்விநீத வேஷத்தைக்காட்டி மஹாபலியைவசீகரித்த வஞ்சகன், கண்முகப்பே- எல்லார் முன்னிலும், அகல்கொள் - வைஶால்யமுடைய, திசை - திகு பலக்ஷிதமான, வையம் - லீலாவிபூதியையும், விண்ணும் - மேலுலகங் களையும், தடவந்த - திருவடிகளாலே தடவின, தடந்தாமரைகளை - தாவிவையங்கொண்ட தடந்தாமரைகளான,

னைக்கிட்டப்பெருதே, ஸம்ஸாரத்திலேயிருந்து இன்னமெத்தனைகாலமி ப்படி அவஸந்நனுகக்கடவேன், த்ருவிக்ரமாபதாநமுகத்தாலே நீயேவந் தெல்லார்தலையிலும் திருவடிகளைவைத்த வுன்னைக்காண வாசைப்பட்டுக் கிடையாமையாலே அக்நிஸகாஶத்தில் மெழுகுபோலே ஜீவிக்கவும்பெ ருதே, முடியவும்பெருதே, ஸம்ஸாரத்திலிப்படி திரியக்கடவேனே? ஸர்வஸுலபமாய் நிரதிஶயபோக்யமான திருவடிகளிலே என்னையரு ளப்பாடிடுங் காலமின்னமணித்தாகாதோ? விரோதிகளின்கையிலகப் படாதே ஜகத்துக்கு வேர்ப்பற்றுன உன்னை நோக்கித்தந்தவனே மாந ஸாநுபவமாத்ரமன்றிக்கே யுன்திருவடிகளை ப்ரத்யக்ஷமாகக்கிட்டுவதெ ன்றேவென்கிற வார்த்தியோடே (த்ருவிக்ரமனுய்குறள் கோலப்பிரா னுயடியே மூன்றையிரந்தவன் கள்வன்கண்முகப்பேயகல்கொள் திசை வையம் விண்ணும்தடவந்த தடந்தாமரைகளை) (க) "[Grantha] [Grantha]" "லோகவிக்ராந்தசரணௌ ஶரணந்தேவ்ரஜம்வி போத என்று, வஸிஷ்டசண்டால விபாக மறவரையாதே திருவடி களை வைக்கையாலே ஸௌசீல்யமும், உறங்குகிற ப்ரஜையின்முது கைக்கட்டிக்கொண்டு கிடக்கும்பாதாவைப்போலே விமுகரானர் தலை யிலும் திருவடிகளைவைக்கையாலே வாத்ஸல்யமும், அவதரித்து முன் னேநின்று கார்யம்செய்கையாலே ஸௌலப்யமும், தே, என்கையாலே, தன் பேருகச்செய்கைக்குறுப்பான ஸ்வாமித்வமும், 'விபோ' என்கை யாலே, ஜ்ஞாநஶக்த்யாதிகுணபூர்த்தியும் சொல்லுகையாலே, த்ருவிக் ரமாபதாநத்திலே ஆஶ்ரயணோபயோகியாயும் கார்யோப யோகியாயு முள்ள குணங்களெல்லாம் ப்ரகாசிக்கையாலே (உ) "தெய்வநாயகன் நாரணன் திருவிக்கிரமன்" (௩) "மாண்குறள் கோலப்பிரான்" (௪) "அடியைமூன்றையிரந்தவாறும்" (௫) "மின்கொள்சேர்ப்புரி நூல் குறளாய கல்ஞாலங்கொண்டவன்கள்வன்" என்று, ஸர்வேஶ்வரனுய்

(க) கத்யம். (உ) தி - வா - ௫ - எ, கக. (௩) ஷை ௯ - ௬. (௪) ஷை ௧0, ௯. (௫) ஷை ௬. க. கக.

மூ. யிணைத்தாமரைகள்காண இமையோரும் வரும்படிசென்று சேர்ந்துலகத்திலதத்தே கண்டகலகில்லேனென்று பூர்வ வாக்ய மநுஸந்தித்தவர்

இணைத்தாமரைகள் - அந்யோந்யஸத்ருஶமாய் நிரதிஶய போக்யமான வுன்திருவடிகளை, காண - ஸாக்ஷாத்கரிக்கைக்காக, இமையோரும் - நித்யஸூரிகளும், வரும்படி - இங்கே ஸந்நிதிபண்ணும்படி, சென்று சேர்ந்த - (ஸர்வ ஸ்மாத்பரனன ஸர்வேஶ்வரன் தனக்கோரிருப்பிடமரிதாய்) வந்துசேர்ந்த, உலகத்திலதத்தே - (லீலாவிபூதிக்குத் திலகம் போன்ற திருமலையிலே) கண்டு - ஸாக்ஷாத்கரித்து, அகலகில்லேனென்று - அகலகில்லேனிறையுமென்றலர்மேல்மங்கையுரைமார்பா! என்று, பூர்வ வாக்யமநுஸந்தித்தவர் - த்வயத்தில் பூர்வவாக்யார்த்தத்தை அடிக்கீழமர்ந்துபுகுந்தேனென்றநுஸந்தித்தவர்,

ஆஶ்ரிதவத்ஸலனன தான் த்ருவிக்கிரமாபதாநம் பண்ணுகைக்காக பெருவிலையனனவழகைச் சிறுங்கித்தநுபவிக்கலாம்படி வாமநவேஷத்தை பரிக்ரஹித்துக்கொண்டு மஹாபலியஜ்ஞவாடத்திலேசென்று (௧) "மூன்றடி" என்றிரந்துதான் சொன்னபடியே, அவன்செய்யும்படி விநீதமாய் ஆகர்ஷகமான வடிவைக்காட்டிவசீகரித்து நின்றமஹாவஞ்சகன் (௨) "காண்மின்களுலகீரென்று கண்முகப்பேநிமிர்ந்த" என்று, நோக்குவித்யேகாட்டுவாரைப்போலே இதோராஶ்சர்யம் பாருங்கோளென்று லௌகிகரெல்லாருடையவும் கண்ணெதிரே, (௩) "அகல்கொள்வையமளந்தமாயன்" (௪) "திசைஞாலம் தாவியளந்ததும்" (௫) "வையமளந்தமணாளர்" "மண்ணும்விண்ணுங்கொண்ட மாயவம்மான்" (௬) "ஓரடியாலெல்லாவுலகும் நடவந்த" (௭) "தாவிவையங்கொண்ட தடந்தாமரைகள்" என்று, விஸ்த்ருதமாய், திக்குக்களோடேகூடின பூமியையும், உபரிதனலோகங்களையும், தென்றலுலாவினாப்போலேஸுகரமாம்படி, எங்குமொக்கப்பரப்பியளந்து கொண்ட ஸர்வஸுலபனுய் நிரதிஶயபோக்கியமான திருவடிகளை (இணைத்தாமரைகள்காண விமையோரும் வரும்படிசென்று சேர்ந்தஉலகத்திலதத்தேகண்டு) (௮) "என்றுகொல் நாம்மண்ணளந்தவிணைத்தாமரைகள் காண்பதற்கு" என்றித்யாதிப்படியே, திருவுலகளந்தருளின ஸர்வஸுலபமாய் நிரதிஶய போக்யமாய் சேர்த்தியழகையுமுடைத்தான திருவடிகளை நாம்காண்பதெப்போதோவென்று நித்யஸூரிகளு மநுபவிக்கவாசைப்பட்டு வரும்படி (௯) "அன்றுஞாலமளந்தபிரான்பரன்சென்று சேர்திருவேங்கடமாமலை" என்று, திருவுலகளந்தருளிந செயலாலே ப்ரகாசிக்கிரஸர்வஸ்மாத் பரத்வத்தையுடையவன், அந்த ஶ்ரமந்தீர விடாயர்மடுவிலே சேருமாப்போலேயுகந்து நிற்கிற (௧௦) "திலதமுலகுக்காய் நின்ற திருவேங்கடம்" என்று, லோகத்துக்கு முக்யாபரணமான திருமலையிலேகண்டு. (அகலகில்லேன் என்று, பூர்வவாக்யமநுஸந்தித்தவர்.) (௧௧) "அகலகில்லே

(௧) தி-வ்ா. ௫. ௧௦. ௯. (௨) தி-வா. ௬ - ௩-௧௧. (௩) ஷை ௪. ௬. (௪) ஷை ௫. ௩. (௫) ஷை. ௬. ௧. ௧. (௬) ஷை ௯. ௬. (௭) ஷை ௯.. (௮) ஷை ௧௦. ௬. (௯) ஷை ௩. ௩. ௮. (௧௦) ஷை ௬. ௧௦. ௧. (௧௧) ஷை ௧௦,

மூ. பிணக்கறத் தொடங்கி வேதப்புனித விறுதிசொன்னஸாத்யோபாய ஶ்ரவணஸஶோகஸ ஜாதீயர்க்குத்தந்தனன் மற்றோர்களைக ணிலம்புகுந்தேனென்று ஸ்வஸித்தோபாய நிஷ்டையை உக்த்யநுஷ்டாநங்களாலே

பிணக்கறத்துடங்கி - பிணக்கறவென்கிறபாட்டிலே, வணக்குடைத்தவனெறியென்றுபக்ரமித்து, வேதப்புனிதவிருதி - வேதப்புனிதவிருக்கை நாவில் கொண்டென்னுமளவும், சொன்ன - ப்ரதிபாதித்த, ஸாத்யோபாய - ஸாதந ஸாத்யங்களினுடைய, ஶ்ரவண-கேள்வியாலே, ஸஶோக-ஶோகத்தோடு கூடின, ஸஜாதீயர்க்கு - தம்மொடு ஸஜாதீயரானவர்களுக்கு, தந்தனன் - தந்தனன், (தனதாள் நிழலேயென்றும்) மற்றோர்களைகணிலம் - மற்றொருரக்ஷகங் காணவல்லிகொளோவென்றும், புகுந்தேன் - உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனென்றும், என்று, இப்புடைகளிலே, ஸ்வஸித்தோபாயநிஷ்டையை - தம்முடைய வெம்பெருமானே உபாயமென்கிற வத்யவஸாய விஶேஷயுக்ததையை, உக்த்யநுஷ்டாநங்களாலே - தமதுக்தியாலும் அநுஷ்டாநத்தாலும்,

ணிரையுமென்றலர்மேல்மங்கையுரைமார்பா" என்று, புருஷகாரபூதையான பெரியபிராட்டியாரை முன்னிட்டு (க) "நிகரில்புகழாய்" என்று துடங்கி, (உ) "திருவேங்கடத்தானே" என்னுமதளவாக வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யமாகிறகுணங்களை யடையவே யநுஸந்தித்துக்கொண்டு (௩) "புகலொன்றில்லா" என்றும், (௪) "அடியேன்" என்றும், தம்முடைய ஆகிஞ்சந்ய அநந்யகதித்வபுரஸ்ஸரமாக "உன்னடிக்கீழ்" என்று, "சரணே" என்கிற திருவடிகளையும், (௫) "அமர்ந்துபுகுந்தேன்" என்று, (௬) ஶரணம்ப்ரபத்யே" என்கிற வர்த்தத்தையும், அநுஸந்தித்தருளுகையாலே பூர்வவாக்யப்ரக்ரியையாலே பூர்ணப்ரபத நம்பண்ணினவர் (பிணக்கறத்துடங்கி வேதப்புனித விறுதிசொன்னஸாத்யோபாயஶ்ரவண ஸஶோகஸஜாதீயர்க்கு) பத்துடையடியவரில் (எ) "பிணக்கறவறுவகைச்சமயமும்" என்கிற பாட்டிலே (அ) "வணக்குடைத்தவ னெறிவழிநின்று" என்று, உபக்ரமித்து, (௯) "வேதப்புனிதவிருக்கை நாவில்கொண்டு ஞானவிதிபிழையாமே அச்சுதன்றன்னை மேவித்தொழுதுய்மினீர்கள்" என்கிறதளவாக வுபதேசித்த ஸாத்யஸாதநபக்தி ஶ்ரவணத்தாலே யதினுடைய துஶ்ஶகத்வஸ்வரூப விரோதித்வங்களை நினைத்துப்பிறந்த ஶோகத்தோடேகூடி அத்தாலே, (௧௦) "எய்தக் கூவுதலாவதே யெனக்கு" (௧௧) "என்நான்செய்கேன்" என்றிருக்கும் தம்மோடுஸஜாதீயராம்படியானவதிகாரம் பிறந்தவர்களுக்கு (தந்தனன்மற்றோர்களைகளிலம்புகுந்தேனென்று ஸ்வஸித்தோபாய நிஷ்டையை உக்த்யநுஷ்டாநங்களாலே

(க) தி-வா-௬. ௧௦-௧௦. (உ) ஷை. (௩) ஷை. (௪) ஷை. (௫) ஷை. (௬) த்வயம். (எ) தி-வா. ௧. ௩. ௫. (அ) ஷை. (௯) ஷை ௫. உ. ௯. (௧௦) ஷை எ. ௫. (௧௧) ஷை அ. ௩.

மூ. காட்டுகிறாராறும்பத்தில்.

மூ—(எ) எண்ணிலாக்

காட்டுகிறார் - ப்ரகாசிப்பிக்கிறார், ஆறும்பத்தில் - ஆறுவதானஶதகத்தில்.

(அ) எண்ணிலா - அஸங்க்யாதமான,

காட்டுகிறார் ஆறும்பத்தில்) அதாவது:— (க) "தந்தநன்தநதாள்நிழல்" (உ) "திருவிண்ணகர்மன்னுபிரான்கழல்களன்றி மற்றோர்களைகணிலங்காண்மின்களே" என்கிற தம்முடைய உக்தியாலும், "அடிக்கீழமர்ந்து புகுந்தேன்" என்கிற தம்முடையவநுஷ்டாநத்தாலும் தமக்கிந்த ஸித்தோபாயத்திலுண்டான நிஷ்டையை ப்ரகாசிப்பிக்கிறார். ஆறும்பத்திலென்கை. *

வ்யா. (எ) ஏழாம்பத்தால், உபாயக்ருத்யத்திற்கபேக்ஷிதமான விசித்ர ஶக்தியோகத்தாலே யதாஜ்ஞாநம்பிறந்தவர்களுக்குக் கொடுக்கக்கடவதான பரமபதத்தை, தானேஉபாயமாகக் கொடுக்குமிடத்தில் திர்யக்ஸ் தாவரங்களுக்கு ம்ஶத்ருவுக்குமுட்படக்கொடுக்கவல்ல ஸர்வஶக்தியான ஸர்வேஶ்வரன் திருவடிகளை க்ஷணகாலமும் பிரியக்ஷமரன்றிக்கே ஸாங்கப்ரபதநம் பண்ணி தம்மைவிஷயங்களிலே மூட்டி தன் பக்கல் சேராதபடி யகற்றுமவையான இந்த்ரியங்கள் நடையாடுகிறஸம்ஸாரத்திலே வைக்கக்கண்டு விஷண்ணராய் கூப்பிட்டு, தம்தஶை தாம் பேசமாட்டாதபடி தளர்ந்து பிறரால் மீட்கவொண்ணாதபடி அபஹ்ருதசித்தராக, அவன்தன்விஜயங்களைக்காட்டி யிவரைத்தரிப்பிக்க அந்த தரிப்பும் ஸம்ஸாரிகளிழவைநினைத்துச்சுவறிப்பழைய வார்த்தியே தலையெடுத்து அநுபாவ்யவிஷயம் ஸ்ம்ருதிவிஷயமா யொருமுகம் செய்து நலியநோவுபட்டு, இப்படியெடுப்புஞ் சாய்ப்புமாக க்லேசம் செல்லச் செய்தே உபாயபூதனான உனக்கு ஜ்ஞாநஶக்திகளில் குறையற்றிருக்க வெனக்கு ஆகிஞ்சாந்யகதித்வங்களிலும் ஆர்த்தியிலுங் குறைவற்றிருக்க என்னைஸம்ஸாரத்திலே வைக்கைக்கடியென்? என்றுகேட்க,அவனும் நமக்கும்நம்முடையார்க்குமினிதாக திருவாய்மொழிபாடுவிக்கவைத்தோங்காணுமென் றருளிச்செய்ய, வ்யாஸாதிகள்முதலாழ்வார்கள் கவிபாடுகைக்குண்டாயிருக்க நம்மை யிட்டுக்கவிபாடு வித்துக் கொள்வதே? என்று அவன்பண்ணின உபகாரத்தையநுஸந்தித்து அதுக்குப்ரத்யுபகாரம் தேடிக்காணாமையாலே இனியிதொழியச் செய்யலாவதொன்றில்லை என்று திருவாரன்விளையிலே பெரியபிராட்டியாருடனே வெழுந்தருளியிருக்கிற பேரோலக்கத்திலே திருவாய்மொழிகேட்பித்தடிமைசெய்வதாக மநோரதித்து அங்கேதம்திருவுள்ளம் ப்ரவணமாகையாலே பரமபதத்தி

(க) தி - வா - சு. ௩. க. (உ) ஷை. ௧0.

ரு. குணங்கள் பாலதுன்ப வேறவன்மாயாப்பல்யோகு செய்தி
யென்னும் ஆஸ்சர்யஶக்தியோகத்தாலே தெளிவுற்றவர்க்
கே ஏற்றரும் வைகுந்தத்தையருளும் ப்ராபகத்வம் புற்பா

குணங்கள் - ஸத்வாதிகுணநுகுணமான வடிவுகொண்டு, பாலதுன்ப - இடமறிந்து ஸுகதுக்கங்களையுண்டாக்கினையென்னும்படி, வேறவன் - கல்பந்தோறும் வெவ்வேறான நாமாதிகளையுடையனாய், மாயா - அத்யாஸ்சர்யமும், பல் - அநேகவிதமான, யோகுசெய்தி - ஜகத்ரக்ஷணோபாய சிந்தைபண்ணினாய், என்னும்-இப்படிசொல்லப்பட்ட, ஆஸ்சர்ய - ஆஸ்சர்யகரமான, ஶக்தி - ஶக்திவிஶேஷங்களுடைய, யோகத்தாலே - ஸம்பந்தத்தாலே, தெளிவுற்றவர்க்கு - தெளிவுபிறந்தவர்களுக்கு, ஏற்றரும் - ஒருவராலும் ஸ்வ்யத்நத்தால் ப்ராபிக்கவரிதான, வைகுந்தத்தை - ஸ்ரீவைகுண்டத்தை, அருளும் - ஆழ்வார்க்கு க்ருபைபண்ணாநின்றுள்ள, ப்ராபகத்வம் - ஸகலபலோபாய பூதனாகையை, புற்பாபடருகிறபுல்லுமுதலாக,

விருப்பையும் உபேக்ஷிக்கும்படியானவர் கீழ்தம்முடைய உபாயநிஷ்டையை வெளியிடும்படி புகுராநின்றவர்களுக்குத் திருவாரன் விளையேப்ராப்யம், அங்கெழுந்தருளி நிற்கிறவன் உபாயமென்று தாமறுதியிட்ட ப்ராப்ய ப்ராபகங்களினுடைய முடிவை தம்முகப்பாலே வெளியுடுகிறாரென்கிறார் (எண்ணிலாக்குணங்கள்பாலதுன்பவேறவன் மாயாப்பல்யோகு செய்தி யென்னு மாஸ்சர்யஶக்தியோகத்தாலே) (௧) "எண்ணிலாப் பெருமாயனே" என்று, எண்ணிறந்த வாஸ்சர்யமான குணங்களையுடையவனே! என்றும் (௨) "குணங்கள்கொண்ட மூர்த்தியோர் மூவராய்ப்படைத்தளித்துக் கெடுக்கும்" என்று, ஸத்வாதிகுணநுகுணமான மூர்த்திகளைக்கொண்டு ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணுமவனென்றும், (௩) "பாலதுன்பங்களின்பகள்படைத்தாய்" என்று, இடமறிந்து ஸுக துக்கங்களைக்கற்பித்தவனே! என்றும், (௪) "ஊழிதோறூழி யுருவும் பேருஞ்செய்கையும் வேறவன்வையங்காக்கும்" என்று, கல்பந்தோறும் ரூபநாம சேஷ்டிதங்களை வேறாகவுடையனாய்க் கொண்டு ஜகத்தைரக்ஷிக்கு மென்றும், (௫) "மாயாவாமனனே" என்று, ஆச்சர்யசேஷ்டி தங்களையுடையவனே! என்றும் (௬) "உள்ளப்பல் யோகுசெய்தி" என்று, திருவுள்ளத்திலேபல ரக்ஷணோபாய சிந்தனைகளையும் பண்ணாநிற்றியென்றும், இப்படி, பஹுவிதமாகச் சொல்லப்பட்ட உபாயக்ருத்யத்துக் கபேக்ஷிதமானஆஸ்சர் யஶக்தியோகத்தாலே (தெளிவுற்றவர்க் கேற்றரும் வைகுந்தத்தையருளும் ப்ராபகத்வம்புற்பா

(௧) தி - வா. எ. ௧. ௧. (௨) ஷை ௧௧. (௩) ஷை ௨. எ. (௪) ஷை ௩. ௧௧. (௫) ஷை ௮. எ. (௬) ஷை ௪.

மூ. யெறும்பு பகைவனுக்குமாக்கவல்ல ஸர்வஶக்திபாதம் அகலகில்லாத தம்மையகற்றுமவற்றின் நடுவேயிருத்தக்கண்டு நலிவான் சுமடுதந்தாயோவென்று ஸாதநபலமான வாக்ரோஶத்தோடே பழியிட்டுக்

எறும்பு - பிபீலிகை என்ன, பகைவனுக்கும் - பழம்பகையுடைய சிசுபாலன் - (இவர்கள் விஷயத்திலும்) ஆக்கவல்ல ஆம்படிபண்ணவல்ல, ஸர்வஶக்தி - ஸர்வசக்தியுடைய, பாதம் - திருவடிகளை, அகலகில்லாத- ஒருக்ஷணமும் பிரியக்ஷமரல்லாத, தம்மை - ஆழ்வாரை, அகற்றுமவற்றின் நடுவே - பகவத்விஷயத்தில் கைவைக்கவிடைச்சுவரான பஞ்சேந்திரியங்களின் நடுவிலே, இருத்தக்கண்டு - இருக்கும்படி பண்ணக்கண்டு, நலிவான் - நலிகைக்காக, ஸுமடுதந்தாய் - (ஸகலபரங்களையும் வஹிக்கைக்குஸாதநமான) சும்மாடுபோலே யிருக்கிறதேஹத்தைக்கொடுத்தாய், ஓவென்று - மூர்த்தியோவென்று, ஸாதந - (கீழ்தாம்பரிக்ரஹித்த) உபாயத்தினுடைய, பலமான - பலமாய்வந்த்தான, ஆக்ரோஶத்தோடே - பெரியகூப்பீடோடே, பழியிட்டு - அவன்தலையிலேபழியிட்டு,

வெறும்புபகைவனுக்கு மாக்கவல்ல ஸர்வஶக்தி) (க) "தெளிவுற்றுவீவின்றி நின்றவர்க்கின்பக்கதிசெய்யும்" "ஏற்றரும் வைகுந்தத்தை யருளும்" என்று, ப்ராப்யப்ராபகங்களிரண்டும் தானேயென்றத்யவஸித்து பின்னை, நாட்டார்கள் செயல்கள்கண்டாதல் யுக்த்யாபாஸம் கொண்டாதல் பிற்காலியாதேநின்று, அவர்களுக்கு நிரதிஶயாநந்தயுக்தமாய் ஒருவராலும் ஸ்வயத்நத்தாலே ப்ராபிக்கவொண்ணாதிருக்கிற ஸ்ரீவைகுண்டத்தைத் தன்னருளாலே கொடுக்கிறதன்னுபாயத்வத்தை (உ) "புற்பாமுதலாப்புல்லெறும்பாதி யொன்றின்றியே நற்பாலுய்க்குத்தனன்" (௩) "நாட்டையளித்துய்யச்செய்து" என்றும், (ச) சேட்பால்பழம் பகைவன்சிசுபாலன் திருவடிதாட்பாலடைந்த" என்றும், ஜ்ஞாநலேசமில்லாத திர்யக்ஸ்தாவரங்களுக்கும் ப்ராதிகூல்யத்தில் முதிரநின்றஶத்ருவுக்குமாம்படி பண்ணவல்ல ஸர்வஶக்தியானவன் (பாதமகலகில்லாததம்மை) (௫) "அடியேனுனபாதமகலகில்லேனிறையும்" என்று, தன்திருவடிகளை க்ஷணகாலமும் அகலஶக்தறன்றியே (௬) "அகற்றநீவைத்த மாயவல்லைம்புலன்களா மவை" என்று, தன் திருவடிகளைக் கிட்டாதபடி அகற்றவற்றான இந்த்ரியங்களிந்நடுவே யிவ்வுடம்புலேயிருக்கும்படிவைக்கக்கண்டு, நலிவான் சுமடுதந்தாயோவென்று ஸாதநபலமான வாக்ரோஶத்தோடே பழியிட்டு) (எ) "நலிவான்னின்னமெண்ணுகின்றாய்" (அ) "அன்புருகி நிற்குமது நிற்கச்சுமடு

(க) தி - வா. எ. ௫. கக. (உ) ஷை க. (௩) ஷை உ. (ச) ஷை ௩. (௫) ஷை ௬. ௧0. கூ. (௬) ஷை ௫. எ. அ. (எ) ஷை எ. க. க. (அ) ஷை ௧0.

மூ. மறையாளன் பெற்றமைந்தனாகிற பதினெட்டு நாடன் பெருங்கூட்டு

மறையாளன் - கோவிந்தஸ்வாமி, பெற்றமைந்தன் - மார்க்கண்டேயன், ஆகிற - இவர்களாகிற, பதினெட்டு நாடன் பெருங்கூட்டு - பதினெட்டாக வெண்ணலாம்படி யிருக்குமித்திரளை,

ஶபரீ, ஸ்ரீகார்யார்த்தமாக தேஹத்தையழிய மாறினவரென்னுமுகப்பாலே (௧) "యాగతిర్యజ్ఞశీలానామాహితాగ్నేశ్చయాగతిః। అపరావర్తినాంయాచయాచభూమిప్రదాయినామ్॥ మయాత్వంసమనుజ్ఞాతోగచ్ఛలోకాననుత్తమాన్" "யாகதிர் யஜ்ஞஶீலாநாமாஹிதாக்நேஶ்சயாகதி꞉ । அபராவர்த்திநாம்யாசயாசபூமி ப்ரதாயிநாம் ॥ மயாத்வம் ஸமநுஜ்ஞாதோ கச்சலோகாந்நுத்தமாந்" என்று,விஷயீகரிக்கப்பெற்ற ஸ்ரீஜடாயு,மஹாராஜர், குரங்குயென்றவிதுஜாத்யேகவசநமாகையாலே. (௨) "సుగ్రీవంనాథమిచ్ఛతి" "ஸுக்ரீவம்நாதமிச்சதி" என்றுஅத்தலையித்தலையாய்ச்சென்று அங்கீகரிக்கப்பெற்றவாநராதிபதியானமஹாராஜரும் பரிகரமுமானவாநரவர்க்கமும் (௩) "ஒன்றின்றியேநற்பாலுக்குய்த்தனன்" என்று, ஒரு ஹேதுவுமின்றிக்கே யிருக்கச்செய்தே ஸ்வஸம்ஶ்லேஷவிஶ்லேஷைகஸுகதுக்கமாம்படியாக விஷயீகரிக்கப்பெற்ற (௪) "அயோத்தியில் வாழும்சராசரம்" (௫) "చింతయంతీజగత్సూతింపరబ్రహ్మస్వరూపిణమ్। నిరుచ్ఛ్వాసతయాముక్తింగతాన్యాగోపకన్యకా॥" "சிந்தயந்தீஜகத்ஸூதிம் பரப்ரஹ்மஸ்வரூபிணம் । நிருச்வாஸதயா முக்திம் கதாந்யாகோபகந்யகா" என்று விக்ரஹவைலக்ஷண்யமே உபாயமாய் வீடு கொடுக்கப்பெற்ற சிந்தயந்தி, வெண்ணெ களவுகாண புக்கவிடத்தே துறப்புண்டுவந்து தம்மகத்தேபுகப்படலைத் திருகிவைத்து மோக்ஷம் தாராவிடில் காட்டிக்கொடுப்பேனென்று மோக்ஷம் பெற்றததிபாண்டர், நாமரூபங்களுள்ளவைத்துக்கெல்லாமொரு சேதநதிஷ்டாநமுண்டாகையாலே இதுக்குமோக்ஷங் கொடுக்கவேணுமென்கிறவவன் நிர்ப்பந்தத்துக்காக மோக்ஷம் கொடுக்கப்பெற்ற தயிர்த்தாழி, (௬) "సుగంధమేతద్రాజార్హం రుచిరంరుచిరాననే । ఆవయోర్గాత్రసదృశందీయతామనులేపనమ్॥", "ஸுகந்தமேதத்ராஜார்ஹம்ருசிரம்ருசிராநநே । ஆவயோர்காத்ரஸத்ருஶம் தீயதாமநுலேபநம்" என்று, பூசும் ஶாந்தபேக்ஷிக்க அநந்யப்ரயோஜனமாகக் கொடுத்த ப்ரீதியாலே விஶேஷகடாக்ஷவிஷயபூதையான கூனி, (௭) "ధన్యోహమర్చయిష్యామి", "தந்யோஹமர்ச்சயிஷ்யாமி" என்று, அநந்ய ப்ரயோஜநமாக பூவைக்கொடுத்த உகப்பாலே (௮) "ధర్మేమనశ్చతే భద్రసర్వకాలం భవిష్యతి । యుష్మత్సంతతిజాతానాం దీర్ఘమాయుర్భవిష్యతి ॥" "தர்மே மநஶ்சதே பத்ர ஸர்வகாலம் பவிஷ்யதி । யுஷ்மத் ஸந்ததிஜாதாநாம் தீர்க்கமாயுர்ப்பவிஷ்

(௧) ஸ்ரீ-ஆ. ௩௯. (௨) ஷி-கி. ௪. ௧௮. (௩) தி-வா. ௭. ௫. ௧. (௪) ஷி. (௫) ஸ்ரீரா. பு. ௫. ௧௩. ௨௧. (௬) ஷி-௨௦. ௫. (௭) ஷி-௧௯. ௨௦. (௮) ஷி-௨௯.

மூ. நடத்துமாப்தனே வழித்துணையாக்கி

நடத்துமாப்தனே - நடத்துமாப்தனானவனே, வழித்துணையாக்கி - அவனே யேவழித்துணையாகப்பற்றி,

யதி'' என்று, விசேஷ கடாக்ஷம் பண்ணப்பெற்ற ஸ்ரீமாலாகாரர் (க) "నవంశవమిదం పుణ్యం వేదపారగముచ్యతే। యజ్ఞశీలం మహాప్రాజ్ఞం బ్రాహ్మణం శవముత్తమమ్॥" "நவம் ஶவமிதம் புண்யம் வேதபாரகமுச்யதே । யஜ்ஞஸீலம் மஹாப்ராஜ்ஞம்ப்ராம்ஹணம் ஶவமுத்தமம்'' என்று (உ) "యదన్నః పురుషో భవతి" "யதந்நஃ புருஷோபவதி" என்கிறபடியே, பிணவிருந்திட்ட கண்டாகர்ணன், வேண்டடிசிலுண்ணும்போதிதென்றுபார்த்திருந்து நெடுநோக்குக்கொள்ளும் பத்தவிலோசநத்தில் பக்தி புரஸ்ஸாமாக அடிசில் கொண்டுவந்திட்ட ரிஷிபத்நிகள், (௩) "மீளவவன்மகனே'' என்று ஹிரண்ய புத்ரனாய்வைத்து தன்னருளுக்கு விஷயமாம்படி பக்தனான ஸ்ரீப்ரஹலாதன் (ச) "அவன் தம்பிக்கு'' என்னும்படி ராவணாநுஜனாய் (ரு) "అనుజో రావణస్యాహమ్" "அநுஜோராவணஸ்யாஹம்'' இத்யாதிப்படியே, ஸ்வநிகர்ஷத்தை முன்னிட்டுவந்து (சு) "రాఘవం శరణం గతః" "ராகவம் ஶரணம்கதஃ'' என்று, திருவடிகளையடைந்த ஸ்ரீவிபீஷணாழ்வான் (எ) "పరమాపదమాపన్నో మనసాచిన్తయద్ధరిమ్। సతునాగవర శ్రీమాన్నారాయణపరాయణః॥" பரமாபதமாபந்நோமநஸா சிந்தயத்தரிம், ஸதுநாகவர ஸ்ரீமாந்நாராயண பராயணஃ'' என்று, ஸ்வயத்நத்தைவிட்டு ப்ரபன்னனாய் ஸ்வாபிலஷித கைங்கர்யம்பெற்ற ஸ்ரீகஜேந்த்ராழ்வான், (அ) "நஞ்சுசோர்வதோர் வெஞ்சினவரவம் வெருவி வந்துநின்சரணென'' என்கிறபடியே, பெரியதிருவடிக்கஞ்சிவந்து திருவடிகளை சரணமாக வடைந்தஸுமுகன் (க) "மாகமாநிலம் முழுதும்வந்திறைஞ்சும் மலரடிக்கண்ட மாமறையாளன்'' என்று, க்ருஷ்ணாவதாரத்தில் தன்னுடைய பால்யசேஷ்டிதங்களை ஸாக்ஷாத்கரித்துகாமனாய் தபஸ்ஸு பண்ணி அப்படியே காட்டியருளக்கண்டநுபயித்தவநந்தரம் நித்யாநுபவத்தையபேக்ஷித்த கோவிந்தஸ்வாமி (க0) "மாமுனிபெற்றமைந்தன்'' என்று, ம்ருகண்டு புத்ரனாய் மோக்ஷார்த்தமாக தன்னைவந்தடைந்த மார்க்கண்டேயன், இவர்களாகிற நாநாஜாதிதையாலும் இப்படி பதினெட்டாக வென்னலாம்படி யிருக்கையாலும் பதினெட்டுநாடன் பெருங்கூட்டம்போலேயிருந்துள்ள வித்திரளை அர்ச்சிராதி மார்க்கத்தாலே தானே துணையாய்க்கொண்டு நடத்துமவனாய் (கக) "திருமோகூராத்தன் தாமரையடியன்றி மற்றிலமரண'' (கஉ) "காளமேகத்தையன்றி மற்றொன்றிலங்கதி'' என்னும்படி, திருமோகூரிலே நின்றருளின

(க) ஸ்ரீஹரிவம். வி. ப. (உ) ஸ்ரீ-ரா. அ. க0உ. ௩0. (௩) பெரியா-தி. க. சு. உ. (ச) (ரு) ஸ்ரீ - ரா - யு. கஎ. (சு) ஷெ - க௩. (எ) ஸ்ரீ விஷ்ணுதர்மே - சுகூ. சசு. (அ) பெரிய தி - ரு. அ. ச. (க) பெரிய - தி. ரு. அ. ரு. (க0) ஷெ - சு. (கக) திருவா. க0. க. சு. (கஉ) ஷெ - க.

மூ. அறியச்சொன்ன ஸுப்ரபாதத்தைத் துணைபிரியாமல் போக்கொழித்து மீள்கின்ற தில்லையென்று நிச்சித்திருந்தவர் ஸஞ்சிதங்காட்டும் தசையானவாறே முந்துற்ற நெஞ்சுக்குப் பணிமறவாது மருளொழி

அறியச்சொன்ன-இவர்களறியும்படி சொல்லப்பட்ட, ஸுப்ரபாதத்தை - நல்விடிவானநாளிலே, துணைபிரியாமல் - ஸஹாயத்தைவிட்டுப் பிரியாமல், போக்கொழித்து - பசுமேய்க்கபோக வொண்ணுதபடிபண்ணி, மீள்கின்றதில்லையென்று - ஸம்ஸாரதுரிதம்மறுவலிடா தென்று, நிச்சித்திருந்தவர் - நிச்சயித்திருந்தவர், ஸஞ்சிதம்காட்டும் தசையானவாறே - ஸம்பாதித்துப் புதைத்துவைத்ததைக் காட்டும்படியான ,தசையான மரணமானவாறே, முந்துற்ற நெஞ்சுக்கு - தம்மிலும்பகவத்விஷயத்தில் முற்பட்டதம்நெஞ்சுக்கு, பணிமறவாது - பணிநெஞ்சே நாளுமென்றும் மறவாது வாழ்கண்டாய் என்றும், மருளொழி - மருளொழிநீ மடநெஞ்சேயென்றும்,

பரமாப்தனுன காளமேகத்தை வழித்துணையாகக் கொண்டு (அரியச்சொன்ன ஸுப்ரபாதத்தைத் துணைபிரியாமல் போக்கொழித்து மீள்கின்றதில்லையென்று நிச்சித்திருந்தவர்) (க) "நாமுமக்கறியச்சொன்ன நாள்களும் நணியவான" என்றும், (உ) "நாளேலறியேன்" என்றும், (௩) "மரணமானல்" என்றும், நானுங்களுக்குச்சொன்னநாள் ஆஸந்நமாய்த்தென்று பிறர்க்கும் பேசும்படியாய் (ச) "సుప్రభాతాచ మేనిశా" "ஸுப்ரபாதாசமேநிஶா" என்றும், (ரு) "సుప్రభాతాద్యరజనీ మధురా వాసయోషితాం" "ஸுப்ரபாதாத்யரஜநீ மதுரா வாஸயோஷிதாம்" என்றுஞ் சொல்லுகிறபடியே, பகவத் ப்ராப்தியணித்தானவறேநல் விடிவானநாளிலே (சு) "துணைபிரிந்தார்த்துயரமும் நினைகிலை" (எ) "பசுமேய்க்கப்போகேல்" (அ) "என்கைகழியேல்" (கூ) "அவன் பசுநிரைமேய்ப்பொழிப்பா னுரைத்தன" என்று, தமக்குத்துணையானவவனே பசுமேய்க்கையாகிற வபிமதத்தைப் பற்றவும் போகாதபடி பண்ணி (க0) "மீள்கின்றதில்லை ப்பிறவித்துயர்கடிந்தோம்" (கக) "நிலைபேர்க்கலாகாமை நிச்சித்திருந்தேன்" என்று, ஸம்ஸாரதுரிதம் மறுவலிடாதென்று(கஉ)"నబిభేతికుతశ్చన" "நபிபேதிக்குதஶ்சந" என்கிறபடியே, ஒன்றுக்கு மஞ்சாதபடி நிச்சயித்திருந்தவர் (ஸஞ்சிதங்காட்டும் தசையானவாறே) மரணதசையானவளவிலே ஸஞ்சிதமாய்ப் புதைத்துக்கிடக்கும் மஹா நிதிகளை புத்ராதிகளுக்குக் காட்டுவாரைப்போலே தமக்கு பகவத்ப்ராப்தியணித்தானவாறே ஒரொருவருமிழக்கவொண்ணுது யெல்லார்க்கும் ஹிதாஹிதங்க ளறிவிக்கவேணுமென்று பார்த்து (முந்துற்ற நெஞ்சுக்குப் பணிமறவாது மருளொழி

(க) தி - வா. க0. உ. கூ. (உ) ஷை - கூ. அ. ச. (௩) ஷை - க0. ரு. (ச) ஸ்ரீ-வி. பு. ரு. கஎ. உ. (ரு) ஷை-அ. உ௩. (சு) தி-வா. க0. ௩. ச. (எ) ஷை - கூ. (அ) ஷை - அ. (கூ) ஷை - கக. (க0) ஷை - ச. ௩. (கக) ஷை - ச. (கஉ) தை-உ.

சூ. நகுகைவிடேலென்று க்ருத்யாக்ருத்தங்களை விதித்து நெஞ்சுபோல்வாரைத் தொண்டீரென்றழைத்து வலஞ்செய்து எணிணுமின் பேசுமின் கேண்மின்

நகு - நரகத்தைநகுநெஞ்சே யென்றும், கைவிடேலென்று - வாழிமனமே கைவிடேலென்றும், க்ருத்யாக்ருத்யங்களை - செய்யத்தகுந்ததையும் செய்யத்தகாததையும், விதித்து - நியமித்து, நெஞ்சுபோல்வாரைத் தொண்டீரென்றழைத்து - தம்முடைய திருவுள்ளம்போலே விதேயரான ஸ்ரீ வைஷ்ணவர்களை தொண்டீரெல்லீருமென்றழைத்து, வலம் செய்து - அநுகூலவ்ருத்தியைப்பண்ணி, எண்ணுமின் - ஸ்வாமியின் திருநாமத்தை யநுஸந்தியுங்கோளென்றும், பேசுமின் - திருவனந்தபுரத்தெம் பெருமானைப் பேசுங்கோளென்றும், கேண்மின் - நாம்சொல்லுகிறதைக் கேளுங்கோளென்றும்,

நகுகைவிடேலென்று க்ருத்யாக்ருத்யங்களை விதித்து) (க) "தொழுதெழன் மனனே" என்று, ப்ரதமத்திலே உபதேசிக்கும்படி (உ) "மூந்துத்தநெஞ்சு" என்கிறபடியே, தம்மிலும் பகவத்விஷயத்திலே முற்பட்டுநிற்க்கிற தந்திருவுள்ளத்துக்கு (௩) "பணிநெஞ்சே நாளும் பரமபரம்பரனை" (௪) "வாழியென்நெஞ்சே மறவாதுவாழ்கண்டாய்" (௫) "மருளொழிநீ மடநெஞ்சே" (௬) "நரகத்தை நகு நெஞ்சே" (எ) "வாழிமனமேகைவிடேல்" என்று, நம்ப்ரதிபந்தகங்களையெல்லாம் தானேபோக்கி யடிமைகொள்ளும் ஸர்வஸ்மாத்பரனை யநுபவிக்கப்பார், உனக்கிஸ் ஸம்ருத்தி மாருதே சென்றிடுக, கைபுகுந்ததென்ன? இதர விஷயங்களில் செய்யுமத்தை யிவ்விஷயத்திலும் செய்யாதே யென்கிறார். (அ) "திருவாரன்விளையதனை மேவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொல், என்று, ப்ராப்யவஸ்து கிட்டித்தாகி லிங்கேயடிமைசெய்ய வமையாதோ வென்று உகந்தருளின நிலங்களில் நசையாலே ப்ரமிப்பதொன்றுண்டு நமக்கதை நீ தவிரப்பார். உத்தேஶ்யவஸ்து ஸந்நிஹிதமாய்த்தென்றித்தையேபார்க்குமித்தனையோ, நம்மையும் பார்க்கவேண்டாவோ, நான் பரமபதத்தேறப் போகாநின்றேன், நெடுநாள் நம்மைக் குடிமக்களாக்கி எளிவரவுபடுத்தின ஸம்ஸாரத்தைப்புரிந்து பார்த்துச் சிரித்துப் போருகிடாய். நமக்கிஸ்ஸம்பத்தெல்லாம் திருமலையாலே வந்ததாயிற்று. அத்திருமலையைக் கைவிடாதே கொள்ளென்று க்ருத்யாக்ருத்யங்களை யவஶ்யகரணீயமாம்படி விதித்து (நெஞ்சுபோல்வாரைத் தொண்டீரென்றழைத்து) தம்திருவுள்ளம்போலே அந்தரங்கரான ஸ்ரீவைஷ்ணவர்களை (௯) "தொண்டீர் வம்மின்" என்று, பகவத்விஷயத்திலே சபலரானுர் வாருங்கொளென்றழைத்து (வலஞ்செய்தெண்ணுமின் பேசுமின் கேண்மின் காண்மின்

(க) தி - வா. க. க. க. (உ) பெரிய - அ. க. (௩) தி - வா. க0. ௪. எ. (௪) ஷை - அ. (௫) ஷை - ௬. க. (௬) ஷை. - ௫. (எ) ஷை - எ. ௯. (அ) ஷை - எ. க0. ௯. (௯) ஷை. - க0 க. ௫.

௭. காண்மின் நடமின் புகுதுமென்று கர்த்தவ்யம் ஸ்மர்த்தவ்யம் வக்தவ்யம் ஶ்ரோதவ்யம் த்ரஷ்டவ்யம் கந்தவ்யம் வஸ்தவ்யமெல்லாம் வெளியிட்டு பிணக்கறவைச் சார்வாக நிகமித்து

காண்மின் நடமின் - திருவனந்தபுரத்தில் கண்வளரும் ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளைக் காணப்போருங்கோளென்றும், புகுதும் - திருவநந்தபுரம் புகவாருங்கோளென்றும், என்று-இப்படிசொல்லி, கர்த்தவ்யம் - அநுஷ்டேயத்தையும், ஸ்மர்த்தவ்யம் - த்யாநம்பண்ணவேண்டியதையும், வக்தவ்யம் - நித்யாநுஸந்தேயத்தையும், ஶ்ரோதவ்யம் - கேட்கவேண்டியதையும், த்ரஷ்டவ்யம் - பார்க்கவேண்டியதையும் கந்தவ்யம் - போகவேண்டியதையும், வஸ்தவ்யம் - வாஸம்பண்ணவேண்டுமதையும், எல்லாம் - இவையெல்லாவற்றையும், வெளியிட்டு - ப்ரகாசிப்பித்து, பிணக்கறவை - பிணக்கற என்கிறபாட்டில் சொன்ன-பக்தியோகத்தை, ஸார்வாகநிகமித்து-சார்வேதவநெறிக்குத் தாமோதரனென்றுபஸம்ஹரித்து,

நடமின் புகுதுமென்று கர்த்தவ்யம் ஸ்மர்த் தவ்யம் வக்தவ்யம் ஶ்ரோதவ்யம் த்ருஷ்டவ்யம் கந்தவ்யம் வஸ்தவ்யமெல்லாம் வெளியிட்டு) (க) "கொண்டகோயிலை வலஞ்செய்திங்காடுதும்கூத்தே" என்று, அவனெழுந்தருளி நிற்கிற தேஶத்தைக்குறித்து அநுகூலவ்ருத்தியைப் பண்ணிஹ்ருஷ்டராவோம் வாருங்கோளென்கையாலே கர்த்தவ்யமும், (உ) "எண்ணுமினெந்தை நாமம்" என்று, ஸ்வாமியினுடைய திருநாமத்தை யநுஸந்தியுங்கோளென்கையாலே ஸ்மர்த்தவ்யமும், (௩) "பேசுமின்கூசமின்றி" என்று, உங்களயோக்யதை பார்த்துக்கூசாதே திருவநந்தபுரத்திலே ஸ்நேஹத்தைபண்ணி வர்த்திக்கிறவனைப் பேசுங்கோளென்கையாலே வக்தவ்யமும், (௪) "நமர்களோசொல்லக் கேண்மின்" என்று, நம்மோடுஸம்பந்தமுடையார் நாம்சொல்லுகிறத்தைக் கேளுங்கோளென்கையாலே ஶ்ரோதவ்யமும், (௫) "படமுடையரவில்பள்ளிபயின்றவன் பாதம்காணநடமினோ" என்று, திருவநந்தபுரத்திலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளை காணப்போருங்கோ ளென்கையாலே த்ரஷ்டவ்ய கந்தவ்யங்களும் (௬) "அனந்தபுரநகர் புகுதுமின்றே" என்று இச்சைபிறந்தவின்றே திருவநந்தபுரத்திலேபோய் புகவாருங்கோ ளென்கையாலே வஸ்தவ்யமுமாகிறவை யெல்லாமவர்களுக்கு வெளியிட்டு (பிணக்கறவைச்சார்வாக நிகமித்து) உபக்ரமித்த வர்த்தத்தை உபஸம்ஹக்கை ஶாஸ்த்ரக்ரம மாகையாலே (௭) "பிணக்கற" என்கிறபாட்டிலே, (௮) "வணக்குடைத் தவநெறி" என்று, உபக்ரமித்த பக்தியோகத்தை

(க) தி - வா. ௧௦. க. ரு. (உ) ஷி - உ. ரு. (௩) ஷி - ௪. (௪) ஷி - உ-சு. (௫) ஷி - அ. (௬) ஷி - க. (௭) ஷி - க. ௩. ரு. (௮) ஷி.

மூ. எண்பெருக்கிலெண்ணும்

எண்பெருக்கி லெண்ணும் - எண்பெருக்கன்னலத்தென்றுபஜநதசையி லெண்ணப்படும்,

(க) "சார்வேதவநெறிக்குத்தாமோதரன் தாள்கள்" என்று, ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியைச்சொல்லி நிகமித்து இதின்பட்டோலையானக்ரந்தத்திலே (உ) "வீடுமின்முத்தவும்" (ங) "பத்துடையடியவரிலே" உபதேசிக்கத்துடங்கின ஸாத்யஸித்த ரூபமானஸாதநத்வயத்தையும் "தவனெறிக்கு" "பரமன்பணித்த" என்று, நிகமித்தென்றவரிதிலே யிப்படியருளிச் செய்வானென்னென்னில்? அதில் "வீடுமின்முற்றம்" ப்ரபந்திபரமாகவும், "பத்துடையடியவர்" பக்திபரமாகவும், பூர்வர்கள் நிர்வஹித்தகட்டளையைப் பிடித்தருளிச் செய்தார். இது "வீடுமின்முற்றத்தையும்" பக்திபரமாக்கி யோஜித்தருளினவெம்பெருமானார் நிர்வாகக் கட்டளையைப் பிடித்தருளிச்செய்தார். இதிலே ஸகல வ்யாக்யாநஸித்தமுமாய் ஈட்டிலும் ப்ரதாநயோஜநையுமாயிருக்குமது இந்த க்ரமத்திலேயிறே. இவர்தாம் முதற்பத்தில் பக்தியை உபதேசிக்கிறு ரென்றருளிச்செய்ததும். ஆகையாலிதுமுன்புள்ளாரருளிச்செய்தபடியைப் பற்றவருளிச்செய்தார். இதுயெம்பெருமானார் யோஜநையாய் பின்புள்ளாரெல்லாரு மருளிச்செய்துகொண்டுபோர்ந்தமர்யாதையைப்பற்ற வருளிச்செய்தாரொன்று கொள்ளுமித்தனை. (ச) "வணக்குடைத்தவனெறி" என்கிறவிது, ப்ரபத்திபரமாகவும் ஒருயோஜநையீட்டிலே தோன்றியிருக்கையாலே "பிணகறவை" என்கிறவிதிலே பக்திப்ரபத்திகளிரண்டையும்கூட்டிக்கொண்டு (ரு) "சார்வேதவநெறியிலே" சார்வேதவனெறிக்குத்தாமோதரன் தாள்கள், என்றும், (சா) "பண்டேபரமன் பணித்தபணிவகையே" "கண்டேன்கமலமலர்ப்பாதம்" என்றும், என்றிரண்டையும் நிகமிக்கிறுரென்றுலோ வென்னில்? அதுக்குமநுபபத்தியுண்டு, "பிணக்கற" என்கிறபாட்டில், ப்ரபத்திபரமான யோஜநையுண்டானுலும் விகல்பமொழிய ஸமுச்சயங் கூடாமையாலே. ஆகையாலே ஸகலவ்யாக்யா நங்களுக்கும்சேர "பிணக்கறவில்" உபக்ரமித்த பக்தியை நிகமிக்கிறுரென்ன வமையும். ஆனுல், பக்த்யுபதேஶோபக்ரமமும் "வீடுமின் முற்றத்திலே" ஆயிருக்க "பிணக்கறவை" என்பானென்னென்னில்? "வீடுமின்" என்று, த்யாஜ்யோபாதேய தோஷகுண பரித்யாகஸமர்ப் பணக்ரமத்தை ஸாலம்பநமந்த்ரமாக உபதேசித்தென்று அத்தையு மிதுக்கு ஶேஷமாக ஒருங்கவிட்டுக்கொண்டு வந்து அவனுரைத்த மார்க்கத்தேநின்றிருபசைமலமற வுணர்வுகொண்டு நலஞ்செய்வதென்றுதாம் யோஜித்தக்ரமத்தைப்பிடித்து முதல்பத்தில் துடங்கின பக்தியோகத்தையென்றபடி, "பிணக்கறத்துடங்கி" வேதப்புனிதவிருதி சொன்னவென்றிறேகீழு மருளிச்செய்தது. ஆக விப்படி முதற்பத்திலுபக்ரமித்தபக்தியை நிகமித்துக்கொண்டு (எண்பெருக்கி லெண்ணும்

(க) தி - வா. க0. ச. க. (உ) ஷை - க. உ. க. (ங) ஷை - ங. க. (ச) ஷை - ரு. (ரு) ஷை - க0. ச. க. (சா) ஷை - க.

மூ. திருநாமத்தின் ஶப்தார்த்தங்களைச்சுருக்கி மாதவனென்று த்வயமாக்கி கரணத்ரயப்ரயோக வ்ருத்தி ஸம்ஸாரிகளுக்குக் கையோலைசெய்து கொடுத்து செஞ் சொற்கவிகளுக்குக் கள்ளவழிகாவலிட்டு

திருநாமத்தின் - திருநாமமான திருமந்த்ரத்தினுடைய, ஶப்தார்த்தங்களை - ஶப்தம் அர்த்தமிவைகளை, சுருக்கி - ஸங்க்ரஹித் தருளிச்செய்து, மாதவனென்று - ஸ்ரீமானென்னுமதையிரண்டுபர்யாயம் சேர்க்கையாலே, த்வயமாக்கி - திருமந்த்ரவிவரணமானத்வயமாக்கி, கரணத்ரயப்ரயோகவ்ருத்தி - காயிக வாசிக மாநஸிகமான கரணத்ரயத்தாலும் ப்ரயோகிக்கப்பட்ட வ்யாபாரத்தை, ஸம்ஸாரிகளுக்கு - பத்தசேதநர்க்கு, கையோலை செய்துகொடுத்து - இதுவிதென்று யேற்பாடு செய்து கொடுத்து, செஞ்சொற்கவிகளுக்கு - அநந்யப்ரயோஜநகவிகளான முதலாழ்வார்களுக்கு, கள்ளவழி - திருட்டுவழியான அவனுடைய ஶீலகுணத்தில், காவலிட்டு - அதில்புகாதபடி தகைந்து,

திருநாமத்தின் ஶப்தார்த்தங்களைச்சுருக்கி ) ( க ) “ எண்பெருக்கன் னலத் தொண்பொருளீறி லவண்புகழ்நாரணன் ” என்று, முதல்பத்திலே, பஜநாலம்பநமாகச் சொல்லப்பட்டதாய், ( உ ) “ எண்ணுந்திருநாமம் ” என்று, பஜநதசையிலநு ஸந்திக்கப்படும் திருநாமமானதிருமந்த்ரத்தினுடைய” சப்தத்தையும் அர்த்தத்தையும் “நாரணம்” என்றும், (௩) “ நாரணனெம்மான் ” இத்யாதியாலும், ஸங்க்ரஹமாம்படி சுருங்க உபதேசித்தும், (மாதவனென்று த்வயமாக்கி) பூர்வோத்தர வாக்கியங்களில் ஸ்ரீமத் பதார்த்தங்களை திருவுள்ளம் பற்றிக்கொண்டு (ச) “ மாதவனென்றென்றோதவல்லீரேல் ” என்று, கீழ்ச்சொன்ன நாராயண ஶப்தத்தோடே மாதவனென்கிறவித்தை இரண்டுபர்யாயம் சேர்த்துச்சொல்ல வல்லிகோளாகில் என்கையாலே அந்த திருமந்த்ரத்தை அதினுடைய விஶதாநுஸந்தாநமான த்வயரூபேணவெளியிட்டு (கரணத்ரயப்ரயோக வ்ருத்தி ஸம்ஸாரிகளுக்கு கையோலை செய்துகொடுத்து) ஈஶ்வரன்தம்மைக் கொடுபோகையிலே த்வரிக்கிறபடியாலும் கேட்கிறவர்களுக்கு பிரதிபத்திவிஷயமாம்படியாகவும் சுரங்கக்கொண்டு (௫) “தாள்வாய்மலரிட்டு நாள்வாய்நாடீர்” ( சு ) “ நாடீர்நாடோறும் வாடாமலர்கொண்டு பாடீரவன்நாமம் ” “ சுனைநன்மலரிட்டு நினைமின் நெடியானே ” என்றிப்படி, கரணத்ரயத்தாலும் ப்ரயோகிக்கப்படும் பகவதாஶ்ரயணீயப்ரவ்ருத்தியை பரந்தஶடங்குகளை சுருங்க வநுஷ்டேயார்த்த ப்ரகாஶகமான ப்ரயோகவ்ருத்தியாக்கிக்கையோலை செய்து கொடுக்குமாப்போலே ஸம்ஸாரிகளுக்கு தர்சிப்பித்து ( செஞ் சொற் கவிகளுக்குக் கள்ளவழிகாவலிட்டு) ( எ ) “செஞ்சொற்கவிகா

(க) தி - வா க. ௨. கo. (உ) ஷி - கo. ௫. க. (௩) ஷி - உ. (ச) ஷி - எ. (௫) ஷி - சு. (சு) ஷி - ௫. (எ) ஷி - எ. க.

மூ. மனந்திருத்தி வீடுதிருத்தப்போய் நாடுதிருந்தினவாறே வந்து விண்ணுலகந்தர விரைந்து அத்தைமறந்து குடிகொண்டு தாம்புறப்பட்ட வாக்கையிலேபுக்குத் தானநகர்களையதிலேவகுத்து குரவைதுவரைகளில் வடிவுகொண்ட சபலனுக்கு தேஹதோஷமறிவித்து

மனம்திருத்தி - அயோக்யதாநுஸந்தாநத்தாலேயகன்ற விவரைத்தன் சீலத்தைக்காட்டிச் சேர்த்துக்கொண்டு, வீடுதிருத்தப்போய் - இவரகலாமைக்காக பரமபதத்தேற கொடுபோகவத்தை யலங்கரிக்கப்போய், ( மீளுவதற்குமுன்னே ) நாடுதிருந்தினவாறே - தம்முபதேஶத்தாலே நாடுதிருந்தினவளவிலே, வந்து - மீளவந்து, விண்ணுலகம் - பரமபதத்தை, தர - கொடுக்கையிலே, விரைந்து - த்வரித்து, அத்தைமறந்து - தானுபக்ரமித்த கார்யத்தையும்மறந்து, குடிகொண்டு - இவர் திருமேனியிலே அத்யாதரத்தாலே ஸபரிகரனுய்வர்த்தித்து, தாம்புறப்பட்ட - இத்தைத்யாஜ்யமாக நினைத்துத்தாம் ஶரக்குக்கட்டிப்புறப்பட்டுநின்ற, ஆக்கையிலே - ஹேயமானஶரீரத்திலே, புக்கு - ப்ரவேசித்து, தாநநகர்களை - தனக்கு வாஸஸ்தாநமான நகரங்களில் பண்ணும் விருப்பத்தை, அதிலே - இவ்வாழ்வாருடைய ஒரோரவயவங்களிலே, வகுத்து - பிரித்தனுபவித்து, குரவைதுவரைகளில் - திருக்குரவையிலே யநேகவிக்ரஹ பரிக்ரஹம்பண்ணினுப்போலவும் த்வாரகையில் பதினாறுயிரம் ஸ்த்ரீகளுடனே அநேக ஶரீரபரிக்ரஹம் பண்ணியநுபவித்தாப்போலவும், வடிவுகொண்ட - ஆழ்வாரையநுபவிக்கைக்காக அநேக ஶரீரபரிக்ரஹம்பண்ணின, சபலனுக்கு - ஆஶ்ரிதஸம்ஶ்லேஷ சபலனுக்கு, தேஹதோஷ மறிவித்து - தேஹத்தின்ஹேயத்தை யறிவித்து,

ளுயிர்காத்தாட்செய்மின்'' என்று, அவனுக்கடிமை செய்வார் அவனுடைய சீலாதிகளிலே யகப்பட்டழுந்திப்போகாம லுங்களுயிர்களை நோக்கிக்கொண்டு அடிமை செய்யப்பாருங்கோ ளென்று உபதேசிக்கையாலே அநுபவகைங்கர்யங்களோடே நடக்கிற ஸகோத்ரிகளுக்கு அரணழியாமல் கள்ளவழிகாவலிடுவாரைப்போலே சீலகுணமாகிற ஆழங்காலிலிழியாதே கொள்ளுங்கோளென்று வஞ்சக்கள்வனுள் கலங் தழிக்கும்வழிக்குக்காவலிட்டு (மனம்திருத்தி வீடுதிருத்தப்போய் நாடுதிருந்தினவாறே வந்து விண்ணுலகம்தரவிரைந்து அத்தைமறந்து குடிகொண்டு தாம்புறப்பட் டவாக்கையிலே புக்குத்தானநகர்களை அதிலே வகுத்து குரவைதுவரைகளில் வடிவுகொண்டசபலனுக்கு தேஹதோஷ மறிவித்து) ( க ) "தன்பால் மனம்வைக்கத்திருத்தி" என்று, 'வளவேழுலகிலே'' அயோக்யரென்றகன்ற தம்மை தம்சீலதையைக்காட்டி மநஸ்ஸைத்திருத்திச் சேர்த்துக்கொண்டு இன்னமுமிவரிங்கே யிருக்கில் அயோக்யரென்றகலுவர், அகலவொண்ணாத தேஶத்தேறக்கொடு போகவேணு

(க) தி - வா. க. ௫. கo.

மூ. மாயையைமடிவித்து

மாயையை - ஸம்ஸாரத்தில் நிற்கைக்கடியான வசித்ஸம்பந்தத்தை, மடிவித்து - திரியவிடுவித்து,

மென்று (௧) "வீடுதிருத்துவான்" என்கிறபடியே பரமபதத்தைக் கோடிப்பதாகப்போய், அதுசெய்து மீளுவதற்கு முன்னே (௨) "ஊரும் நாடுமுலகமும் தன்னைப்போல்" என்கிறபடியே தம்முபதேசத்தாலே நாடெல்லாம்திருந்தி தானிங்கே தம்மைவைத்துக் கொள்ள நினைத்தகாரியமும் தலைக்கட்டினவாறே வந்துநின்று (௩) "விண்ணுலகம்தருவானாய் விரைகின்றான்" என்று, மீளவந்து பரமபதத்தேறக்கொண்டு போகையிலேத்வரித்து சரமஶரீரமாகையாலே தம்முடைய திருமேனியிலே தமக்குண்டான வ்யாமோஹத்தாலே கொடுபோகவிரைந்து அதையும் கூடமறந்து (௪) "கோவிந்தன் குடிகொண்டான்" என்கிறபடியே, ஸபரிகரனாய்க்கொண்டு (௫) என்மாயவாக்கை யதனுள்புக்கு" என்று, த்யாஜ்யமென்று குந்தியடியிட்டுத் தான்சரக்குக்கட்டி புறபட்டு நிற்கிற தேஹத்தினுள்ளே தான்புகுந்து (௬) "திருமாலிருஞ்சோலைமலையே" என்கிற பாட்டின்படியே (௭) "தானநகர்கள்" என்று, தனக்குவாஸஸ்தானமான திவ்யநகரங்களில் பண்ணும் விருப்பத்தையெல்லாம் ஒரோரவயவயங்களிலே பண்ணி எல்லாமிதுக்குள்ளேயாக வகுத்து (௮) "అంగనామంగనామంతరే మాధవో మాధవం మాధవంచాంతరేణాంగనా" "அங்கநாமங்கநாமந்தரேமாதவோமாதவம்மாதவம் சாந்தரேணங்கநா" என்கிறபடியே, திருக்குறவையில் பெண்களோடே அநேகவிக்ரஹ பரிக்ரஹம்பண்ணி அநுபவித்தாப்போலவும், (௯) "ఏకస్మిన్నేవ గోవిందః కాలే తాసాం మహామునే। జగ్రాహ విధివత్పాణీన్ పృథగ్గేహేషు ధర్మతః ఉవాస విప్ర సర్వేషాం విశ్వరూపధరో హరిః" "ஏகஸ்மிந்நேவ கோவிந்த꞉காலேதாஸாம்மஹாமுநே|ஜக்ராஹ விதிவத்பாணீந்ப்ரதக் கேஹேஷு-தர்மத꞉॥உவாஸவிப்ர ஸர் வேஷாம்விஶ்வரூபத ரோஹரி꞉" என்கிறபடியே, ஸ்ரீமத்வாரகையில் தேவிமாருடனே பதினாறுயிரம் விக்ரஹம்கொண்டனுபவித்தாப் போலவும், அநேகவிக்ரஹம்கொண்டு தம்முடைய அவயவங்கள்தோறும் அநுப விக்கும்படி தம்திருமேனியிலே அதிசபலனானவனுக்கு (௧௦)"பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்த்ரியமைம் பூதம் இங்கிவ்வுயிரேய் பிரகிருதிமானாங்கார மனங்களே"(௧௧)"உன்மா மாயையை" "மங்கவொட்டு" என்று, ஸ்வதேஹ தோஷத்தை யறிவித்து இத்தை விடுவிக்கவேணுமென்றுகால்கட்டி (மாயையைமடிவித்து)அவனுமித்தை விடுவிப்பதாக அநுமதிபண்ணி ப்ரீதராய் (௧௨) "மடித்தேன் மனவாழ்க்கையுள்நிற்ப தோர்மாயையை"என்று,ஸம்ஸாரத்திலே நிற்கைக்கடியான

(௧) தி - வா. ௯. ௫. ௧௦. (௨) ஷை - ௬. ௭. ௨. (௩) ஷை-௧௦. ௬. ௩. (௪) ஷை-௭. (௫) ஷை - ௭. ௩. (௬) ஷை - ௮. (௭) ஷை - ௮. ௬. ௮. (௮) ஸ்ரீ - பா. (௯) (௧௦) தி - வா ௧௦. ௭. ௧௦. (௧௧) ஷை - (௧௨) ஷை - ௮. ௩.

சூ. வானேதரக்கருதி கருத்தின்கண்பெரியனனவனே யின்ற ஹேதுகமாக வாதரித்த நீ அநாத்யநாதர ஹேதுசொல் லென்று மடியைப்பிடிக்க இந்த்ரியகிங்கரராய்க் குழிதூர்த் துச் சுவைத்தஹன்றீர்

வானேதரக்கருதி - பரமபதத்தைத்தருவானாக வுத்யோகித்து, கருத்தின்கண்பெரியனனவனே - மிக்கபாரிப்பை யுடையவனே, இன்று - இப்போது, அஹேதுகமாக - நிர்ஹேதுகமாக, ஆதரித்தநீ - விஷயீகரித்தநீ, அநாத்யநாதரஹேது - அநாதிகாலமுபேக்ஷித்திருந்ததுக்கு ஹேதுவை, சொல்லென்று-அருளிச்செய்யவேணுமென்று, மடியைப்பிடிக்க-மடியைப்பிடித்துக்கேட்க, இந்த்ரியகிங்கரராய்-அநாதிகாலமிந்த்ரியவஶ்யராய், குழிதூர்த்து - அபர்யாப்தங்களான இந்த்ரியங்களைத்ருப்தியடைவித்து, சுவைத்தஹன்றீர் - நிரஸமானபதார்த்தங்களாலே ரஸமுடையராயென்னைக்கைகழியவிட்டுப் பிரிந்துபோந்தீரோ,

மாயையுண்டு மூலப்ரக்ருதி அத்தைத்திரியவிடுத்தேனென்று செருக்கி (வானேதரக்கருதி கருத்தின்கட் பெரியனனவனே) (க) "வானேதருவானெனக்காய்" என்று, தமக்கு பரமபதத்தைத் தருவானாகவொருப்பட்டு (உ) "கருத்தின்கண்பெரியன்" என்றுபயவிபூதி யோகத்தாலே வரும் அந்யபரதையடையத் தீர்ந்து தம்மை அவ்வருகே கொடுபோகையிலும் ஆதிவாஹிகரை நியமிக்கையாலும் தான் முற்பாடனாய்க் கொண்டுபோகையிலும் பெருக்கப்பாறியா நிற்கிறவனே. அன்றிக்கே மாயையை மடுவித்து என்கிறத்தை மேலோடேசேர்த்து மனைவாழ்கையுள் நிற்பதோர் மாயையை மடித்தேன் என்று, தாம்பேசும்படி யசித்ஸம்பந்தத்தை யறுத்து "வானே தருவான்" என்று, தமக்குப் பரமபதத்தைத் தருவனாக உத்யோகித்த "கருந்திங்கட்பெரியன்" என்று, தம்மாலெண்ணி முடிக்கவொண்ணாதபடி தங்கார்யத்தில் த்வரிக்கிறவனே என்னுமாம். ஆகவிப்படி, தாம்சொன்னபடி செய்யக்கடவனாய் தம்மைக் கொண்டுபோகையிலே மிகவும்பாரிக்கிறவனே (இன்று அஹேதுகமாக வாதரித்தநீ அநாத்யநாதர ஹேதுசொல்லென்று மடியைப்பிடிக்க) ( ) "இன்றென்னைப் பொருளாக்கி" என்றுதுடங்கி இன்றிப்படி நிர்ஹேதுகமாக விஷயீகரித்த நீ அநாதிகால மென்னையுபேக்ஷித் திருந்ததுக்கு ஹேதுவையருளிச் செய்யவேணுமென்று மடியைப் பிடித்துக்கேட்க. இதுக்குச் சொல்லலாமுத்தரமென்னென்று தன்னிலேநிரூபித்து, இவையொன்று மிவர்க்குச் சொல்லத்தகாதன வென்று அவன்நிருத்தரனாய் நின்றமைனெடுக உபபாதிக்குமுர் மேல். ஈஶ்வரன் நிரூபித்த க்ரமந்தானிருக்கும்படி(இந்த்ரியகிங்கரராய்க் குழிதூர்த்துச் சுவைத்தஹன்றீர்

(க) தி - வா. ௧0. அ. ரு. (உ) ஷ - அ.

மூ. என்னில் அவையாவரையு மகற்றநீ வைத்தவை யென்பர், அதுதேஹயோகத்தாலே யென்னில் அந்நாள்நீதந்த சும டென்பர், முன்செய்த முழுவினையாலே யென்னில் அது துயரமே யுற்றவிருவினையுன் கோபமுமருளுமென்பர்,

என்னில் - என்றுசொன்னால், அவை - அந்தபஞ்சேந்த்ரியங்கள், யாவ ரையும் - ஸமஸ்தங்களையும், அகற்ற - உன்னைவிட்டுப்பிரிகைக்கு, நீவை த்தவை - உன்னாலே வைக்கப்பட்டவை யன்றோ, என்பர் - என்றுத்தர மருளிச் செய்வர், அது - அந்தபஞ்சேந்த்ரியவஶ்யதை, தேஹயோகத் தாலே - உம்முடைய கர்மார்ஜிதமான தேஹஸம்பந்தாயத்தமன்றோ, என்னில் - என்றீஶ்வரனருளிச்செய்தால், அந்நாள் - அந்தஸ்ருஷ்டிகா லத்திலே, நீதந்த - உன்னாலே தரப்பட்ட, சுமடு - சும்மாடுபோலே ஸக லபாப பாரங்களையும் சுமைக்குக்கு ஸாதநமான தேஹம், என்பர் - என் றருளிச்செய்வர், முன் - முற்காலத்தில், செய்த - உன்னால் செய்யப் பட்ட, முழுவினையாலே யென்னில் - நீர் செய்த பரிபூர்ணபுண்யபாபங் களாலே யென்னில், அது - அப்புண்யபாபங்களும், துயரமேயுற்ற - துக்கமாத்ரத்தையேயுற்றதாய், இருவினை - இரண்டுவித புண்யபாப ரூபகர்மங்களும், உன்கோபமுமருளுமென்பர் - உன் நிக்ரஹாநுக்ரஹ ரூபங்களென் றருளிச்செய்வர்,

என்னில்? அவையாவரையு மகற்ற நீ வைத்தவை என்பர்) (௧) "ஶ்லோகம்" "யூயமிந்த்ரியகிங்கரா:" என்கிறபடியே அநாதி காலமிந்த்ரிய வஶ்யராய், (௨) "தூராக்குழிதூர்த் தெனை நாளகன்றிரு ப்பன்" (௩) "அற்பசாரங்க ளவைசுவைத்தகன் றொழிந்தேன்" என்று, துஷ்பாரங்களான இந்த்ரியங்களுக் கிரையிட்டு எத்தனைகாலமுன்னை யகன்றிருக்கக் கடவேன், அல்பரஸங்களா யநேகவிதங்களா யிருக்கிற ஶப்தாதி விஷயங்களைப்பசையுண்டாக ப்ரமித்து எதிர்பசை கொடுத்து புஜித்து ஸர்வஶக்தியான உனக்குமெட்டாதபடி ஸம்ஸாரத்திலே கை கழியப்போனேனென்று நீர்தாமே பேசும்படியான ஶப்தாதிவிஷயப்ரா வண்யமன்றோ நீரநாதிகாலம் ஸம்ஸரிக்கைக்கு ஹேது வென்னில்; (௪) "ஓரைவர்யாவரையும் மயக்க நீவைத்த" என்றும் (௫) "அக ற்ற நீவைத்த மாயவல்லைம்புலன்கள்" என்றும், விஷயங்களும் அவற் றில் ப்ராவண்ய ஹேதுவான விந்த்ரியங்களும், எத்தனையேனுமளவுடை யாரேயாகிலும் கலங்கப்பண்ணி, நீவேண்டாதாரை யகற்றுகைக்கு, வைத்தவையன்றோவென்பர். (அது தேஹ யோகத்தாலே, யென் னில்; அந்நாள் நீதந்தசுமடென்பர்) அந்த இந்த்ரிய வஶ்யதைக்கடி குணத்ரயாத்மகமான ஶரீர ஸம்பந்தமன்றோ வென்னில்; (௬) "அந் நாள் நீதந்தவாக்கை" (௭) "அது நிற்கச் சுமடுதந்தாய்" என்று அதுவும் தந்தாய் நீயன்றோ வென்பர். (முன்செய்த முழுவினையாலே யென்னில்? அது துயரமேயுற்ற விருவினையுன்கோபமு மருளுமென்பர்)

(௧) வில்லிபுத்தூர் பகவர்வார்த்தை. (௨) தி - வா. ரு. அ. சு. (௩) ஷை ௩. ௨. சு. (௪) ஷை-எ. ௧. அ. (௫) ஷை-ரு. எ. அ. (௬) ஷை-௩. ௨. ௧. (௭) ஷை-எ. ௧. ௧0.

மூ. ஈவிலாதமதியிலேனென்றும் உம்மதன்றே கர்த்ருத்வபோக்த்ருத்வங்களென்னில் ஆங்காரமாய்ப்புக்குச் செய்கைப் பயனுண்பேனும் கருமமும்கருமபலனுமாகிய நீ கர்த்தா போக்தாவென்பர்,

ஈவிலாத - முடிவில்லாத பாபத்தைப்பண்ணினேனென்றும், மதியிலேனென்றும் - புத்தியில்லாதவனென்றும், கர்த்ருத்வபோக்த்ருத்வங்கள் - கர்த்ருத்வபோக்த்ருத்வங்களானவை, உம்மதன்றே - உம்முடையதன்றே, என்னில் - என்றுசொன்னால், ஆங்காரமாய்ப்புக்கு - தானேயபிமானியாயிவர்சரீரத்திலே ப்ரவேசித்து, செய்கைப்பயனுண்பேனும் - எல்லாகர்மங்களின் பல போக்தாவும் தானே யென்றும், கருமமும் கருமபலனுமாகிய - புண்ய பாபரூப கர்மங்களும் கர்மபலங்களுமாகிய, நீ- நீயே, கர்த்தா - அநுஷ்டாதாவும், போக்தா - கர்மபலத்தையநுபவிப்பானும், என்பர் - என்றுசொல்லுவர்,

அந்த தேஹஸம்பந்தத்துக்கடி, (க) "முன்செய்த முழுவினை" என்று நீர்சொன்ன அநாதிகாலார்ஜித புண்யபாபரூபகர்மமன்றே வென்று சொல்லுவோமாகில்; (௨) துயரமேதருதுன்பவின்ப வினைகளாய்" (௩) "உற்ற விருவினையாய்" என்று அசேதனமுமாய் அஶக்தமுமாய் நஶ்வரமுமா யிருந்துள்ள புண்யபாபரூபகர்மங்கள் உன்னுடைய நிக்ரஹாநுக்ரஹ ரூபேண பலிக்குமவையாகையாலே, கர்மமும் நீயிட்ட வழக்கென்பர். (ஈவிலாத மதியிலேனென்று மும்மதன்றே கர்த்ருத்வ போக்த்ருத்வங்களென்னில்? ஆங்காரமாய்ப் புக்குச்செய்கைப்பயனுண் பேனும் கருமமும் கருமபலனுமாகிய நீ கர்தாபோக்தாவென்பர்) (௪) "ஈவிலாத தீவினைகளெத்தனைசெய்த னன்கொல்" என்று முடிவின்றிக்கே யிருக்கிறகொடிய பாபங்களிலே எத்தனை பண்ணினேனென்றும், (௫) "மதியிலேன் வல்வினையே மாளாதோ" என்று, நான் பண்ணின பாபமேயோ அநுபவித்தாலும் மாளாததென்றும் நீரே சொல்லுகையாலே, கர்த்ருத்வமும் போக்த்ருத்வ மும்மதன்றேவென்று சொல்லுவோமாகில்? (௬) "தானுங்காரமாய்ப் புக்குத்தானேதானேயானன்" என்று, தானபிமானியாய்ப்புக்கு ஆத்மாத்மீயங்களிலென்க்குண்டான வபிமாநத்தைத் தவிர்த்துத்தானே யபிமாநியானனென்றும், (௭) செய்கைப்பயனுண்பேனும்யானே" என்று, நம்முடையபடியை யநுகரித்துச் சொல்லுகிறவிடத்திலே ஸகல கர்மங்களினுடைய பலபோக்தாவும் நானே என்றும், (௮) "கருமமும் கருமபலனுமாகிய" என்று புண்ய பாபரூபமான கர்மங்களுக்கும் கர்ம பலங்களுக்கும் நியாமகனென்றும் சொன்னவராகையாலே, கர்ம கர்த்தாவும் தத்பலபோக்தாவும் நீயிட்ட வழக்காகையாலே, கர்தாவும் போக்தாவும் நீயே என்பர். (கரு

(க) தி - வா. க. ௪. ௨. (௨) ஷை - ௩. ௬. ௮. (௩) ஷை - ௧0. ௧0. ௮. (௪) ஷை - ௪. ௭. ௩. (௫) ஷை - ௧. ௪. ௩. (௬) ஷை - ௧0. ௭. ௧௧. (௭) ஷை - ௫. ௬. ௪. (௮) ஷை - ௩. ௫. ௧0.

மூ. யானே யெஞ்ஞான்றுமென்றத்தாலே யென்னில் அயர்ப்பாய்ச்சமயமதிகொடுத் துள்ளம்பேதஞ்செய்கை உன்தொழிலென்பர், ஜீவப்ரக்ருதிசைதந்யம் நீங்கும் வ்ரதஹேது, அகமேனியிலழுக்கறுக்கை யபிமாநக்ருத்யம்,

யானே - யானே யென்றனதே என்றும், எஞ்யான்றுமென்றத்தாலே - எஞ்யான்று மெங்குமென்றுதுடங்கி மெய்ஞானமின்றியென்று நீர் சொன்னத்தாலே, என்னில் - என்றுசொன்னல, அயர்ப்பாய் - மறப்பாய், ஸமயமதிகொடுத்து - மாட்டாதபலஸமயவிஷயமதிகொடுத்து, உள்ளம் பேதம்செய்கை - ஆஸுரப்ரக்ருதிகளின் ஹ்ருதயத்தைபேதிக்கை, உன் தொழில் - உன்வ்யாபாரம், என்பர் - என்றுசொல்லுவர், ஜீவ - ஜீவாத்மாவினுடைய, ப்ரக்ருதிசைதந்யம் - ப்ரக்ருதி ஸம்பந்தாயத்தஜ்ஞாநம், நீங்கும் வ்ரதஹேது - அவனைவிட்டுப் பிரிகைக்குக் காரணமாயிருந்துள்ளது, அகமேனியிலழுக்கறுக்கை - அந்தரங்க ஶரீரத்தைப்பற்றிக்கிடக்கிற ஜீவனுடைய வஜ்ஞாநமாகிற வழுக்கைப்போக்கடிக்கை, அபிமானிக்ருத்யம் - அபிமாணியான உன்கர்த்தவ்யம்,

மமும் கருமபலநுமாகிய ) என்கிற வித்தால் கர்மகர்த்ருதத்பலபோக்த்ருதாததீந்யம் விவக்ஷிதமாகையாலேயாய்த்றிவ்விடத்தி லிவரிச்சங்கை யெடுத்தது. (யானே எஞ்ஞான்று மென்றத்தாலே யென்னில்? அயர்ப்பாய்ச் சமயமதிகொடுத்து உள்ளம்பேதஞ்செய்கையுன்தொழிலென்பர்) ( க ) "யானே யென்னை யறியகிலாதேயானே யென்றனதே யென்றிருந்தேன்" என்றும், ( உ ) "எஞ்ஞான்றும்" என்று துடங்கி ( ௩ ) "மெய்ஞ்ஞானமின்றி வினையியல் பிறப்பழுந்தி" என்றும், நீர் சொன்ன அஜ்ஞாநாந்யதாஜ்ஞாநாதிகளாலேகாணுமுமக்கந்த காமகர்த்ருத்வபலபோக்ருத்வங்களுண்டாய்த்தென்று சொன்னேமாகில்; (௪) "அயர்ப்பாய்த் தேற்றமுமாய்" ( ௫ ) "மாட்டாதபலசமயமதி கொடுத்தாய்" ( ௬ ) "உள்ளம் பேதஞ்செய்திட்டு யிருண்ட உபாயங்களும்" என்று, ஜ்ஞாநாஜ்ஞாநங்க ளிரண்டும் நீயிட்ட வழக்காகையாலே, அஜ்ஞாநாந்யதாஜ்ஞாநாதிகளை விளைக்கையு முன்க்ருத்யமென்பர். (ஜீவப்ரக்ருதி சைதன்யம் நீங்கும் வ்ரதஹேது அகமேனியி லழுக்கறுக்கை யபிமான க்ருதயம்) ( எ ) "யாதானுமோரக்கையில்புக்கு" இத்யாதிப்படியே ஸூக்ஷ்மப்ரக்ருதி விசிஷ்டனாய்க்கொண்டு ஸ்வகர்மாநுகுணமாக நாநுவித சரீரங்களிலே ஒன்றைவிட்டொன்றைப்பற்றித்தடுமாறித்திரியும் ஜீவனுக்கு தேஹேந்ரியத்வேன போக்யத்வேநாவஸ்திதையானப்ரக்ருதியைப்பற்றிக் கிடக்கிற சைதந்யம் ( அ ) "யாதானும்பற்றி நீங்கும் விரதம்" என்கிறபடியே, ப்ரக்ருதி ப்ராக்ருதங்களிலே ஏதேனுமொன்றை யவலம்பித்து நம்மைவிட்டகலும் வ்ரதத்துக்கு ஹேதுவா

(க) தி - வா. உ. க. க. (உ) ஷை - ௩. உ. எ. (௩) ஷை. (௪) ஷை - எ. அ. ௬. (௫) ஷை - ௩. க. ௪. (௬) ஷை - ௫. க0. ௪. (எ) தி. வி. ௬௫. (அ) ஷை.

மூ. தான் நல்கும்ஸம்பந்தம் நிருபாதிகம், ஸௌஹார்த்தம் எஞ்ஞான்றும் நிற்கும், பிணக்கிப்பேதியாதஜ்ஞாநாதி வைகல்யமில்லை,

தான்நல்கும் - தானேஸ்நேஹித்து ரக்ஷிக்கைக்கடியான, ஸம்பந்தம் - ஸம்பந்தம், நிருபாதிகம் - நிஷ்காரணமாயுண்டானது, ஸௌஹார்த்தம்- ஶோபநஹ்ருதயவத்வம், எஞ்ஞான்றும் - என்றைக்கும், நிற்கும் - உள்ளது, பிணக்கி - விவதித்து, பேதியாத - வைபரீத்யமில்லாத, ஜ்ஞாநாதி- ஜ்ஞானம்முதலிய கல்யாண குணங்களுடைய, வைகல்யம் - ஶூந்யதை, இல்லை - உள்ளதல்ல,

யிருப்பதொன்று ( க ) "அகமேனியொழியாமே" என்று, நமக்கந்தரங்கசரீரமான விவ்வாத்மாவைப்பற்றிக் கிடக்கிற ப்ரக்ருதிஸம்பந்தரூபமாலிந்யத்தைப் போக்குகை இவ்வாத்மாவுக்கபிமானியான நம்முடைய க்ருத்யமாயிருந்தது. அன்றிக்கே (ஜீவப்ரக்ருதி) இத்யாதிக்கு ( உ ) "ఇతస్త్వన్యాం ప్రకృతిం విద్ధి మే పరామ్। జీవభూతాం మహాబాహో" "இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம்வித்திமேபராம் । ஜீவபூதாம்மஹாபாஹோ" என்று, சொல்லப்பட்ட ஜீவனாகிறப்ரக்ருதியில் கிடக்கிற சைதந்யம், ( ங ) "யாதானும்பற்றி நீங்கும்" என்கிறபடியே, ப்ரக்ருதிப்ராக்ருதங்களிலேதேனுமொன்றைப்பற்றிநம்மைவிட்டஹலும் வ்ரதஹேதுவாயிருப்பதொன்று; அசித்தும் சரீரமாயிருக்கச்செய்தே. அப்படியன்றிக்கே ( ச ) "அகமேனி" என்று, நமக்கந்தரங்க ஶரீரமாயிருக்கிற விவ்வாத்ம வஸ்துவில் கிடக்கிற ப்ரக்ருதி ஸம்பந்தரூபமான மாலின்யத்தைப் போக்குகை, இதுக் கபிமானியான நம்முடைய க்ருத்யமாயிருந்ததென்னவுமாம். (தான்நல்கும்ஸம்பந்தம் நிருபாதிகம்) (ரு) "நல்கித்தான் காத்தளிக்கும் பொழிலேழும் வினையேற்கே நல்கத்தானாகாதோ நாரணனைக்கண்டக்கால்" என்னும்படி, நாம்ஸ்நேஹ பூர்வகமாக ரக்ஷிக்கைக்கடியான நாராயணத்வப்ரயுக்தமான ஸம்பந்தம் நிருபாதிகமாயிருந்தது. (ஸௌஹார்த்த மெஞ்ஞான்றும் நிற்கும்) ( சு ) "தனிமாப் புகழேயெஞ்ஞான்றும் நிற்கும்படியாத் தான்தோன்றி" என்று, நாமரூபங்களையிழந்து தமோபூதமான ஸமயத்திலே யிவற்றையுண்டாக்க நினைத்த அத்விதீயமான மஹாகுணமென்கிற ஸௌஹார்தம், காலதத்வமுள்ள தனையும் ஒருவன்பண்ணு முபகாரமேயென்று அத்தையே யநுஸந்திப்பார் ஹ்ருதயத்திலே நிற்கும்படியாக வென்கையாலே, அந்த ஸம்பந்தமடியாக ஸர்வர்க்கும் நன்மையை யாஶாஸிக்கைக்கடியான ஸௌஹார்தகுணத்திலும் கண்ணழிவு சொல்லப்போகாது. (பிணக்கிப் பேதியாதஜ்ஞாநாதிவைகல்யமில்லை) ( எ ) "பிணக்கியாவையும் யாவரும் பிழையாமல் பேதித்தும் பேதியாததோர் கணக்கில் கீர்த்திவெள்ளக் கதிர்ஞானமூர்

(க) தி - வா. கூ. எ. க0. (உ) ஸ்ரீகீ. எ. ரு. (ங) தி. வி. கூரு. (ச) தி-வா. கூ. எ. க0. (ரு) ஷை - க. ச. ரு. (சு) ஷெ - அ. க0. எ. (எ) ஷெ - கூ. உ. அ.

மூ. ஏகமூர்த்தியல்லல்மாய்த்தயத்னபலித்வங்கள் நம்மது நாம்
தனிநின்ற ஸ்வதந்த்ரரென்றவனே யறிந்தனமே என்றும்
ஸர்வஜ்ஞரிவர், நெறிகாட்டியருகுஞ்சுவடும்

ஏகமூர்த்தியில் - ஏகமூர்த்தியென்கிறபாட்டிலே, அல்லல்மாய்த்த - துக்கத்தைப்போக்கின, யத்ந - யத்நம், பலித்வங்கள் - பலபாக்த்வம், இவைகள், நம்மது - நம்முடையது, நாம் - நாமானவர், தனி நின்ற - அத்விதீயமாகநின்ற, ஸ்வதந்த்ரர் - பராதீனரன்றிக்கே யிருக்குமவர், என்று - என்று, அவனேயறிந்தனமே யென்னும் - அவனையே யறிந்தோமென்று சொல்லும்படியான, ஸர்வஜ்ஞரிவர் - இவர் ஸர்வஜ்ஞரா யிராநின்றார், நெறிகாட்டி - நெறிகாட்டி என்கிறபாட்டிலும், அருகும் சுவடும் - அருகும் சுவடுமென்கிறபாட்டிலும்,

த்தியனாய்" என்னும்படி ஸம்ஹ்ருதி ஸமயத்திலே ஸகல சேதநாசேதநங்களையும் நாமரூப விபாக ரஹிதமாம்படி கலசி, ஸ்ருஷ்டிதசையிலே ஒருவர்கர்மம் ஒருவர்க்குத் தட்டாதபடி பிரித்து ஸ்ருஷ்டித்தும், தமக்கொருபேத மின்றிக்கே யிருக்கும் ஜ்ஞாநாதிகளையுடைய நமக்கு ஜ்ஞாந சக்திகளில் குறைவுசொல்ல விடமில்லை (ஏகமூர்த்தியில் அல்லல்மாய்த்தயத்னபலித்வங்கள் நம்மது) (க) "ஏகமூர்த்தி" என்கிற பாட்டிலே, காரணங்களோடு கார்யங்களோடு வாசியறஸகலத்தையும் ஸ்ருஷ்டித்து அவற்றினுடைய தாரணார்த்தமாக அந்தராத்மாவாய் ஸ்ருஷ்டமான பதார்தங்களினுடைய ரக்ஷணத்துக்காக க்ஷீரார்ணவத்திலே கண்வளர்ந்தருளி, இப்படி ஸர்வகாலமு மொருபடிப்பட்ட அநுக்ரஹ சீலநாகைக்கடியானப்ராப்தியை யுடையையான நீ உன்திருமேனிக்குவேண்டும் போகோபகரணங்களெல்லாம் "பூசும்சாந்திற்படியே" என்பக்கலிலேயுண்டாக்கி நிர்துக்க னுனயே, என்று இவர்பேசினபடியே, இவரைப் பெருகைக்குயத்னம் பண்ணுகையும்,பெற்றாலுகக்கும் பலித்வமும் நமக்கேயுள்ள தொன்றாயிருந்தது. (நான் தனிநின்ற ஸ்வதந்த்ரரென்று அவனே யறிந்தனமே என்னும் ஸர்வஜ்ஞரிவர்)(உ) "தனிநின்றசார்விலாமூர்த்தி" என்று, கார்யவர்கமழிந்தவன்று ஸச்சப்தவாச்யனாய் நின்று, (ங) "ருத்ரம்ஸமாச்ரிதா தேவா:" "ருத்ரம்ஸமாச்ரிதா தேவா:" இத்யாதிப்ரக்ரியையாலே உனக்கோரபாச்ரய மில்லாதபடி யிருக்கிறவனென்கையாலே நாம்வேண்டிற்றைச் செய்யும்படி நிரங்குசஸ்வதந்ரனென்று அறுதியிட்டு (ச) "அவனே யகல்ஞாலம்படைத்திடந்தான்" என்றுதுடங்கி (ரு) "அவனேமற்றெல்லாமு மறிந்தனமே" என்று, ஸகலகார்யங்களிலும் ஸஹகாரிநிரபேக்ஷனாய் ஸ்வாதீன ஸகலசேதனாசேதனஸ்வரூபஸ்திதிகனாயிருக்குமவனென்றறிந்தோம் என்று சொல்லும்படியான ஸர்வஜ்ஞராயிருப்பவ ரொருவரிவர் (நெறிகாட்டி அருகுஞ் சுவடும்

(க) தி - வா. ௪. ௩. ௩. (உ) பெரியதி - அ. எக. (ங) (ச) தி - வா. ௯. ௩. ௨. (ரு) ஷை.

மூ. போலேயிதுவும் நிருத்தரமென்று கவிழ்ந்துநிற்க, அமந்த்ரஜ்ஞோத்ஸவகோஷம்போலே யேறப்பெறுகிறவெழுச்சியைஸூசிப்பிக்கிற மேகஸமுத்ர பேரீ கீத காஹள ஶங்காசீஸ்து திகோலாஹலஞ் செவிப்பட்டவாறே ஸாக்ஷாத்கரித்தபரமப்ராதிக்கு

போலே - அருளிச்செய்தாப்போலே, இதுவும் - இந்த ப்ரஶ்நமும், நிருத்தரமென்று - நிர்ஹேதுகமாகையாலே உத்தரம் சொல்லப்போகாதென்று, கவிழ்ந்து - தலையை வணக்கிக்கொண்டு, நிற்க - இருக்க, அமந்த்ரஜ்ஞோத்ஸவகோஷம்போலே - மந்த்ரம் தெரியாத வாத்யாரால் நடத்தப்பட்ட உத்ஸவத்தில் வாத்யகோஷத்தால் பூர்த்திபண்ணுமாப்போலே, ஏறப்பெறுகிற - நானேறப்பெருகின்றேனென்று தம்வாயாலே சொல்லும்படியான, எழுச்சியை-உச்ராயத்தை, ஸூசிப்பிக்கிற - காட்டிக்கொடுக்கிற, மேக - மேகங்கள், ஸமுத்ர - ஸமுத்ரங்கள், பேரி - பேரிவாத்யங்கள், கீத - கான ஶப்தங்கள், காஹள - காஹளங்கள், ஶங்க-ஶங்கங்கள், ஆசீ: - ஆசீர்வாதம், ஸ்துதி - ஸ்தோத்ரம், இவைகளாலேயுண்டான, கோலாஹலம் - களகளஶப்தம், செவிப்பட்டவாறே - திருச்செவிசாத்தினவாறே, ஸாக்ஷாத்கரித்த - மநஸ்ஸாலே காணப்பட்ட, பரமப்ராப்திக்கு - மானஸமன்றிக்கே பாஹ்யஸம்ஶ்லேஷமாகைக்காக,

போலே இதுவும் நிருத்தரமென்று கவிழ்ந்துநிற்க) (க) "நெறிகாட்டி நீக்குதியோ" என்கிறபாட்டிலும் (உ) "அருகும்சுவடும்தெரிவுணரோம்" என்கிறபாட்டிலும் உபாயாந்தரங்களைக்காட்டி அகற்றப்பார்க்கிறாயோ, உன்னுடைய விலக்ஷணமான திருமேனியை நீயேகாட்டி யநுபவிப்பிக்கிறாயோ? பழையதாக வஜ்ஞனாய்ப் போருகிறவென்னை என்செய்வதாக நினைத்தாய், இத்தையருளிச் செய்யவேணுமென்றும், உம்முடையருகு வந்தாலும் உம்முடையசுவடறிதல்செய்யாதிருக்க உம்மளவிலே ஸ்நேஹமானதறமிக்கு வாராநின்றது. இதுக்கடியருளிச்செய்ய வேணுமென்றும், முன்பிவர்கேட்டவை நிருத்தரமானாப்போலே இப்போதுகேட்டவிதுவும், நிருத்தரமென்று நிலத்தைக் கீறுக்கவிழ்ந்து நிற்க (அமந்த்ரஜ்ஞோத்ஸவ கோஷம்போலே யேறப்பெறுகிற வெழுச்சியை ஸூசிப்பிக்கிற மேகஸமுத்ர பேரீகீதாகாஶஹள ஶங்காசீஸ்துதி கோலாஹலம் செவிப்பட்டவாறே ஸாக்ஷாத்கரித்த பரமப்ராப்திக்கு) உத்ஸவங்களில் சடங்குகாட்டுகிற உபாத்யாயன் மந்த்ரம் தோற்றாவிட்டால் கொட்டச்சொல்லி வாத்யகோஷத்தாலே யத்தைமறைத்துவிடுமாப்போலே தான் நிருத்தரனானமைதோற்றாதபடி மறைக்கைக்காக இவனாலே ப்ரவர்த்திதமாய் (ங) "நானேறப்பெறுகின்றேன்" என்று, தாம் கீழ்ச்சொன்னபடியே பரமபதத்திலே யேறப்போகிற வெழுச்சியை ஸூசி

(க) பெரியதி. அ. கு. (உ) ஷை - அ. (ங) தி - வா. கo. கு. ரு.

மூ. தலைமிசையாய்வந்த தாள்களைப் பூண்டுபோகாமல் தடுத்து திருவாணையிட்டு கூசஞ்செய்யாது சைதிப்பிழை

தலைமிசையாய்வந்த - தந்திருமுடியாலே யாம்படிவந்த, தாள்களை - திருவடிகளை, பூண்டு - கட்டிக்கொண்டு, போகாமல் - பேராமலிருக்கும்படி, தடுத்து - நிரோதித்து, திருவாணையிட்டு - அவனுக்குநிரோதமாம்படி பெரியபிராட்டியார்மேலே யொட்டிட்டு, கூஸம்செய்யாது - ஸங்கோசலேசமில்லாமல் பண்ணினவுன்னுலே, செய்திப்பிழை - இவ்வபராதம் செய்யப்பட்டது,

ப்பியாநின்றுள்ள (க) "சூழ்விசும்பணிமுகில் தூரியம்முழக்கின ஆழ்கடலலைதிரைகையெடுத்தாடின" என்று, ராஜகுமாரன் போம்போது தூர்யாதிமங்களகோஷம் பண்ணுவாரைப்போலே பரமபதத்துக்குப் போமவர்களைக்கண்ட ப்ரீதியாலே முழங்குவது கோஷிப்பதாகாநிற்கும். மேகஸமுத்ரகோஷங்களாகாநிற்கிற பேரிகளுடையவும் (உ) "கீதங்கள்பாடினர் கின்னரர் கெருடர்கள்" என்கிற, கீதங்களினுடையவும் (ந) "காளங்கள் வலம்புரிகலந்தெங்குமிசைத்தனர்" என்கிறகாஹள சங்கங்களினுடையவும் (ச) "வாளொண்கண் மடந்தையர் வாழ்த்தினர்" என்கிற, ஆசீஸ்ஸினுடையவும் (ரு) "துடர்ந்தெங்கும் தோத்திரம்சொல்லினர்" என்கிற ஸ்தோத்ரத்தினுடையவும், ஸம்மிஶ்ரகோஷமாகிற கோலாஹலம் செவிப்பட்டவாறே அர்சிராதி கதியையும் ஆதிவாஹிகஸத்காரத்தையும் திவ்யதேஶப்ராப்தியையும் அங்குள்ளாருடைய பஹுமானத்தையும் ஆநந்தமயமான வாசஸ்தாநத்திலிருப்பையும் ஸ்வசரண கமல ப்ராப்தியையும் பெற்றாராகப் பேசும்படி ஸாக்ஷாத்கரித்த பரமப்ராப்திக்கு (தலைமிசையாய் வந்த தாள்களைப்பூண்டு போகாமல் தடுத்துத் திருவாணையிட்டு) அப்படி ஸாக்ஷாத்கரித்த பரமப்ராபத்தி மானஸாநுபவமாத்ரமாய் பாஹ்யஸம்ஶ்லேஷ யோக்யைமல்லாமையாலே அத்தைப்பெருகைக்காக (சு) "தலைமிசையாய்வந்திட்டினி நான் போகலொட்டேன்" என்று, (எ) "தலைமேல் புனைந்தென் சரணங்கள்" (அ) "தலைமேல்தாளிணைகள்" என்கிறபடியே, மானஸாநுபவவைஶத்யத்தாலே தம்தலைமேல் ஆகும்படிவந்த திருவடிகளை கட்டிக்கொண்டுபோகாமல் தடுத்து (கூ) "திருவாணை நின்னாணை கண்டாய்" என்று, அவனுக்கு மறுக்க ஒண்ணாதவாணையிட்டு யிப்படி யாணையிட்டவாறே சேஷபூதரான நீர் சேஷியான நாம் செய்தபடி கண்டிருக்குமத்தனையொழிய நம்மையாணையிட்டுத் தடுக்கை யும்முடைய ஸ்வரூபத்தோடு விருத்தமாகையாலிது பெருவாணை காணுமென்ன (கூசஞ்செய்யாதுசெய்திப்பிழை) (கo), "கூசஞ்செய்யாது கண்டாய்" என்று, ஸர்வஜ்ஞனான நீயென் பூர்வ

(க) தி-வா. கூ. க. க. (உ) ஷை-கo. கூ. (ரு). (ந) ஷை-சு. (ச) ஷை. (ரு) ஷை-எ. (சு) ஷை - கo. க. க. (எ) ஷை - ச. ச. (அ) ஷை - கo. சு. சு. (கூ) ஷை - கo. உ. (கo) ஷை.

மூ. பற்றுக்கொம்பற்ற கதிகேடு போரவிட்டபெரும்பழி புறம் போனல் வருமிழவு உண்டிட்டமுற்றீம்பு அன்புவளர்ந்த அடியுரம்

பற்றுக்கொம்பு - அவலம்பந ஸாதநகொள்கொம்பு, அற்ற - இல்லாத, கதிகேடு - அநந்யகதி, போரவிட்ட - ஸம்ஸாரத்தில் நான்நடையாடும் படி என்னை உபேக்ஷித்த, பெரும்பழி - பெரியகுற்றம், புறம் - பாஹ்யங்களான ஶப்தாதி விஷயங்களில், போனல் வருமிழவு - மண்டினல்வரக் கடவதான க்லேஶம், உண்டிட்ட - நிஶ்ஶேஷமாக புஜிக்கையாகிற, முற்றீம்பு - ப்ரதமாபராதம், அன்புவளர்ந்த - ஸ்நேகம் வளருகைக்கு, அடியுரம் - காரணமான பெரியபிராட்டியின் தார்ட்யம்,

வ்ருத்தத்தால்வந்த அயோக்யதைபார்த்துக் கூசிவாசிவையாதே யுன்னேடு ஆத்மபேதமில்லாதபடி யென்னை பரிக்ரஹித்தாய், ஆனபின்புஉன்னதன்றே செய்திப்பிழையென்றும் (பற்றுக்கொம்பற்ற கதிகேடு) (க) "ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலல்லாலறிகின்றிலேன்யான்" என்று, கொடிகள் கொம்பையொழியத் தரிக்கமாட்டாதாப்போலே, என் ஆத்மாவுக்கு ஜீவனஹேதுவாயிருப்பதொன்றுன்னையொழிய வேறுகாண்கிறிலேன், ஆதலால் நான்(உ) "அநந்யகதி:" "அநநந்யகதி:" என்றும், (போரவிட்டபெரும்பழி) (ந) "எம்பரஞ்சோதிக்கலுற்றென்னைப் போரவிட்டிட்டாய்"என்று,என்கார்யம் நீசெய்வதாகவேறிட்டுக்கொண்டு உன்பக்கல் நின்றும் பிரித்து உன்குணங்கள் நடையாடாத ஸம்ஸாரத்திலேதள்ளியுபேக்ஷித்தாய்,இதுனக்குபரிஹரிக்கவொண்ணுத பெரும்பழியன்றேவென்றும், (புறம்போனல் வருமிழவு) (ச) "போரவிட்டிட்டென்னை நீ புறம்போக்கலுற்றால்" பின்னையாருமைச்கண்டெத்தை யந்தோவென்தென்பதன்யானென்பதென்" என்று, உன் பக்கல்நின்றும் பிரித்து அநன்யகதியானவென்னை ஸ்ருஷ்டியென்று துடங்கி, இவ்வளவும்புகுரநிறுத்தின நீ என்கார்யம நான் செய்வேனுகப்பார்த்து என்னையுபேக்ஷித்தால் ஸர்வசக்தியான நீ யனுதரித்தபின்பு அசக்தனன நான் எந்த உபாயத்தைக்கொண்டு என்ன புருஷார்த்தத்தை ஸாதிப்பது எனக்குப் பரிகரமாயிருப்பதொன்றுண்டென்பதோரர்த்தமுண்டோ, ப்ருதக்ஸ்திதி யோக்யமாயிருப்பதொரு நானுண்டோ, ஐயோ? என்னை என்கையிலே காட்டித் தந்தாலிழவே யன்றே உள்ளதென்றும் (உண்டிட்டமுற்றீம்பு) (ரு) "எனதாவியை யின்னுயிரை மனக்காராமை மன்னியுண்டிட்டாயினியுண்டொழியாய்" என்று என்னுடைய ஹேயமான சரீரத்தையுமாத்மாவையும் மனஸ்ஸுக்கு பர்யாப்தி பிறவாமல் நிரந்தரமாக புஜித்த நீ துடங்கினதைக் குறைகிடக்கவிடாதே விஷயீகரித்துவிடாய் புக்தசேஷமாக்கின உன்னதன்றே முற்றீம்பென்றும் (அன்பு வளர்ந்தவடியுரம்) (சு) "கோலமலர்ப்பாவைக்கன்பாகிய வென்னன்பேயோ" என்று,

(க) தி - வா. ௧0. ௧0. ௩. (உ) ஸ்ரீஆ - ஸ்தோ. உ௧. (௩) தி - வா. ௧0. ௧0. ௫. (ச) ஷை-ரு. (ரு) ஷை - சு. (சு) ஷை - எ.

மூ. உயிருறவுமுதலளவுதுரக்கைகளாலேபெறுவாணை யல்லவாக்கினபேரவா குளப்படியாம்படிகடல்போன்ற வாதரத்தோடே சூழ்ந்துதாபங்களை ஹரித்தமையை வெளியிடுகிறார் பத்தாம்பத்தில்.

உயிருறவு - ஶரீர ஶரீரிபாவஸம்பந்தமும், முதலளவு - முதல் தனிவித்தேயென்கிற பாட்டளவாக, துரக்கைகளாலே - ஓட்டுகைகளாலே, பெறுவாணை யல்லவாக்கின - ஈஶ்வரனுக்குத் திருவாணையிட்டது யுக்தமென்னலாம்படியாக்கின, பேரவா-பெரியவாதரம், குளப்படியாம்படி-அத்யல்பமாம்படி, கடல்போன்ற வாதரத்தோடே - கடலோடொத்தவாதரத்தோடே, சூழ்ந்து - ஆழ்வாரைவ்யாபித்து, தாபங்களைஹரித்தமையை - தம்தாபங்களையெல்லாம் தீர்த்துக்கொண்டமையை, வெளியிடுகிறார் - இங்குள்ளாருக்குத் தெரியும்படி அருளிச்செய்கிறார், பத்தாம்பத்தில் - பத்தாவதாநுஸந்தகத்தில்.

பெரியபிராட்டியார் பக்கல் ஸ்நேஹாதிஶயத்தாலே அவள் பரிக்ரஹமானவென்பக்கலதிப்ரவணனானவனே! நான் அந்தப்புரபரிகரமன்றோ? என்பக்கலுனக்குண்டான அன்புக்கடியிவளாகையாலவள்பரிக்ரஹமென்கிறவடியுரமென்றும் உயிருறவு (க) "பெற்றினிப்போக்குவனோ வுன்னையென் தனிப்பேருயிரை" என்று அத்யந்தவிஸஜாதீயனுயிருந்துவைத்து எனக்கு தாரகனான உன்னைப்பெற்றுவைத்து இனிவிடுவேனோ? உயிரைவிட்டு உடல்தரிக்கவற்றோ? என்கிறசரீர சரீரிபாவஸம்பந்தமென்றும் (முதலளவு துரக்கைகளாலே பெறுவாணை யல்லவாக்கின பேரவா குளப்படியாம்படி) இப்படி (உ) "முதல்தனிவித்து" என்கிறபாட்டளவாக உத்தரோத்தரம் புகலறதுரக்கைகளினாலே தாமிட்டவாணை பெறுவாணை யல்லாமையை ஸாதித்து (ங) "அதனில்பெரிய என்னவா" என்று, தத்வத்ரயத்தையும் விளாக்குலைகொண்டு அவை குளப்படியாம்படிபெரியதான தம்முடைய பரமபக்தி குளப்படியாம்படி (கடல்போன்ற வாதரத்தோடேசூழ்ந்து தாபங்களைஹரித்தமையை வெளியிடுகிறார்பத்தாம்பத்தில்) அதாவது:— (ச) "என்னவாவறச் சூழ்ந்தாயே" என்று, கீழ்சொன்ன அபரிச்சேத்யமான தம்முடைய வபிநிவேசத்தையும் தன்னபிநிவேஶத்தையும் பார்த்தால் இதொரு குளப்படியும் அதொரு ஸமுத்ரமுமென்னும்படியான வபிநிவேசத்தோடேவந்து ஸம்ஶ்லேஷித்து, (ரு) "అంకే భరతమారోప్య ముదితః పరిషస్వజే" "அங்கேபரதமாரோப்யமுதிதஃபரிஷஸ்வஜே" என்று, மீண்டெழுந்தருளி பரதாழ்வானை மடியிலே வைத்தணைத்து, உச்சிமோந்து கந்தாப்போலே, தம்முடையவிடாய் கெடும்படியநுபவிப்பித்து, அலாபநிபந்தநபரிதாபத்தால் கூப்பிட்டவாயாலே (சு) "அவாவற்றுவீடு பெற்றகுருகூர்ச்சடகோபன்" என்று, பேசும்படி, (எ) "அவாவறச்சூழரியை" என்று, ஹரிஎன்கிற திருநாமத்துக்கநுகுணமாக தம்முடைய ஸகலதாபங்களையும் ஹரித்தமையை ஸர்வருமறியும்படி ப்ரகாசிப்பிக்கிறார் பத்தாம் பத்திலென்கை. *

(க) தி - வா. க0. க0. அ. (உ) ஷெ - கூ. (ங) ஷெ - க0. (ச) ஷெ - க0. (ரு) ஸ்ரீ - ரா - யு - கஙக. ஙகூ. (சு) தி - வா. க0. க0. கக. (எ) ஷெ.

மூ—(௧௧) உருமையோடே யுற்றேனுக்காதெழிந்தது நாடு திருந்த நச்சுப்பொய்கையாகாமைக்குப்ரபந்தம்தலைக்கட்ட வேர் சூடுவார்

(அ) உருமையோடே - இவரார்த்தராயர்த்தித்தபோதே, உற்றேனுக்காதொழிந்தது-பகவத்ப்ராப்தியாக்காதொழிந்தது, நாடுதிருந்த-ஜகத்தெல்லாமிவருபதேசத்தாலேபரிஷ்க்ருதமாகைக்கும், நச்சுப்பொய்கை (யாகாமைக்கு - ப்ரபதநாநந்தரமே இவரைமுக்தராக்கினல் யெல்லாரும் பீதராய் விஷஹ்ரதத்தில் போலேப்ரபதநத்தி லிழியார்களென்றும், ப்ரபந்தம் தலைக்கட்ட - ஜகதுபகாரார்த்த மாகத் திருவாய்மொழி தலைக்கட்டுகைக்காகவும், வேர்சூடுவார் - குருவேரென்கிற வாஸநாவத்ரவ்யம் சிரஸ்ஸிலே தரிப்பார்,

வ்யா. (௧௧) இனிமேல், இவர்ப்ரதமத்திலே (௧) "இந்நின்ற நீர்மையினியாமுருமை" என்று ஆர்தராய்ஶரணம் புக்கபோதேவிரோதி நிவ்ருத்திபூர்வகையான ஸ்வப்ராப்தியைப் பண்ணுவியாமல் இவ்வளவாக விவரைவைக்கைக்கடியேதென்னுமாகாங்க்ஷயிலே, வைக்கைக்கிஹேதுக்கள் பலவுமுண்டென்னு மத்தையும், அவையெல்லாவற்றிலும் முக்ய ஹேதுவின்ன தென்னுமத்தையு மருளிச்செய்கிறுர் (உருமையோடே என்று துடங்கி) அதாவது (௨) "பொய்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை இநியாமுருமை" என்று-அவித்யாகர் மவாஸநாருசி ப்ரக்ருதிஸம்பந்தங்க ளாகிற ப்ராப்திப்ரதிபந்தகங்களை விடுவிக்கவேணு மென்றுர்த்தராய்த்திருவடிகளிலேவிழுந்தபேக்ஷித்தபோதே அவற்றைப்போக்கி, (௩) "உற்றேனுகந்து பணிசெய்துன பாதம்பெற்றேன்" என்று, திருவடிகளைக் கிட்டிப்ரீதிபூர்வகமாகவடிமை செய்யப்பெற்றேனென்னும்படியாக்காமலிவரைவைத்தது தன்னுடைய ஸ்ருஷ்ட்யவதாராதிகளாலும் திருந்தாதஜகத்து இவருடைய உபதேஶத்தாலே (௪) "ஊரும்நாடும் உலகமும் தன்னைப்போல்" என்னும்படி, திருந்துகைக்காகவும், ஆர்தப்ரபதநாநந்தரம், முக்தராம்படி பண்ணில் ப்ரபத்தியை நச்சுப்பொய்கையோபாதியாக நினைத்து பீதராயிழிவாரில்லையென்று அதப்படியாகாமைக்காகவும், தானும் தன் விபூதியும் வாழும்படி இவரைக்கொண்டு கவிபாடுவிக்கத் துடங்கினப்ரபந்தம் பரிஸமாப்தமாகைக் காகவும், வேர்சூடுமவர்கள் பரிமளத்தில் லோபத்தாலே மண்பற்றுக்கழற்றுதாப்போலே, ஜ்ஞாநிகளை சரம சரீரத்தோடே வைத்து அநுபவிக்குமவனு கையாலே, இவருடைய ஜ்ஞாநப்ரேமபரிமளமெல்லாம் தோற்றும்படி யிருக்கிற விக்ரஹத்தில் தனக்குண்டான ஷிருப்பத்தாலேயுமென்று சொல்லுமவற்றிற் காட்டில் (௫) "இனியாமுருமை" என்றுதுடங்கி (௬) "இனிவளைகாப்பவரார்" (௭) "இனி

(௧) தி-வி. ௧. (௨) ஷை. (௩) தி - வா. ௧௦. அ. ௧௦. (௪) ஷி - ௬. ௭. ௨. (௫) தி - வி. ௧. (௬) ஷை - ௧௩. (௭) ஷை - ௬௨.

மூ. மண்பற்றுப்போலே யென்னுமவற்றிலுமினியினியென்று இருபதின்கால் கூப்பிடுமோர்த்தி அதிகாரிபூர்த்திக் கென்னு மது முக்யம்.

மூ—(கஉ) கமலக்கண்ண னென்று துடங்கி கண்ணுணின்றிறுதி

மண்பற்றுப்போலே - அதிலுண்டான மண்ணைக்கழற்ற தாப்போலே, என்னுமவற்றிலும் - என்று சொல்லுமதிற்காட்டிலும், இனி இனியென்று - இனி இனியென்கிற சப்தத்தோடே இருபதின்கால் - இருபதுதரம், கூப்பிடுமோர்த்தி - கூப்பிடப்பண்ணும் ஆர்த்திவிசேஷம், அதிகாரிபூர்த்திக்கென்னுமது - பூர்ணாதிகாரிக்கு வேண்டுமென்று சொல்லுமதுவே, முக்யம் - ப்ரதாநம்.

(அ) கமலக்கண்ணனென்று துடங்கி - புண்டரீகாக்ஷனென் கண்ணுக்கு விஷயமானுனென்று துடங்கி, கண்ணுணின்றிறுதி - கண்ணுள் நின்றகலானென்று என் கண்வட்டத்தினின்றும் கால்வாங்கமாட்டுகிறில னென்னுமளவாக,

யுன்திருவருளாலன்றிக் காப்பரிதால், (க) "இனியவர்கண்தங்காது, (உ) இனியுனதுவாயலகிலின் னடிசில்வைப்பாரை நாடாயே, (ங) "இனி எம்மைச்சோரேலே" (ச) "எந்நாள்யானுன்னை யினிவந்துகூடுவனே" (ரு) "எங்கினித்தலைப்பெய்வனே" (சு) "இனியென்னுரமுதேகூயருளாயே,(எ) "ஆவிகாப்பாரினியார் (அ) "நெஞ்சிடர்தீர்ப்பாரினியார்,(கூ) "இனியுன்னைவிட்டொன்று மாற்றகிற்கின்றிலேன் (க0) "தரியேனினி (கக) "இனியாரைக் கொண்டென்னுசாகோ" (கஉ) "அத்தனையா மினியென்னுயிரவன்கையதே (கங) "நன்னுரைக்குழாங்கள் காள்பயின்றென்னினி (கச) "இனி யிருந்தென்னுயிர் காக்குமாறென், (கரு) "இனிநான் போகலொட்டேன், (கசு) "உண்டிட்டாயினி யுண்டொழியாய் (கஎ) "உன்னைப்பெற்றினிப்போக்குவனே" என்றிப்படி, இருபதின்கால் கூப்பிடும்படியான ஆர்த்திபரம்பரையை விளைத்து பரமபக்தி பர்யந்தமான அதிகாரிபூர்த்தியை யுண்டாக்குகைக்காக வென்னுமதுவே ப்ரதானமென்கை, ஆர்த்தி அதிகாரிபூர்த்திக்கென்னுமது ஆர்த்தியால்வருமதிகாரிபூர்த்திக்கென்னபடி. பரமார்த்தியாலே யிறேப்ரபத்யதிகாரம் பரிபூர்ணமாவது, ஆகையாலே, ஹேத்வந்தரங்ளெல்லா மப்ரதானங்கள், இவரை வைத்ததுக்கு ப்ரதான ஹேதுவிதுவென்ற தாய்த்து.

வ்யா. (கஉ) அதிலிவ்வார்த்திக் கடியான பரபக்திபரஜ்ஞாந பரம பக்திகளின் தசைகள் எர்தெந்தத்திருவாய் மொழிகளென்னுமபேக்ஷையிலே அவற்றை யருளிச்செய்கிறுர் மேல் மூன்றுவாக்யத்தாலே. அதுதன்னில் பரபக்த்யவஸ்தை யின்னதென்கிறுர். (கமலக்கண்ணனெ

(க) தி - வா. க. ச. ச. (உ) ஷி - அ. (ங) ஷி-உ. க. க0. (ச) ஷி-ங. ௨. க. (ரு) ஷி - கூ. (சு) ஷி - ச. கூ. சு. (எ) ஷி - ரு. ச. உ. (அ) ஷி - ரு. ச. கூ. (கூ) ஷி - எ. க. (க0) ஷி - அ. எ. (கக) ஷி - எ. ங. ச. (கஉ) ஷி - கூ. ரு. உ. (கங) ஷி-க0. (கச) ஷி-கூ. உ. (கரு) ஷி-க0. க0. க. (கசு) ஷி-சு. (கஎ) ஷி-எ

மூ. கண்டேனென்றபத்துமுட்கண்ணாலேயாய்காண்பான வாவு தலதிலிரட்டியாகையாலே கண்டுகளிப்பவளவும்

கண்டேனென்றபத்தும் - பத்துச் சந்தையிலும்சொன்ன ஸாக்ஷாத்காரம், உட்கண்ணாலேயாய் - நெஞ்சென்னுமுட்கண்ணென்கிற அவாந்தரசக்ஷுஸ்ஸாலேயாய், காண்பானவாவுதல் - காணவாசைப்பட்டது, அதில் - அந்தபத்திலும், இரட்டியாகையாலே - இருபதிடத்தில் சொல்லுகையாலே, கண்டுகளிப்பளவும் - கண்டுகளிப்பக் கண்ணுள் நின்ற கலானேயென்னுமளவும்,

ன்றுதுடங்கி) அதாவது (க) "கமலக்கண்ணனென்கண்ணினுள்ளான்" என்று, புண்டரீகாக்ஷனானவன், என்கண்ணுக்கு விஷயமானனென்று துடங்கி, (உ) "கண்ணுள்நின்றகலான்" என்று என்கண்வட்டத்தினின்று கால்வாங்குகிறல னென்னுமதளவாக, (ங) "என் கண்ணனைநான் கண்டேனே, கலைப்பல்ஞானத்தென் கண்ணனைக் கண்டுகொண்டு, (ச) "நறுந்துழாயின்கண்ணியம்மா நானுன்னைக்கண்டு கொண்டே" (ரு) "கைதொழவிருந்தாயது நானும்கண்டேனே" (சு) "ஏரார்கோலந்திகழக்கிடந்தாய் கண்டேனெம்மானே" (எ) "திருவண்ணகர்கண்டேனே" (அ) "தேவர்கட்கெல்லாம் கருவாகிய கண்ணனைக் கண்டுகொண்டேனே" (கூ) "கண்டேன் கமலமலர்ப்பாதம்" என்று, இப்பத்துச்சந்தையாலுஞ் சொன்ன ஸாக்ஷாத்காரம்; நெஞ்சென்னு முட்கண்ணென்கிற ஆந்தரசக்ஷுஸ்ஸான மநஸ்ஸாலே யுண்டானதாய், (க0) "கையபொன்னாழிவெண்சங்கொடும் காண்பானவாவுவன் நான்" (கக) "அடியேன் காண்பானலற்றுவன்" (கஉ) "உம்மைக்காணுமாசையுள் நைய்கின்றுள்" (கங)"கூவுகின்றேன் காண்பான்,மெய்கொள்ளக்காணவிரும்புமென்கண்களே" (கச) "கூவியுங்காணப்பெறே னுனகோலமே" (கரு) "உன்னையென்னுள் கண்டுகொள்வனே" (கசு) "கோலமேனிகாணவாராய்" (கஎ) "தடவுகின்றே னெங்குக்காண்பன்" (கஅ) "பாவியேன் காண்கின்றிலேன் (ககூ) "உன்னைக்காண்பான்னனலப்பாய்" (உ0) "உலகம்பரவக்கிடந்தாய் காணவாராயே" (உக) "என்றுகொல்கண்கள்காண்பதுவே" (உஉ) "விளங்கவொருநாள் காணவாராய்" (உங) "உன்னைக்காண்பான் வருந்தியெனைநாளும்" (உச) "அலைகடல் கடைந்தவப்பனே காணுமாறருளாய்" (உரு) "ஒருநாள் காணவாராயே" (உசு) "தொண்டனேனுன் கழல்காண வொருநாள்வந்து தோன்றாயே"

(க) தி - வா. க. கூ. கூ. (உ) ஷெ - க0. அ. அ. (ங) ஷெ - உ. அ. க0. (ச) ஷெ - ச. எ. எ. (ரு) ஷெ - ரு. எ. ரு. (சு) ஷெ - அ. க. (எ) ஷெ - சு. ங. க. (அ) ஷெ-கூ. ச. அ. (கூ) ஷெ-க0. ச. கூ. (க0) தி-வி. அச. (கக) தி-வா. க. ரு. எ. (கஉ) ஷெ - உ. ச. உ. (கங) ஷெ - ங. உ. அ. (கச) ஷெ - அ. எ. (கரு) ஷெ-அ. (கசு) ஷெ - ச. எ. க. (கஎ) ஷெ - கூ. (கஅ) ஷெ - க0. (ககூ) ஷெ - ரு. அ. ச. (உ0) ஷெ - கூ. (உக) ஷெ - கூ. ரு. (உஉ) ஷெ - சு. கூ. ச. (உங) ஷெ - சு. (உச) ஷெ - அ. க. க. (உரு) ஷெ - ரு. க. (உசு) ஷெ - சு.

மூ. பரஜ்ஞாநகர்ப்ப பரபக்தி.
மூ—(௧௩) இருந்தமையென்றது பூர்ண பரஜ்ஞாநம்.
மூ—(௧௪) முடிந்தவவாவென்றது பரமபக்தி.
மூ—(௧௫) இவைஜ்ஞாந

பரஜ்ஞாநகர்ப்ப பரபக்தி - பரஜ்ஞாநத்தை யுள்ளேயுடைய பரபக்தியாயிருக்கிறது.

(அ) இருந்தமையென்றது - அடியரோடிருந்தமையென்றது, பூர்ணபரஜ்ஞாநம் - பூர்ணமான பரஜ்ஞாநமென்றபடி.

(அ) முடிந்தவவாவென்றது - முடிந்த வவாவிலந்தாதியென்கிறது பரமபக்தி - பக்தியினுடைய சரமாவதியான பரமபக்தி.

(அ) இவை - இந்த பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளானவை, ஜ்ஞாந - ஜ்ஞாநம்,

(க) "உன்னையெங்கே காண்கேனே" (உ) "உன்னைக் காணக்கருதுமென் கண்ணே" என்று, பாஹ்ய சக்ஷுஸ்ஸால் அவனைக்காண வாசைப்பட்டுக்கூப்பிட்டஸந்தைகள் அதிலிரட்டியுண்டாகையாலே (ந) "கண்டுகளிப்பகண்ணுள் நின்றகலான்" என்கிற திருமாலிருஞ்சோலையளவாக ஆந்தராநுபவம் செல்லாநிற்கப் பெற்றன்றித்தரியாத பாஹ்யாநுபவாபேக்ஷை நடக்கையாலே பரஜ்ஞாநத்தை கர்ஹித்துக்கொண்டிருக்கிற பரபக்தியென்கை. *

வ்யா. (௧௩) அநந்தரம் பரஜ்ஞாநாவஸ்தையாகிறதின்னதென்கிறார். (இருந்தமையென்று துடங்கி) அதாவது, (ச) "அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை" என்றும், (ரு) "அடியார்கள் குழாங்களையுடன் கூடுவதென்றுகொலோ" என்றுமாசைப்பட்டபடியே, அர்ச்சிராதி கதியாலே தேசவிசேஷத்திலே போய் பகவத்ஸ்வரூபாதிகளை பரிபூர்ணாநுபவம் பண்ணுகிற நித்யஸூரிகள் திரளிலே கூடியிருந்தாராக தர்சித்துப் பேசின (சு) "சூழ்விசும்பணிமுகில்" பூர்ணமான பரஜ்ஞாநமென்கை.*

வ்யா.(௧௪) அநந்தரம் பரமபக்த்யவஸ்தையானது இன்னதென்கிறார், (முடிந்த வித்யாதி) அதாவது, அப்படி தரிசித்தவதுதான் மானஸாநுபவமாய் பாஹ்யாநுபவ யோக்யமல்லாமையாலே பெருவிடாய் பிறந்து கூப்பிட்டு தரிக்கமாட்டாமல் திருவாணையிட்டுத் தடுத்துப்பெறுவாணையல்லாமையை ஸாதித்து பேற்றோடே தலைக்கட்டின, (எ) "முடிந்த அவாவி லந்தாதியிப்பத்து" என்கிற (அ) "முனியே நான்முகன்" பக்தியினுடைய சரமாவதியான பரமபக்தியென்கை. *

வ்யா. (௧௫) இந்த பரமபக்த்யாதிகளின் வேஷத்தை பகவத்வசநப்ரகாரத்தாலே தர்சிப்பிக்கிறார். (இவையென்றுதுடங்கி) அதாவது:—

(க) தி - வா. அ. ௫. ௧௦. (உ) ஷை - ௯. ச. ௧. (ந) ஷை - ௧௦. அ. எ. (ச) ஷை - ௯. ௧௧. (ரு) ஷை - உ. ௩. ௧௦. (சு) ஷை - ௧௦. ௯. ௧. (எ) ஷை - ௧௦. ௧௧. ௧௧. (அ) ஷை - ௧.

மூ. தர்ஶன ப்ராப்த்யவஸ்தைகள்.

மூ—(கசு) அவித்யாநிவர்தகஜ்ஞாநபூர்த்திப்ரதபகவத்ப்ரஸாதாங்மோக்ஷலாபமென்கை மயர்வறவீடுபெற்றவென்ற ப்ரபந்தைகார்த்யம்.

## இத்யாசார்யஹ்ருதயே சதுர்த்த ப்ரகரணம் ஸமாப்தம்.

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் திருவடிகளேஶரணம்.

தர்ஶந - ஸாக்ஷாத்காரம், ப்ராப்தி - ப்ராப்தி ஏவம்ரூபமான, அவஸ்தைகள் - தஶாவிஶேஷங்கள்.

(அ) அவித்யா - ஸம்ஸாரகாரணமான வஜ்ஞாநத்துக்கு, நிவர்த்தக - ப்ரதிபந்தகமாயிருந்துள்ள, ஜ்ஞாந - ஜ்ஞாநத்தினுடைய, பூர்த்தி - பூர்ணதையை, ப்ரத - உபகறிக்கிற, பகவத்ப்ரஸாதாத்-ஜ்ஞாநாதிகுண பரிபூர்ணனான ஸ்ரீ மந்நாராயணனுடைய நிர்ஹேதுக க்ருபையாலே, மோக்ஷ - ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகபகவத் ப்ராப்தி ரூபமோக்ஷத்தினுடைய, லாபம் - லபிக்கையானது, என்கை - என்று ப்ரதிபாதிக்கையானது, மயர்வற - மயர்வற மதிநலமருளினனென்றுதுடங்கி, வீடுபெற்றவென்ற - அவாவற்று வீடுபெற்றவென்று தலைக்கட்டின, ப்ரபந்த - இப்ரபந்தத்தினுடையதான, ஐகார்த்யம் - நிர்ஹேதுக பகவத்ப்ரஸாதமே மோக்ஷஹேதுவென்கிறவிதுவே ப்ரதாநார்த்தம்.

இந்த பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள், (க) "భక్త్యాత్వనన్యయాశక్య అహమేవం విధోర్జున। జ్ఞాతుం ద్రష్టుంచతత్త్వేన ప్రవేష్టుంచపరన్తప" "பக்த்யாத்வநந்யயாஶக்ய அஹமேவம் விதோர்ஜுந। ஜ்ஞாதும் த்ரஷ்டும்சதத்வேந ப்ரவேஷ்டுஞ்சபரந்தப" என்று, அர்ஜுனனைக்குறித்து திருத்தேர்தட்டிலும், (உ) "పరభక్తిపరజ్ఞానపరమభక్త్యేకస్వభావంమాంకురుష్వ" "பரபக்தி பரஜ்ஞாந பரமபக்த்யைக ஸ்வபாவம் மாம்குருஷ்வ" என்று, ப்ரார்த்தித்த பாஷ்யகாரரைக்குறித்து (ங) "మత్ జ్ఞానదర్శనప్రాప్తిషునిస్సంశయస్సుఖమాస్వ" "மத்ஜ்ஞாநதர்ஶந ப்ராப்திஷு நிஸ்ஸம் ஶயஸ்ஸுகமாஸ்வ" என்று, சேரபாண்டியனிலுமவனருளிச்செய்த ஜ்ஞாநதர்ஶனப்ரார்ப்த்யவஸ்தைகளென்கை. இத்தால், பகவத்ஸம்ச்லேஷவிஶ்லேஷைக ஸுகதுக்கராம்படியான பரபக்தி பரஜ்ஞாநாவஸ்தையாகவும், பகவத் ஸ்வரூபரூபகுண விபூதிகளை விஶததமமாக ஸாக்ஷாத்கரிக்கிற பரஜ்ஞாநம் தர்சநாவஸ்தையாகவும், அப்படி ஸாக்ஷாத்கரித்தவஸ்துவை யப்போதேகிட்டியநுபவிக்கப் பெறுவிடில் முடியும்படியானபரமபக்தி ப்ராப்த்யவஸ்தையாகவுஞ்சொல்லப்படுமென்றபடி. *

வ்யா. (கசு) "நூறே சொன்ன பத்துநூறு ஓராயிரமென்றதும் ஸாபிப்ராயம்" என்றதில் நூறேசொன்ன பத்துநூறென்றதின் கருத்தை

(க) ஸ்ரீ - கீ. கக. ருச. (உ) க - ம். (ங) ஷ.

